# திருப்புகழ்

## விரிவுரை

### பொது



தெய்வத்திரு.

திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

# திருப்புகழ் விரிவுரை

## பொது

(14–வது தொகுதி)

தெய்வத்திரு

திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

வெளியீடு



குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்

107, சிங்கண்ண தெரு

சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-600 002.

தொலைபேசி : 2841 6666

www.variyarswamigal.com

## நூற் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் | : | திருப்புகழ் விரிவுரை (பொது) |
| ஆசிரியர் | : | தெய்வத்திரு. திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் |
| உரிமை | : | பதிப்பகத்தாருக்கு |
| பதிப்பு | : | முதல் பதிப்பு – 1998<br>இரண்டாம் பதிப்பு – 2004 |
| தாள் | : | டி.என்.பி.எல். வெள்ளைத்தாள் |
| அளவு | : | டெம்மி சைஸ் 1/8 |
| எழுத்து | : | 10.5 புள்ளி |
| பக்கம் | : | 462 |
| படிகள் | : | 2000 |
| விலை | : | Rs. 141/– |
| பதிப்பகம் | : | குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்<br>107, சிங்கண்ண தெரு,<br>சிந்தாதிரிப்பேட்டை<br>சென்னை - 600 002. போன் : 2841 6666 |
| கணிப்பொறி அச்சுக்கோப்பு | : | ஸ்ரீகிருஷ்ணா கிராஃபிக்ஸ்<br>கோடம்பாக்கம் சென்னை - 24. |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ வாரி கார்ட்ஸ்,<br>7(4/1), நாயர் வரத பிள்ளை தெரு,<br>ராயப்பேட்டை, சென்னை-14.<br>போன்: 28480109 |

# வாழ்த்து

நேரிசை வெண்பா

*மன்னு புகழ்குகஸ்ரீ வாரி பதிப்பகம்*
*பன்னுபல நூல்கள் பதிப்பித்து – மின்னுவடி*
*வேலன் திருவருளால் மேன்மேலும் ஓங்கியே*
*சாலவும் வாழ்க தழைத்து.*

அன்பன்

[signature]

உ

முருகா

# பதிப்புரை

வைதிகங் காக்க, வளர்சைவ நெறிகாக்க, வற்றாக் கருணை வாரிதியான முருகவேளின் பெருமையை முற்றுங் காக்க பூமியில் உதித்த புனிதரே நம் வணக்கத்துக்குரிய தெய்வத்திரு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள். யான் எனது என்னும் செருக்கறுத்து வானோர்க்கு உயர்ந்த உலகம் புகுந்த உத்தமர்.

அவர் வாசித்த நூல்கள் ஒரு வரம்பில் நில்லா. அவர் நேசித்த நூல்களும் பூசித்த நூல்களும் அவ்வாறே. ஆனால், அவர் சுவாசித்த நூல் திருப்புகழ் ஒன்றேயாகும். தம் நாடி நரம்பெல்லாம் திருப்புகழ் என்னும் தேனமுதத்தை ஓட வைத்தவர். ஞானம் பெற்று, நலம் பெற்று, வானம் அரசாளும் வரம் பெற்றவர். ஏறத்தாழ 70 ஆண்டுகளாக இளம்பூரணனின் புகழ்பாடி வந்ததோடு 200க்கும் மேற்பட்ட நூல்களையும் இயற்றியுள்ளார்.

திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரைபோல், திருப்புகழுக்கு வாரியார் சுவாமிகள் உரை என்று கற்றறிந்தோர் போற்றுவது கண்கூடு. ஆயினும், அனைத்துத் திருப்புகழ்களுக்கும் உரை எழுத முடியா வண்ணம் காலம் அவரது கைகளைக் கட்டிப் போட்டது.

தற்போது இந்தத் தலைமுறைக்கு அவர் தந்துவிட்டுச் சென்றுள்ள திருப்புகழ் உரைவளம் விலைமதிக்க முடியாத வெகுமதிகள் ஆகும்.

மதியால் வித்தகனாகி, மனத்தால் உத்தமனாகிய சுவாமிகளின் திருப்புகழுரைகளைத் திரட்டி எடுத்து 14வது தொகுதியாக 'பொதுத்திருப்புகழ்' தலைப்பில் வெளியிடுகிறோம்.

இதில் 'முனையழிந்தது' என்னும் திருப்புகழ் உரையில், பிறப்பின் தன்மையினைச் சுவாமிகள் பிழிந்து கொடுத்துள்ளார்.

இன்னும், 'தொண்டை மண்டலத் திருப்புகழ்', 'ஸ்தல வரிசைத் திருப்புகழ்' முதலியன வெளிவர வேளை பார்த்துக் கொண்டிருக்கின்றன.

"சேவி லேறு நிருத்தன் தோகை பாக னளிக்குந்
த்யாக சீல குணத்தன்..."

என்னுந் திருப்புகழ் வரிக்குத் திருட்டாந்தமானவர் எங்கள் ஆஸ்தான வித்துவான் தருமபுரி புலவர் **க.தியாகசீலன்** அவர்கள். அங்கங்கே அஞ்ஞாத வாசம் செய்திருந்த இத்திருப்புகழ் உரைகளைச் சேகரித்து, வெளியிடத் துணை யிருந்த அவருக்கு, வாரியார் சுவாமிகளின் நெஞ்சார்ந்த ஆசி நிரந்தர நிழலைக் கொடுக்கும்.

அற்புதமாக அச்சிட்ட ஸ்ரீவாரி கார்ட்ஸ் நிறுவனத்துக்கு நன்றி!

தீபா மயிலப்பன்
குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்

## விநாயகர் துதி

கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக ணடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்

மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

### கருத்துரை

*கைத்தலம் - திருக்கரத்திலே, நிறைகனி - நிறைந்த கனியையும், அப்பமொடு அவல்பொரி - அப்பத்தோடு அவல்பொரிகளையும், கப்பிய - உண்ணுகின்ற, கரிமுகன் - யானை முகத்தையுடைய விநாயகப் பெருமானது, அடிபேணி - திருவடிகளை விரும்பி, கற்றிடும் அடியவர் - (அறிவு நூல்களை) ஓதுகின்ற அடியாரது, புத்தியில் உறைபவ - அறிவினிடத்தில் கல்ந்து வாழ்கின்றவரே! கற்பகம் - கற்பகத்தருவைப்போல் அடியவர் நினைத்தவை யனைத்தும் அருளவல்லவரே! முத்தமிழ் அடைவினை - மூன்று தமிழின் முறையினை, முற்படு கிரிதனில் - கிரிகளுக்கெல்லாம் முதன்மையானதாகிய மகாமேருகிரியில், முற்பட எழுதிய - எல்லா மொழிகளுக்கும் முதன்மையுற எழுதிய, முதல்வோனே - எல்லாத் தேவர்களுக்கும் முதன்மையானவரே! முப்புரம் எரிசெய்த - மூன்று புரங்களையும் தழலெழ நகைத்து எரித்தருளிய, அச்சிவன்*

உறை ரதம் - அந்த (அளக்கரிய புகழையுடைய) சிவபெருமான் ஊர்ந்த இரதத்தினுடைய, அச்சது பொடி செய்த - (தன்னை நினையாத காரணத்தினால்) அச்சை முறித்துப் பொடியாக்கிய, அதிதீரா - மிகுந்த தீரத்தன்மையுடையவரே! அத்துயர் அது கொடு - இன்பரச சக்தியாகிய வள்ளி நாயகியாரை மணந்து ஆன்மாக்களுக்குப் பேரின்பத்தை யருள வேண்டுமென்றதாகிய அந்த இரக்கத்தைக் கொண்டு, சுப்பிரமணி படும் - சுப்பிரமணியக் கடவுள் சென்ற, அப்புனம் அதனிடை - வள்ளியம்மையாரிருந்த அந்தத் தினைப்புனத்தில், இபம்ஆகி - யானை வடிவங்கொண்டு, அக்குற மகளுடன் - அந்தக் குற மாதாகிய வள்ளிநாயகியாரோடு, அச்சிறு முருகனை - அந்த இளம்பூரணனாகிய முருகப் பெருமானை, அக்கணம் மணம் அருள் - அத் தருணத்திலேயே விவாகமாகும்படி திருவருள் புரிந்த, பெருமானே - பெருமையிற் சிறந்தவரே! என - என்று துதி செய்ய, வினை கடிதேகும் - தீவினைகள் விரைவில் நீங்கும், (ஆதலால்) மத்தமும் - ஊமத்த மலரையும், மதியமும் - சந்திரனையும், வைத்திடும் அரன்மகன் - சடாமுடியின் கண் (கருணைகொண்டு) தரித்துள்ள சிவபெருமானது திருக்குமாரராகிய, மல் பொரு திரள்புய - மல்யுத்தம் செய்கின்ற திரண்ட தோள்களையுடைய, மத யானை - மதங்களைப் பொழிகின்ற யானை முகத்தையுடையவரை, மத்தள வயிறனை - மத்தளம் போன்ற அழகிய வயிற்றையுடையவரை, உத்தமி புதல்வனை - உத்தம குணங்களின் வடிவமாகிய உமாதேவி யாரது புத்திரராகத் தோன்றிய மகா கணபதியை, மட்டவிழ் மலர் கொடு - தேன் துளிக்கின்ற மலர்களைக் கொண்டு அர்ச்சித்து, பணிவேன் - வணங்குவேன்.

## பொழிப்புரை

கரதலத்திலே நிறைந்துள்ள பழம், அவல், பொரி, அப்பம் முதலியவைகளை யருந்துகின்ற யானை முகத்தை யுடைய கணேச மூர்த்தியின் திருவடிக் கமலங்களை விரும்பி, (பதியினிலக்கணங்களையோதும் அறிவு நூல்களைக்) கற்கின்ற அடியாரது சித்தத்தில் எப்போதும் நீங்காது வாழ்கின்றவரே! நினைத்ததைத் தரவல்ல கற்பக விருட்சம்போல் (சரணாரவிந்தங்களை இடைவிடாது துதிக்கும்) தொண்டர்கள் நினைந்தவையெல்லாம் எளிதில் தரவல்ல வள்ளலே! எல்லா மொழிகளுக்கும் முற்படுமாறு இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ் நூல் முறைமையை

*மலைகளுக்குள் முதன்மையுடைய மகா மேருகிரியில் எழுதி யருளிய முதன்மையானவரே! (தேவர்கள் வேண்ட) திரிபுரங் களைச் சிரித்தெரி கொளுத்திய சிவபெருமான் எழுந்தருளிய பெரிய தேரினுடைய அச்சை (தன்னை நினையாத காரணத்தால்) ஒடித்து துகள் செய்த மிகுந்த தைரியமுடையவரே! இன்பரச சக்தியாகிய வள்ளி பிராட்டியாரைத் திருமணம் புரிந்து உயிர் களுக்கு இன்பமதை யருளவேண்டுமென்று கருணைகொண்டு, தினைவனத்திற்குச் சென்ற குமாரக் கடவுள் வள்ளி பிராட்டியார் இசையாமையால் (இவ்வேளை துணை செய்ய வேண்டுமென நினைக்க) யானை வடிவங்கொண்டு சென்ற குறவர் குடியிற்றோன் றிய வள்ளி நாயகியாருடன் என்று மிளைய பெருமாளாகிய அறுமுகக் கடவுளை மணம் புணர்த்தித் திருவருள் பாலித்த பெருமையிற் சிறந்தவரே! என்று துதி செய்தால் (துன்பத்தை விளைவிப்பதாகிய) வினைகளனைத்தும் விரைவில் விலகும். (ஆதலால்) ஊமத்த மலரையும், பிறைச்சந்திரனையுஞ் சடா மகுடத்தில் கருணைகொண்டு சூடிக்கொண்டுள்ள பாவங்களை யழிப்பவராகிய சிவபெருமானது திருக்குமாரரும், மல்யுத்தம் புரிகின்ற திரண்ட தோள்களையுடையவரும், மதங்களை பொழிகின்ற யானை முகத்தையுடையவருமாகிய விநாயக மூர்த்தியை, மத்தளம் போன்ற அழகிய திரு வுதரத்தை யுடைய வரை, உத்தமியாகிய உமாமகேஸ்வரியாரது அருட்புதல்வரை, தேன் துளிக்கும் புதுமலர்களால் அர்ச்சித்து (வினைகள் விலகும் பொருட்டு அன்புடன்) வணங்குவேன்.*

## விரிவுரை

இத்திருப்புகழிலுள்ள உயிர் எழுத்துக்களை மட்டும் கூட்டினால் 200 எழுத்துக்களாகும். 100 என்பதைப் பிள்ளையார் என்று சொல்வது (சில ஊர்களில்) மரபு. அதனால், இத் திருப்புகழை இரட்டைப் பிள்ளையார் என்பார்கள்.

**கைத்தலம்** - கையாகிய இடம் என விரித்துப் பொருள் கொள்க.

**நிறைகனி** - ஞானரசம் பொருந்திய மாதுளங்கனி.

உவகாரி அன்பர்பணி கலியாணி எந்தையிட
முறைநாய கங்கவுரி சிவகாமி
ஒளிரானையின் கரமில் மகிழ்மர துளங்கனியை
ஒருநாள் பகிர்ந்தவுமை யருள்பாலா
– *திருப்புகழ்*

*இக்கனி விநாயகருக்குச் சிவபெருமானால் தரப்பட்டது. (கைநிறையப் பழம் என்றும் பொருள் கொள்ளலாம்.)*

விநாயகமூர்த்தி கனி பெற்ற வரலாறு

*முன்னொரு காலத்து, ஆயிரம் நரம்புகளுடைய மகதி யாழில் வல்லவராகிய நாரதமுனிவர், தமக்கு அரிதிற் கிடைத்த தேவ மாதுளங்கனியைச் சிவபெருமானது திருவடியில் வைத்து வணங்கினர். தீராத இன்பமருளும் பரம காருண்ய மூர்த்தியாகிய பரமேஸ்வரன், அக்கனியை ஏற்று நாரதருக்கு நல்லருள் புரிந்தனர்.*

*பின்னர், விநாயகக் கடவுளும், குமாரக் கடவுளும் தந்தையை வணங்கி அக்கனியைத் தமக்குத் தருமாறு வேண்டினர். சிவமூர்த்தி அப்பழத்தை இரண்டாகப் பகிர்ந்து அளிக்கலாமன்றோ? அவ்வண்ணமளித்தாரில்லை.*

*(ஒரு காலத்தில் பிருதிவி முதல் நாதமீறான அளவிலா உலகங்களையெல்லாம் ஒருநாளில் சுற்றி வருகின்றவன் எவனோ அவனே தேவர் யாவரினும் பெரியோன்; அவனே பரப்பிரமம் என்று தேவர் முதல் பதினெண் கணத்தவர்களுங் கூடிய சபையிலே பேசித் தீர்மானித்தார்கள். அவ்வாறு சுற்றி வருவதற்கு அரியரி பிரமாதியருந் தம்மாலாகாதென வாளாவிருந்தனர்.*

*கண்ணுதற் கடவுள், தேவர்களுக்கு நேர்ந்த இவ்வையத்தை நீக்கத் திருவுளங்கொண்டு, சர்வலோகங்களையும் ஒரு நொடிப் பொழுதினுள் வலம் வரவும், எல்லாவற்றையும் அறியவும், படைக்கவும், காக்கவும், அழிக்கவும், மறைக்கவும், அருளவும், வல்லவர் முழுமுதற் கடவுளாம் முருகக்கடவுள் ஒருவரே என்று தேவரும் யாவரும் தெளிந்துய்யக் கருதி ஒருபாயஞ் செய்வாராயினர்.)*

*"நீவிர் இருவரும் ஒரு கனியைக் கேட்பின் எவ்வாறு உதவுவோம். நும்மில் எவர் ஒரு கணத்துள் அகில உலகையும் வலம் வருகின்றனரோ அவருக்கே இப்பழம் உரியதாகும்'' என்று திருவாய் மலர்ந்தனர். இச்சொல் முடியுமுன்னரே சர்வலோக*

*நாயகராகிய சரவணோற்பவர் மரகதமயில் மீதூர்ந்து விரைவிற் சென்றனர். வாயுவேகம், மனோவேகம் என்று சொல்லப்பெற்ற வேகங்கள் அவர் போன வேகத்திற்கு ஓரணுத் துணையேனும் ஒவ்வா. அப் பரமன் சேர்ந்த வேகத்தை அறையவல்லார் யாவர்? அதலம், விதலம், சுதலம், மகாதலம், தராதலம், இரசாதலம், பாதலம் என்னும் ஏழனையும், அவற்றிற்கு மேலுள்ள எட்டிலக்கம் யோசனை தூரமுள்ள கனிட்டம் என்னும் எட்டாவது பாதலத்தையும், பூமிக்கணுள்ள சத்ததீவம், கடல்கள், மலைகள் முதலியவைகளையும், மேகம், வாயு, சூரிய, சந்திர, நட்சத்திர மண்டலங்களையும், துருவ நட்சத்திரமுள்ள புவர்லோகம், இந்திரன் வாழும் சுவர்லோகம், மார்க்கண்டேயர் முதலான முனிவர் குழாம் வசிக்கும் சனலோகம், பிதிரர் வாழும் தவலோகம், சனகாதியர் தவம் புரியும் மகா லோகம், சதுர்முகன் வாழும் சத்தியலோகம், வடபத்திர சயனன் வாழும் வைகுண்ட லோகம் முதலிய வுலகங்களையும், இங்ஙனமே பிரமாண்டங்களையும், பிருதிவி அண்டத்திலுள்ள ஆயிரங்கோடி அண்டங்களையும், அப்பு அண்டம், தேயு அண்டம், வாயு அண்டம், ஆகாய அண்டம், தன்மாத்திராண்டம், அகங்கார புவன முதலாக நாதமீறாயுள்ள உலகங்களான பஞ்ச கலைகளுக்கும் உட்பட்ட மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம் என்னும் சொற் பொருட் பிரபஞ்சங்களை எல்லாம் ஒரு நொடிக்குள் வலம் வந்து திருக்கயிலையை நோக்கினார்.*

யாவ ராயினு மிக்கனி விழைந்துளோர் கணத்திற்
பூவ லங்கொடு வருதிரே லவர்க்கெனப் புகலத்
தூவி யம்பசுந் தோகைமா மஞ்ஞைமேற் றோன்றித்
தேவர் சேனைகா வலன்கிரி யிழிந்துபார் சேர்ந்தான்.

*– பழநித் தலபுராணம்*

செகமுழுது முன்புதும்பி முகவனொடு தந்தைமுன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீரா

*– திருப்புகழ்*

இலகுகனி கடலைபய றொடியல் பொரி யமுதுசெயும்
இலகுவெகு கடவிகட தடபார மேருவுடன்
இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
எழுபுவியை யொருநொடியில் வலமாக வோடுவதும்

*– சீர்பாத வகுப்பு*

ஆரமது ரித்தகனி காரணமுதற் றமைய
னாருடனுணக்கை புரி தீமைக்காரனும்
ஆகமம் விளைத்தகில லோகமு நொடிப்பளவில்
ஆசையொடு சுற்றுமதி வேகக்காரனும்

*– வேளைக்காரன் வகுப்பு*

வாரணமுகன் தனது தாதையை வலஞ்சுழல
வாகைமயில் கொண்டுலகு சூழ்நொடி வருங்குமரன்

*– பூதவேதாள வகுப்பு*

*உலகங்கள் முழுவதும் ஒரு நொடிப்பொழுதில் சுற்றி வருவதற்குள் மலைகளெத்தனை? கடல்களெத்தனை? திக்கு யானைகள் திக்கு நாகங்களெத்தனை? திசைப்பாலகர்கள் எத்தனையர்? சூரிய சந்திர அக்கினி வாயு மேகங்கள் நட்சத்திரங்கள் எவ்வளவின? பிரமவிட்டுணுக்களும் சத்திய லோக வைகுண்டங்களும், இந்திரர்களும், சுவர்க்கங்களும் உருத்திரர் களும் புவனங்களும் எண்ணிறந்தவரும் எண்ணிறந்தவையுமாகும். யாவரையும் யாவற்றையுங் கண்டு கண்டு செல்ல அவர்களும் இவரை அஞ்சலி செய்து வணங்கியுள்ளார்கள். இது எங்ஙன முடியுமெனின் எங்கும் வியாபியாய், சர்வஜீவசாட்சியாய் சர்வ லோகங்களையுந் தனக்கு அங்கமாகக் கொண்ட அத்துவா மூர்த்தி யாகிய நம் அறுமுகப் பெருமானார்க்கு இஃதோர் அருஞ் செயலோ? இது பற்றியே,*

அநேஜதேகம் மநஸோ ஜவீயோ
நைநத்தேவா ஆப்நுவன் பூர்வமர்ஷத்
தத்தாவதோ (அ)ந்யாநத் யேதிதிஷ்டத்
தஸ்மிந்நபோ மாதரிச்வா ததாதி!

*என்று ஈசோபநிடதம் முழங்குகிறது. (அதாவது பதி ஒருவர், அவர் அசைபவரல்லர். மனத்தைப் பார்க்கினும் அதிக விரைவாகச் செல்பவர். ஐம்பொறிகளினும் மிக்க வேகமாக முன் செல்லும் இப்பதிப்பொருளைப் பொறிகளிலொன்றும் அடையமாட்டாது. அவர் திரமாக இருந்து விரைவாகச் செல்லும் மன முதலிய கருவி களையுங் கடந்து செல்கிறார். காற்று அவருழை யிருந்தே உயிர் களுக்கு உடலினசைவைக் கொடுக்கிறது என்பதேயாம்.)*

*எங்கும் முகங்களும், எவ்விடமுங் கண்களும், எவ்விடமுஞ் செவிகளும், எவ்விடமுங் கைகளும், எவ்விடமுந் திருவடிகளும் எவ்விடமும் வடிவமாகப் பெற்றார். ஒருவர்க்கன்றி ஏனையோரால்*

இக் காரியம் முடியாது. அத்துணைப் பெருஞ்சிறப்புடைய அகண்ட வியாபக சச்சிதானந்தப் பரம்பொருள் தாம் என்பதை விளக்குதற்கன்றோ நம் குமார குரு உலகையொரு நொடியில் வலம் வந்து அவ்வுண்மையை விளக்கியருளினார். இதனை, யசுர்வேத சுவேதாச்சுவதர உபநிடதக் கருத்துடையதாகிய,

எங்கணும் பணிவதனங்க ளெங்கணும் விழிகள்
எங்கணுந் திருக்கேள்விக ளெங்கணுங் கரங்கள்
எங்கணுந் திருக்கழலடி யெங்கணும் வடிவம்
எங்கணுஞ் செறிந்தருள் செயுமறுமுகத் திறைக்கே:

என்ற கந்தபுராணத் திருவாக்காற் காண்க.

இங்ஙனஞ் சண்முகப் பிரபு அகில உலகையும் வலம் வந்து கயிலை வருமுன், கணபதி சிவத்தை விட்டு உலகம் அன்னியமாயில்லை; சர்வலோகங்களிலும், பாலுடன் நீரும், வெளியுடன் காற்றும், உடலுடனுயிரும், மலருடன் மணமும் மணியுடனொளியும் போல் பிரிவறக் கலந்து அத்துவிதமாக வியாபித்து நிற்பவர் தந்தை யன்றோ? என ஆராய்ந்து கறைமிடற் றண்ணலை வலம் வந்து "உலகமெங்கணும் நிறைந்து நிற்கும் நின்மலப் பொருள் தேவரீரன்றோ? தங்களை வலம் வந்தது உலகைச் சுற்றியதனோடொக்கும். ஆதலால் கனியைத் தந்தருள்க'' என்றனர். மலைமகள் மகிணன் மனமகிழ்ந்து உடனே கனியை மூத்த பிள்ளையார் கரத்தளித்தனர். பன்னிருகைப் பரமன் பரமசிவத்தால் 'பழம் நீ' என்று பகரப் பெற்றார்.

## இவ்வரலாற்றின் நுண்பொருள்

ஒரு கனியை இருவரும் விரும்பினால் கனியைப் பகிர்ந்து தரலாகாதோ? அகிலவுலகங்களையும் ஒரு கணத்தில் ஆக்கியும் அளித்தும், நீக்கியும் ஆடல் புரிகின்ற எல்லாம் வல்ல இறைவர் மற்றொரு கனியை உண்டாக்கித் தரலாகாதோ? காரைக்காலம்மையாருக்கு ஒரு கனிக்கு இரு கனிகளையே வழங்கிய வள்ளலன்றோ அவர்! தம்பியே கனி பெறுக என்று தமையனாரும், தமையனே கனி பெறுக என்று தம்பியாரும் ஒற்றுமையுறலாகாதோ? ஒரு கனி காரணமாக அகில உலகங்களையும் ஒரு நொடியில் வலம் வருவது முயற்சிக்குத் தக்க ஊதியமாகுமா? சகல வல்லபமும் உடைய வல்லபை கணபதிக்கு உலகை வலம் வரும் வண்மையிலதா? சிவத்தை வலம் வருவதே உலகை வலம் வருவதாகும் என்பது அறிவின் வடிவாய ஆறுமுகவேள் அறியாததா? இன்னோரன்ன பல ஐயங்கள் நிகழுமன்றோ? ஆதலின் இதன் நுண்பொருளை

விளக்குதும். அன்பர்கள் கூர்ந்து உன்னியுணர்க.

சிவம் என்ற ஒன்றினுள் எல்லாவற்றையுங் காணுந் தன்மை ஒன்று. எல்லாவற்றினுள் சிவத்தைக் காணுந் தன்மை மற்றொன்று.

இதனைத்தான் ஆனைமுகன் ஆறுமுகன் என்ற இருவடிவங் களாக நின்று ஒரு பரம்பொருள் நமக்கு உணர்த்தியது.

அரும்பு - சரியை, மலர் - கிரியை, காய் - யோகம், கனி - ஞானம். எனவே, சிவத்தின்கண் இருந்தது ஞானம் என அறிக. ஞானத்தில் விருப்பம் ஏற்பட வேண்டும் என்பதைத் தெரிவிக்க விநாயகரும் வேலவரும் அக்கனியை விரும்பி யருளினார்கள். ஞானத்தைச் சிதைக்க முடியாதென்பதைத் தெளிவாக்குகின்றது. அக்கனியை அரனார் சிதைத்துத் தராமை சிவத்திற்கு அந்நியமாக வேறு இன்மையைத் தெரிவிக்க விநாயகர் விமலனை வலம் வந்து ஞானமாகிய கனியைப் பெற்றனர். "எல்லாம் அவனே" என்பதைத் தெரிவிக்க வடிவேற் பரமன் உலகை வலம் வந்து தாமே ஞானக் கனியாக நின்றனர். ஞானம் அவர். ஞான பண்டிதன். ஞானந் தானுருவாகிய நாயகன். ஞானமாகிய கனியைத் தாங்கும் விநாயகர் ஞானாகரர்.

விநாயகர் வேறு. முருகர் வேறு என்று மலையற்க. ஐங்கரனும் அறுமுகனும் ஒன்றென உணர்க. பாலும் சுவையும்போல் என்று அறிக. பால் விநாயகர். பாலின் சுவை கந்தவேள். சுவையைப் பால் தாங்கி நிற்கின்றது. அதுபோல், ஞானக்கனியை விநாயகர் தாங்கி நிற்கின்றனர்.

**அப்பமொடு அவல் பொரி :**

அப்பம், அவல், பொரி முதலிய சத்துவ குண ஆகாரங்களை அறிவு வடிவமாகிய விநாயக மூர்த்தி விரும்பி உண்கிறார்.

**கரிமுகன் :**

யானைமுகன். கரத்தையுடையதால் யானைக்குக் கரியெனப் பெயருண்டாயிற்று. சினையாகுபெயர்.

### விநாயகருக்கு யானைமுகம் வந்த வரலாறு

கயிலையங்கிரியில் ஒருபாலுள்ள சித்திரமண்டபத்து அடியார்க்கருள் புரியுமாறு வேதங்கள் 'ஐயாவென வோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியராம்' சிவபெருமான் உமாதேவியாரோடு

*எழுந்தருளினர். அச் சித்திர மண்டபச் சுவர்களில் எழுதியுள்ள அழகிய ஓவியங்களைக் கண்டு உலவுங்கால், ஒருபால் ஏழுகோடி மகா மந்திர சொரூபங்களும், அவைகளுக்கெல்லாம் முதலிய சமஷ்டி வியஷ்டி பிரணவ வடிவ மந்திர சொரூபங்களும், அதில் ஆண்யானை, பெண்யானை வடிவங்களும் வரைந்திருக்க, அவற்றுள் சமஷ்டிப் பிரணவ வடிவமாகிய பெண்யானைச் சித்திரத்தின் மீது அகில சக அண்ட நாயகியாகிய அம்பிகையும், வியஷ்டி வடிவமாகிய ஆண்யானைச் சித்திரத்தின் மீது ஆலமுண்ட அண்ணலும் விழிமலர் பரப்பினர்.*

*அங்ஙனம் பார்த்தவுடன் கோடி சூரியப் பிரகாசத்துடனும், யானை முகத்துடனும், நான்கு புயாசலங்களுடனும், விநாயக மூர்த்தி யவதரித்தனர்.*

பிடியத னுருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே. — *தேவாரம்*

கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ :

*கல்வியானது இறைவன் திருவடியை விரும்பி ஐயந்திரிபு மயக்கமற பதி ஞானந் தலைப்படுமாறு கற்கப்படுவதாம். அங்ஙன மன்றி, கேவலம் பொருள் மாத்திரம் விரும்பிக் கற்றல் கூடாது என்பதும் கடவுள் கழலிணைக் கஞ்சங்களிடத்து அன்பு வைக்காமல் படித்தல் பயனற்றது என்பதும் இதனாற் றெளிக.*

அரகரா வெனாமூடர் திருவெணீ றிடாமூடர்
அறிவுநூல் கலாமூடர் — *திருப்புகழ்*

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின். — *திருக்குறள்*

*பதிஞானம் பெற விழையாது பொருள் விழைந்து கல்வி பயில்வோர் மக்கட்பதடியாவர்.*

திருந்துமுதுக் குறைவெய்தக் கற்பதன்றித் திருவெய்தக்
 கற்கின் றோரும்
பொருந்தவரி தாயமக்கட் பதடியெனக் கற்றுணர்ந்தோர்
 புகல்வ ரன்றே — *கூர்மபுராணம்*

*பதி நூல் கல்லாதவர் உள்ளத்தில் பரமன் வாசஞ் செய்யான்.*

கல்லார் மனத்துட னில்லா மனத்தவ
 கண்ணாடியிற் றடங் கண்டவேலா

– *திருப்புகழ்*

*ஆதலால், பதி நூல் கற்றவர் உள்ளத்தில் இறைவன் வசிப்பவன் என்பது நன்கு புலனாகும்.*

கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியை – *திருவிசைப்பா*

கற்பகம் என வினை கடிது ஏகும் :

*விநாயகப் பெருமானை மனமொழி மெய்களால் சிந்தித்து வாழ்த்தி வந்திப்பார்களது தீவினைகள் விரைவில் நீங்கும்.*

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கைதணி விப்பான் – விநாயகனே
விண்ணுக்கு மண்ணுக்கு நாதனுமாந் தன்மையினாற்
கண்ணிந பணிமின் கனிந்து.

– *பதினோராந் திருமுறை*

மதியமும் வைத்திடும் அரன் :

சிவபெருமான் சந்திரனை தரித்த வரலாறு

*மலர்மிசை வாழும் பிரமனது மானதபுத்திரருள் ஒருவனாகிய தட்சப் பிரசாபதி தான்பெற்ற அசுவினி முதல் ரேவதி ஈறாயுள்ள இருபத்தேழு பெண்களையும், அநுசூயா தேவியின் அருந்தவப் புதல்வனாகிய சந்திரன் அழகிற் சிறந்தோனாக இருத்தல் கருதி அவனுக்கு மணம் புணர்த்தி அவனை நோக்கி, "நீ இப்பெண்கள் யாவரிடத்தும் பாரபட்சமின்றி சமநோக்காக அன்பு பூண்டொழுகுவாயாக'' என்று கூறிப் புதல்வியரைச் சந்திரனோடனுப்பினன். சந்திரன் சிறிது நாள் அவ்வாறே வாழ்ந்து, பின்னர் கார்த்திகை உரோகணி என்கிற மாதரிருவரும் பேரழகுடையராயிருத்தலால் அவ்விரு மனைவியரிடத்திலே கழிபேருவகையுடன் கலந்து, ஏனையோரைக் கண்ணெடுத்தும் பாரானாயினன். மற்றைய மாதர்கள் மனங்கொதித்து தம் பிதாவிடம் வந்து தம் குறைகளைக் கூறி வருந்தி நின்றனர். அது கண்ட தக்கன் மிகவும் வெகுண்டு, குமுதபதியாகிய சந்திரனை விளித்து, "நின் அழகின் செருக்கால் என் கட்டளையை மீறி நடந்ததனால் இன்று முதல் தினம் ஒருகலையாகத் தேய்ந்து ஒளி குன்றிப் பல்லோராலும் இகழப்படுவாய்'' என்று சபித்தனன்.*

*அவ்வாறே சந்திரன் நாளுக்கு நாள் ஒவ்வொரு கலையாகத் தேய்ந்து பதினைந்து நாட்கள் கழிந்தபின் ஒரு கலையோடு மனம்*

வருந்தி, இந்திரனிடமேகித் தனக்குற்ற இன்னல்களை எடுத்தோதி, "இடர் களைந்து என்னைக் காத்தருள்வாய்" என்று வேண்டினன். இந்திரன், "நீ பிரமதேவர்பால் இதனைக் கூறுதியேல், அவர் தன் மகனாகிய தக்கனிடம் சொல்லி நினக்கு சாபவிமோசனஞ் செய்தல் கூடும்" என, அவ்வண்ணமே சந்திரன் சதுர்முகனைச் சரண்புக, மலரவன், "சந்திரா! தக்கன் தந்தையென்று என் சொல்லைக் கேளான். ஆதலால், நீ கயிலையடைந்து கருணா மூர்த்தியாகிய கண்ணுதற் கடவுளைச் சரண்புகுவாயேல் அப்பரம பிதா நின் அல்லலை அகற்றுவார்" என்று இன்னுரை பகர, அது மேற்கொண்ட சந்திரன் திருக்கயிலைமலை சென்று, நந்தியெம் பெருமானிடம் விடைபெற்று மகா சந்நிதியை யடைந்து, அருட் பெருங் கடலாகிய சிவபெருமானை முறையே வணங்கி, தனக்கு நேர்ந்த சாபத்தை விண்ணப்பித்து, "பரமதயாளுவே! இவ்விடரை நீக்கி இன்பமருள்வீர்" என்று குறையிரந்து நின்றனன்.

மலைமகள் மகிணன் மனமிரங்கி, அஞ்சேலென அருள் உரைகூறி அவ்வொரு கலையினைத் தம் முடியில் தரித்து, "நின் கலைகளில் ஒன்று நம் முடிமிசையிருத்தலால் நாளுக்கொரு கலையாகக் குறைந்தும் இருக்கக் கடவாய், எப்போதும் ஒரு கலை உன்னை விட்டு நீங்காது" என்று கருணை பாலித்தனர்.

எந்தை யவ்வழி மதியினை நோக்கிநீ யாதுஞ்
சிந்தை செய்திடேல் எம்முடிச் சேர்த்திய சிறப்பால்
அந்த மில்லையிக் கலையிவண் இருந்திடு மதனால்
வந்து தோன்றும்நின் கலையெலாம் தாடொறும் மரபால்.

*– கந்தபுராணம்*

மதயானை :

இச்சை, கிரியை, ஞானம் என்னும் மூன்று சக்திகளே விநாயகருக்கு மும்மதம்.

மத்தளவயிறு :

உலகமெல்லாந் தன்னகத்தில் அடங்கியுள்ள மணிவயிறு.

உத்தமி புதல்வன் :

உத்தம குணங்களுக்குப் பிறப்பிடமானவரும், முப்பத்திரண்டு அறம் வளர்க்கும் அன்னையும், 'வாக்கே நோக்கிய' மங்கையுமான படியால் உமாதேவியரை 'உத்தமி' என்றனர். அவ்வம்மையின்

*புதல்வன் என்றமையால் தாய்க்குரிய குணம் மகனுக்குமுண்டு என்று குறிப்பிடுகிறார்.*

இமவான் மடந்தை யுத்தமி பாலா — *திருப்புகழ்*

முத்தமிழடைவு :

*தமிழிலக்கணங்களை அகத்தியர் கூற விநாயகர் எழுதினார் என்பது கன்னபரம்பரை. முத்தமிழடைவு என்பதை மஹாபாரதம் என்று வலிந்தும் பொருள் கொள்ளலாம்.*

முதல்வோனே :

*சகல தேவர்களுக்கும் முதற்கடவுளாகத் திகழ்வதாலும், சிவ புத்திரரில் முதல்வராக விளங்குவதாலும், யாவர் எக்காரியத்தைத் தொடங்கினாலும் முதலில் நினைத்துப் பூசிக்கும் முன்னைப் பழம் பொருளாய் இலகுவதாலும் முதல்வன் என்றனர்.*

உனதுதாயுலக சராசர மெவையுமொருங்குடன் பூத்தவளுந்தை
கனபரிபுரண சுகத்தனின் றமையன் காரியமுதல்வ னின்மாமன்
வனசனாதியர்கள் பணிபதனிவர் கள்வளமெலா முனக்குரித்தாமால்
வினவுசெல் வத்துட் செல்வனீபோரூர் வீறிவா ழாறுமாமுகனே.
— *திருப்போரூர்ச் சந்நிதிமுறை*

முப்புரம் எரிசெய்த அச்சிவன் :

*தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்ற அசுரர்களால் தேவர்களுக்கு நேர்ந்த இன்னலைக் களைவான் கருதி கண்ணுதல் கருணைகொண்டு முப்புரத்தையுமெரித்தனர். அதன் தத்துவமாவது, ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மத காரியமாம்.*

அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர எய்தமை யாரறி வாரே. — *திருமந்திரம்*

அச்சது பொடிசெய்த அதிதீரா :

*தன்னை நினையாத காரணத்தால் சிவபெருமானேறிய தேரின் அச்சை இற்றுப் போகுமாறு செய்த மகா தீரர். இங்ஙனம் அச்சு இற்ற இடம் இப்போது அச்சிறுபாக்கம் என வழங்கும். இத்தலம் தேவாரம் பெற்றது.*

இபமாகி........அக்கண மணமருள் பெருமாளே :

*குமாரக் கடவுள் திருமணங் கொள்ள வடிவமாறித் தினை வனஞ் சென்று பல விளையாடல்கள் புரிந்து, முடிவில் கிழவடிவங் கொண்டு குறவர் குலத்துதித்த கொம்பனாளை வேண்ட, அவ்வம்மையார் இணங்காது பிணங்கியகல அக் காலத்து விநாயகப் பெருமானை வருமாறு குமரகுரு நினைக்க, உடனே கணேசமூர்த்தி பெரிய யானை வடிவங் கொண்டு வந்து வள்ளி பிராட்டியாருக்கும் குன்றெறிந்த குழகனாருக்கும் திருமணம் முடித்து வைத்தனர்.*

## கருத்துரை

*விநாயகப் பெருமானைத் துதிப்பவர்கள் வினைகள் விரைவில் நீங்கும். அப்பெருமானை நினையாதார்க்கு காரியங்கள் இனிது முடியாது. அப்படி நினையாத சிவபெருமானது தேரின் அச்சை ஒடித்தனர். தன்னை நினைந்த முருகவேளுக்குத் திருமணம் முடித்த வைத்தனர். ஆதலால், எடுத்துக் கொண்ட இந்நூல் இனிது முடிவதன் பொருட்டு அம் மகா கணபதியை வணங்குகிறேன்.*

## 2

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை
பட்சியெனு முக்ரதுர கமுநீபப்
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்

திக்கதும திக்கவரு குக்குடமும் ரட்சைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
செப்பெனஎ னக்கருள்கை மறவேனே

இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
எட்பொரிய வற்றுவரை யிளநீர்வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்

மிக்கஅடி சிற்கடலை பட்சணமெ னக்கொளொரு
விக்கினச மர்த்தனெனு மருளாழி
வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமாளே.

## தோற்றுவாய்

*நினைக்க முத்தியளிக்குந் திருவருணையில் நம் அருணகிரிப் பெருந்தகையார் முன் குமாரக்கடவுள் தோன்றி 'முத்தைத்தரு' என்று அடியெடுத்துத் தந்து மறைய, அத் திருப்புகழொன்று மட்டும் பாடி சிவயோகத்திருக்க, முருகவேள் அசரீரியாக "நம் வயலூருக்கு வா'' என்றருள்புரிய, அருணகிரியார் வயலூர்போய் ஆண்டவனைப் பணிந்து, திருப்புகழைப் பாடும் முறைமையை வினவ, கந்தவேள் இன்ன இன்னவைகளை வைத்துப் பாடென்று பணிக்க உடனே அருணகிரியார் வயலூரில் எழுந்தருளியுள்ள பொய்யாக் கணபதி சந்நிதியில் நின்று "கைத்தல நிறைகனி'' என்ற திருப்புகழைப் பாடிய பின் தனக்கு முருகவேள் கூறிய அனுக் கிரகத்தை மறவேன் என்று இத் திருப்புகழைப் பாடினார்.*

### பதவுரை

*இக்கு - கரும்பையும், அவரை -அவரையையும், நல்கனிகள் - நல்ல பழவர்க்கங்களையும், சர்க்கரை - சர்க்கரையையும், பருப்புடன் நெய் - பருப்போடு நெய்யினையும், எள் - எள்ளையும், பொரி - பொரியையும், அவல் -அவலையும், துவரை - துவரையை யும், இளநீர் - இளநீரையும், வண்டு எச்சில் - தேனையும், பயறு - பயறையும், அப்பவகை - பலவகையான அப்பங்களையும், பச்சரிசி - பச்சரிசியையும், பிட்டு - பிட்டையும், வெள்ளரிப்பழம் - வெள்ளரிப்பழத்தையும், இடி பல்வகை - இடித்துச் செய்கின்ற பலவகையான சிற்றுண்டிகளையும், தனிமூலம் - (மதுரத்தினால்) ஒப்பற்ற கிழங்குகளையும், மிக்க அடிசில் - மிகுந்த அன்னத்தையும், கடலை - கடலையையும், பட்சணம் எனகொள் - (அடியார் களால்) அன்புடன் நிவேதிக்கப்படும் இவை முதலான சத்துவ குண ஆகாரங்களை உணவாகக் கொள்ளும், ஒரு விக்கின சமர்த்தன் எனும் - ஒப்பற்றவரும் விக்கினத்தை உண்டுபண்ணவும் நீக்கவும் வல்லவருமாகிய, அருள் ஆழி - கிருபாசமுத்திரமே, வெற்ப - மலையில் வசிப்பவரும், குடிலசடில - வளைந்த சடாபாரத்தையுடையவரும், வில்பரமர் அப்பர் அருள் - (ஒருவராலும் எடுக்க முடியாத மகாமேருகிரியாகிய) வில்லை யுடையவரும், பெரிய பொருளும், உலகங்களுக்குத் தந்தையுமாகிய சிவபெருமான் அருளிய, வித்தக - ஞானசொரூபரே! மருப்பு உடைய - தந்தத்தையுடைய, பெருமாளே - பெருமையிற்*

*சிறந்தவரே! பக்கரை - அங்கவடியையுடையதும், விசித்திரமணி - விசித்திரமாக இரத்தினமணிகளைப் பதியவைத்துள்ள, பொன் கலணை இட்ட - பொன்னாற் செய்யப்பெற்ற சேணத்தை யுடையதும், நடை - வேகமான நடையுடையதுமான, பட்சி என்னும் உக்ர துரகமும் - பட்சி என்று சொல்லப்படும் உக்கிரமுடைய குதிரையையும், (மயில் வாகனத்தையும்) நீப பக்குவமலர்த் தொடையும் - மலர்கின்ற பக்குவத்தில் தொடுத்த கடப்பமலர் மாலையையும், அக்குவடு - அந்த (கிரவுஞ்ச) மலையானது, பட்டு ஒழிய - அடியோடு அழிந்துபோகவும், பட்டு உருவ - வேலாயுதமானது பட்டு உருவிப் பாயவும், விட்டு அருள்கை - விட்டருளிய கரத்திலே இலகும், வடிவேலும் - கூர்மையான (வடித்த) வேலாயுதத்தையும், திக்கு அது மதிக்கவரும் - எட்டுத் திக்குகளும் மதிக்குமாறு (கெம்பீரமாகப்) பறந்து வருகின்ற, குக்குடமும் - கோழிக் கொடியையும், ரட்சைதரும் சிற்றடியும் - ஆன்ம கோடிகளை இரட்சித்து அரணாக விளங்கும் சிறிய திருவடியையும், முற்றிய பன்னிரு தோளும் - முதிர்ந்த பன்னிரண்டு புயாசலங்களையும், செய்பதியும் - வயலூரையும், வைத்து - (உலகம் உய்யுமாறு) அமைத்து, உயர்திருப்புகழ் - எல்லாவிதத்திலும் உயர்ந்த திருப்புகழை, செப்பு என - சொல்லக்கடவாயென்று, எனக்கு அருள்கை - அடியேனுக்கு திருவருள் பாலித்த அனுக்கிரகத்தை, மறவேன் - ஒருபோதும் மறக்கமாட்டேன்.*

## பொழிப்புரை

*கரும்பு, அவரை, நல்ல பழ வகைகள், சர்க்கரை, பருப்பு, நெய், எள், பொரி, அவல், துவரை, இளநீர், தேன், பயறு, (கொழுக் கட்டை) அப்ப வகைகள், பச்சரிசி, பிட்டு, வெள்ளரிப்பழம், இடித்துச் செய்யும்படியான பலவகைச் சிற்றுண்டிகள், (மதுரத்தி னால்) நிகரற்ற கிழங்குகள், மிகுந்த அன்னம், கடலை, இவை முதலான (சத்துவகுண) ஆகாரங்களை உணவாகக் கொள்ளுகின்ற வரும், ஒப்பற்றவரும், விக்கினங்களை ஆக்கவும், நீக்கவும் வல்லவரு மான கருணையங்கடலே! கயிலாய மலையில் வசிப்பவரும், வளைவான சடா மகுடத்தையுடையவரும், (ஒருவராலும் எடுக்க முடியாத மகாமேருகிரியாகிய) வில்லையுடையவரும், பெரிய பொருளும், உலகங்களுக்கெல்லாம் தந்தையுமாகிய சிவபெரு மானருளிய ஞானவடிவினரே! ஒற்றைக் கொம்புடைய பெருமை*

*யிற் சிறந்தவரே! அங்கவடியை யுடையதும், விசித்திரமானதும் ரத்தினங்களைப் பதிய வைத்துள்ளதுமான பொன்னாலாகிய சேணத்தையிட்டு அலங்கரிக்கப்பட்டதும், வேகமாக நடையுடையதும், உக்கிரம் பொருந்தியதுமாகிய பட்சியென்று சொல்லும் படியான (குதிரையையும்) மயில் வாகனத்தையும், (இலக்கத் தொன்பான் வீரர்களையும் மாயையால் மயக்கிய) கிரவுஞ்ச மலையை அடியோடு (அதன் மாயையும்) பிளந்தழியுமாறு விட்டருளிய (ஞான சக்தியாகிய) வடிவேலாயுதத்தையும், அட்ட திக்குகளும் மதிக்குமாறு கெம்பீரமாகப் பறந்து வருகின்ற குக்குட துவசத்தையும், எல்லா உலகங்களுக்கும் உயிர்களுக்கும் காவலாக இருந்து திருவருள் பாலிக்கும் சிறிய திருவடியையும், வல்லபத்தில் முதிர்ந்த பன்னிரு புயாசலங்களையும் வயலூர் என்னும் புனித திருத்தலத்தையும், அமைத்து (அருள்நாதவொலியால்) உயர்ந்த திருப்புகழை (உலகம் உய்யுமாறு) சொல்லக் கடவாயென அடியேனுக்குத் திருவருள் புரிந்த அருள்நெறித் தொண்டை ஒரு காலத்தும் மறக்க மாட்டேன்.*

## விரிவுரை

**பட்சியெனும் உக்ரதுரகம் :**

*மயிலைக் குதிரையாக உருவகம் புரிந்தனர்.*

| | |
|---|---|
| சம்ப்ரம மயூர துரகக்கார | – *திருப்புகழ்* |
| ஒகார பரியின் மிசை | – *திருப்புகழ்* |
| நடநவில் மரகத துரகம் | – *திருப்புகழ்* |
| வெங்கலாப ஒரு பராக்ரம துரகம் | – *திருப்புகழ்* |
| ஆடும்பரி | – *அநுபூதி* |

*என்ற அழகிய திருவாக்குகளையுஞ் சிந்தித்துச் சித்தம் மகிழ்க.*

**பக்குவ மலர்த்தொடை :**

*மலர்ந்துவிடில் வண்டுகள் எச்சில் புரிந்து விடுமாதலால் வண்டுகள் நுகராமுன் மலரும் பக்குவத்தில் 'சிறையளி புகுதா முன்னஞ் சிறுகாலை யெழுந்திருந்து' என்றபடி அன்பர்களால் விதிப்படி எடுத்துத் தொடுத்தணியப்பட்ட மாலை.*

அக்குவடுபட்டொழிய :

கிரவுஞ்ச மலையின் மீது வேல்விட்ட வரலாறு

அகத்தியர் அரனார் அருள்பெற்றுத் தென்திசை நோக்கி வரும் வழியிலே மாயமாபுரம் வந்தபோது, சூரபன்மன் துணைவனாகிய தாரகாசுரனுக்கு உறுதுணையாயிருந்து பற்பல மாயங்களைப் புரிந்து தேவர்களையும், முனிவர்களையும் கொல்லுகின்ற கிரவுஞ்சனென்னும் அசுரன் கண்டான். அன்றில் வடிவத்தை யுடையானாகிய அவனுடைய மாயைகளையும் வல்லமைகளையும் அளவிட்டு உரைத்தல் அரிது. மண்ணுலகை விண்ணுலகாக்குவன். விண்ணுலகை மண்ணுலகாக்குவன். தினகரனைச் சந்திரனாக்குவன். சந்திரனைத் தினகரனாக்குவான். மேருவை அணுவாகவும், அணுவை மேருவாகவும், வடவா முகாக்கினியை நீராகவும், நீரை வடவாமுகாக்கினியாகவும் இவ்வாறே ஒன்றையொன்றாக மாற்றுவான். அவன் மாயா வலியைக் கூறவல்லார் யாவர்? இத்தகைய மாய வல்லனாகிய அவ்வசுரத் தலைவன் விந்தமலை போல் சிகரங்களை ஆகாயத்திற் போக்கி, பெரியதொரு மலைவடிவங்கொண்டு தன்னுள் வழியு மொன்று செய்து நின்றான். அம்மலைக்குள் ஒரு குரோச தூரஞ் சென்ற அகத்திய முனிவர் வழிகாணாது நிற்ப, பின்னர் ஒரு வழி காணப்பட்டது. அவ்வழி செல்லப் பின்னரும் வழியிலதாயிற்று. தவமுனிவர் மயங்கி ஒரு பக்கம் சிறுவழி தோன்ற அதன் கண் நடந்தகாலை அக்கினி சுவாலித்துச் சூழ, மழை சோனையாகப் பொழிய, இடிஇடிக்க, இருட்படலஞ் சூழுமாறு மாயத்தைச் செய்தான்.

முனிவனார் இது அறிவிலிகளாம் அவுணரது மாயமென்று உண்மையுணர்ந்து கைகொட்டி நகைத்துச் சீறி 'நன்று நன்று இவன் வல்லமையை யொழிப்பேனெ'ன்று தங்கரதத்திலிருந்த தண்டாயுதத்தாற் புடைத்துத் துவாரமுண்டாக்கிச் சாபங்கூறு வாராயினார். "வெய்யோய்! நீ அசுர வுருமாறி இம்மலைவடிவாய் இராக்கதருக்கு இருப்பிடமாகி இருடியருக்கும் இமையவருக்கும் இடர்மிகப் புரிந்து பல நாட்கள் இருப்பாயாக. எமது தண்டாயுதத் தாற் புழை படுத்தப்பட்ட இவைகளெல்லாம் மாயைகளுக்கு இருப்பாய் விளங்கிக் குமரக்கடவுளின் நெடுஞ்சுடர் வேலால் பொடியாக அழியக் கடவாய்'' என்று கூறிச் சென்றனர்.

மாற்படு நமது பாணி வலிகெழு தண்டா லுன்றன்
பாற்படு புழைகள் யாவும் பற்பல மாயைக் கெல்லாம்
ஏற்புடை யிருக்கை யாக வெம்பிரா னுதவுஞ் செவ்வேள்
வேற்படை தன்னிற் பின்னாள் விளிகுதி விரைவி லென்றான்.

*– கந்தபுராணம்*

*அவ்வாறே அவ்வசுரன் மலைவடிவாயிருந்து பலருக்கும் மாயஞ்செய்து வந்தனன். பின் அறுமுகத் தண்ணலார் ஆணைப் படி அமர்புரிய வந்த வீரவாகு தேவர், தாரகனுடைய மாயந் தெரியாது, அம்மலைக்குள் அவனைப் பின் தொடர்ந்து சென்று மயங்கினார். முதல்வர் சென்று திரும்பிலரே, யாது நிகழ்ந்தனவோ என்று வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேச்சுரர், வீரபுரந்தரர், வீரராக்கதர், வீரமார்த்தாண்டர், வீராந்தகர், வீரதீரர் என்னும் எண்மரும் இலக்கம் வீரரும் பூத வெள்ளங்களும் அவ்வாறே சென்று கிரவுஞ்சமலையில் மயங்கிக் கிடந்தனர்.*

*இதனை நாரதர் ஓடிச்சென்று நம் கதிர்வேலண்ணலிடம் விண்ணப்பம் புரிய, அவர் நெடுஞ்சுடர் வேலையேவி அக்கிரவுஞ்ச மலையைப் பொடிப்பொடியாக அழித்தருளித் தாரகனையும் மாய்த்து மயங்கிய இலக்கத்தொன்பான் வீரர் களுக்கும் இன்ப மளித்தனர்.*

திக்கது மதிக்கவரு குக்குடம் :

*குமாரமூர்த்தியினது கொடியாக விளங்கும் சேவல் அட்ட திக்குகளும் அதன் வலியைக் கண்டு மதிக்குமாறு மகாவீரத்தோடு உலவுகிறது என்பது இதனால் நன்கு விளங்குகின்றது. வெற்றித் துவசமாகிய அச்சேவலானது சிறகையசைத்தவுடன் அண்ட கடாகம் உடைபட்டது; உடுக்குலங்கள் உதிர்ந்தன. கிரிகளும் மகா மேரு பருவதமும் இடிந்து விட்டன என்கின்றார்.*

படைபட்ட வேலவன்பால் வந்த வாகைப் பதாகையென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்து
உடைபட்டது அண்ட கடாகம் உதிர்ந்தது உடுபடலம்
இடைபட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்டவே.

*– அலங்காரம்*

வாளகிரி யைத்தனது தாளிலிடியப் பொருது
வாகைபுனை குக்குட பதாகைக் காரனும்

*– வேளைக்காரன் வகுப்பு*

ரட்சைதரு சிற்றடி :

*அருள்நெறியிலுதவி புரிவதும், பிறைச் சந்திரனையொத்த பற்களுடன் பாசக் கயிற்றைக் கையில் கொண்டு வடவாக்கினி போன்ற விழிகள் சுழல வரும் இமயதூதுவரைப் பிறகிடச் செய்வதும், நினைந்தவை யனைத்துந் தருவதும், அடியாருடைய பகைகளை யழிப்பதும் குமாரமூர்த்தியின் திருவடிகளே யாதலின் உயிர்களுக்குக் காவலாயிருந்து உதவுகின்ற சரணம்.*

முதலவினை முடிவிலிரு பிறையெயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகால தூதர்கெட
முடுகுவது மருணெறியி லுதவுவது நினையுமவை
முடியவரு வதுமடியர் பகைகோடி சாடுவதும்
– *சீர்பாத வகுப்பு*

உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாள் – *திருமுருகாற்றுப்படை*

முற்றிய பன்னிருதோள் :

*அளவுபடுத்த இயலாத அவுணர் குழாங்கள், வரத்தாலும், வாள் முதலிய படைகள் பற்றிய கரத்தாலும், மலைபோன்ற உரத்தாலும், விரைவாகச் செல்லுகின்ற சரத்தாலும் மிகச் சிறந்து தம்மை வெல்வார் ஒருவருமில்லை யெனத் தருக்கி ஆயிரத் தெட்டண்டங்களிலும் நிறைந்து வந்த காலத்து அவ்வவுணர் சேனை முழுவதையும், அரியரி பிரமாதியரை ஏவல் கொண்ட சூரபன்மாவையும் வென்ற தோளானபடியால் வல்லபத்தில் முதிர்ந்ததென வியந்தனர்.*

அலகி லவுணரைக் கொன்ற தோளென – *திருப்புகழ்*

எதிர்படு நெடிய தருவடு பெரிய கடாமுமிழ்
நாகமேக மிடிபட மற்பொரு
திண்சிலம் படங்க மோதிப்பிடுங்கின

★ ★ ★

இபரத துரக நிசிசரர் கெடவொரு சூரனை
மார்பு பீறியவனுதி ரப்புனல்
செங்களந் துளங்கி யாடிச்சிவந்தன
– *புயவகுப்பு*

செய்ப்பதி :

*(செய் - வயல், பதி -ஊர்) ஆறுமுக வள்ளல் அருணகிரி யார்க்குத் திருப்புகழைப் பாட அருணையில் அடியெடுத்துத் தந்து*

*மீண்டும் அசரீரியாக நம் வயலூருக்கு வாவென அருளி, வயலூரில் அருணகிரியாருக்கு இன்ன இன்ன பொருளை வைத்துத் திருப்புகழை விருப்பமொடு செப்பென அருளினர். ஆதலால், அருணகிரியார் திருப்புகழ் பாடும் விசேட அனுக்கிரகம் பெற்றதும், முருகன் கனவிலும் நனவிலும் பலகாலுந் தரிசனந் தந்தருள் புரிந்ததும் தெய்வீகம் பொருந்தியதுமான திருத்தல மானபடியால் வயலூரையும் திருப்புகழில் இடையிடையே வைத்துப் பாடுவாராயினர். இத்தலத்தில் அளவுகடந்த அன்பு சுவாமிகளுக்கு இருந்ததெனத் தெரிகிறது.*

உயர்திருப்புகழ் :

*திசைகள் நான்கிலும் அன்பர்கள் அற்புதம் அற்புதம் என்று இறும்பூதெய்தும் சித்திர கவித்துவ சத்த மிகுத்து அருளாலும் பொருளாலும் சந்தத்தாலும் ஓசையாலும் உயர்ந்தது திருப்புகழ்.*

பூர்வ, பச்சிம தெட்சிண உத்தர திக்குள
பக்தர்க ளற்புத மெனவோதும்
சித்ர கவித்துவ சத்தமிகுத்த திருப்புகழ்

*– திருப்புகழ்*

அரிய பெரிய திருப்புகழ் *– திருப்புகழ்*

*திருப்புகழை யோதுவோருக்கு ஞானமும் சகல நன்மைகளும் வானம் அரசாள வரமும் மனோலயத்தால் கிடைக்கும். முத்தி வீடும் உண்டாகும்.*

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம்பெறலாம் – மோனவீ
டேறலாம் யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினார்க் காமேயிக் கூறு.

விருப்பமொடு :

*திருப்புகழை அன்போடு பாட வேண்டும்.*

உவப்பொடுன்புகழ் துதிசெய விழைகிலன்

*– திருப்புகழ்*

*இவ்வுயர் திருப்புகழை மறவாமல் விருப்பமொடு பலகாலும் பாடிப் பரவுதல் செய்யும் அடியார்களுக்கு ஆண்டவன் தண்ணருள் புரிகிறான்.*

பலகாலு முனைத்தொழு வோர்கள்
மறவாமல் திருப்புகழ் கூறி
படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே.

*– திருப்புகழ்*

இக்கு... கடலை :

*இத்தகைய ஆகாரங்களால் சத்துவ குணம் உண்டாகும். ஆதலால், விநாயகர் சத்துவகுண ஆகாரங்களையே விரும்புகின்றார்.*

விக்கின சமர்த்தன் :

*தன்னை நினைந்தார்க்கு நிர்விக்கினமும் நினையாதவர்களுக்கு விக்கினமும் புரிவதில் மிகவுஞ் சாமர்த்தியமுடையவர். தன்னை நினையாது கடல் கடைய ஆரம்பித்ததனால் விடத்தையுண்டாக்கினார். பின்னர் நினைத்ததனால் அமிர்தத்தை உண்டாகச் செய்தார்.*

அருளாழி :

*வழிபடும் அன்பர்களது இடர் கடியும் பெருமானான படியால் பெருங்கருணைத் தடங்கட லென்றனர்.*

கருநோ யறுத்தெனது மிடிதூள் படுத்திவிடு
கரிமா முகக்கடவுள் அடியார்கள்
கருதா வகைக்குவரம் அருள்ஞான தொப்பை.

*– திருப்புகழ்*

வழிபடு மவரிடர் கடி கணபதி *– தேவாரம்*

குடிலச்சடிலம் :

*வளைந்த சடாபாரம்.*

குடிலசடை பவுரிகொடு தொங்க *– திருப்புகழ்*

விற்பரமர் அப்பர் :

*வில் - ஒளிமயமானவர். சிவம் என்கிற ஒன்றே எல்லாவற்றிற்கும் பெரிய பொருள். அவர் ஒருவரே உலகங்களுக்குத் தந்தை.*

''உமா ஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம்.''

(பொருள்) பிரபுவாய், முக்கணனாய், நீலகண்டனாய், மிருசாந்தனாய், பூத காரணனாய், சமத்தசாட்சியாய், உமையொடு கூடினவனாயுள்ள பரமேச்வரனை

– *யஜுர் வேத கைவல்யோப நிடதம்.*

வித்தக மருப்பு :

வித்தகம் - ஞானம், மருப்பு - தந்தம், வித்தகம் என்ற பதத்தை மருப்பு என்ற பதத்திற்கு அடைமொழியாகக் கொண்டு மேன்மை பொருந்திய தந்தத்தையுடையவரென்றும் பொருள் கூறலாம்.

## கருத்துரை

வித்தக மருப்புடைய விநாயகமூர்த்தியே! மயில் வாகனத்தையும் கடப்பமலர் மாலையையும், வடிவேற் படையையும், கோழிக் கொடியையும், திருவடிக் கமலங்களையும், பன்னிரு புயாசலங்களையும், வயலூரையும் அமைத்து விருப்பத்தோடு உயர் திருப்புகழை ஓதுவாயென (முருகப் பெருமான்) அருள்புரிந்த திருவருட் பணியை ஒருபோதும் மறவேன்.

## 3

உம்பர்தருத் தேனுமணிக் கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி
இன்பரசத் தேபருகிப் பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே
தம்பிதனக் காகவனத் தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப் பெருமாளே.

## பதவுரை

தம்பிதனக்கு ஆக - தம்பியாகிய முருகவேள் பொருட்டு, வனத்து அணைவோனே - கானகத்தில் (யானை வடிவங் கொண்டு) சென்றவரே! தந்தை வலத்தால் - தந்தையாராகிய சிவ பெருமானை வலஞ் செய்ததனால், அருள் - வழங்கிய, கை கனியோனை - கரத்தில் ஏந்திய கனியையுடையவரே! அன்பர் தமக்கு ஆன - அன்புடையோர்கட்கு உரிமையான, நிலை பொருளோனே - நிலைத்த பரம்பொருளே, ஐந்துகரத்து - ஐந்து

திருக்கரங்களையுடைய, ஆனைமுக - யானை முகங்கொண்ட, பெருமாளே - பெருமையின் மிகுந்தவரே! உம்பர்தரு - தேவதரு வாகிய கற்பகம் போலவும், தேனு - காமதேனுவைப் போலவும், மணி - சிந்தாமணியைப் போலவும், கசிவு ஊறி - என் மனமானது கசிந்து அன்புடையதாகியும், ஒண் கடலில் தேன் அமுதத்து - ஒளி பெற்ற பாற்கடலில் பிறந்த இனிய அமுதம் போன்ற, உணர்வு ஊறி - ஞான உணர்ச்சி ஊற்றெடுத்தும், இன்ப ரசத்தே பலகாலும் பருகி - சிவபோகமாகிய பேரின்ப வெள்ளத்தை அடியேன் பலகாலும் பருகியும் மகிழுமாறு, என்றன் உயிர்க்கு - அடியேனுடைய உயிருக்கு, ஆதரவு உற்று அருள்வாயே - ஆதரவு செய்து திருவருள் புரிவீர்.

## பொழிப்புரை

முருகவேள் வள்ளியை யடையும் பொருட்டு யானை வடிவுடன் கானகத்தில் வந்தவரே! தந்தையை வலஞ் செய்து அவரால் தரப்பட்ட பழத்தைக் கையில் தாங்கியவரே! அன்புடைய அடியார்கட்கு உரிமையான நிலைத்த பரம்பொருளே! ஐந்து கரங்களும் ஆனைமுகமும் படைத்த பெருமிதமுடையவரே! கற்பகத்தரு, காமதேனு, சிந்தாமணிபோல் என் உள்ளம், ஈகைக் குணம் உடையதாகி ஒளிபெற்று பாற்கடலில் தோன்றிய இனிய அமுதம் போன்ற ஞானஉணர்வு ஊறி மெய்ஞ்ஞான இன்ப அமுதைப் பலகாலும் பருகி மகிழ, அடியேனுடைய உயிருக்கு ஆதரவாகி அருள்புரிவீர்.

## விரிவுரை

உம்பர்தரு :

தேவலோகத்தில் ஐந்து விருட்சங்கள் இருக்கின்றன. அவை கற்பகம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், சந்தானம் என்ப வையாம். இவைகளில் நினைத்ததைத் தரும் ஆற்றலுடையது கற்பகம், கற்பகம் போல நினைத்த மாத்திரத்தில் குறிப்பறிந்து கொடுக்கும் இயல்பு நம்மிடம் அமைய வேண்டும்.

தேனு :

காமதேனு - இது அமிர்தத்துடன் பிறந்தது. கேட்டதைத் தரும் இயல்புடையது. வசிட்டாதி மகரிஷிகட்கு உதவுவது, இதுபோல் வறியவர்கட்கு வழங்கும் இயல்பும் நம்பால் அமைய வேண்டும்.

**சிந்தாமணி :**

இது சிந்தித்ததைத் தரும் சிறப்புடையது.

இதுபோல் நாமும் மற்றவர்கள் சிந்தித்ததை அறிவின் நுட்பத்தால் அறிந்து கூடுமானவரை கரவாமல் கொடுக்க வேண்டும்.

**ஒண்கடலில் தேனமுதத்துணர்வூறி :**

பாற்கடல் வெண்மையான ஒளி வீசிக்கொண்டு விளங்கும். அக்கடலில் தோன்றிய அமுதம் போன்ற இனிய மெய்ஞ்ஞான உணர்ச்சி ஊற்றெடுக்க வேண்டும்.

**இன்பரசத்தே பருகி பலகாலும் :**

ஞான உணர்ச்சியால் பேரின்ப நலம் விளையும். அத் தேன் போன்ற இன்பரசத்தைப் பலகாலும் பருகிச் சிவமயமாக விளங்க வேண்டும்.

**என்றனுயிர்க்காதரவுற் றருள்வாயே :**

அடியேனுடைய உயிருக்கு உறுதுணையாக உதவி செய்து அருள் புரிவீராக.

**தம்பிதனக் காகவனத் தணைவோனே :**

முருகப்பெருமான் வள்ளிநாயகிக்கு அருள்புரியும் பொருட்டு வள்ளிமலைக்குச் சென்றார். அந்த ஆன்மாவுக்குப் பக்குவம் விளைவிக்கும் பொருட்டு வேடனாகவும், வேங்கை மரமாகவும், வேந்தன் மகனாகவும், கிழ வேதியனாகவும் பல அற்புதத் திருவிளையாடல்கள் புரிந்தார்.

வள்ளி நாயகியின்பால் இருந்த பந்தபாசம் விலகும் பொருட்டு விநாயகரை யானைவடிவாக வருமாறு நினைந்தார். தம்பியின் வேண்டுகோளுக்கு இணங்கி விநாயகர் ஓங்கார யானையாக வடிவெடுத்து அவ்வனத்திற் சென்றார்.

யானையைக் கண்டவுடன் வள்ளிபிராட்டியார் 'உயிருக்கு இறுதி வரும்போது உறுதியளிப்பார் யாரும் இல்லை. தாய் தந்தை உடன்பிறந்தார் என்ற அனைவரும் உதவி செய்கிலர்' என்று எண்ணிப் பற்றற்று, பற்றற்ற பரமனைப் பணிந்தாள்.

தந்தை வலத்தால் அருள் கைக் கனியோனே :

*நாரதர், தவத்தால் பெற்ற மாதுளங்கனியை, சிவமூர்த்தியின் திருமுன் வைத்து வணங்கினார்.*

*அக்கனியை ஆனைமுகக் கடவுளும் ஆறுமுகக் கடவுளுங் கேட்டனர். "அகில உலகங்களையும் ஒரு நொடிப் பொழுதுக்குள் வலம் வருபவனுக்கு இக்கனி'' என்றார் சிவபெருமான்.*

*எல்லா உலகங்களும் சிவத்துள் அடக்கம் என்று கருதி தந்தையை வலம் வந்து, கனி பெற்றார் விநாயகர். இவ்வரலாற்றின் நுட்பம் யாது? இறைவனுக்குள் எல்லாம் அடங்கியிருக்கின்றன. இறைவன் எல்லாப் பொருளிலும் இருக்கின்றான். ''அணோரணீ யாந் மஹதோ மஹீயானாத்மா'' என்பது உபநிடதம். ஆதலால் விநாயகமூர்த்தி சிவத்துக்குள்ளே எல்லாவற்றையும் பார்த்தருளினார். எல்லாவற்றுக்குள்ளும் சிவத்தை முருகவேள் பார்த் தருளினார்.*

ஐந்துகரத்து ஆனைமுகப் பெருமாளே :

*கணபதி, ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம்பெருந் தொழில்களை ஐந்து திருக்கரங்களால் புரிகின்றார். ஆனைமுகம் ஓங்கார வடிவை உணர்த்துகின்றது.*

## கருத்துரை

*விநாயகப் பெருமானே! அடியேனுடைய ஆன்மாவுக்கு ஆதரவு காட்டி யருள்புரிக.*

## 4

விடமடைசு வேலை யமரர்படை சூலம்
விசையன்விடு பாண மெனவேதான்
விழியுமதி பார விதமுமுடை மாதர்
வினையின்விளை வேது மறியாதே

கடியுலவு பாயல் பகலிரவெ னாது
கலவிதனில் மூழ்கி வறிதாய
கயவனறி வீன னிவனுமுயர் நீடு
கழலிணைகள் சேர அருள்வாயே

இடையர்சிறு பாலை திருடிகொடு போக
இறைவன்மகள் வாய்மை யறியாதே
இதயமிக வாடி யுடையபிளை நாத
கணபதியெ னாம முறைகூற

அடையலவ ராவி வெருவஅடி கூர
அசலுமறி யாம லவரோடே
அகல்வதென டாசொ லெனவுமுடி சாட
அறிவருளும் ஆனை முகவோனே.

## பதவுரை

இறைவன் மகள் - உக்ரசேனன் மகளாகிய தேவகி, வாய்மை அறியாதே - நடக்க இருக்கும் உண்மையை உணராமற்படி, இதயம் மிகவாடி - உள்ளம் பெரிதும் வருந்தி, பிளைநாத - பிள்ளைப் பெருமானே! கணபதி என - கணங்களுக்குத் தலைவரான விநாயகரே என்று, நாமம் முறை கூற - திருநாமங்களை எடுத்துக் கூறித் துதித்ததனால், இடையர் சிறுபாலை - யாதவர்களுடைய சிறிய அளவுடைய பாலை, திருடிகொடுபோக - களவு செய்து கொண்டு போகவும், அடையலவர் ஆவி வெருவ - பகைவர்கள் உயிர் அஞ்சவும், அடிகூர - திருவடியைச் சிலர் விரும்பவும், அசலும் அறியாமலும் அவர்ஓட - அயலார் அறியாமற்படிக்கு அஞ்சி அவர்கள் ஓடவும், அகல்வது எனடா சொல் எனவும் - ஓடுவது என்னடா சொல்லுக என்று கூறவும், முடிசாட - தலைகளை யறுத்துக் கொள்ளவும், அறிவு அருளும் - கண்ண பிரானுக்கு அறிவைத் தந்த, ஆனைமுகவோனே - ஆனைமுக முடைய அண்ணலே! விடம் அடைசுவேலை - நஞ்சு பொருந்திய கடலும், அமரர்படை - தேவர்படையும், சூலம் - சூலமும், விசையன் விடுபாணம் - அர்ச்சுனன் விடுகின்ற கணையும், எனவே தான் விழியும் - சமானம் என்று கூறும்படியான கண்களும், அதிபாரவிதமும் உடை மாதர் - மிகுந்த கனமுடைய தனங்களும் உடைய பெண்களின், வினையின் விளைவு ஏதும் அறியாதே - சாகசத் தொழிலால் விளையும் துன்பங்கள் ஒன்றையும் அறிந்து கொள்ளாது, கடி உலவு பாயல் - வாசனைமிக்க படுக்கையில், பகல் இரவு எனாது - பகல் இரவென்ற வேறுபாடு இல்லாமல், கலவிதனில் மூழ்கி வறிதாய - போகத்தில் மூழ்கி ஏழ்மையடைந்த, கயவன் - கீழ்மகனும், அறிவு ஈனன் - அறிவுகுறைந்தவனும் ஆகிய,

*இவனும் - அடியேனும், உயர் நீடு - உயர்வு நீண்ட, கழல் இணைகள் சேர - இரண்டு திருவடிகள் சேர்ந்து இன்புற, அருள்வாயே - திருவருள் புரிவீர்.*

## பொழிப்புரை

*உக்ரசேன மன்னனுடைய புதல்வியாகிய தேவகிதேவி நிகழ இருக்கும் உண்மையை உணராமல் உள்ளம் மிகவும் வருந்தி, "பிள்ளைப் பெருமானே! கணபதியே" என்று அவர் திருநாமங் களைக் கூறித் துதி செய்து முறையிட்டதனால் கண்ணபிரானுக்கு யாதவர்களுடைய சிறிய அளவுள்ள பாலைத் திருடிக்கொண்டு போகவும், பகைவர்களுடைய உயிரைப் பயப்படச் செய்யவும், சிலர் அவருடைய திருவடியை விரும்பவும், பிறர் அறியாமல் அப் பகைவர்கள் அஞ்சி ஓடவும், அவ்வாறு ஓடுகின்ற அவர்களைக் கண்டு, "எங்கே போகிறீர்கள்? சொல்லுக" என்று கூறி அவர்கள் தலையைத் தகர்க்கவும், அறிவை யருளுகின்ற ஆனைமுகக் கடவுளே! நஞ்சுடன் கூடிய கடலையும், தேவர் ஆயுதத்தையும், சூலத்தையும், அர்ச்சுனன் பாணத்தையும் ஒத்த கண்களும் மிகுந்த கனமுள்ள தனங்களும் உடைய விலைமகளிரின் சாகசத் தொழிலால் விளைவதை ஒன்றும் அறியாதவனாகி வாசனை மிக்க படுக்கைமீது பகல் இரவு என்னாதபடி போகத்தில் முழுகி ஏழ்மை யடைந்த கீழ்மகனும் அறிவற்றவனும் ஆகிய அடியேன் உயர்ந்து நீண்ட உமது சரணாரவிந்தங்களில் சேர அருள் புரிவீர்.*

## விரிவுரை

**விடமடைசுவேலை :**

*பொதுவாக மகளிர் கண்கள் விசாலமாக இருக்க வேண்டும். 'விசாலாட்சி' என்று அம்பிகைக்கு ஒரு பேருண்டு. இங்கே விலை மகளிர் கண்களைக் குறிப்பிடுவதால் விடத்துடன் கூடிய கடல் என்கிறார். தம்பால் வந்தவர்களை நஞ்சுபோல துன்புறுத்துங் கண் என்பது குறிப்பு.*

**அமரர் படை சூலம் :**

*பொதுவாக ஆயுதம் பிறரைக் கொல்லுந் தன்மையுடையது. இங்கு சிறப்பாக தேவர்களுடைய ஆயுதம் என்றதனால் விரைந்து தவறாது கொல்லும் என்று நிச்சயிக்கப்பட்டது. அதுபோல் விலை மகளிர் கண்கள் தம்மிடம் வந்தவர்களை அழிக்கும் தன்மையது வாம்.*

**விசையன் விடுபாணம் :**

*பொதுவாக வீரர்கள் விடும் பாணம் கொடியது. இங்கு சிறப்பாக அர்ச்சுனன் விடும் பாணம் மிகவும் கொடியது. அணுவளவும் குறி பிறழாமற் கொல்லும் இயல்புடையது. அதுபோல் விலைமகளிர் விழி அழிக்கும் ஆற்றல் படைத்தது.*

**அதிபார விதமும் :**

*பருத்த தனங்களையுடைய விலைமகளிர் தமது தனங்களைத் தந்து இளைஞர்களின் தனங்களைப் பறிப்பர்.*

**வினையின் விளைவேதும் அறியாதே :**

*வினை - தொழில்.*

*வந்தவர் மயங்கி, அவர்களைப் பராசக்தியென்றும், அவர் வீடு முத்தியுலகமென்றும், அவர் தரும் போகம் மோக்ஷ இன்ப மென்றும், எண்ணுமாறு சாகசம் பல புரிந்து தன்னை அடுப்பாரைக் கெடுப்பர். ஆ! ஆ! ஒன்றா? இரண்டா? அவர் புரியும் வினை அளப்பில. அதன் விளைவு என்ன? உடல்நலன் குன்றி பற்பல பிணிகள் உண்டாகும். செல்வம் போய் நல்குரவு வரும். உற்றாரும் பெற்றாரும் மற்றாரும் பழிப்பர்; பகைப்பர்; இறுதியில் நரகமும் எய்தும். இவைகளை யுணராமல் பலர் கெடுகின்றனர்.*

**கடியுலவு பாயல் :**

*கடி - வாசனை*

*விலைமகளிர் தமது படுக்கையை நன்கு அலங்கரித்து அர்கஜா, சவ்வாது, புனுகு, பன்னீர், கஸ்தூரி முதலிய நறுமணங் களைத் தடவி அப்படுக்கையைப் பரகதியாக மதிக்குமாறு புரிவர். அவர்கள் மீது வீசும் துர்க்கந்தத்தையும் அந்த நற்கந்தம் மறைக்கும்.*

**பகலிரவெனாது :**

*அம் மகளிர்பால் சென்று மயங்கியோர் பகல் இரவு என்ற வேறுபாடேயில்லாமல் கெட்டழிவர்.*

**கலவிதனில் மூழ்கி வறிதாய :**

*"விலைமாதருடைய கலவியில் முழுகி'' என்றதனால் அதில் அழுந்திவிட்ட ஆபத்தை யுணர்த்துகின்றனர்.*

*வறிது - வெறுமை. ஒன்றும் இல்லாத வறியவனாகி விடு கின்றனன்.*

கயவன் :

*கீழ்மகன் கயமை - கீழ்மை. திருவள்ளுவர் ஒழிபியலில் கயமை என்று ஓர் அதிகாரமே வகுத்துள்ளார். "கயவர் உடம்பாலும் உறுப்புக்களாலும் மனிதர்களே போல்தான் இருப்பார்கள். சிறிதுகூட வேற்றுமையே யிராது'' என்று மிகவும் வருந்திக் கூறுகின்றார்.*

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில்.

*கயவரைப்பற்றி வரும் பத்துக் குறளும் மிகவும் சுவையாக அமைந்திருப்பதை ஆண்டுக் காண்க.*

அறிவீனன் :

*அங்கவீனனைக் காட்டிலும் அறிவீனனே உலகத்திற்குப் பாரம். பரிதாபப்படத் தக்கவன். அறிவின்மையே பெரிய ஆபத்து. அதனால் அடையுங்கேடு அனந்தம்.*

அறிவின்மை யின்மையுள் இன்மை பிறிதின்மை
இன்மையா வையா துலகு.

*– திருக்குறள்*

இறைவன் மகள்... இதமிகவாடி... கணபதி யெனாம முறைகூற :

*மதுரைக்கு அரசன் உக்ரசேனன்; யதுகுல மன்னன். இவன் கம்சனுக்குத் தந்தை. இவனுடைய மகள் தேவகி.*

*தேவகி விநாயகரை உபாசித்தவள். இவள் புதல்வராகிய கண்ணபிரான் ஆயர்பாடியிலே யசோதை வீட்டிலே வளர்ந்தனர். கம்சன், பூதகி, த்ருணாவர்த்தன், சகடாசுரன் முதலிய அரக்கர்கள் பலரைக் கண்ணனைக் கொல்லுமாறு ஏவினான். அதனையறிந்த தேவகி நிகழ இருக்கும் உண்மையை உணர மாட்டாதவளாய் (கண்ணனால் அவ்வரக்கர்கள் மாண்டொழிவார்கள் என்பதை யறியாதவளாய்) புத்திர பாசத்தினால் தன் மகனுக்கு இடர் வருமோ என்று கருதி அஞ்சினாள். அஞ்சிய அவள் தனது உபாசனாமூர்த்தியாகிய விநாயகரைத் துதித்தாள்.*

*பிள்ளைக்கு இடர்வராமல் தடுத்து அருள்புரியுமாறு, "ஏ! பிள்ளைப் பெருமானே! கணபதியே! காப்பாற்று'' என்று கூறித் துதி செய்தாள்.*

இடையர் சிறுபாலை திருடிகொடு போக :

*கண்ணபிரான் யாதவர்கள் வீட்டில் உள்ள பாலைத் திருடினார் என்பதன் உட்பொருள். அவர்களுடைய தூய உள்ளத்தைக் கவர்ந்தனர் என்பதாகும்.*

உள்ளங்கவர் கள்வன் — *தேவாரம்*

அடையலவராவி வெருவ :

*அடையலர் - பகைவர். கண்ணனைக் கொல்ல வந்த அரக்கர்கள் ஆவியஞ்சி நின்றார்கள்.*

அடிகூர :

*உத்தவர் முதலிய அடியவர்கள் கண்ணனுடைய திருவடியிடத்து அன்பு வைத்தார்கள்.*

அசலும் அறியாமல் அவர் ஓட :

*கொல்ல வந்த அசுரர்கள் பிறர் அறியாமல் ஓடினார்கள்.*

அகல்வதெனடா சொல் எனவு முடிசாட :

*அஞ்சியகலும் அவர்களைப் பார்த்து, "எங்கே ஓடுகின்றீர்கள்" என்று கேட்டு அவர்கள் தலைகளைக் கண்ணபிரான் அறுத்து அழித்தனர்.*

அறிவருளும் ஆனைமுகவோனே :

*அத்தகைய நுண்ணிய அறிவை ஆனைமுகமுடைய, அறிவாகரராகிய விநாயகர் கண்ணபிரானுக்கு அருள் புரிந்தார்.*

*திருடி கொடு போக, ஆவிவெருவ, அடிகூர, முடிசாட, அறிவருளினார். உம்மை தொக்கியது.*

*தேவகி செய்த பிரார்த்தனையால் விநாயகர் கண்ணபிரானுக்கு அறிவுக்கு அறிவாகி நின்று அவரைக் கொல்லுமாறு வேடம் புனைந்து வரும் அரக்கரின் மாயத்தை யுணர்த்தி அருள் புரிந்தார்.*

*ஆதலால், இறைவழிபாட்டினால் எல்லா நலன்களும் எய்துவர்.*

## கருத்துரை

*கண்ணனுக்கு அறிவுநலம் அருளிய விநாயகமூர்த்தியே! மாதர்*

*வசம் சேராது உமது மலரடி சேர அருள் புரிவீர்!*

5

நினது திருவடி சத்திம யிற்கொடி
நினைவு கருதிடு புத்திகொ டுத்திட
நிறைய அமுதுசெய் முப்பழ மப்பமு நிகழ்பால்தேன்
நெடிய வளைமுறி இக்கொடு லட்டுகம்
நிறைவில் அரிசிப ருப்பவல் எட்பொரி
நிகரில் இனிகத லிக்கனி வர்க்கமும் இளநீரும்

மனது மகிழ்வொடு தொட்டக ரத்தொரு
மகர சலநிதி வைத்தது திக்கர
வளரு கரிமுக ஒற்றைம ருப்பனை வலமாக
மருவு மலர்புனை தொத்திர சொற்கொடு
வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு
வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே

தெனன தெனதென தெத்தென னப்பல
சிறிய அறுபத மொய்த்துதி ரப்புனல்
திரளும் உறுசதை பித்தநி ணக்குடல் செறிமூளை
செரும உதரநி ரப்புசெ ருக்குடல்
நிறைய அரவநி றைத்தக ளத்திடை
திமித திமிதிமி மத்தளி டக்கைகள் செகசேசே

எனவெ துகுதுகு துத்தென ஒத்துகள்
துடிகள் இடிமுக ஒத்துமு ழக்கிட
டிமுட டிமுடிமு டிட்டிமெ னத்தவில் எழுமோசை
இகலி அலகைகள் கைப்பறை கொட்டிட
இரண பயிரவி சுற்றுந டித்திட
எதிரு நிசிசர ரைப்பெலி யிட்டருள் பெருமாளே.

**பதவுரை**

*தெனனதெனதென தெத்தென என - தெனன தெனதெனதெத் தென என்ற ஒலியுடன், பல சிறிய அறுபதம் மொய்த்த - பல சிறிய ஈக்கள் மொய்த்துள்ள, உதிரப்புனல் - உதிரநீரும், திரளும் உறுசதை - திரண்டுள்ள சதைகளும், பித்தநிணகுடல் - பித்தம் நிறைந்த மாமிசக்குடலும், செறி மூளை - நெருங்கிய மூளையும்,*

செரும உதர நிரப்பு செருக்குடல் - நிரம்பிய அவ்வயிற்றில் நிறைந்துள்ள பெரிய குடலும், நிரைய அரவ நிறைத்த களத்து இடை - வரிசையாகிய ஓசைகளும் நிறைந்த போர்க்களத்தின் நடுவில், திமித திமிதிமி மத்தளம் - திமித திமிதிமி என்று ஒலிக்கும் மத்தளமும், இடக்கைகள் - இடக்கை என்ற வாத்தியங்களும், செக சேசே எனவே - செக சே சே என்று ஒலிக்கவும், துகுதுகு துத்து என ஒத்துகள் - ஒத்து என்ற ஊதுகுழல் துகுதுகு துத்து என்று ஊதவும், இடிமிக ஒத்து துடிகள் முழக்கிட - அடியை நிகர்த்து உடுக்கைகள் ஒலிக்கவும், டிமுட டிமுடிமு டிட்டி என தவில் எழும் ஓசை - தவில் என்ற வாத்தியம் டிமுட டிமு டிமு டிட்டி என்று சப்திக்கவும், இகலி அலகைகள் கைப்பறை கொட்டிட - பேய்கள் ஒன்றோடொன்று மாறுபட்டு கையிலே உள்ள பறைகளைக் கொட்டி முழக்கவும், இரண பயிரவி சுற்று நடித்திட - இரண பயரவி என்ற தேவதை போர்க்களத்தில் சுற்றி நடனம் புரியவும், எதிருநிசிசரரை பெலி இட்டு அருள் - எதிர்க்கின்ற அரக்கர்களைக் கொன்று அருளிய, பெருமாளே - பெருமையில் மிக்கவரே! நினது திருவடி - தேவரீருடைய திருவடிகளையும், சத்தி - வேலாயுதத்தை யும், மயில் - மயிலையும், கொடி - சேவலையும், நினைவு கருதிடு புத்தி கொடுத்திட - அடியேன் மறவாமல் நினைவில் வைத்து தியானிக்கின்ற அறிவைத் தரும் பொருட்டு, நிறைய செய் அமுது - நிரம்பச் செய்த அமுது, முப்பழம் - மூன்று வகையான கனிகள், அப்பம் - அப்பம், நிகழ்பால் - புதிய பால், தேன் - தேன், நெடிய வளைமுறி - நீண்டு வளைந்த முறுக்கு, இக்கொடு - கரும்பு, லட்டுகம் - இலட்டு, நிறை வில் அரிசி - ஒளி நிறைந்த அரிசி, பருப்பு - பருப்பு, அவல் - அவல், எள் - எள், பொரி - பொரி, நிகர் இல் இனி கதலி கனிவர்க்கமும் - ஒப்பிலாத இனிமையான வாழைப் பழவகைகள், இளநீரும் - இளநீர் முதலிய இவைகளை, மனது மகிழ்வொடு தொட்ட கரத்து - திருவுள்ளம் மகிழ்ச்சியுடன் தொடுகின்ற திருக்கரத்தையும், ஒரு மகர சல நிதி வைத்த துதிக்கர - ஒப்பற்ற கடலில் வைத்த தும்பிக்கையையும் உடைய, வளரு கரிமுக ஒற்றை மருப்பனை - பெருமை வளர்கின்ற யானை முகமும் ஒற்றைக் கொம்பும் உடைய கணபதியை, வலமாக - வலம் வந்து, மருவு மலர் புனை - விநாயகருக்கென்று பொருந்திய பூக்களைப் புனைந்து, தொத்திர சொல் கொடு - துதிப்பதற்குரிய சொற்களைக் கொண்டு துதித்து, வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு - தூக்கிய கைகளால் குழையுடைய காதைப் பற்றிக்கொண்டு

தோப்புக் கரணம் போட்டும் சிரசில் குட்டிக் கொண்டும், வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே - தாமரை யனையதும் பரிபுரம் என்ற ஆபரணத்தை யணிந்ததும் ஆகிய பொற்பாதத்தின் அர்ச்சனையை ஒருபோதும் மறக்க மாட்டேன்.

## பொழிப்புரை

"தெனன தென தென தெத்தெனன" என்று ஒலிக்கின்ற சிறிய ஈக்கள் பல மொய்க்கின்ற உதிரம், திரண்டுள்ள சதை, பித்தம் நிறைந்த குடல், நெருங்கிய மூளை, நிரம்பிய வயிற்றில் நிறைந்த பெருங்குடல், பெரிய சத்தம் இவைகள் நிறைந்த போர்க்களத்தில், திமித திமிதிமி என்று மத்தளம் ஒலிக்கவும், இடக்கை என்ற வாத்தியம் செக சே சே என்று ஒலிக்கவும், ஒத்து என்ற ஊது குழல் துகு துகு துத்தென்று ஒலிக்கவும், இடியைப் போல் உடுக்கை ஒலிக்கவும், தவில் என்ற வாத்தியம் டிமுட டிமு டிமு டிட்டி என்று ஒலிக்கவும், மாறுபட்ட பேய்கள் கைப்பறை கொட்டியாடவும், இரணபயிரவி சுற்றி நடிக்கவும், எதிர்த்துப் போரிட்ட அவுணர்களைக் கொன்ற பெருமிதமுடைய முருகக் கடவுளே! தேவரீருடைய திருவடியையும், வேலையும் மயிலையும் சேவலையும் நினைந்து ஒழியாது தியானிக்கின்ற அறிவை விநாயகரிடம் பெறும் பொருட்டு, நிறைய அமுது, மா, பலா, வாழை என்ற முப்பழங்கள். அப்பம், பால், தேன், நீண்டு வளைந்த முறுக்கு, கரும்பு, இலட்டு, ஒளி நிறைந்த அரிசி, பருப்பு, எள், பொரி, ஒப்பில்லாத இனிய பழ வகைகள், இளநீர் என்ற இவைகளை மன மகிழ்ச்சியுடன் தொட்டு உண்ணுகின்ற திருக்கரத்தையும், ஒப்பற்ற மகராலயமாகிய கடலைத் தொட்டு உண்ட தும்பிக்கையையும் உடைய பெருமை வளர்கின்ற யானை முகமும் ஒற்றைக் கொம்பும் உடைய விநாயக மூர்த்தியை வலஞ் செய்து, அவருக்கென்று உரிய மலர்களைத் தூவி, உயர்ந்த சொல்களால் துதி செய்து, கரங்களைத் தூக்கி குழைக் காதுகளைப் பற்றித் தோப்புக் கரணம் போட்டு சிரசில் குட்டிக்கொண்டு, அவருடைய பரிபுரம் அணிந்த தாமரை மலர் போன்ற திருவடிகளின் அர்ச்சனையை மறக்க மாட்டேன்.

## விரிவுரை

நினது திருவடி :

இப்பாடல் முருகவேளை முன்னிலைப்படுத்தி விநாயகரை வரம் குறித்துப் பாடப் பெற்றது.

*முருகவேளுடைய திருவடியை ஒருபோதும் மறவாதிருக்க வரம் வேண்டுகின்றார்.*

சக்தி :

*சக்தி - வேல். வேல் என்பது ஞானம்.*

சத்திதான் யாதோ என்னில் தடையிலா ஞான மாகும்.

*– சிவஞான சித்தியார்*

*ஆகவே, ஞானமே வேல்.*

மயில் கொடி :

*வாகனமாகிய மயிலையும், கொடியாகிய சேவலையும் எப்போதும் நினைக்க வேண்டும். மயில் - விந்து, சேவல் - நாதம்.*

நினைவு கருதிடு புத்தி கொடுத்திட :

*சதா மறவாமல் முருக சிந்தனை செய்யும் அறிவை அருள் புரிகின்றவர் விநாயகர். அத்தகைய அறிவைக் கரிமுகனாரிடம் பெறும்பொருட்டு அவரை அடியேன் வழிபடுகின்றேன் என்று அடிகளார் கூறுகின்றார்.*

நிறைய அமுது... இளநீர் :

*மனிதனுக்குக் குணங்கள் மூன்று; முக்குணங்களும் உணவினாலேயே அமைகின்றன. அவல், பொரி, அப்பம், பழம், பால், தேன் முதலிய உணவுகள் சத்துவ குணத்தை வளர்க்கின்றன.*

*காரம், புளி, ஈருள்ளி, வெங்காயம், முள்ளங்கி முதலிய உணவுகள் ராஜஸ குணத்தை வளர்க்கின்றன.*

*பழையது, பிண்ணாக்கு, மாமிசம் முதலிய உணவுகள் தாமச குணத்தை வளர்க்கின்றன.*

*தூக்கம், சோம்பல், மயக்கம், ஆலஸ்யம் முதலியன தாமத குணத்தால் வருவன.*

*கோபம், டம்பம், வீண் பெருமை, அகங்காரம் முதலியன ராஜஸ குணத்தால் வருவன.*

*சாந்தம், அன்பு, அடக்கம், பொறுமை, கருணை முதலியன சத்துவ குணத்தால் வருவன.*

*சத்துவ குணத்தால் தூய அறிவு தோன்றும். அறிவின்*

*சொரூபம் விநாயகர். அவருக்கு சத்துவகுணப் பொருள்களை நிவேதிப்பதனால் சாந்தமும் நல்லறிவும் நமக்கு உண்டாகும்.*

மகரசலநிதி வைத்த துதிக்கர :

*ஒரு காலத்தில் மஹாப்பிரளயம் ஏற்பட்டு உலகெங்கும் கடல் பொங்கி எழுந்த பொழுது விநாயகப் பெருமான் தமது தும்பிக்கையினால் கடல் நீரை வற்றக் குடித்து உலகத்தை உய்வித்தார். அதனால் அவருக்கு பிரளயங் காத்த பிள்ளையார் என்ற பேர் உண்டாயிற்று.*

மருவு மலர்புனை தொத்திர சொற்கொடு :

*இறைவனைப் பூமாலை கொண்டும் பாமாலை கொண்டும் வழிபட வேண்டும்.*

நாவழுத்தும் சொன்மலரோ நாளுதிக்கும் பொன்மலரோ
தேவையுனக் கின்னதென்று செப்பாய் பராபரமே.

*என்கிறார் தாயுமானார்.*

வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு :

*இரு கரங்களையும் மாற்றி குழையணிந்த காதைப் பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் பிள்ளையார் திருமுன் இட வேண்டும். சிரசில் குட்டிக் கொள்ள வேண்டும். இந்த இரண்டு தன்மையுங் கணபதிக்கே உரியன.*

*கஜமுகாசுரன் மிக்க வலிமையுடையவன். சிவபெருமானை வேண்டிப் பெருந்தவம் புரிந்து, அவரிடம் விலங்குகளாலும், பூதங்களாலும், தேவர்களாலும், மூவர்களாலும், அத்திரங்களாலும், சத்திரங்களாலும், கனலாலும், புனலாலும், பிறவற்றாலும் மரணமில்லாமல் இருக்க வேண்டும் என்று வரம் பெற்றான்.*

*வரம் பெற்ற அவன் பெருந் தருக்குற்றான். மாலயனாதி வானவர்கள் யாவரையும் அழைத்துத் தண்டித்து காலையும் மாலையும் தன் முன்னின்று இரு செவிகளையும் பிடித்துக் கொண்டு ஆயிரம் தோப்புக் கரணம் போடுவித்தான்.*

*கஜமுகனால் துன்புற்ற அமரர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். உமாதேவியாரும் சிவபெருமானும் கைலை மலையில் உள்ள மந்திர சித்திர சாலைக்குச் சென்றனர். அங்கு எழுதியுள்ள ஏழு கோடி மந்திரங்களுக்குள் சமஷ்டி பிரணவம், வியஷ்டி*

பிரணவம் என்ற இரு பிரணவங்களையும் உமையம்மையாரும் சிவமூர்த்தியும் பார்த்தருளினார்கள். அந்த அருட்பார்வையால் இரண்டு பிரணவங்களும் ஒன்றுபட அவற்றின் இடையிலிருந்து பிரணவ வடிவுடன் விநாயகப் பெருமான் அவதரித்தனர்.

சிவபெருமான் கஜமுகனைச் சங்கரிக்குமாறு கணபதிக்குக் கட்டளையிட்டருளினார். பரிவாரங்கள் சூழ விநாயகர் சென்று கஜமுகனுடைய சேனைகளையெல்லாம் கொன்றனர். கஜமுகன் எல்லா ஆயுதங்களாலும் இறவாத தன்மையைக் கண்டு தம்முடைய ஒரு கொம்பை முறித்து ஏவினார். அது சென்று கஜமுகனைப் பிளந்தது. அவன் பெருச்சாளி வடிவு கொண்டு எதிர்த்தனன். விநாயகப் பெருமான் அவன் மீது கருணைமழை பொழிந்து அவனுடைய தீமையை யகற்றி, வாகனமாகக் கொண்டருளினார்.

மாலயனாதி வானவர்கள் துன்பந் தவிர்ந்து இன்பம் அடைந்து விநாயகமூர்த்தியை வணங்கி நின்றார்கள். "வானவர்களே! என்ன வரம் வேண்டும்?'' என்று விநாயகர் கேட்டருளினார். தேவர்கள் "இடர் தீர்த்த இப முகத்து எந்தையே! பன்னெடுங் காலமாகக் கஜமுகனுக்கு முன் நாங்கள் தோப்புக் கரணம் இட்டோம். அவனை அழித்து அருள்புரிந்தீர். இனி தங்கள் திருமுன் நாங்கள் தோப்புக்கரணம் போடுவோம். அதுபோல், தோப்புக்கரணம் போட்டவர்கள் யாவரேயாயினும் இடர் தீர்த்து ஆண்டருள் புரியும்'' என்று வேண்டினார்கள். கணநாதர் "உங்கள் விருப்பம்போல் புரியுங்கள்; ஆயிரம் தோப்புக்கரணம் போட வேண்டாம். மூன்று முறையே போதும். அங்ஙனம் புரிந்தார்களது இடர் நீங்கும்'' என்று வரமளித்தனர். அதனால், விநாயகப் பெருமான் திருமுன் தோப்புக்கரணம் போட வேண்டும்.

அகத்தியர் காவிரி நதியைச் சிவபெருமானிடம் பெற்றுக் கமண்டலத்தில் அடக்கிக் கொண்டு தென்திசையை நோக்கிப் புறப்பட்டார். குடகு மலையில் இருந்து சிவபூஜை செய்து கொண்டிருந்தார். சீர்காழியில் திருநந்தனவனம் வைத்துச் சிவபூஜை செய்து கொண்டிருந்தான் இந்திரன். மழையின்றிப் பூங்கா வாடியது. நாரதமுனிவர் இந்திரனை யணுகிக் காவிரியைத் தருவிக்குமாறு கூறினார். இந்திரன் சுந்தர விநாயகரை வழிபட்டு வேண்டினான். விநாயகர் காகவுருவுடன் சென்று கமண்டலத் தில் அமர்ந்து கவிழ்த்தனர். அது கண்ட அகத்தியர் சீறிப் பாய்ந்தார்.

*விநாயகர் ஓர் அந்தணச் சிறுவனாக ஓடினார். அகத்தியர் இரு கரங்களாலும் குட்டுவதற்காக ஓடி நெருங்கினார். விநாயகர் ஐங்கரக் கடவுளாகக் காட்சி யளித்தார். அகத்தியர் அஞ்சி அவரைக் குட்ட ஓங்கிய கரங்களால் தனது சென்னியில் ஓங்கிப் பலமுறை குட்டிக் கொண்டார். விநாயகர் அவர் கரத்தைப் பற்றி அருள்புரிந்து, "அகத்தியனே, என்ன வரம் வேண்டும்? கேள்'' என்றனர். அகத்தியர் "ஐங்கரக் கடவுளே! தேவரீருடைய சந்நிதியில் சிரத்தில் குட்டிக் கொண்டு வழிபட்டோர்க்கு அறிவு நலம் பெறுக வேண்டும்'' என்று வரம் கேட்டார். அவ்வண்ணமே அருள் புரிந்தனர். ஆகவே, விநாயகப் பெருமானுடைய சந்நிதியில் தோப்புக் கரணமிட்டுக் குட்டிக் கொண்டவர் இஷ்ட சித்திகள் பெறுவர்.*

*அன்றியும் அறிவின் இருப்பிடம் புருவ நடு. ஆதலால், சிரசில் குட்டிக் கொள்வதனால் அறிவு விளக்கமுறும். அறிவு வடிவம் கணபதியாதலால் அவர் திருமுன் புரிதல் இன்றியமையாதது.*

*பின்னேயுள்ள நான்கு அடிகள் முருகப் பெருமான் சூராதி யவுணர்களுடன் போர் செய்த போர்க்களத்து வர்ணனையாகும்.*

## கருத்துரை

*சூராதி யவுணர்களைக் கொன்ற முருகக் கடவுளே! உம்மை எப்போதும் தியானிக்கும் அறிவைப் பெறும் பொருட்டு விநாயகரை வணங்குகின்றேன்.*

## 6

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்திக் குருபரன் எனவோதும்
முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரு மடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியி லிரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பட்சத்தொடு ரட்சித் தருள்வது மொருநாளே

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு கழுதாடத்
திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக எனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை
கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே.

## தோற்றுவாய்

திருவருணையிலே அருணகிரிநாத சுவாமிகள் முருகப் பெருமானிடம், 'சும்மா இரு சொல்லற' என்ற மௌன மந்த்ரோபதேசம் பெற்று நிருவிகற்ப சமாதியில் வீற்றிருந்த ஞான்று, மூவிரு வதன முழு முதற்கடவுள் மயில்மிசை தோன்றி, "நம் புகழைப் பாடுதி" என்று அருள்புரிய அருணகிரியார், "ஆண்டவனே! மறைகளாலுஞ் சாற்றுதற்கரிய தேவரீரது புகழை 'ஏடெழுதா முழு ஏழை'யாகிய அடியேன் எங்ஙனம் பாடுவேன்' என்னலும், நம்பி ஆரூரருக்கு 'நகையால் மதனுருவந் தீத்த நம்பன்' 'பித்தா பிறைசூடி' என்று அடியெடுத்துத் தந்ததுபோல, உலகம் உய்யும் பொருட்டாக செந்தமிழ்ப் பரமாசிரியனாம் செவ்வேட் பரமன் தனது 'ஞானமூறு செங்கனிவாய்' மலர்ந்து கனத்த செந்தமிழால், 'முத்தைத் தரு' என்று மதுர மிகுந்த சொற்றொடர் அடியெடுத்துத் தந்தவுடனே கடல் மடை திறந்த வெள்ளம்போல் நம் அருணகிரியார் இத்திருப்புகழைப் பாடுவாராயினர்.

## பதவுரை

முத்தை தரு - முத்தை நிகர்த்த, பத்தி திருநகை - ஒழுங்காகவும் அழகாகவும் அமைந்த (இள) நகையையுடைய, அத்திக்கு இறை -

தெய்வயானை அம்மையாருக்குத் தலைவரே, சத்தி சரவண சத்திவேற்படையைத் தாங்கிய முருகக்கடவுளே! முத்திக்கு ஒரு வித்து - மோட்ச வீட்டிற்கு ஒப்பற்ற விதையாக (மூலமாக) இருப்பவரே! குருபர - பெரிய குருமூர்த்தியே, என ஓதும் - என்று துதிக்கின்ற, முக்கண் பரமற்கு - மூன்று விழிகளையுடைய பெரிய பொருளாகிய சிவபெருமானுக்கு, சுருதியின் முற்பட்டது - வேதங் களுக்கு முதன்மையானதாகிய "ஓம்" என்ற தனி மந்திரத்தை, கற்பித்து - உபதேசித்து, இருவரும் - பிரமவிட்டுணுக்களும், முப்பத்து முவர்க்கத்து அமரரும் - முப்பத்து முக்கோடி தேவர் களும், அடிபேண - திருவடியை வணங்கவும், தித்தித்தெய ஒத்த - தித்தித்தெய என்னும் ஒலிக்கு இசைந்த, பரிபுர - சிலம்புகளணிந்த, நிர்த்தபதம் வைத்து - நடனஞ் செய்கின்ற திருவடிகளை வைத்து, பயிரவி - காளிகள், திக்கு ஒக்க - திசைகளில் பொருந்துமாறு, நடிக்க - தாண்டவஞ் செய்யவும், கழுகொடு கழுதுஆட - கழுகு களோடு பேய்கள் சேர்ந்து ஆடவும், திக்கு - எட்டுத்திக்குகளிலே யிருந்து, பரி அட்ட பயிரவர் - உலகங்களைத் தாங்குகின்ற பயிரவர் எண்மரும், சித்ர பவுரிக்கு - அழகிய கூத்துக்கு, தொக்குத்தொகு தொக்குத்தொகு தொகு த்ரிகடக என ஓத - தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு என்னும் ஓசையைக் கூறவும், கொத்து பறை கொட்ட - கூட்டமாகப் பற்பல பறைவாத்தியங்களை முழக்கவும், களம்மிசை - போர்க்களத்தில், குக்குக்குகு குக்குக் குகுகுகு - இவ்விதமான ஓசையோடு, முதுகூகை - முதிர்ந்த கோட்டான், குத்தி புதை புக்கு பிடியென - குத்திப்புதை புகுந்து பிடி என்று குழறவும், கொட்பு உற்று எழ - சுழலுந் தன்மையை யடைந்து மேலே எழுந்திருக்க, நட்பு அற்ற அவுணரை - (வேண்டிய வரமளித்த சிவபுத்திரரென்கின்ற) சினேக எண்ணந் தவிர்த்த நிருதர் கூட்டங்களை, வெட்டி பலியிட்டு - கொன்று பலிகொடுத்து, குலகிரி - அசுரர் குலத்திற்கு இயைந்து நின்ற கிரவுஞ்ச மலையானது, குத்துப்பட - குத்துப்பட்டு அழிந்து போகும்படி, ஒத்து பொரவல - (அறமார்க்கத்திற்கு) பொருந்தி நின்று போர்செய்யவல்ல, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! பத்து தலை தத்த (இராவணனுடைய) பத்துத் தலைகளும் சிதறி விழுமாறு, கணைதொடு - இராமாவதாரமெடுத்துக் கணை தொட்டு, ஒற்றைகிரி - ஒப்பற்ற மந்திரமலையாகிய, மத்தை பொருது - மத்தால் திருப்பாற்கடலை (கூர்மாவதாரமெடுத்து) கடைந்து, ஒரு பட்டபகல் - பகற்பொழுது ஒன்றை, வட்ட

*திகிரியில் - வட்ட வடிவமாயுள்ள சக்ராயுதத்தால், இரவு ஆக - இரவு ஆகும்படி செய்து, பத்தற்கு - அர்ச்சுனனாகிய பத்தனுக்கு, இரதத்தைக் கூடிய - (அன்பினால்) பாகனாக இசைந்து தேர் நடத்திய, பச்சைபுயல் - பசுமையான நீலமேக வண்ணராகிய திருமால், மெச்சதகுபொருள் - மெச்சுவதற்குத் தகுந்த பரம் பொருளே! பட்சத்தொடு - அன்போடு, ரட்சித்து அருள்வதும் - காப்பாற்றி யருள்புரிவதாகிய, ஒருநாளே - ஒரு நாளும் உளதோ?*

## பொழிப்புரை

முத்தைப்போல் வரிசையாக அமைந்து அழகு செய்வதாகிய இளநகையுடைய தெய்வயானையம்மையாருக்கு இறைவரே! ஞானசக்தியாகிய வேலாயுதத்தையுடையவரே! சரவணப் பொய்கையில் எழுந்தருளியவரே! முத்தி வீட்டிற்கு மூலகாரண மாகவுள்ளவரே! குருமூர்த்தியாக விளங்கும் பரம்பொருளே! என்று துதிக்கின்ற சோமசூரியாக்கினி என்கிற முச்சுடர்களையும் மூன்று கண்களாகவுடைய சிவபெருமானுக்கு, வேதங்களுக்கு முதலாகிய 'ஓம்' என்கிற குடிலை மந்திரத்தை உபதேசித்து, பிரமன், திருமால் என்கிற இருவரும், முப்பத்து முக்கோடி தேவர்களும் (காப்பாற்ற வேண்டுமென்று) திருவடிகளை விரும்பி வணங்கவும், தித்தித்தெய என்கிற ஓசைக்கு ஒத்த சிலம்புகளை யணிந்த நடனம் புரியும் திருவடியை வைத்துக் காளிகள் திசை களுக்குப் பொருந்துமாறு நடிக்கவும், கழுகுகளோடு பேய்கள் கூத்தாடவும், திக்குகளிலேயிருந்து உலகங்களைத் தாங்குகின்ற அட்ட பயிரவர்களும் தொக்குத்தொகு தொக்குத்தொகுதொகு த்ரிகடக என்ற தாள ஒத்துக்களைக் கூறவும், பற்பல பறை வாத்தியங்கள் முழங்கவும், போர்க்களத்தில் முதிர்ந்த கோட் டானானது குக்குக்குகு குக்குக்குகுகுகு என்ற ஒலியுடன் குத்திப் புதை புக்குப்பிடி என்று கூக்குரலிடவும், (வேண்டிய வரமும் வாழ்வும் அளித்த சிவபெருமானது திருக்குமாரர் முருகக் கடவுள் என்ற) சினேக எண்ணமற்ற அவுணர் குழாங்களை சுழற்சியுற்று எழுந்திருக்க வெட்டி பலியிட்டும், அசுரர் குலத்தின் மாயைக்கு ஒத்து நின்ற கிரவுஞ்ச மலையை அழித்தும், அறநெறியில் நின்று போர் செய்யவல்ல பெருமையிற் சிறந்தவரே! இராமாவதார மெடுத்து இராவணனுடைய தலைகள் பத்தும் சிதறி விழக் கணைகளை விடுத்தவரும், கூர்மாவதாரமெடுத்து ஒப்பற்ற மந்தர மலையால் பாற்கடலைக் கடைந்தவரும், ஒரு பகற்பொழுதை

*வளைந்து சக்கரத்தால் இரவாகும்படி செய்து பக்தனாகிய அர்ச்சுனனுக்குப் பாகனாகித் தேரை விடுத்தவரும், பசுமை நிறமுடைய மேகம் போன்ற திருமேனியுடையவரும் ஆகிய நாராயணமூர்த்தி மெச்சுவதற்குத் தகுந்த பொருளே! அன்புடன் அடியேனைக் காப்பாற்றி யருள்வதாகிய ஒருநாள் உளதோ?*

## விரிவுரை

முத்தைத்தரு :

*"மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்" என்ற தொல் காப்பியச் சூத்திரப்படி ஒவ்வோரெழுத்திலும் அகர உயிரின் சம்பந்தமிருப்பதால் ஆரம்ப எழுத்தாகிய 'மு' என்ற எழுத்தில் அகரமும், மகர மெய்யின் மீது உகர உயிரேறி முகரமாக ஆனபடி யால் உகாரமும் மகார மெய்யும் சேர்ந்துளது. ஆகவே, அ, உ, ம் இந்த மூன்றின் சமூகம் 'ஓம்' என்ற பிரணவ மந்திரமாயிற்று. எனவே, தமிழ் வேதமாகிய திருப்புகழின் ஆரம்பத்தில் பிரணவ மந்திரம் முதலாவதாகத் திகழ்கின்றதைக் கூர்த்த மதியினர் ஆராய்ந்துணர்க.*

*'உமைக்கும் ஒரு முத்தாய் முளைத்த குருநாதக் குழந்தை'யின் புகழானபடியால் முத்து என்று தொடங்கினர்.*

*முத்தம்மையாரது குமாரர் அருணகிரியார் ஆனபடியால் முன்னறி தெய்வமாகிய தாயாரை முதலில் நினைக்க வேண்டு மென்கிற நியாயப்படியும் முத்து என ஆரம்பித்தனர்.*

*முத்து வெண்மை நிறமுடையதால் திருப்புகழைப் பயில் வோர் மனமுந் தூய்மையாக இருக்க வேண்டுமென்ற கருத்தும் அதிலே தோன்றுவது காண்க.*

அத்திக்கு இறை :

*தெய்வயானை கிரியாசக்தியானபடியால் கர்மயோகத்தை முதலாவதாக அனுஷ்டிக்க வேண்டியது அவசியம் என்பதை வலி யுறுத்துவதற்காக கிரியாசக்தியை முதலாவதாக வைத்தனர்.*

சரவண :

*வானவர் பொருட்டும் மானவர் பொருட்டும் சரவணப் பொய்கையில் அருளுருவாகத் தோன்றிய திருவருளைக் காட்டுகிறது.*

மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினா லளக்கொ ணாமல்
நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடு நிமல மூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோன்றி யருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந் தருளி னானே.

*– கந்தபுராணம்*

சரவணாஜாதா நமோநம *– திருப்புகழ்*

முத்திக்கு ஒரு வித்து :

*முழுமுதற் கடவுளாகிய முருகப்பெருமானே முத்தி வீட்டிற்கு மூல காரணர்.*

"கதிக்கு நாதனீ"

"தெரிசன பரகதியானாய் நமோநம"

*– திருப்புகழ்*

குருபர எனவோதும் :

*சிவபெருமான் சிஷ்யபாவ மூர்த்தியாகித் துதித்ததை,*

"விசும்பின் புரத்ரயமெரித்த பெருமானும்"

நிருபகுரு பரகுமர என்றென்று பக்திகொடு
பரவஅரு ளியமௌன மந்த்ரந்த னைப்பழைய
நினதுவழி யடிமையும்வி ளங்கும்ப டிக்கினிது ணர்த்தி யருள்வாயே

*– திருப்புகழ்*

நாதபோற்றி எனமுது தாதை கேட்க *– திருப்புகழ்*

*என்ற வாக்குகளாற் றெளிக.*

முக்கட் பரமன் :

*ஏனைய தேவர்கட்கில்லாத முக்கண் சிவபெருமானுக்கே யுளதாதலால் அவரே தேவதேவராம். மகாதேவராம். அவரைத் தியானிப்பவருக்கே இருள் நீங்கி ஞானவொளி தோன்றும். ஆதலால், அவரைப் பரமன் என்று வியந்தனர்.*

த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம்,
த்யாத்வா முனிர் கச்சதி பூத யோநிம்
ஸமஸ்த ஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத்
ஜ்ஞாத்வா தம் ம்ருத்யுமத்யேதி
நாந்ய: மந்தா விமுக்தயே.

*– யஜுர்வேத கைவல்யோபநிடதம்*

*முக்கண்ணனாய், நீலகண்டனாய், மிக்க சாந்தனாய், பூத காரணனாய், சமஸ்தசாட்சியாய் உள்ளவனை முனிவன் தியானித்து இருளைக் கடந்தெய்துகின்றனன். அவனையறிந்து மிருத்யுவதைத் தாண்டுகின்றனன் விடுதலைக்கு வேறு வழியில்லை.*

முந்திய வல்வினைகள் தீர்ப்பான் றன்னை
மூவாத மேனிமுக் கண்ணி னானை.

*– அப்பர் தேவாரம்*

சுருதியின் முற்பட்டது :

*பிரணவ மந்திரமே வேதங்களனைத்திற்கும் முதன்மையாகும். அதனிடத்திலேயே வேதங்கள் தோன்றுகின்றன. வேதமாதா அதுவே.*

ஏமுறப்படு மறைக்கெலாம் ஆதிபெற்று இயலும்
ஓம்.

*– கந்தபுராணம்*

கற்பித்து :

*பிரணவப் பொருள் வினவி அறுமுகனார் அயனைச் சிறை செய்த ஞான்று, கண்ணுதற் கடவுள் கந்தப்பெருமானை நோக்கி, "பிரமனறியாத குடிலையின் பொருளை நீ யுணர்வையோ?" என்ன, குகக்கடவுள் உணர்வேமென, அக்காலை சிவமூர்த்தி அவ்வொரு மொழியின் பொருளை ஓதுதியென்று வழிபாடு செய்ய, பிதாவினது செவியில் பிரணவ மந்த்ரோபதேசம் புரிந்து புத்ர குருவாக விளங்கினார்.*

அரவு புனைதரு புனிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
அறிவை யறிவது பொருளென அருளிய பெருமாளே.

*– திருப்புகழ்*

செழுமகுட நாக மொய்த்த ஒழுகுபுனல் வேணி வைத்த
சிவனைமுத லோது வித்த குருநாதா

*– திருப்புகழ்*

இருவரும்.... அமரரும் அடிபேண :

*பிரம்ம விட்டுணுக்களுக்குந் தேவருக்கும் முழுமுதற் கடவுள் முருகப்பெருமானே யாதலின் அவர்கள் அறுமுக வள்ளலின் அடிமலர்களை விரும்பி வணங்குகின்றார்கள்.*

விதூயதாநிதேப்ரஹ்ம விஷ்ணு பூர்வைச்ச வந்திதம்

*– வடமொழி ஸ்காந்தம்*

திருமருவு புயனயனொ டயிராவதக் குரிசில்
அடிபரவு பழநிமலை கதிர்காம முற்றுவளர்
சிவசமய அறுமுகவ திருவேர கத்திலுறை
பெருமாளே.

*– திருப்புகழ்*

அரிப்பிரம ரளப்பரிய பதக்கமலம் அருள்வாயே.

*– திருப்புகழ்*

பட்டப்பகல் வட்டத்திகிரியில் இரவாக :

*பாண்டவர்கட்கும் சுயோதனாதிகட்கும் நிகழ்ந்த பதின் மூன்றாம் நாள் யுத்தத்தில் கௌரவர்கள் தருமறைக்கு மாறாக அதமத்தின் வழிநின்று அனேக வீரர்களாக வளைந்து அர்ச்சன னுடைய புத்திரனும், மகாவீரனும் அதிரதனும் ஆகிய அபிமன்யு வைக் கொன்றார்கள். தனஞ்சயன் கண்ணனுடன் சம்சப்தகர் மீது போர்புரியச் சென்றிருந்தான். தனஞ்சயன் நீங்கிய பாண்டவர் நால்வர்களையும் அவர்கள் படைகளையும் ஜயத்ரதன் உருத் திரரது வரத்தின் வன்மையால் தடுத்து அபிமன்யுவின் வதத்திற்குக் காரணமாக நின்றான். அதனையுணர்ந்த அர்ச்சுனன் புத்ர சோகத்தால் பீடிக்கப்பட்டுப் பெரிதும் வருந்தி துன்பக் கடலில் ஆழ்ந்தான். ஒருவாறு தேறிச் சினங்கொண்டு கண்கள் சிவந்து, "நாளை சூரியன் மேற்கடலில் அத்தமிப்பதற்குள் அபிமன்யுவின் வதத்திற்குக் காரணமாக இருந்த ஜயத்ரதனைக் கொல்லப் போகிறேன். அங்ஙனம் ஜயத்ரதனைக் கொல்லாவிடில் தாய் தந்தையர்களுக்கு அன்னங் கொடுக்காதவர்களுக்கும், குருதார கமனஞ்செய்கிறவர்களுக்கும், கோள் சொல்கிறவர்களுக்கும் சாதுக்களைக கண்டு வெறுக்கின்றவர்களுக்கும், பிறர் மீது பழி கூறுகின்றவர்களுக்கும் மனச் சாக்ஷிக்கு விரோதமாக நடப்பவர் களுக்கும், நன்றி மறந்தவர்களுக்கும் எந்தக் கதியுண்டாகுமோ அந்தக் கோரமான கதியை நான் அடையக் கடவேன்.'' இவை முதலான பற்பல சபதங் கூறி முடிவில், "அந்தப் பாவியாகிய ஜயத்ரதன் கொல்லப்படாமலிருக்கும்போது ஆதித்தன் அத்தமித் தானேயானால் உடனே அக்கினியில் நான் பிரவேசிப்பேன்'' என்று பயங்கரமான சூளுரை கூறினான்.*

பதினான்காம் நாள் யுத்தத்தில் எதிரிகளால் வெல்லப்படாத வனும், மகாவீரனும், சவ்யசாசியுமாகிய விஜயன் கண்ண பிரானால் தூண்டப்படும் இரதத்தின் மீதூர்ந்து கௌரவ சேனையில் நுழைந்து கொழுந்து விட்டெரிகின்ற பெரிய அக்கினி யைப்போல சைன்யங்களை அழித்துக் கொண்டு சென்றான் ஸ்ருதாயுதன், பூரிசிரவன் முதலிய அநேகரைக் கொன்றான். சூரர் என்று எண்ணங்கொண்ட துரியோதனாதிகளும் அவர்களின் சைன்யங்களும் அர்ச்சுனனை எதிர்த்து, நெருப்பை எதிர்த்த விட்டிற்பூச்சிகளுக்குச் சமானமாக ஆனார்கள்.

மேற்கடலில் சூரியன் அத்தமிக்குமுன் பக்தனாகிய பார்த்த னைக் காப்பாற்றுவதற்காகக் கண்ணபிரான் தம்முடைய சக்ரா யுதத்தால் சூரியனை மறைத்து இருளை யுண்டு பண்ணினார். சிந்து தேசாதிபதியாகிய ஜயத்ரதன் தலையை நீட்டி சூரியாத்த மனத்தைப் பார்த்தான். உடனே கண்ணபிரான் "அர்ச்சுனா சிந்துராசன் தலையையும் கழுத்தையும் உயரத்தூக்கி சூரிய மண்டலத்தைப் பார்க்கிறான். அவனுடைய தலையை விரைவாக அரிந்துவிடு'' என்றார். சூரியனை மறைத்து இருளுண்டாக்கிய வாசுதேவரது கருணையை வியந்து தனஞ்செயன் வச்சிராயுதத் திற்கு நிகரானதும் தேவர்களாலும் தாங்க முடியாததும், கூர்மை யுள்ளதும், சந்தன புட்பங்களால் ஆராதிக்கப்பட்டதுமான திவ்யாஸ்திரத்தை எடுத்து விடுத்தான். அவ்வம்பானது விரைந்து சென்று பருந்தானது மரத்தின் உச்சியிலுள்ள மற்றொரு பறவையைக் கவர்வதுபோல் ஜயத்ரதனுடைய தலையைக் கவர்ந்தது.

அந்தத் தலை கீழே விழுவதற்குள், கண்ணபிரான் காண்டீப தரனை நோக்கி, "கௌந்தேய! இந்தத் தலையானது பூமியில் விழாதபடி நீ செய், அதன் காரணத்தைக் கூறுகின்றேன்' என்றனர். கரவேகத்தாலுஞ் சரவேகத்தாலும் மிகுந்த பார்த்தன் அனேக பாணங்களை விடுத்து அத்தலையைக் குறுக்கிலும் மேலும் கீழும் சஞ்சரிக்கும்படி செய்தான். எல்லோரும் ஆச்சரியப்படும்படியாக வும் விளையாடுபவனைப் போலவும் அர்ச்சுனன் அத்தலையை அம்புகளால் கீழே விழாதபடி சமந்த பஞ்சகத்திற்கு வெளியே கொண்டு போனான். பின்னர் பார்த்தன் கேசவரை நோக்கி, "எவ்வளவு தூரம் நான் கொண்டு போவேன்? ஏன் இத்தலையைப் பூமியில் தள்ளக்கூடாது? இதனை எவ்விடம் கொண்டு போகும் படி செய்ய வேண்டும்?'' என்று வினவினான்.

கண்ணபிரான், "அர்ச்சுனா! ஜயத்ரதனுடைய பிதாவாகிய விருத்தக்ஷத்திரன் தன் மகனது தலையை எவன் பூமியில் தள்ளுகிறானோ அவனுடைய தலையும் நூறு துணுக்காகச் சிதற வேண்டுமென்று சமந்த பஞ்சகத்திற்கு வெளியே கடுந்தவம் புரிந்து கொண்டிருக்கிறான். ஆதலால், ஜயத்ரதனுடைய தலையை நீ பூமியில் விழும்படி செய்தால் உன் தலை நூறு துண்டாகப் போகும். ஐயமில்லை குந்தி நந்தனா! கணைகளாலே இந்த ஜயத்ரதன் தலையை அவன் பிதாவாகிய விருத்தக்ஷத்திரன் மடியில் தள்ளு. இதனை அவனறியாதபடி செய். உன்னால் ஆகாத காரியம் மூன்று உலகத்திலும் இல்லை" என்றனர். அப்படியே அர்ச்சுனன் அந்தத் தலையை விருத்தக்ஷத்திரன் மடியிற் கொண்டுபோய் தள்ளினான். அவன் எழுந்தவுடனே அவனுடைய தலையும் நூறு துண்டுகளாக வெடித்துப் போய்விட்டது. விண்ணவரும் மண்ணவரும் புகழ்ந்தார்கள்.

இவ்வாறு ஜயத்ரதனுடைய வதத்தின் பொருட்டு அர்ச்சுனனது சபதம் நிறைவேற பகலை இரவாகச் செய்து, பகவானாகிய கண்ணபிரான் அர்ச்சுனனைக் காப்பாற்றினார்.

பத்தற்கு இரதத்தைக் கடவிய :

இராவண சங்காரஞ் செய்தவரும், திருப்பாற் கடலைக் கடைந்தவரும் ஆகிய கிருஷ்ணபகவான் கருணையினால் தேர் ஓட்டுவதாகிய இழிந்த செயலைச் செய்தார்.

சீர்படைத்த கேண்மையினால் தேரூர்தற் கிசைந்தருளும்
செங்கண் மாலை

– *வில்லிபாரதம்*

பச்சைப்புயல் :

நாராயணனுடைய திருமேனி மரகதம் போன்று விளங்குவதை,

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமர ரேறே ஆயர்தம் கொழுந்தே யென்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகரு ளானே.

என்ற தொண்டரடிப் பொடியாழ்வார் திருவாக்காலுமுணர்க.

மெச்சத் தகுபொருள் :

*ஆயிரந்தலைகளும் இரண்டாயிரங் கரங்களும் உடையவனும் பிரமாதி தேவர்களைச் சிறை செய்தவனும் ஆகிய சிங்கமுகனையும் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகங்களாக அரசு செலுத்திய சூரபன்மனையும், அலகிலா அவுணர் குழாங்களையும், மாயாவியாகிய தாரகனையும் அழித்தவரான படியால் அக்குகக் கடவுளை நாராயணர் எப்போதும் மெச்சுகின்றனர். அவரால் மெச்சத்தக்க பொருள் அப்பரம்பொருளாகிய குமாரமூர்த்தியே.*

நட்பற்ற அவுணர் :

*சூரபன்மன் தவம் புரிந்தபோது எதிர்தோன்றி ஆயிரத்தெட்டண்டங்களின் அரசாட்சியும், அவற்றையெல்லாம் ஒரு நொடிப் பொழுதில்போய்ப் பார்த்து வருவதற்குரிய இந்திர ஞாலத்தேரும் ஆக்ஞா சக்கரமும், சிங்க வாகனமும், பாசுபதம் முதலிய பற்பல திவ்யாஸ்திரங்களும், வச்சிர சரீரமும், வேண்டிய வரங்களும் உதவிய சிவமூர்த்தியினது திருக்குமாரராகிய குமார மூர்த்தியிடம் நேயங்கொள்ளாது பகைத்து நன்றி மறந்து போர் தொடுத்ததால் நட்பு அற்ற அவுணர் என்றனர்.*

ஒன்றொரு பயன்றனை யுதவினார் மனங்
கன்றிட யொருவினை கருதிச் செய்வரேல்
புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ.

*– கந்தபுராணம்*

## கருத்துரை

*தேவகுஞ்சரியின் தலைவரே! வேலாயுதரே! சரவணோற்பவரே! முத்திக்கு வித்தே! பரசிவகுருவே! தேவர்களால் வணங்கப் பெற்று, அவுணர்களை யழித்தவரே! நாராயணனால் மெச்சுவதற்குத் தகுந்தவரே! அடியேனை அன்போடு காப்பாற்றுகின்ற நாள் ஒன்று உளதோ?*

உ
முருகா

# திருப்புகழ் விரிவுரை

## 1

கொந்து வார்குர வடியினு மடியவர்
சிந்தை வாரிச நடுவினு நெறிபல
கொண்ட வேதநன் முடியினு மருவிய குருநாதா

கொங்கி லேர்தரு பழநியி லறுமுக
செந்தில் காவல தணிகையி லிணையிலி
கொந்து காவென மொழிதர வருசம யவிரோத

தந்த்ர வாதிகள் பெறவரி யதுபிறர்
சந்தி யாதது தனதென வருமொரு
சம்ப்ர தாயமு மிதுவென வுரைசெய்து விரைநீபச்

சஞ்ச ரீகரி கரமுரல் தமனிய
கிண்கி ணீமுக விதபத யுகமலர்
தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே

சிந்து வாரமு மிதழியு மிளநவ
சந்த்ர ரேகையு மரவமு மணிதரு
செஞ்ச டாதரர் திருமக வெனவரு முருகோனே

செண்ப காடவி யினுமித ணினுமுயர்
சந்த னாடவி யினுமுறை குறமகள்
செம்பொ னூபுர கமலமும் வளையணி புதுவேயும்

இந்து வாண்முக வனசமு ம்ருகமத
குங்கு மாசல யுகளமு மதுரித
இந்த ளாம்ருத வசனமு முறுவலு மபிராம

இந்த்ர கோபமு மரகத வடிவமு
மிந்த்ர சாபமு மிருகுழை யொடுபொரு
மிந்த்ர நீலமு மடலிடை யெழுதிய பெருமாளே.

## பதவுரை

சிந்து - நீரையும், ஆரமும் - ஆத்திமலரையும், இதழியும் - கொன்றைமலரையும், இள நவ சந்த்ரரேகையும் - இளமையும் புதுமையும் உடைய பிறைச்சந்திரனையும், அரவமும் - பாம்பையும், அணிதரு செம் சடாதரர் - தரித்துள்ள சிவந்த சடையையுடைய சிவபெருமானுடைய, திருமகவு எனவரும் - அழகிய குழந்தை என அவதரித்த, முருகோனே - முருகக் கடவுளே! செண்பக அடவியினும் - செண்பகத்தருக்கள் நிறைந்த வனத்திலும், இதணிலும் - பரண்மீதிலும், உயர் சந்தன அடவி யினும் - உயர்ந்த சந்தன மரங்கள் மிகுந்த வனத்திலும், உறை குறமகள் - வாசம் பண்ணுகின்ற வள்ளியம்மையாருடைய, செம் பொன் நூபுர கமலமும் - சிவந்த பொன்னாலாகிய சிலம்பை யணிந்திருக்கின்ற தாமரை போன்ற திருவடிகளையும், வளையணி புதுவேயும் - வளையல்களை யணிந்துள்ள புதிய மூங்கிலைப் போன்ற கரங்களையும், இந்துவாள் முக வனசமும் - சந்திரனை யொத்த ஒளிமிக்க திருமுக மலரையும், ம்ருகமத குங்கும அசல யுகளமும் - கஸ்தூரியும் குங்குமப் பூவையுந் தரித்துள்ள இரண்டு தனபாரங்களையும், மதுரித இந்தள அம்ருத வசனமும் - இனிமைவாய்ந்த யாழ் போலவும் அமிர்தம் போலவும் தித்திக் கின்ற வசனத்தையும், முறுவலும் - இளநகையையும், அபிராம இந்த்ர கோபமும் - அழகிய சிவந்த அதரத்தையும், மரகத வடிவமும் -மரகதம்போன்ற பச்சை வடிவத்தையும், இந்த்ர சாபமும் - வானவில் போன்ற புருவங்களையும், இருகுழையொடு பொரும் இந்த்ர நீலமும் - இரண்டு குழைகளோடு போர் செய்வதுபோல் நீண்ட நீலமணியனைய கண்களையும், மடல் இடை எழுதிய - மடற்பரியில் எழுதிய, பெருமாளே - பெருமை மிக்கவரே! கொந்துவார் குரவு அடியினும் - பூங்கொத்துகளுடன் நீண்டுள்ள குராமரத்து அடியிலும், அடியவர் சிந்தைவாரிச நடுவினும் - அடியார்களுடைய இதய தாமரை யிடையிலும், நெறிபல கொண்ட வேத நல் முடிவிலும் மருவிய - பல நெறி களைக் கொண்ட மறைகளில் நல்ல முடிவிலும் விளங்குகின்ற, குருநாதா - குருநாதரே! கொங்கில் ஏர்தரு பழநியில் அறுமுக - கொங்குநாட்டில் அழகுபெற்ற பழநியம்பதியில் எழுந்தருளியுள்ள ஆறுமுகக் கடவுளே! செந்தில் காவல - திருச்செந்தூரில் விளங்குகின்ற காப்பதில் வல்லவரே! தணிகையில் இணையிலி - திருத்தணியில் மேவுகின்ற இணையில்லாதவரே! கொந்து கா என மொழி தர வரு - கூட்டமாகத் திரண்டு "கா" என்று கதறிய

வண்ணமாகத் தருக்கித்துக்கொண்டு வருகின்ற, சமய விரோத தந்த்ரவாதிகள் பெற அரியது - அநேக யுக்திகளைக் கொண்டு விரோதிக்கின்ற சமயவாதிகளால் பெறுதற்கு அரியதும், பிறர் சந்தியாதது - அன்னியர்கள் சந்திக்க முடியாததும், தனது என வரும் ஒரு சம்ப்ரதாயமும் இது என உரைசெய்து - தனக்கே உரியதாகிய ஒப்பற்ற பரம்பரையாக வரும் பொருள் இது என்று அடியேனுக்கு உபதேசித்து, விரை நீப - வாசனை பொருந்திய கடப்பமலர் மாலை புனைந்ததும், சஞ்சரீகரிகரம் முரல் - வண்டுகள் ஒலிப்பதும், தமனிய கிண்கிணீமுக - பொன்னாலாகிய கிண்கிணிகளைத் தரித்திருப்பதும், இத - இதத்தைச் செய்வது மாகிய, பதயுக மலர் தந்த - இரு திருவடித் தாமரைகளைத் தந்த, பெரு அருள் கனவிலும் நனவிலும் - தேவரீருடைய பெரிய அருளை அடியேன் கனவிலும் நனவிலும், மறவேனே - மறக்க மாட்டேன்.

## பொழிப்புரை

கங்காநதியையும், ஆத்திமலரையும், கொன்றைமலரையும், இளமையும் புதுமையும் உடைய பிறைச் சந்திரனையும், பாம்பை யும் அணிந்துள்ள சிவந்த சடைமுடியுடைய சிவபெருமானது திருக்குமாரராக வந்த முருகப்பெருமானே! செண்பக வனத்திலும், தினைப்புனத்தில் அமைத்த பரண் மீதிலும், உயர்ந்த சந்தன வனத்திலும் உறைகின்ற வள்ளியம்மையாரது, சிவந்த பொற்சிலம்பு புனைந்த பாத மலரையும், வளையல் அணிந்த மூங்கில் போன்ற கரங்களையும், சந்திரனையொத்த ஒளி மிகுந்த திருமுக மலரையும், கஸ்தூரியையும் குங்குமப்பூவையும் தரித்துள்ள மலைபோன்ற இரண்டு தனபாரங்களையும், இனிமையான யாழ்போன்ற அமிர்த வசனத்தையும், இளம் புன்னகையையும், அழகிய சிவந்த அதரத் தையும், மரகத நிறமுடைய உருவத்தையும், வானவில் போன்ற புருவங்களையும் இரண்டு குழைகளுடன் போர் செய்யச் செல்லு வதுபோல் நீண்ட நீலமணியொத்த கண்களையும், மடல்குதிரை யில் எழுதிய பெருமிதம் உடையவரே! பூங்கொத்துக்கள் நிறைந்த நீண்ட குராமரவடியிலும், அடியார்களுடைய இதய தாமரை யிலும், பலநெறிகளைக் கூறுகின்ற வேத முடிவிலும் விளங்குகின்ற குருநாதரே! கொங்கு நாட்டில் அழகுடன் திகழும் பழநிமலையில் வாழும் ஆறுமுகக் கடவுளே; திருச் செந்திலம்பதியில் வீற்றிருக்கும் காப்பதில் வல்லவரே! திருத்தணிகையில் எழுந்தருளியுள்ள இணையில்லாதவரே! கூட்டமாகத் திரண்டு "கா" என்று கதறிக்

*கொண்டு தருக்கம் புரிந்து விரோதித்து யுத்தி வாதங்கள் பேசும் சமயவாதிகளால் பெறுவதற்கு அரியதும், அன்னியர்கள் அணுக முடியாததும், பரம்பரையாகத் தனக்கே உரியதாக வருவதுமாகிய உண்மைப் பொருள் இது என்று அடியேனுக்கு உபதேசித்து, கமழ்கின்ற கடப்பமாலையும் வண்டினங்களின் இனிய ஒலியும், பொன்னாலாகிய கிண்கிணிகளும் விளங்க, உயிர்களுக்கு இதத்தைச் செய்யும் திருவடிகளைத் தந்த தேவரீரது பெரிய திருவருளை அடியேன் கனவிலும் நனவிலும் மறக்க மாட்டேன்.*

## விரிவுரை

**கொந்துவார் குரவடியினும்:-**

*கொந்து - பூங்கொத்து; வார் - நீளம். குரவு என்பது ஒரு மரம். குராமரத்தின் அடியில் முருகப்பெருமான் எழுந்தருளி யிருப்பர். திருவிடைக்கழி என்னும் தலத்தில் முருகவேள் குராமரத்தின் கீழ் விளங்குகின்றார் என்பதை அத்தலத் திருப்புகழால் அறிக.*

"செழுமலர்ப் பொழிற் குரவமுற் றபொற்
றிருவிடைக் கழிப் பெருமாளே"

"திருக்கு ராவடி நிழல்தனி லுறைவோனே
திருக்கை வேல்வடி வழகிய பெருமாளே"

*பழநியம்பதியில் இடும்பனுக்கு அருள்புரிந்த மூர்த்தி குராவடி வேலர் எனப்படுவார்.*

*குராமலர் முருகனுக்கு உகந்த மலர் ஆகும். அடியிற் கண்ட அமுத வாக்குகளால் இதனை அறிக.*

"விழைவு குராப்புனை யுங்குமார"

"குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டும்"

"அடவியில் விளவு தளவலர் துளவு குராமகிழ்
கோடல் பாட லளிமுரல் செச்சைய
லங்கல் செங்க டம்பு நேசித் தணிந்தன"

**அடியவர் சிந்தைவாரிச நடுவினும்:-**

*வாரி - தண்ணீர், ஜம் - பிறப்பு; தண்ணீரில் பிறப்பதனால் தாமரைக்கு வாரிஜம் என்று ஒரு பேருண்டு. இடையறாது நினைந்து நினைந்து உருகும் அடியவர் உள்ளக்கமலமிசை*

இறைவன் எழுந்தருளியிருப்பன்.

"இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்புமென
திதயமு மணக்குமிரு பாதச்சரோருகனும்" - *வகுப்பு*

"மருவு மடியார்கள் மனதில் விளையாடு
மரகத மயூரப் பெருமாள் காண்"

"துரிய நிலையே கண்ட முத்தரித யாகமல
மதனில் விளையா நின்ற புத்தமிர்த போதசுக
சுயப டிகமா வின்ப பத்மபதம்" - *திருப்புகழ்*

**நெறிபல கொண்ட நன்முடிவினும்:-**

வேதத்தில் கர்மநெறி, பக்தி நெறி, யோக நெறி, ஞான நெறி முதலிய பல நெறிகள் கூறப்படுகின்றன. ஒரு பெரிய ஊர், பெரிய மாளிகையென்றால் பலவழிகள் இருப்பது இயற்கை. ஆகவே, முத்தி வீட்டிற்குச் செல்லும் நெறிகளும் பல. "சேதாம்பலதுறை" என்று கந்தரந்தாதியிலும் அடிகள் கூறியருளினார். ஏன்? ஒரு நெறியிருந்தால் என்ன? என்ற வினா எழும். ஒரு பெரிய கலாசாலையில் வகுப்பு ஒன்றாக இருக்கலாமோ? பல வகுப்புக்கள் இருக்க வேண்டும். ஏன்? மாணவர்களது அறிவின் பரிபக்குவத் துக்குத் தக்கவாறு வகுப்புக்கள் பல இருக்கவேண்டும் என்க. அதுபோல, ஆன்மாக்களின் பரிபக்குவத்திற்குத் தக்கவாறு நெறிகளும் பல இருத்தல் வேண்டும். வேதம் என்பது அறிவுநூல் எனப்படும். "வித்" என்ற பகுதியடியாக அச்சொல் பிறந்தது.

வேத முடிவு உபநிஷதம். வேதமுடிவில் விளங்கும் பரம் பொருள் வெற்றிவேற்பரமன் என்க.

**கொங்கிலோர்தரு பழநி:-**

பழநி கொங்கு நாட்டின் திலகமாக விளங்குவது. கொங்கு - வாசனை. ஞானமணங் கமழ்கின்ற நாட்டில் ஞான பண்டிதன் எழுந்தருளியிருக்கின்றனன். காசியின் மீறியது பழநியம்பதி. இகபர நலன்களை எளிதில் தரவல்ல தலம் அது. என்றும் ஒன்றுபோல் அடியார்கள் திரளாக வந்து வழிபட்டு வரம் பெறுவர்.

**செந்தில் காவல:-**

திருச்செந்தூர் முருகவேள் சூரசங்காரத்தின் பொருட்டுச் சென்று வீரவாகு தேவரைத் தூது அனுப்பி விட்டுத் தங்கியிருந்த திருத்தலம். கடற்கரையில் இயற்கை யழகு கொலு

வீற்றிருப்பதுபோல் கண்டார்களது கண்ணையுங் கருத்தையும் ஒருங்கே கவரவல்லதாய் விளங்குகின்றது.

கடலைக் கடப்பதற்கு இன்றியமையாத கருவியாக இருப்பது தோணி; பிறவிப் பெருங்கடலில் விழுந்து கரை காணாது கலங்கி நிற்கின்ற ஆன்ம கோடிகளுக்கு முருக வேளுடைய திருவடியே சிறந்த தோணி (புணை)யாகும். தோணியப்பருடைய புதல்வர் அன்றோ அவர். அவருடைய திருவடி பிறவிக்கடலுக்குப் புணை யென்பதை அடிகள் சீர்பாத வகுப்பில் உரைத்தருளினார்.

"உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
உருவுடைய மலினபவ ஜலராசி ஏறவிடும்
உறுபுணையும்"

தன்னைச் சிந்திக்கும் அடியவர்களைத் தமது திருவடி யாகிய ஓடத்தைக் கொண்டு பிறவிப் பெருங்கடலைக் கடக்குமாறு செய்து, முத்திக் கரை சேர்த்து அருளுவதனால் அப்பரமபதியை "ஓடக்காரன்" என்றும் அடிகள் அறிவிக்கின்றனர்.

"யாதுநிலை யற்றலையும் ஏழுபிற விக்கடலை
ஏறவிடு நற்கருணை ஓடக்காரனும்"

எனவே, பிறவிப் பெருங்கடலைக் கடக்க எண்ணும் அடியவர் கள் முருகவேளுடைய திருவடியாகிய ஓடத்தில் ஏறுவதற்கு ஒரு துறைமுகம் வேண்டும் அல்லவா? அத்துறை முகந்தான் திருச்செந்தூர் என்று அறிக.

"செந்திலம்பதியாகிய கடற்கரையில் வந்து கந்த வேளாகிய எனது சந்நிதியை அடைந்த மாத்திரத்திலேயே அடியவர்களைப் பிறவிப் பெருங்கடலைத் தாண்ட வைப்பேன் என்ற குறிப்பை யுணர்த்தும் பொருட்டே ஆறுமுகப்பரமன் "அலைவாய்" என்னும் அந்த அரிய தலத்தில் இடையறாது இனிது வீற்றிருக்கின்றான். இதனை, ஆதிசங்கரரும் உரைக்கின்றனர்.

யதாசந்நி தானம்க தாமாந வாமே
பவாம்போதி பாரம்க தாஸ்தேத தைவ
இதிவ்யஞ்ச யன்சிந்து தீரேய ஆஸ்தே
தமீடேப வித்ரம்ப ராசக்தி புத்ரம்.

- சுப்பிரமணிய புஜங்கம்

பெருவேலை யோரத்தி லேபாவ நீக்கும்
பிரசித்தி சேர்சித்தர் வாழ்கந்த வெற்பில்

ஒருசோதி வடிவோடு குகைமேவு செந்தூர்
உயிருக்கொ ருயிர்செம்பொ னடிபற்று வோமே.

*- (திரு. கு.நடேசக்கண்டர் மொழிபெயர்ப்பு)*

*காவலன் – காப்பதிலே வல்லவன். தொழுது வழிபடு மடியர் காவற்காரப் பெருமாள் ஆதலின் செந்திற் காவல என்று கூறியருளினார்.*

**தணிகையில் இணையிலி:-**

*தணிகை மிகச் சிறந்த திருத்தலம். வள்ளியம்மையாரைத் திருமணம் புரியும் பொருட்டு இறைவன் வந்து தங்கியிருந்த அருமையுடையது.*

"தரையிடங்களில் சிறந்தது கச்சியந் தலம்போல்
வரையிடங்களில் சிறந்தது தணிகைமால் வரையே"

*என்று வடிவேற் பெருமானே வள்ளியம்மையாரிடம் அருளிச் செய்தனர். "புவிக்கு உயிராகிய தணிமலை" என்று அடிகளார் புகல்கின்றனர். வந்து வழிபடும் அடியவர் வினைகளைத் தணியச் செய்யவல்ல மகிமையுடைய திருத்தலம் ஆதலின் இது தணிகை எனப் பெற்றது.*

*அடிகளார் இத்திருப்புகழில் மூன்று தலங்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளனர். பழநி, செந்தில், தணிகை யென்பன. மனிதனுடைய உடம்பில் எழுபத்தீராயிரம் நரம்புகள் இருக்கின்றன. அவற்றுள் சிறந்தவை பத்து நாடிகள். அவற்றுள் சிறந்தவை மூன்று நாடிகள்; இடை, பிங்கலை, சுழுமுனை என்பன என்று அறிக. இவைகள் சூரிய நாடி, சந்திரநாடி, அக்கினி நாடிகளாகும். இந்த உலகிற்கு இடாநாடி தணிகை; சுழுமுனை நாடி பழநி; பிங்கலை நாடி செந்தில் ஆகும்.*

*இடை பிங்கலையில் செல்லும் பிராணவாயுவை யோக நெறியினால் மறித்துச் சுழுமுனை நாடிவழியாகச் செலுத்துபவர் யோகிகள். சுழுமுனை நாடித்தலம் பழநியாதலின் அது யோகத் தலம் என உணர்க.*

**கொந்துகாவென.............தந்த்ரவாதிகள் பெற அரியது:-**

*சமயவாதிகள் தத்தம் சமயமே சிறந்தது என்று கதறிப் பதறிக் கலகமிடுவார்கள். அவர்கள் உண்மைப் பொருளை உணராதொழிவர்.*

ஆதலினால், விபரீதத்தை விளைவிக்கும் சமயகலைகளும் போதும் போதும் என்று அடிகள் பிறிதொரு பாடலில் கூறுகின்ற னர்.

"விபரித சமய கலைகளு மலமலம்"

அலம் - போதும்.

**பிறர் சந்தியாதது:-**

அன்பு நெறியினை யறியாதவர்களைப் பிறர் என்று சுருக்கமாகக் கூறிய அழகு மிகவும் சிறப்புடையது. சிவநெறியே தவநெறியாகும். அத்தெய்வ நெறியே உய்யு நெறியென உணரா தார் பிறர் எனப்படுவர். அவர்கள் இத்திருவளர் விளக்கத்தை ஒருபோதும் அணுக இயலாதவர்களாகின்றனர். இவர்களையே மணிவாசகர் "முத்திநெறியறியாத மூடர்" என்று மொழிகின்றனர்.

**தனதெனவருமொரு சம்ப்ரதாயம்:-**

சிவநெறிக்கே உரியதாகிய தகைமை; வேறு ஒன்றானும் பொருந்த முடியாதது. அத்தகைமை வழிவழியாக வருவது சந்தானம் என்பர். அதுவே, சம்ப்ரதாயம் எனப்படுவது. இந்தப் பரம்பரையைத்தான் வடலூர் இராமலிங்க அடிகள் "வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபு" என்று இயம்புகின்றனர்.

"தங்க ளாணவ மாயை கருமம
லங்கள் போயுப தேச குருபர
சம்ப்ர தாயமொ டேயு நெறியது பெறுவேனோ?
- *திருப்புகழ்.*

**இதுவென உரைசெய்து:-**

அருணகிரிப் பெருமானுக்கு அறுமுகப் பெருமான் குரு மூர்த்தமாக எழுந்தருளி இதுதான் உண்மைப் பொருள் என்று விளக்கமாக உபதேசித்தருளினார், சுவாமிமலைத் திருப்புகழில் அடிகளார் முருகவேளை நோக்கி, "இதுதான் உண்மைப் பொருள் என்று அடிமைக்கு உபதேசிக்க வேண்டும்" என்று முறை யிட்டனர்.

"கருதியொரு பரமபொருள் ஈதுஎன்றுஎன்
செவியிணையி னருளியுரு வாகிவந்துஎன்
கருவினையொ டருமலமு நீறுகண்டு"

அதுபடியே கருதுவார் கருத்தறிந்து முடிக்குங் கந்தவேள்

அடிகளுக்கு உபதேசித்தருளினார்.

பதயுகமலர் தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே:-

அருணகிரிநாதருக்கு ஆறுமுகக் கடவுள் வயலூர் என்னுந் திருத்தலத்திலே மயில்மீது காட்சி தந்து பாதக மலத்தைத் தீர்க்கும் பாத கமலத்தைத் தந்தருளினார்.

"வயலி நகரியி லருள்பெற மயில்மிசை
உதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே" - திருப்புகழ்

முருகவேள் திருவடி தேவருக்கும் மூவருக்கும் மற்ற யாவருக்கும் எட்டாதது. அத்தகைய அருட்பதம் அருணகிரியாருக்கு எளிதில் கிடைத்தது.

"அரிபிரம ரளப்பரிய பதக்கமலம்"

"சுருதி மறைக ளிருநாலு திசையி லதிபர் முநிவோர்கள்
துகளி லிருடி எழுபேர்கள் சுடர்மூவர்
சொலவின் முடிவின் முகியாத பகுதி புருடர் நவநாதர்
தொலைவி லுடுவி னுலகோர்கள் மறையோர்கள்

அரிய சமய மொருகோடி அமரர் சரணர் சதகோடி
அரியு மயனு மொருகோடி யிவர்கூடி
அறிய அறிய அறியாத அடிகள்"
- திருப்புகழ்

"அண்டத் திறைவன் பொன்முடிக்கும்
அமலக் கமலன் மணிமுடிக்கும்
அமரர் முனிவர் தலைகளுக்கும்
அணியப் பணியக் கிடைக்காத
தண்டைப் பதம்" - திருமலைமுருகன் பிள்ளைத்தமிழ்

மறவாமையே பிறவாமைக்கு ஏதுவாகும். ஆதலினால் தான் இறைவன்பால் ஆன்றோர்கள் மறவாத வரத்தை வற்புறுத்தி வேண்டுகின்றார்கள். "உன்னை என்றும் மறவாமை வேண்டும்" என்று காரைக்காலம்மையாரும், "மறக்குமாறிலாத" என்று திருஞானசம்பந்தரும், "தினைத் துணைப் பொழுதும் மறந்துய் வெனோ?" என்று அப்பரும், "எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை" என்று சுந்தரரும், "உனதடியிணை எனதுயிருதவி எனவுனை நினைவது மொழிவது மறவேனே" என்று அருணகிரியாரும், "இணையடிகள் மறவாத மனமொன்று

மாத்திரம் ஏழையேற் கருளுகண்டாய்'' என்று இராமலிங்க அடிகளும் கூறியருளிய ஒருமைப்பாட்டை உன்னுக.

மறத்தல் இறத்தலுக்குச் சமானமாகும்; நினைத்தல் பிறத்தலுக்குச் சமானமாகும். எனவே, மறத்தலும் நினைத்தலும் இறப்பு பிறப்பு ஆகும். ஒருநாளைக்கு நாம் பலமுறை மறப்பதும் நினைப்பதுமாக இருக்கின்றோ மாதலின் இறந்து இறந்து பிறக்கின்றோம். கணந்தொறும் இறக்கின்றோம்; கணந்தொறும் பிறக்கின்றோம். என்னே கொடுமை? இந்த இறப்பு பிறப்பு நீங்க வேண்டுமாயின் நினைத்தலையும் மறத்தலையும் நீக்கவேண்டும். இதனையே அநுபூதி,

"கருதா மறவா நெறிகா ணஎனக்
கிருதாள் வனசந் தரஎன் றிசைவாய்"

என்று உபதேசிக்கின்றது.

மறக்கின்ற தன்மை இறத்தலொப் பாகும் மனமதொன்றில்
பிறக்கின்ற தன்மை பிறத்தலொப் பாகும்இப் பேய்ப்பிறவி
இறக்கின்ற எல்லைக் களவில்லை யேஇந்த சன்மஅல்லல்
துறக்கின்ற நாள்எந்த நாள்பர மேநின் தொழும்பனுக்கே.

*- தாயுமானார்*

ஆனபடியால், ஆண்டவனுடைய திருவருளைக் கனவிலும் நனவிலும் மறவேன் என்று அடிகள் இத் திருப்புகழில் உறுதிபெற அறுதியிட்டுரைக்கின்றனர்.

மடலிடை எழுதிய பெருமாளே:-

மணம் இரண்டு வகைப்படும். ஒன்று களவு. மற்றொன்று கற்பு. பண்டைக்காலத்தில் களவு மணம் நிகழ்ந்தபின் கற்புமணம் நிகழும். தமிழ்க்கடவுளாகிய முருகவேள் இந்த இரு மணங்களுக்கு இலக்கியமாகவே கற்பு நெறியினாலே தெய்வயானை யம்மையாரையும், களவு நெறியிலே வள்ளியம்மையாரையும் மணஞ்செய்து கொண்டருள் புரிந்தனர்.

களவு என்பது பிறர்க்குரிய பொருளை வெளவுதல் போன்றது அன்று. ஒத்த தலைவனும் ஒத்த தலைவியும் ஊழ்கூட்டத் தனியிடத்திற் சந்தித்து உள்ளமும் உணர்வும் ஒருமைப்பட்டு அன்பு வெள்ளத்தில் திளைத்துப் புணர்தலேயாகும். வேதத்தை மறை யொன்றாற் போல இம்மணத்தைக் களவு என்று பேசப்படும்.

களவெனப் படுவ தியாதென வினவின்
வளைகெழு முன்கை வளங்கெழு கூந்தன்
முனையெயிற் றமர்நகை மடநல் லாளொடு
தளையவிழ் தண்டார்க் காமன் அன்னோன்
விளையாட் டிடமென வேறுமலைச் சாரல்
மானினங் குழவியொடு கடிந்து விளையாடும்
ஆயமுந் தோழியு மருவிநன் கறியா
மாயப் புணர்ச்சி யென்மனார் புலவர்.

இக்களவு மணத்தைக் காந்தர்வமணம் என்றுங் கூறப்படும்.

"மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்லியாழ்த் துணைமையோ ரியல்பே"

என்ற தொல்காப்பிய சூத்திரத்தினால் அறிக.

இனி, மேற்கண்ட சூத்திரத்துள் மன்றல் எட்டு எனப்பட்டதனால், அந்த எட்டுமணத்தின் தன்மையையுஞ் சிறிது விளக்குவாம்.

பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்று மணம் எட்டாகப் பேசப்படுகின்றது. இவற்றுள்:

*1. பிரமம்:* ஒத்த கோத்திரத்தவனாய் நாற்பத்தியெட்டு ஆண்டு இளமையில் கழித்த (பிரமசரியவிரத மிருந்த) ஒருவனுக்கு பன்னிரண்டு யாண்டுடையவளாய்ப் பூப்பு எய்திய ஒருத்தியைப் பெயர்த்து இரண்டாம் பூப்பு எய்தா முன் அணிகலன் அணிப்பித்து தானமாகக் கொடுப்பது.

"அறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய அறனவில் கொள்கை"

- *திருமுருகாற்றுப்படை*

*2. பிரசாபத்தியம்:* உரிய கோத்திரம் உடைய தலைமகனை அழைத்து அவனுக்குரியார் தந்த பரிசத்திற்கு இரட்டி தம் மகட்குத் தந்து தீ முன் மணஞ்செய்து தருவது.

*3. ஆரிடம்:* தாம்புரியும் வேள்வியாதி கருமங்களின் பொருட்டு ஒன்று அல்லது இரண்டு, பசு எருது இவைகளைப் பெற்றுக்கொண்டு மகளை மணஞ்செய்து தருவது.

*4. தெய்வம்:* வேள்வியில் வந்த கன்னியைத் தக்க

தலைமகனுக்குத் தருவது. அல்லது தம்மகளை வேள்வி வேட்பித்துத் தரும் ஆசானுக்குத் தக்கணையாகத் தருவது.

*5.அசுரம்:* கொல்ஏறு கோடல், திரிபன்றி யெய்தல், வில்லேற்றுதல் செய்து வீரத்தால் மிக்க ஒருவனுக்கு மகளைத் தருதல். இவைகளில் கொல்ஏறு தழுவுதல் என்பது. முரட்டு எருதை வீரத்தால் அடக்குதல்: இது ஆயர்க்குரியது. மற்ற இரண்டும் அரசர்க்குரியது.

இனி, பெண்ணின் தந்தைக்குக் கேட்கும் பொருள் தந்து பெண்ணுக்கும் அணிகலன் புனைந்து தருவதும் அசுர மணமாகும்.

*6. **இராக்கதம்:*** பெண் வீட்டாரிடம் தனது வலிமை யைக் காட்டி அவர் இணங்காதிருப்பினும் போராடி தலைமகளை வலிதிற் கொள்வது. (இது அரசர்க்குரியது.)

*7. **பைசாசம்:*** துயில்பவளைச் சென்று கூடுதல் பிசாச மணமாகும். இனி, வயதில் மூத்தவளைப் புணர்தலும், இழிந்தவளைப் புணர்தலும் இதன் இனமாகும்.

*8. **காந்தர்வம்:*** கொடுப்பாரும் கேட்பாரும் இன்றி ஒத்த ஆணும் ஒத்த பெண்ணும் பண்டை ஊழ் கூட்ட தனியிடத்தில் சந்தித்து உள்ளமும் உணர்வும் ஒன்றக் கூடுவது ஆகும்.

இந்தக் காந்தர்வமணம் மிகவும் இனிமையானது என்க. அன்பின் பெருக்கினால் நிகழ்வது.

தான் களவொழுக்கத்தினால் எய்திய தலைவியை, இடையில் எய்துதற்குக் காவல் முதலிய தடைகள் நேர்ந்த போது, தலைவன் பெரிதும் வருந்துவன். தன் ஆற்றாமையைத் தோழியிடம் கூறி வேண்டுவன். அவள் உள்ளம் இரங்கித் தலைவியைக் கூட்டி வைப்பள். ஒருக்கால் அவ்வாறு செய்திலளாயின், இறுதியாக மடலேறியாவது விரும்பிய கரும்பனைய காரிகையையடைய முயலுவன்.

காம முழந்து வருந்தினார்க் கேமம்
மடலல்ல தில்லை வலி. - *திருக்குறள்*

மடலேறுதலாவது:

*காதலியைப் பெற விரும்பிய காதலன், அவளது உருவத்தையும் பெயரையும் ஒருபடத்தில் எழுதி, தன் ஊரையும் பேரையும்*

அதன்மேல் எழுதி, அப்படத்தைக் கையில் பிடித்துக் கொண்டு, எருக்கம்பூ மாலையைச் சூடிக் கொண்டு, பழுத்த இலைகளைத் தலையில் சூடி, வாள் போல் கூர்மையாகவுள்ள பனை மடலாற் குதிரைபோல் கட்டி அதன் மீது ஊர்ந்து, காதலியின் ஊர்நடுவிற் சென்று, நாற்சந்தியில் நின்று, ஒன்றும் பேசாமல், பிறர் வசைக்கும் கூசாமல், படத்தில் எழுதிய உருவையே நோக்கி, பகலிர வெனாது உறுதியுடன் நிற்பன். அவனது காதலின் உறுதியைக் கண்ட காதலியின் உறவினர், உழுவலன்புடைய அவனுக்குத் தமது திருமகளை மணஞ்செய்து தருவர்.

ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே.

*- தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல்.*

காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
வீசின போதுள்ள மீனிழந் தார்வியன் தென்புலியூர்
ஈசன சாந்தும் எருக்கும் அணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே.

*- திருக்கோவையார்.*

வாமத் துமைமகிழ் வெங்கை புரேசர் மணிவரைமேல்
தாமக் குவிமென் முலைமட்டு வார்குழற் றையல்நல்லாய்
நாமக் கடலைக் கலம்இவர்ந் தேறுவர் நானிலத்தோர்
காமக் கடலை மடல்மா இவர்ந்து கடப்பர்களே.

*- திருவெங்கைக்கோவை*

மாவென மடலும் ஊர்ப; பூவெனக்
குவிமுகிழ் எருக்கம் கண்ணியுஞ் சூடுப;
மறுகி னார்க்கவும் படுப;
பிறிதும் ஆகுப; காமங்காழ்க் கொளினே. *- குறுந்தொகை*

எனவே, முருகவேள் வள்ளியம்மையாரை களவொழுக்கத்தினால் அடைந்து, இடையே தடை யெய்தியதாகக் கொண்டு, தோழியிடம் போய் மடலேறுவேன் என்று கூறியருளிய திருவிளையாடல் கீழ் வருமாறு காண்க.

தோட்டின் மீதுசெல் விழியினாய் தோகையோ டென்னைக்
கூட்டி டாயெனில் கிழிதனில் ஆங்கவள் கோலம்
தீட்டி மாமடல் ஏறிநும் ஊர்த்தெரு வதனில்
ஓட்டு வேன்இது நாளையான் செய்வதென் றுரைத்தான்.

*- கந்தபுராணம்*

**இந்தளம் :-**

*இந்தளம் என்பது ஒருவகை யாழ்.*

**இந்த்ரகோபம் :-**

*இது ஒரு சிவந்த பூச்சி. இது அதரத்திற்கு உவமையாகப் பேசப்படும்.*

**இந்த்ர சாபம் :-**

*இது வானவில். புருவங்களுக்கு உவமை.*

**இந்த்ர நீலம் :-**

*இந்திர நீலம் என்பது, நீலமணி. இது கண்ணிற்கு உவமை.*

*உவமையாகு பெயராக, இம்மூன்றும் முறையே அதரத்தையும் புருவத்தையும் விழியையும் தெரிவிக்கின்றன.*

## கருத்துரை

*சிவகுமாரரே! வள்ளிமணவாளரே! குருநாதரே! ஒருவருமுணராத உண்மைப் பொருளை உபதேசித்துத் திருவடியைத் தந்த அளவற்ற கருணையை ஒருபோதும் மறக்க மாட்டேன்.*

## 2

வருபவர்க ளோலை கொண்டு
நமனுடைய தூத ரென்று
மடிபிடிய தாக நின்று — தொடர்போது

மயலதுபொ லாத வம்பன்
விரகுடைய னாகு மென்று
வசைகளுட னேதொ டர்ந்து — அடைவார்கள்

கருவியத னாலெ றிந்து
சதைகள்தனை யேய ரிந்து
கரியபுன லேசொ ரிந்து — விடவேதான்

கழுமுனையி லேயி ரென்று
விடுமெனும வேளை கண்டு
கடுகிவர வேணு மென்றன் — முனமேதான்

பரகிரியு லாவு செந்தி
மலையினுட னேயி டும்பன்
பழநிதனி லேயி ருந்த குமரேசா

பதிகள்பல வாயி ரங்கள்
மலைகள்வெகு கோடி நின்ற
பதமடியர் காண வந்த கதிர்காமா

அரவுபிறை பூளை தும்பை
விலுவமொடு தூர்வை கொன்றை
யணிவர்சடை யாளர் தந்த முருகோனே

அரகர சிவாய சம்பு
குருபரகு மார நம்பு
மடியர்தமை யாள வந்த பெருமாளே.

## பதவுரை

*பரகிரி* - திருப்பரங்குன்றத்திலும், *உலாவு செந்தி மலையின் உடனே* - திருவுலா இடையறாது நிகழ்வதாகிய திருச்செந்தூர் என்ற சந்தனமலையிலும், *இடும்பன் பழநிதனிலே* - இடும்பனால் கொணரப்பட்ட பழநிமலை மீதும், *இருந்த* - எழுந்தருளியிருக்கும், *குமர ஈசா* - குமாரக் கடவுளே! *பதிகள் பல ஆயிரங்கள்* - பல்லாயிரக்கணக்கான திருத்தலங்களிலும், *மலைகள் வெகுகோடி* - கோடிக்கணக்கான மலைகளிலும், *நின்ற* - நிலையாக இருந்து, *பதம் அடியர் காண வந்த* - திருவடியைக் கண்டு அடியவர்கள் நலம் பெறுமாறு வந்தருளிய, *கதிர்காமா* - கதிர்காமக் கடவுளே! *அரவு* - பாம்பையும், *பிறை* - பிறைச் சந்திரனையும், *பூளை* - பூளைப் பூவையும், *தும்பை* - தும்பை மலரையும், *விலுவமொடு* - வில்வத்தையும், *தூர்வை* - அறுகம்புல்லையும், *கொன்றை* - கொன்றைப் பூவையும், *அணிவர்சடையாளர்* - சடைமீது தரித்துக் கொண்ட சிவபெருமான், *தந்த* - பெற்றருளிய, *முருகோனே* - முருகப் பெருமானே! *அரகர* - பாவங்களை நீக்குபவரும், *சிவாய* - சிவாய என்ற மூன்று எழுத்துக்களையுடையவரும், *சம்பு* - சுககாரணருமாகிய சிவமூர்த்தியின், *குருபர* - குருநாதரே! *குமார* - குமாரக் கடவுளே! *நம்பும் அடியர்தமை ஆளவந்த* - எப்போதும் நீயே கதியென்று நம்பியுள்ள அடியார்களை ஆட்கொள்ளும் பொருட்டு வந்த, *பெருமாளே* - பெருமிதம் உடையவரே! *ஓலை கொண்டு வருபவர்கள்* - இயமனுடைய ஓலையை எடுத்துக் கொண்டு வருபவர்களாகிய காலதூதர்கள், நமனுடையதூதர்

என்று – நாங்கள் இயமனுடைய தூதர்கள் என்றுகூறி, மடிபிடியது ஆக நின்று – மடியில் கைபோட்டுப் பிடிப்பதுபோல நின்று, தொடர்போது – அடியேனைத் தொடர்கின்ற பொழுதில், மயலது பொலாத வம்பன் – இவன் மயக்கமுடைய பொல்லாதவனாகிய வம்புக்காரன் என்றும், விரகு உடையவன் ஆகும் என்று – வஞ்சனைக்காரன் ஆகும் என்றும், வசைகள் உடனே தொடர்ந்து – வசைச் சொறகளுடனே தொடர்ந்து, அடைவார்கள் – என் உயிரைப் பற்ற நெருங்கி வருவார்கள்; கருவி அதனால் எறிந்து – (என் உயிரைப்பற்றிக் கொண்டுபோய்க் கூற்றுவன் முன் நிறுத்தி) ஆயுதங்களினால் என்னைத் துன்புறுத்தி, சதைகள்தனையே அரிந்து – சதைகளைத் துண்டு துண்டாகச் சேதித்து, கரிய புனலே சொரிந்துவிடவேதான் – இரும்பை உருக்கிய நீரை என் வாயிலேவிட்டு, கழு முனையிலே இரு என்று விடும் எனும் – கழுவின் முனையிலே கிடத்தி என்று என்னைக் கழுவில் ஏற்றி விடுகின்ற, அவ்வேளை கண்டு – அவ்வேளையில் சிறியேனுடைய துன்பத்தைப் பார்த்து, என்றன்முனம் கடுகி வரவேணும் – அடியேன்முன் விரைந்து வந்தருள வேண்டும். (ஏ, தான் – அசைகள்)

## பொழிப்புரை

திருப்பரங்குன்றத்திலும், திருவுலாவருவதற்கேற்ற செந்திலம் பதியாகிய சந்தன மலையிலும், இடும்பனால் கொணரப் பெற்ற பழநிமலையிலும், எழுந்தருளியுள்ள குமாரக்கடவுளே! ஆயிரக் கணக்கான திருத்தலங்களிலும், கோடிக்கணக்கான மலைகளிலும் விளங்கி, திருவடிமலரை அடியார்கள், தெரிசித்து உய்யுமாறு வந்தருளும் கதிர்காமக் கடவுளே! பாம்பு, பிறைமதி, பூளைப்பூ, தும்பைமலர், வில்வம், அறுகு, கொன்றைப்பூ இவைகளை அணிந்த சடைமுடியுடைய சிவபெருமான் பெற்றருளிய குமார மூர்த்தியே! பாவங்களை நீக்குபவரும், மூவெழுத்தின் முதல்வரும் சுககாரணருமாகிய சிவமூர்த்தியின் குருநாதரே! நம்புகின்ற அடியவரை ஆட்கொள்ளவந்த பெருமிதமுடையவரே! இய மனுடைய ஓலையை எடுத்துக்கொண்டு காலதூதர்கள் வந்து "நாங்கள் நமனுடைய தூதர்" என்று கூறி மடியைப் பிடித்து இழுப்பதுபோல் நின்று தொடர்கின்றபோது, "இவன் மயக்கமிக்க பொல்லாத வம்பன்; வஞ்சனைக்காரன்" என்ற வசைமொழி களைக் கூறி, என்பால் நெருங்குவார்கள்; (அப்படிவந்த கால தூதர் என்னைப் பற்றிக்கொண்டுபோய் இயமனுக்கு முன் நிறுத்தி) ஆயுதங்களால் துன்புறுத்தி, சதைகளையரிந்து, உருக்கிய இரும்பு

*நீரை என் வாயில் விட்டு கழுவின் முனையில் ஏற்றிவிடுகின்ற காலத்தில், எனது துன்பத்தைக் கண்டு கருணைபுரிந்து, விரைந்து அடியேன் முன் வரவேணும்.*

## விரிவுரை

வருபவர்க ளோலை கொண்டு:-

*தீவினை செய்த உயிர்களைக்கொண்டு போகும் பொருட்டு இயமதூதர் வருவர். அவ்வாறு வரும்போது இயமனுடைய ஓலையையும் உடன் கொணர்வர். இதனைப் பின்வருந் திருவாக்குகளாலும் அறிக.*

"அமுதுததி விடமுமிழு செங்கட் டிங்கட்
பகவினொளிர் வெளிறெயிறு துஞ்சற் குஞ்சித்
தலையுமுடை யவனரவ தண்டச் சண்டச் சமனோலை
அதுவருகு மளவில்"

"சீட்டின் விதிவழி ஓட்ட மறிகிலை" - *திருப்புகழ்*

"ஓலையுந் தூதருங் கண்டுதிண் டாடல் ஒழித்தெனக்குக்
காலையு மாலையு முன்னிற்கு மேகந்த வேள்மருங்கில்
சேலையுங் கட்டிய சீராவுங் கையிற் சிவந்தசெச்சை
மாலையுஞ் சேவற் பதாகையுந் தோகையும் வாகையுமே.
- *அலங்காரம்*

*"என் ஓலை என்று வருமோ? என் ஓலை எங்கு கிழிந்து விட்டதோ?" என்று வயோதிகர்கள் கூறும் சலிப்புரைகளையுங் காண்க.*

நமனுடைய தூதர்:-

*பாவிகளைப் பற்றுதற்கு நமன்தூதர் வருவர். புண்ணிய சீலர்களையழைக்கச் சிவகணங்களும் விஷ்ணுகணங்களும் வரும்.*

*"சிவனடியார்கள்பால் நீங்கள் செல்லவேண்டா. அவர்களைக் கண்டால் பணிந்து, மிகவுந் தொலைவாக விலகிச் செல்லுங்கள்" என்று இயமன் தனது தூதர்கள்பால் கூறுவன்.*

தொழுது நமனுந்தன் தூதுவர்க்குச் சொல்லும்
வழுவிலாக் காளத்தி மன்னன் - பழுதிலாப்
பத்தர்களைக் கண்டால் பணிந்தகலப் போமின்கள்
எத்தனையுஞ் சேய்த்தாக என்று. - *நக்கீரர்*

மடிபிடியதாக நின்று தொடர்போது:-

*வழக்குத்தலத்திலிருந்து வந்த சேவகன், நியாயத் தலத்தின் உடன் அழைப்புக் கடிதத்தை எடுத்துக் கொண்டு வந்து, மடியில் கையைப் போட்டு வலிந்து இழுத்துக் கொண்டு போவதுபோல், நமனுடைய தூதுவர் வந்து கடுமையுடன் அழைப்பர்.*

"மயலது பொலாத வம்பன் விரகுடைய னாகுமென்று வசைகளுடனே தொடர்ந்து அடைவார்கள்":-

*இயமனுடைய தூதர்கள் "இவன் மயக்கம் மிகுந்த பாதகன்; குற்றமே புரியுங் குணக்கேடன்; வம்பு புரியன் வஞ்சகன்; கொலையும் புலையுமிக்க குண்டகன்;" என்பன வாதி நிந்தனைச் சொற்களைக் கூறி ஏசுவார்கள்.*

கருவியதனா லெறிந்து:-

*புலை, கொலை, சூது, வாது, பிறன்மனை நயத்தல், கள்ளருந்தல், குருநிந்தை முதலிய தீமைகளைப் புரிந்தவர் களை இயமனுடைய தூதர்கள் நரகலோகத்தில் வைத்து, பற்பல ஆயுதங்களால் இடித்தும், அடித்தும், குத்தியும், எத்தியும் உதைத்தும், வதைத்தும் துன்புறுத்துவார்கள்.*

*நன்மை செய்யாவிடினும், தீமையாவது செய்யாதிருத்தல் வேண்டாவோ? தெய்வத்தை வந்திக்காதொழியினும் நிந்திக் காமலாவது இருத்தல் வேண்டாவோ? உயர்ந்த மானுடப் பிறப்பு பலகாலும் வேண்டியதனால் தரப்பட்டது. அரிய இம்மனித உடம் பினால் தனக்கும் பிறர்க்கும் நலஞ் செய்ய வேண்டியதைவிட்டு, சலஞ் செய்தபடியால், இயமதூதர் சினந்து தண்டிப்பர். நரிவெரூஉத்தலையார் என்ற சங்க காலத்துப் புலவர் கூறு கின்றார்.*

பல்சான் றீரே! பல்சான் றீரே!!
கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்
பயனில் மூப்பின் பல்சான் றீரே!!!
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்குங் காலை இரங்குவீர் மாதோ;
நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்,
எல்லாரும் உவப்பது; அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா றதுவெ.

*- புறநானூறு*

"பயனில்லாமல் மூப்பு எய்திக்கிடக்கும் பலராகிய மூத்தோர்களே! கூர்மையான மழுவையேந்தியவனும், மிக்க வன்மையுள்ளவனுமாகிய கூற்றுவன் இனி விரைவில் வருவான்; அப்போது நீங்கள் வருந்துவீர்கள். நல்லது செய்தல் இனி உங்களுக்கு முடியாமலிருக்கலாம். நல்லது அல்லாததாயினும் செய்யாமலிருக்க முயலுங்கள். அதுதான் இனி எல்லாரும் மகிழக்கூடியது. அல்லது செய்யாமல் காக்கும் அப் பழக்கம் ஒருகால் உங்களை நல்லது செய்யும் நெறியில் சேர்த்தாலும் சேர்க்கும்."

**சதைகள் தனையே யரிந்து:-**

"கொன்றால் பாவம் தின்றால் போயிற்று" என்பது பழமொழி. அதாவது, ஆடு கோழி பன்றி முதலிய வாயில்லாத உயிர்களைக் கொன்ற பாவம் தின்றுவிட்டால் போய்விடும் என்பது இதன் பொருள். அப்படியாயின் புலாலுண்ணல் மிகப்பெரிய பாவம் என்று திருவள்ளுவனார் செப்பாரன்றோ?

**"உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண**
**அண்ணாத்தல் செய்யா தளறு"**

என்பது அவர் திருவாக்கு.

அங்ஙனமாயின் மேற்போந்த பழமொழியின் கருத்துதான் யாதோ? பழமொழி ஒருபோதும் பிழைமொழியாது. உயிர்களைக் கொன்ற பாவிகளைக் கொண்டுபோய் இமய தூதுவர்கள், நரகில் கிடத்தி அவர்கள் மாமிசத்தை யறுத்து அறுத்து வாயில் ஊட்டி, "மாமிசத்தையுண்ட மடையனே! இதோ உன் மாமிசத்தை யருந்து" என்று உண்பிப்பார். தன்னிறைச்சியைத் தின்றால்தான் கொன்ற பாவந் தீரும். எனவே, கொன்றால் பாவம் தின்றால் போகும். உயிர்களை வதைத்த பாவம் தன் உடம்பின் சதைகளைத் தின்றால் தான் தீரும். இதுதான் அப்பழமொழியின் உட்பொருள் என உணர்க.

**"அனலூடே**
**தவனப் படவிட் டுயிர்செக் கிலரைத்**
**தணிபற் களுதிர்த் தெரிசெப் புருவைத்**
**தழுவப் பணிமுட் களில்கட் டியிசித் திடவாய்கண்**
**சலனப் படஎற் றியிறைச் சியறுத்**
**தயில்வித் துமுரித் துநெருத் துளையத்**
**தலையிட் டுவருத் தும்யமப் ரகரத் துயர்தீராய்"**

- *திருப்புகழ்*

**கரியபுனலே சொரிந்து:-**

"தசையை அறுத்து அறுத்து வாயில் வைத்து விழுங்கு" என்று இயமதூதுவர் இடர் செய்கின்றபோது, தன்னிறைச்சி யைத் தானே யுண்ண மயங்கிச் சிறிது தியங்குவாராயின், உருக்கிய இரும்பு நீரை வாயில் விடுவர்.

இரும்பை உருக்கி வாயில் விட்டால் வேதனைப்படும் அவ்வுயிர் மாளாதோ? எனின், அங்கு ஏற்பட்ட வுடம்பு துன்பத்தை அனுபவிப்பதற்கு மட்டும் ஏற்பட்ட எட்டு தத்துவங் களுடன் கூடிய, யாதனா சரீரம் என்க.

**கழுமுனையிலே யிரு என்று விடும்:-**

முன் கூறியவாறு பாவிகளைப் பலகாலும் பலவாறு தண்டனையுங் கண்டனையும் புரிந்து, "இந்தப் பாவி பிறப்பதும் இறப்பதும் பாவஞ் செய்வதுமாகவே இருக்கின்றான். சிலகாலம் கழுவில் ஏற்றி வையுங்கள்" என்று கூறி, மழுவில் எறிந்து கழுவில் ஏற்றுவர்.

**அவ்வேளை கண்டு கடுகி வரவேணும் என்றன் முனமேதான்:-**

"முருகா! சிறியேன் பிழை செய்தேனாயினும், என்னை நமன் தண்டித்துக் கழுவில் ஏற்றி, இனி தப்புவதற்கு வழியேயில்லை யென்று தவிக்கும் வேளையில், கருணைக்கடலாகிய தேவரீர் விரைந்து அடியேன்முன் வந்து காப்பாற்றுவீர்.

"என்று நீ அன்று நான் உன்னடிமை யல்லவோ?" உனது அடிமையாகிய என்னை நீயே தண்டனைசெய்; அல்லது, உனது பரிவாரங்களாகிய, வீரவாகு தேவர், வேறு பலவாகவுள்ள பூத கணங்கள் தண்டிக்கட்டும். இயமன் கையில் காட்டிக் கொடுக்காதே.

மக்களைத் தந்தையே தண்டிப்பான்; அல்லது தாயை விடுத்தும், மூத்தமகனை விடுத்தும் தண்டிப்பான். அப்படிக்கு இன்றி வீதி வழியே போகும். குண்டாந்தடிப் பயில்வானிடம் தந்து தண்டிக்கவிடுவது பொருந்துமோ? அதுபோல் எளியேனை எமதண்டனைக்கு ஆளாக்காமல் காப்பாற்றும்.

**இடும்பன் பழநிமலை:-**

பழநிமலை இடும்பன் என்ற ஒருவன் கொணர்ந்து வைத்தத னால், 'இடும்பன் பழநிமலை' என்று கூறியருளினார்.

## இடும்பன் வரலாறு

செந்தண்மைமிக்க பைந்தமிழ் முனிவராகிய அகத்தியர், கந்தகிரி சென்று, கந்தவேளைச் சிந்தையன்புடன் தொழுது துதித்து, "ஐயனே! பன்னிருகையனே! அடியேன் பொதிய மலையில் வைத்துப் பூசிப்பதற்கு ஈண்டு சிவ சொரூபமாகவும் சத்திரூபமாகவும் விளங்கும், சிவமலை சத்திமலை என்ற இரு சிகரங்களையும் தந்தருளல் வேண்டும்" என்று வேண்டினார். வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரிய பொருளை வேண்டு மளவில் உதவும் வேலாயுதக் கடவுள் அவ்வாறே அகத்திய னாருக்கு அருமலைகள் இரண்டையும் அளித்தருளினார். அகத்தியனார் மகத்துவமிக்க அத் திருமலைகள் இரண்டையும் பெயர்த்துக் கொண்டு பூவுலகின்கண் வந்தார். பூர்ச்சவனம் என்னும் தலம் வந்ததும், செவ்வேளின் திருவருளால் அச்சிகரிகள் இரண்டனையும் அங்கு வைத்துப் பொதியை நோக்கி வருவா ராயினார்.

சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் என்னும் அசுரர்களின் சேனைகளுக்கும், அக் குலத்தினருக்கும் வில்வேதமாகிய அத்திர சத்திர வித்தைகளைப் பயிற்றியவன் இடும்பாசுரன். அவன் மனைவி இடும்பி. சூராதியவுணர்கள் வேலாயுதத்தினால் ஒடுங்கியபின், வில்லசிரியனான இடும்பன் தன் மனைவி இடும்பியுடன், வீரமகேந்திரபுரியை விடுத்து, சிவசிந்தையுடன் வனசஞ்சாரம் புரிந்து கொண்டிருந்தான். ஒரு சிறந்த வனத்தில் சிவபெருமானை நேசித்துப் பூசித்தான். சிவபெருமான் தோன்றியருளினார். இடும்பன் எல்லை யில்லாத மகிழ்ச்சியுடன் தொழுதான்; அழுதான். "எந்தையே! ஈசனே! இமையவர் நேசனே! அடியேன் அறுமுகக் கடவுளுக்கு அடிமையாகி அப்பரம கருணாநிதியின் திருவருளைப் பெறவேண்டும்" என்று வேண்டி னான். அரனார் அவ்வரம் நல்கி மறைந்தருளினார்.

அவன் சிவமூர்த்தியை வழிபட்ட தலம் இடும்பவனம் எனப் பட்டது. அது கோயிலூருக்குத் தென்கிழக்கே பத்து கல் தொலைவில் உள்ளது.

இடும்பன் மனைவியுடன் வனசஞ்சாரம் புரிந்து கொண்டு திருக்குற்றாலமலையைச் சார்ந்தான். அங்கு அகத்திய முனிவரைக் கண்டு, அவரது அடிமலர்மீது வீழ்ந்து வணங்கி, "தவப்பெருந் தலைவரே! தயாநிதியே! அடியேன் சூராதியவுணர்களின்

வில்லாசிரியன். கந்தவேள் கருணையை நாடி நிற்கின்றேன். தேவரீர் முருகவேளின் சீடரன்றோ? சிறியேனைக் குமரவேளின் திருவருட்கு உரியவனாக்கி ஆண்டருள்வீர். அடியேன் உமது அடிமலர்க்கு அடைக்கலம்" என்று வேண்டினான்.

அகத்தியனார் அவனை அருட்கண்ணோக்கம் புரிந்து, 'அஞ்சேல்' என்று அங்கையமைத்துக் கூறுவார். "அன்பனே! உனக்குக் குமரவேள் திருவருள் கிடைக்கும். திருக்கேதார தலத்திற்கு அருகில் உள்ள பூர்ச்சவனத்திலே சத்திகிரி சிவகிரி என்ற இரு சிகரங்கள் இருக்கின்றன. அவற்றை யெடுத்து நம் பொதியமலைக்கு வருவையேல் உனக்குக் குமரநாயகன் திருவருள் கிடைக்கும். அழியாத புகழும் பெறுவாய். அத் திருமலைகளின் பெருமை சொல்லுந்தர மன்று; சென்று கொணர்தி" என்று பணித்தருளினார். அங்குச் செல்லும் வழியையும் உணர்த்தி, சடக்கர மந்திர உபதேசமும் செய்து அனுப்பினார்.

இடும்பன் தன் மனைவி இடும்பி யென்பாள் காய்கனி கிழங்குகள் தந்து உபசரித்துவர, குறுமுனியாகிய குருபரன் கூறிய வழியே சென்றான். இடையில் உள்ள திருத்தலங் களையெல்லாம் தரிசித்துக்கொண்டு பூர்ச்சவனம் என்னும் திருத்தலத்தைச் சேர்ந்தான். அங்கு அகத்தியர் வைத்த சத்திகிரி சிவகிரிகளைக் கண்டு களித்தான். "யானே தவமுடையேன்; என் புண்ணியமே புண்ணியம்" என்று உள்ளம் உவந்தான். பூசைக்குரிய சாதனங் களை மனைவி ஆயத்தம் புரிந்து தர, இடும்பன் அம் மாமலை களைப் பூசித்தான். அத்தியர் உபதேசித்த சடக்கர மந்திரத்தை விதிப்படி ஜெபித்துக் கண்களை மூடி, ஒருமையுடன் தவம் புரிந்தான்.

அப்போது பிரமதண்டம் புயதண்டாகவும், அட்டதிக்கு நாகங்களும் கயிறுகளாகவும் தன்னருகில் வந்தன.

அவற்றைக் கண்டு அதிசயித்த அத்திருவாளன் துண்ணென் றெழுந்து, எட்டு நாகங்களையும் உறிபோற் சமைத்து, இரு மலைகளையும் அதில் வைத்து, பிரமதண்டுடன் பிணித்து, மூல மந்திரத்தைச் சிந்தித்து, முருகவேளை வந்தித்து, காவடியாக்கி எடுத்துத் தோளில் வைத்தான். முழங்காலை மண்ணில் ஊன்றி யெழுந்தான். "அரோக்ரா! அரோகரா" என்று கூவிக்கொண்டு தென்திசை நோக்கி நடந்தான். பல காதங்கள் கடந்தான்.

பன்னிருகட்பரமன் திருவிளையாட்டினால் வழி மயங்கி,

விந்தமலை வழியாக, ஸ்ரீசைலம், திருக்காளத்தி, திருத்தணிகை, திருக்காஞ்சி, திருவருணை, திருமுதுகுன்றம் முதலிய தலங்களைச் சேவித்துக்கொண்டு வந்தான். ஆங்காங்கு காவடியையிறக்கி இறைவனை வழிபட்டு, மனைவி தேடித்தரும் காய்கனிகளை யருந்தி, தண்ணீர் பருகி இளைப்பாறிக்கொண்டு சென்னிமலை யென்ற புட்பகிரியைச் சார்ந்தான். அங்கு வழிதெரியாது மயங்கி னான். அங்கு அறுமுகவேள் ஓர் அரசகுமாரனைப் போல் தோன்றி, "இடும்பைக்கு இடும்பை தரும் இடும்பா? நீ இவ்வழியே போய் வராகமலையில் தங்கி, அவ்வழியே பொதியாசலம் போகக்கடவாய்" என்று கூறியருளினார்.

இடும்பன் அகமகிழ்ந்து சென்று வராகமலை வழி சென்று திருவாவினன்குடியை அடைந்தான். திருவேலிறைவன் திருவிளை யாட்டால் மலைகள் மிகவும் பாரமாகித் தோளை வருத்தின. இடும்பன் சிறிது இளைப்புடன் காவடியை இறக்கி வைத்துவிட்டு, வாமதேவ முனியாச்சிரமஞ் சென்று, இடும்பி தந்த இனிய காய் கனி கிழங்குகளையுண்டு இளைப்பாறி, மீண்டும் மலைகளைத் தூக்கத் தொடங்கினான். எத்துணை முயன்றும் காவடி எழ வில்லை. பெருமூச்சு விட்டான். மீண்டும் மீண்டும் பெரிதும் முயன்று எடுக்கலுற்றும் மலைகள் மேல் எழாமை கண்டு கவலையுற்றான். சுற்றுமுற்றும் பார்த்தான். சிவகிரியின் மீது ஒருபுறம் குராமரநிழலில் ஒரு சிறு குழந்தை நிற்பதைக் கண்டான்.

அசுரகுல திலகன் அதிசயித்தான். "இப் பாலகன் யாவன்? தேவகுமாரனோ? இயக்கனோ? சித்தனோ? முருகவேளோ? என்று ஐயுற்று அருகிற் சென்றான்.

அமரர் போற்றுங் குமரநாயகன், பிடரியில் இருண்டு சுருண்ட தலைமயிர் தொங்கவும், கருணையொழுகும் கண்களும், ஆயிர கோடி சூரியர் ஒருங்கே திரண்டாலன்ன ஒளி மிகுந்த திரு மேனியும், முப்புரி நூல் புரளும் திருமார்பும் தண்டு தாங்கிய திருக்கரமும் விளங்க நிற்கக் கண்டான். "ஏ! குழந்தாய்! நீ யார் மகன்? இங்கு நீ தனித்து நிற்கும் காரணம் யாது? வழி தவறி வந்தனைகொல்? விரைந்து சொல்" என்று வினாவினான். முருக வேள் ஒன்றும் பதில் கூறாது முறுவல் புரிந்தனர்.

இடும்பன் ஆலகாலம்போல் சீறி, "ஏ மைந்த! மலையினின்றும் இறங்கி விலகிப்போ. யான் கொலையே புரியும் அசுரகுல குரு. வீணே துன்பத்தைத் தேடிக் கொள்ளாதே" என்றான். குழந்தை வேலவர் நகைத்து, "அப்பா! அசுரனே இம்மலை எமக்கு

இருக்கையாகும். உனக்கு வலிமையிருக்குமாயின் இவற்றை எடுத்துக்கொண்டு போதி" என்றனர். இடும்பன் மிகவுஞ் சினங் கொண்டான். "ஏ பாலகனே! நீ மாயையில் வல்லன் போலும். நன்று; நன்று. நான் மாயவனைச் சிறுவனாகக் குறுகச் செய்தருளிய குறுமுனிவரது அடியவன். உன் செருக்கையும் மாயையுங் காண கின்றேன்" என்று கூறிக் கைகளைப் பிசைந்தான். பற்களைக் கடித்தான். வாயை மடித்தான். புருவத்தை நெறித்தான். குராவடிக் குமரன் மீது பாய்ந்தான்.

குராவடிக் குழந்தை வேற்குமரக் கடவுள், தமது திருக்கரத்தில் விளங்கும் தண்டாயுதத்தினால் சிறிது தாக்கினார். மூதண்ட முகடு உடைந்து வீழ்ந்ததுபோல் இடும்பன் அலறி வீழ்ந்து மடிந்தான். நாகங்களும் பிரம தண்டும் அஞ்சி யகன்று அகத்தியனார்பால் சென்று அஞ்சலி செய்து நிகழ்ந்ததைப் புகன்று, தத்தம் இருப்பிடஞ் சேர்ந்தன.

இடும்பன் இறந்த பேரொலியைக் கேட்ட இடும்பி, உள்ளம் பதைபதைத்து ஓடிவந்து கணவன்மீது வீழ்ந்து புலம்பினாள்.

என் உயிர்த்துணைவா! குறுமுனியின் அருள்பெற்ற கொற்றவ! சூரர்க்கும் வில்வித்தை கற்பித்த வீராதிவீர! நின்னைக் கொன்ற வீரன் யாவன்? அந்தோ! நினை யிழந்து நான் எங்ஙனம் வாழ்வேன். பதியையிழந்த பாவியானேனே. தெய்வமே! நின் சோதனையோ! முன்புரிந்த வினையின் வாதனையோ?" என்று பலவாறு அழுதாள்.

குராமரத்தின் நிழலில் நிற்குங் குழந்தையைக் கண்டாள். "இவர்தான் என் கணவரைக் கொன்றவர் போலும். சூரனைக் கொன்றவர்தான் சூரனது வில்லாசிரியராம் என் கொழுநரைக் கொல்லுதல் கூடும். இவர்தான் எம்மைக் குலமுழு தாளவந்த குன்றம் எறிந்த கூர்வேலவர்; சூர்முதல் தடிந்த சீராளர்" என்று திருவருள் உணர்த்த உணர்ந்தாள். ஓடி எம்பிரான் இணையடி மீது வீழ்ந்தாள். "தேவதேவா! மூவர் தொழும் முதல்வா! நினது திருவிளையாடலின் திறத்தை யறியாத எனது கணவனைக் கொல்வது முறையோ? கருணைக் கடலே!

புங்கவர் வழுத்தும் வேற்கைப் புனிதனே அயிரா ணிக்கு
மங்கல நாணை யீந்த வரதனே என்றும் நின்றாட்
பங்கயம் போற்றும் நாயேன் பதியினை யளித்துப் பொன்னாண்
இங்கெனக் களிப்பாய் தண்டம் ஏந்திய இளைய தேவே.

வேலனே போற்றி ஞான விகிர்தனே போற்றி ஞானக்
கோலனே போற்றி தெய்வக் குமரனே போற்றி ஈசன்
பாலனே போற்றி ஞான பண்டித போற்றி ஞான
சீலனே போற்றி தேவ தேவனே போற்றி போற்றி.

என்று துதித்தாள். அவள் கண்களினின்றும் கண்ணீர் ஆறாய்ப் பெருகியது. அங்குள்ள கல்லும் உருகியது.

அயில்வேற் கடவுள் மயில்மேல் காட்சி தந்தருளினார்! கணங்கள் புடைசூழ்ந்தன; வேதங்கள் ஒலித்தன; தேவதுந்துபிகள் முழங்கின; கந்தவேள் கடைக்கண் கருணை இடும்பன் மீது வீழ்ந்தது. தூங்கி யெழுந்தவனைப்போல் துண்ணென எழுந்தான். அண்டர் நாயகனைக் கண்டான். ஆராத காதல் கொண்டான்; ஆகுலத்தை விண்டான். "திருமுருகா! திருமால் மருகா! பார்வதி பால! அமரர் போற்றுங் குமர நாயக! சிறியேன் அறியாது செய்த பெரும் பிழையைப் பொறுத்தருள்க" என்று அடிமலர்மீது வீழ்ந்து துதித்தான்.

பழநியாண்டவர் "அன்ப! அஞ்சற்க. இம்மலைகள் இங்ஙனமே இருக்கத்தக்கன; குறுமுனியும் ஈண்டு வந்து வழி படுவானாக. அடியார்கள் அனைவரும் ஈண்டுவந்து வந்தித்து வேண்டுவன பெறுவார்களாக. நீ இம்மலையின் இடைப்பகுதியில் நமக்கு அடியவனாக நிற்பாய். உலகில் உள்ளோர் வழிபாட்டிற்குரிய சாதனங்களை உன்போல் காவடியாகக் கொணர்வார்களாக. உன்னை முதலில் வழிபட்டு பின்னர் நம்மை வழிபாடு புரிவார்களாக. உன்னை வணங்கினோர் எம்மை வணங்கிய பயனைப் பெறுக. நமது பூரண அருளை நீ பெற்றாய்" என்று திருவருள் புரிந்து நின்றனர்.

அதுமுதல் பழநிமலைக்கு எண்ணில் காவடிகள் கொணர்ந்து இடும்பனையும் தண்டபாணியாகிய கடம்பனையும் அடியார்கள் என்றும் வழிபட்டு இன்புறுவாராயினார்கள்.

அரவு பிறை :-

இறைவர் திருமுடிமீது பாம்பையும் பனிமதியையுஞ் சூடியுள்ளனர். பாம்புக்கும் சந்திரனுக்கும் பகை; இந்த இரண்டும் இறைவர்பால் ஒற்றுமைப்பட்டிருக்கின்றன. இறைவரிடத்திலே சென்றால் பகையுணர்ச்சி மாறி ஒற்றுமையுண்டாகும்.

அரகர :-

அரன் - பாவத்தைப் போக்குபவன். "ஹரஹர" என்று கூறு

*பவர் வல்வினை நீங்கப் பெறுவர்.*

"ஹரஹரா எனாமூடர்" *- திருப்புகழ்*

*"ஹரஹர" என்று முழங்கினால் உலகந் துயர் தீர்ந்து உயர்வு எய்தும்.*

"எல்லாம் அரன்நாமமே
சூழ்க வைய முந்துயர் தீர்கவே" *- ஞானசம்பந்தர்*

சிவாய :-

*இது திரியக்ஷரம். பக்குவப்பட்ட ஆன்மாக்கள் நாவசையாமல் ஜெபிக்கும் அருள் நலமுடையது.*

"சிவாயவெனு நாமமொரு காலுநினை யாத
திமிராகரனை"
"ஹரஹரசி வாயவென்று தினமுநினை யாமல்" *- திருப்புகழ்*

## கருத்துரை

*பழநிமலை முதலிய எல்லா இடங்களிலும் விளங்கும் முருகக் கடவுளே! இயமவாதனை மேலிடும்போது விரைந்து வந்து அடியேனைக் காத்தருளுவீர்.*

### 3

போத நிர்க்குண போதா நமோநம
நாத நிஷ்கள நாதா நமோநம
பூர ணக்கலை சாரா நமோநம பஞ்சபாண

பூபன் மைத்துன பூபா நமோநம
நீப புஷ்பக தாளா நமோநம
போக சொர்க்கபு பாலா நமோநம சங்கமேறும்

மாத மிழ்த்ரய சேயே நமோநம
வேத னத்ரய வேளே நமோநம
வாழ்ஜ கத்ரய வாழ்வே நமோநம என்றுபாத

வாரி சத்தில்வி ழாதே மகோததி
ஏழ்பி றப்பினில் மூழ்கா மனோபவ
மாயை யிற்சுழி யூடே விடாதுக லங்கலாமோ

கீத நிர்த்தவெ தாளா டவீநட
நாத புத்திர பாகீ ரதீகிரு
பாச முத்திர ஜீமூ தவாகனர் தந்திபாகா

கேக யப்பிர தாபா முலாதிப
மாலி கைக்கும ரேசா விசாகக்ரு
பாலு வித்ரும காரா ஷடானன புண்டரீகா

வேத வித்தக வேதா விநோதகி
ராத லக்ஷ்மிகி ரீடா மகாசல
வீர விக்ரம பாரா வதானவ கண்டசூர

வீர நிட்டுர வீரா திகாரண
தீர நிர்ப்பய தீரா பிராமவி
நாய கப்ரிய வேலா யுதாசுரர் தம்பிரானே.

## பதவுரை

கீத நிர்த்த - இசையுடன் கூடிய நடனத்தை, வேதாள - பூதங்களுடன், அடவீ நடநாத புத்திர - சுடுகாட்டில் நடனம் செய்யும் சிவபெருமானுடைய திருக்குமாரரே! பாகீரதி கிருபாசமுத்திர - கங்காநதிக்கு மகவாக வந்த கருணைக்கடலே! ஜீமூதவாகனர் தந்திபாகா - மேகத்தை வாகனமாகக் கொண்ட இந்திரன் மகளாகிய தெய்வயானை யம்மையாரை ஒருபக்கத்திற் கொண்டவரே! கேகய பிரதாபா - மயிலின்மீது எழுந்தருளிவரும் பெருமை யுடையவரே! மூல அதிப - முதன்மையான தலைவரே! மாலிகை குமர ஈசா - மாலைகளையணிந்த இளம்பூரணரே! விசாக - விசாக மூர்த்தியே! க்ருபாலு - கருணை மிக்கவரே! வித்ரும ஆகாரா - பவளம் போன்ற சிவந்த வடிவினரே! ஷட் ஆனன புண்டரிகா - தாமரை போன்ற ஆறு முகங்களை யுடையவரே! வேத வித்தக - வேதத்தில் வல்லவரே! வேதா விநோத - பிரமதேவனோடு பிரணவப் பொருள் கேட்டு விளை யாடியவரே! கிராதலக்ஷ்மி கிரீடா - வேடர் குல மகளாகிய வள்ளிப் பிராட்டியுடன் ஆடல்புரிகின்றவரே! மகஅசல வீர - பெரியமலைகளில் எழுந்தருளியுள்ள வீர மூர்த்தியே! விக்ரம - ஆற்றலுடையவரே! பார அவதான அகண்ட - பெரிய அவ தானத்தைச் செய்யும் அகண்டரே! சூரவீர நிட்டூர - சூரனாகிய வீரனுக்கு நிட்டூரஞ் செய்தவரே! வீரா - வீரரே! ஆதிகாரண - முதன்மையான காரணக் கடவுளே! தீர நிர் பய தீரா - பயம் இல்லாத தீராதி தீரரே! அபிராம - மிகுந்த அழகுடையவரே!

விநாயக ப்ரிய - விநாயகமூர்த்திக்கு அன்புள்ளவரே! வேலாயுதா - வேலாயுதத்தையுடையவரே! சுரர் தம்பிரானே - தேவர்கள் போற்றும் தனிப்பெருந் தலைவரே! போத நிர்க்குண போதா -ஞான வடிவாகி குணங்களைக் கடந்த ஞான குருவே! நமோநம - போற்றி! போற்றி! நாத நிஷ்கள நாதா - நாத வடிவாகி வடிவங் கடந்த தலைவரே! நமோநம - போற்றி! போற்றி! பூரண கலை சாரா - நிறைந்த வேதாகமங்களின் சாரமாக விளங்குபவரே! நமோ நம - போற்றி! போற்றி! பஞ்சபாண பூபன் மைத்துன - ஐந்து மலர்களையுடைய மன்மதனுடைய மைத்துனரே! பூபா - பூமியைப் பாதுகாப்பவரே! நமோநம - போற்றி போற்றி! நீப புஷ்ப அக தாளா - கடப்ப மலர்களை உறைவிடமாகக் கொண்ட திருவடிகளையுடையவரே! நமோநம - போற்றி! போற்றி! போக சொர்க்க புபாலா - போகத்தைத் தருகின்ற சுவர்க்க பூமியை காக்கின்றவரே! நமோநம - போற்றி! போற்றி! சங்கம் ஏறும் மாதமிழ்த்ரய சேயே! சங்கப் பலகை மீது ஏறிய பெருமை மிக்க முத்தமிழ் விநோதராகிய குமாரக் கடவுளே! நமோநம - போற்றி! போற்றி! வேதனத்ரய வேளே - மூன்று வேதங்களாகிய இருக்கு யசுர் சாமம் என்ற மும்மறைகளின் உட்பொருளாகிய உபகாரியே! நமோநம - போற்றி! போற்றி! வாழ்ஜகத்ரய வாழ்வே! - வாழுகின்ற மூவுலகங்களின் வாழ்வாக வுள்ளவரே! நமோநம - போற்றி! போற்றி! என்று - என்று துதி செய்து, பாதவாரிசத்தில் விழாது - உமது திருவடிக்கமலத்தின் மீது வீழ்ந்து வணங்காமல், மகஉததி ஏழ் பிறப்பினில் மூழ்கா - பெரிய கடல் போன்ற ஏழுவகையான பிறப்பினுள் அழுந்தி, மனோபவ மாயையில் சுழியூடே - மனதில் உற்பத்தியாகும் விபரீத உணர்வாகிய சுழியில் கிடந்து, விடாது கலங்கலாமோ - அதனை உதறித் தள்ளாமல் கலங்கி அல்லல் படலாமோ? (படக்கூடாது).

## பொழிப்புரை

இசையுடன் கூடிய நடனத்தைப் பூதகணங்களுடன் சுடலை யில் செய்யும் சிவபெருமானுடைய திருப்புதல்வரே! கங்கா தேவிக்கு மகனாக வந்த கருணையங் கடலே! மேகவாகனனாகிய தேவேந்திரனுடைய குமாரியாகிய தேவயானையம்மையாரை ஒருபுறத்தில் வைத்திருப்பவரே! மயிலை வாகனமாகக் கொண்ட பெருமையுடையவரே! முதன்மையான தலைவரே! மாலைகளை யணிந்த குமாரக் கடவுளே! விசாகமூர்த்தியே! கருணைமூர்த்தியே! பவளம் போன்ற வடிவினரே! தாமரை போன்ற ஆறுமுகங்களை

யுடையவரே! வேதங்களில் வல்லவரே! பிரமதேவனுடன் பிரணவப் பொருள் வினாவி விளையாடியவரே! வேடர்குல மணியாகிய வள்ளியம்மையாருடன் விளையாடல் புரிகின்றவரே! பெரிய மலைகளில் விளங்குகின்ற வீரமூர்த்தியே! பராக்ரமரே! பெரிய அவதானத்தைச் செய்யும் அகண்டரே! சூரனாகிய வீரனுடன் பகைத்த வீரரே! ஆதிகாரணரே! தைரியமுள்ளவரே! பயமில்லாதவரே! அழகானவரே! விநாயகப் பெருமானுக்கு மிக்க அன்புள்ளவரே! வேலாயுதக் கடவுளே! தேவர்கள் போற்றும் தனிப்பெருந் தலைவரே! ஞானமே ஒரு வடிவாக விளங்கிக் குணங்களைக் கடந்த ஞான குருவே! போற்றி! போற்றி! நாத வடிவாகி, வடிவங் கடந்த தலைவரே! போற்றி போற்றி! நிறைந்த வேதாகமங்களாகிய கலைகளின் சாரமாகத் திகழ்பவரே! போற்றி! போற்றி! ஐந்து மலர்க்கணைகளையுடைய மன்மதனுக்கு மைத்துன! பூமியைக் காக்கின்றவரே! போற்றி! போற்றி! கடப்ப மலர்களையணிந்த திருவடிகளையுடையவரே! போற்றி! போற்றி! போகங்களைத் தரும் சுவர்க்கவுலகத்தைக் காப்பாற்றுபவரே! போற்றி! போற்றி! சங்கப்பலகைமீது ஏறிய பெருமையுடைய முத்தமிழ்க் கடவுளே! போற்றி! போற்றி! மூன்று வேதங்களின் தலைவராகிய உபகாரியே! போற்றி! போற்றி! வாழுகின்ற மூவுலகங்களின் வாழ்வாக விளங்குபவரே! போற்றி போற்றி! என்று துதி செய்து, உமது திருவடித் தாமரை மீது வீழ்ந்து வணங்காமல், ஏழு பிறப்பாகிய பெருங்கடலில் மூழ்கி, மனத்தில் உதிக்கின்ற விபரீதவுணர்வாகிய சுழியில் கிடந்து தடுமாறி அடியேன் கலங்கலாமோ? (அவ்வாறு கலங்காமல் காத்தருள்வீர்).

## விரிவுரை

**போத நிர்க்குண போதா:-**

போதம் - ஞானம். நிர்க்குணன் - குணம் இல்லாதவன். போதா - உபதேசிக்கின்றவனே! (போதிக்கின்றவன்)

குணம் என்ற சொல்லுக்குக் கட்டுவது என்பது பொருள். பந்தத்திலே கட்டுவது குணம். அவை முக்குணம் எனப்படும். சத்துவம், ராஜசம், தாமசம் என்பவை. இக்குணங்கள் நீங்கினால் தான் உயிர்கட்கு இன்ப முண்டாகும். "முக்குண மாள" என்று திருச்செந்தூர்த் திருப்புகழில் அருணகிரிநாதர் கூறியிருக்கின்றனர். முக் குணங்களே தள்ளத்தக்கவை; அருட்குணங்கள் கொள்ளத் தக்கவை. இறைவனிடம் எட்டு அருட்குணங்கள் இருக்கின்றன.

"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை."

என்ற வள்ளுவனார் வாக்கினாலும்,

"பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங் கவஎண் குணபஞ் சரனே"

என்ற கந்தரநுபூதியினாலும் இறைவனுடைய எண் குணங் களைப்பற்றி யறிக.

1. தன் வயத்தனாதல், 2. தூய வுடம்பினனாதல், 3. இயற்கையுணர்வினனாதல், 4. முற்றுமுணர்தல், 5. இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்குதல், 6. பேரருளுடைமை, 7. முடிவிலாற்றலுடைமை, 8. வரம்பி லின்பமுடைமை.

இதை வடநூலார் சுவதந்திரத்வம், விசுத்ததேகம், நிராமயான்மா, சர்வஞ்ஞத்வம், அநாதிபோதம், அலுப்த சக்தி, அநந்த சக்தி, திருப்தி என மொழிவர்.

நிர்குணன் - மேலே கூறிய பிரர்கிருத குணங்களாகிய முக்குணங்கள் இல்லாதவன்; இறைவன்.

**நாத நிஷ்கள நாதா:-**

நாதவடிவாக இறைவன் விளங்குகின்றான். நிஷ்களம்-வடிவின்மை. இறைவனுக்கு மாயாமயமான இந்த வடிவம் இல்லை. அவர் வடிவம் இல்லாதவர். ஆனால், அருளே ஒரு வடிவாகக் கொண்டு, அடியவர் நினைத்தவுடன் நினைத்த வடிவங்கொண்டு வருவார். அவ்வாறு வரும் வடிவம் நமது வடிவம் போன்ற ஏழு தாதுக்களாலாகிய தன்று.

இறைவன் நாதவடிவினன் என்று இங்கே உரைத்தது போல, திருவானைக்காத் திருப்புகழிலே, இறைவியை "நாத வடிவியகிலம்பரந்தவள்" என்று அடிகள் கூறியிருப்பதையும் காண்க.

**பூரணக்கலை சாரா:-**

வேதாகமங்கள் நிறைவுள்ள கலைகள், அவைகள் இறைவனுடைய தன்மைகளைக் கூறுகின்றன. அவைகள் அபரஞானங்களாகும்.அவைகளின் சாரம் பரஞானம். இறைவன் பரஞானத்தினால் அறியத்தக்கவன். அதனால் "பூரணக்கலை சாரா" என்று கூறியருளினார்.

கலை - அறியாமையை அகழ்வது, கல் (பகுதி) - தோண்டுவது :

"உவமையில்லாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்"

என்ற இருஞானங்களையும் சேக்கிழார்பெருமான் கூறுகின்ற அழகையும் காண்க.

**பஞ்சபாண பூபன் மைத்துன:-**

பஞ்சபாண பூபன் - மன்மதன். அவன் திருமாலுடைய மனதில் பிறந்தவன். அதனால் இப்பேர் பெற்றனன். சித்தஜன் எனவும் பெறுவான்.

திருமால் மருகன் என்று முருகப்பெருமானைக் கூறுவதனால் மன்மதனுக்கு மைத்துனன் என்று கூறப்பட்டது.

மூவர்தேவாதிகள் தம்பிரானாகிய முழுமுதற்கடவுள் முருகப் பெருமான் என உணர்க. அவர் அரி பிரமர் அளப்பரிய பதக்கமல முடையவர்.

அவரை கங்காபுதல்வர், கார்த்திகை மைந்தர், திருமால் மருகர், தேவசேனாபதி என்றெல்லாம் கூறுவது சாமானிய வழக்கெனத் தெளிக.

**கங்கையின் புதல்வ னென்றும் கார்த்திகை மைந்த னென்றும்**
**செங்கண்மால் மருக னென்றும் சேனையின் செல்வ னென்றும்**
**பங்கயன் முதலோர் தேறாப் பரஞ்சுடர் முதல்வன் றன்னை**
**இங்கிவை பலவுஞ் சொல்வ தேழைமைப் பால தன்றோ.**

*- கச்சியப்பர்*

**நீப புஷ்பக தாளா:-**

நீபம் - கடம்பு, புஷ்பு அகதாள் - கடப்பமலருக்கு உறைவிட மான திருவடி. முருகனுக்கு உவந்த மலர் கடப்பம். அது உருத்திராக்க வடிவில் இருக்கும்.

**போகசொர்க்க புபாலா:-**

சொர்க்கம் புண்ணிய பூமி. அது புண்ணியஞ் செய்த ஆன்மாக்கள் போகங்களை நுகர்வதற்கு என்று அமைந்தது. பூபாலா என்றது சந்தத்தை நோக்கிக் குறுகல் விகாரம் பெற்றது. அப்புண்ணிய பூமியை முருகவேள் பாதுகாக்கின்றனர்.

**சங்கமேறும் மாதமிழ்த்ரய:-**

முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என மூன்று சங்கங்கள் இருந்து தமிழை வளர்த்தன. ஆங்கு சங்கப் பலகையிருக்கும். அது தெய்வத் தன்மை பொருந்தியுள்ள தமிழ்ப் புலவர்கட்கும், குற்றமில்லாத செந்தமிழ் நூல்கட்குமே இடந்தரும்.

கடல்கோளால் அழியப்பெற்ற பகுதிகளாகிய குமரியாற் றுக்கும் பஃறுளியாற்றுக்கும் இடைப்பட்ட பகுதிகளில், 49 நாடுகளுடன் 700 காவதம் பரப்புடையதாக இருந்தது பழந் தமிழகம். அத்தமிழகத்தின் தலைநகரம் தென் மதுரை. அம்மதுரையில் இருந்தது முதற் சங்கம்.

பின்னர், கவாடபுரத்தில் இடைச் சங்கம் விளங்கியது; பின்னர், அதுவும் கடல்கோளால் அழிந்தது.

இப்போதுள்ள மதுரையில் மூன்றாவது சங்கம் இருந்தது. இவ்வாறு விளங்கிய முச்சங்கங்களிலும் முத்தமிழ் வளம்பெற்றது. அதனால், அது சங்கத் தமிழ் எனப்பட்டது; தமிழ் ஒன்றே சங்கம் என்ற அடைகொடுத்து பேசப்படுகின்றன. ஏனைய மொழிகள் அவ்வாறு பேசப் படுவதில்லை.

"துங்கக் கரிமுகத்துத் தூமணியே. நீஎனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா"

என்ற ஔவையார் திருவாக்கினாலும் அறிக.

**சேய் :-**

சேய் - குழந்தை. என்றும் குழந்தையாக இருப்பவர்.

சேய் - செம்மைப் பண்புடையவர்.

சேய் - நமது அறிவாற்றலுக்கு நெடுந்தூரத்திலிருப்பவர்.

"சேயோன் மேய மைவரை யுலகு" - *தொல்காப்பியம்.*

"பொலம்பூண் சேய்" - *திருமுருகாற்றுப்படை*

**வேதனத்ரய வேளே:-**

வேதனம்- வேதம். வேதம் மூன்று எனப்படும். அதர்வணம் என்ற நான்காவது வேதம் மூன்றின் கலப்பேயாகும். "த்ரயீவேத்யம்" என்று கூறப்படும். ஆகவே, வேதங்கள் மூன்றுக்குந் தலைமையானவர் முருகவேள்.

வேதம் - அறிவு நூல். வித் - பகுதி.

வேதநெறி தழைத்தோங்க வேண்டும். நமது நாடு வைதிக நாடு. நமது சமயம் வைதிக சமயம்.

நம்பியாரூரர் திருமணக்கோலங் கொண்டதைக் கூறவந்த சேக்கிழாரடிகள்,

"மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க" என்கின்றார்.

**ஜகத்ரயவாழ்வே:-**

த்ரயம் - மூன்று.

பூதலம், மீதலம், பாதலம் என்பவை. பூதலம் துன்பமும் இன்பமுங் கலந்த வுலகம். மீதலம் இன்பமே நிறைந்த வுலகம்; பாதலம் துன்பமே நிறைந்த வுலகம். இந்த மூன்று வுலகங்களிலும் வாழுகின்ற உயிர்கட்கு வாழ்வாக இருந்து அருள் புரிகின்றவர் கந்தவேள்.

**என்று பாத வாரிசத்தில் விழாதே:-**

முருகவேளை உருகிய உள்ளத்துடன் துதிசெய்து அவருடைய திருவடித் தாமரைமீது வணங்குதல் வேண்டும்.

அப்பெருமானைத் துதித்து வாழ்த்திய வாய் அமுதும், தேனும், பாலும், நெய்யும், சீனியும் அருந்துகின்ற வாய் என்று அறிக.

"ஐயநின் சீர்பேசு செல்வர்வாய் நல்லதெள்
ளமுதுண் டுவந்த திருவாய்"

அப்பரம கருணாநிதியாகிய பன்னிருகைப் பரம் பொருளை வாழ்த்தாத பேயர்களுடைய வாய் உப்பில்லாக் கூழும் கிடைக்காமல் விடாயால் வருந்தி இடர்ப்படும்.

"எந்தைநினை வாழ்த்தாத பேயர்வாய் கூழுக்கும்
ஏக்கற் றிருக்கும் வெறுவாய்"

என்று இராமலிங்க அடிகளார் இனிது கூறுகின்றனர்.

"வடிவேலிறைவனை வாழ்த்தாத வம்பர் வாய் என்ன வாய்?" என்று புலவர் திலகராம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் கூறுகின்றனர்.

கடியேறு மலரோனைக் கடுஞ்சிறையில் வைத்துப்
படியாதி எவ்வுலகும் படைத்தருளும் பிரானை
முடியாத முதலோனை மூவர் பெருமானை
வடிவேலன் றனைப்பேசா வாயென்ன வாயே
வள்ளிமணா ளனைப்பேசா வாயென்ன வாயே.

மனோபவ மாயை:-

*மாயை - ஒன்றை ஒன்றாகக் காட்டும் திரிபு உணர்ச்சி. அது மனதில் தோன்றுவது. அது ஞானத்தினால் விலகும். துன்பம் இன்பமாகவும், இன்பம் துன்பமாகவும், நன்மை தீமையாகவும், தீமை நன்மையாகவும், அருள் மருளாகவும், மருள் அருளாகவும், நித்தம் அநித்தமாகவும், அநித்தம் நித்தமாகவும் தோன்றும். ஞானபண்டிதனாம் கந்தவேள் கருணையால் திருவருள் ஞானம் பெற்றோர் இம்மாயை யின் மயங்காது தியங்காது நிற்பார்.*

விடாது கலங்கலாமோ:-

*மாயா பாசத்திற்பட்டு இடைவிடாது அதிலேயே மயங்கி அடியேன் கலங்கலாமோ? அவ்வாறு கலங்கக் கூடாது; கலங்க வைக்காது காத்தருள். என்பது குறிப்பு.*

கீதநிர்த்த வேதாள அடவீ நட நாத புத்திர:-

*கலைகளுக்கெல்லாம் உயர்ந்த கலை நடனக்கலை. அது இன்பத்தை விளைவிப்பது. ஆன்மகோடிகளுக்கு இன்பத்தை யூட்டுவிக்கும் பொருட்டு, இறைவன் பூதகணங்களுடன் அநவரத ஆனந்தத் தாண்டவம் புரிகின்றான். மயானத்தில் ஆடுகின்றான் என்பதன் உட்கிடை. எல்லாம் ஒடுங்கிய இடத்தில் இன்பம் உண்டாகும். இன்பத்தின் மிகுதி நடனம் என உணர்க.*

"பூதவினப்படை நின்றிசை பாடவும் ஆடுவர்" *- சம்பந்தர்*

விசாக :-

*விசாக நட்சத்திரத்தில் ஜோதிவடிவாகத் தோன்றினார். ஆதலின், விசாகன் என்ற திருநாமந் தாங்கினார்.*

விநா பக்ஷிணா மயூரேண சாகதீ வ்யாப்நோதீதி விசாக:

*பட்சியாகிய மயிலினால் வியாபிக்கின்றவர் என்றும் பொருள் படும்.*

க்ருபாலு :-

*கருணை மிகுந்தவர்.*

*எப்போதும் கருணையே செய்கின்றவர். அவருடைய மூவிரு முகங்களிலும் கருணையருவி பொழிகின்றது.*

*பன்னிரு கண்மலர்களில், கடல் போன்ற கருணை வழிந்து கொண்டேயிருக்கின்றது.*

"மறுவறு கடலென மருவுப னிருவிழி
வழிந்த அருளே பொழிந்த தொருபால்" - *வகுப்பு.*

வித்ருமாகாரா :-

*வித்ருமம் – பவளம், ஆகாரம் – திருமேனி; பவளம் போன்ற வடிவத்தையுடையவர் முருகப் பெருமான். சிவ பெருமானுடைய திருமேனியும் அவ்வாறேயென அறிக. "பவளம் போல் மேனியில் பால் வெண்ணீறும்''. பவளம் நல்ல சிவப்பு. சிவந்த வடிவுடையவர். ஆதலின் செவ்வேள் என்பர்.* **ரகதவர்ணாயநம:** *என வருவதையுங் காண்க.*

"வித்ருமப்ரபம் ஏகமுகம் வஜ்ரசக்தி வரதாபயபாணிம்
தேவலோக ரிபுக்நம் அவிக்நதம் நௌமி ருத்ரபவம் சிகிவாஹம்"
- *குமார தந்த்ரம்.*

வேதா விநோத :-

*திருக்கயிலை மலையில் சிறிது அகந்தையுடன் சென்ற அயனைப் பிரணவப் பொருள் வினாவி, பொருள் தெரியாது விழித்த அவன் தலையில் குட்ட நெட்டி விளையாடியருளினார்.*

"வேதனா கியமறை யோனொடு விளை
யாடியே குடுமியி லேகர மொடு
வீறமோ தினமற வா" - *திருப்புகழ்*

விநாயகப்ரிய :-

*நாயகன் – தலைவன். வி – அண்மை விகுதி. தனக்கு மேல் தலைவன் இல்லாதவர் விநாயகர். தந்து இல்லாதவர் விதந்து: மலம் இல்லாதவன் விமலன் என வரும் சொற்களையும் காண்க.*

*முதற்கடவுளாய், காரிய முதல்வராய், விக்கினங் களைபவராய், வினை தீர்ப்பவராய், வித்தக மருப்புடையவராய், விளங்கும்*

*விநாயகர் தமது தம்பியான அறுமுகப் பெருமானிடம் அளவற்ற அன்புள்ளவர். பலகாலும் தம்பியைத் தழுவி மகிழ்வர்.*

ஆதரவா யடியவருக் கருள்சுரக்கும் ஐங்கரத்தோன்
அன்பு கூர்ந்து
மாதவமே எனஅழைத்துப் புயத்தணைக்கத் திருவுளத்து
மகிழுங் கோவே
ஏதமுறா தடியேனைக் காத்தளிப்ப துன்கடனாம்
இசைப்ப தென்னே
போதமலர்க் கற்பகமே போரூர்வா ழாறுமுகப்
புனித வேளே.

*சிதம்பரசுவாமிகள்*

## கருத்துரை

*சிவகுமாரரே! வேலாயுதக் கடவுளே! தேவரீரைப் பாடித் துதி செய்து, பதமலர் பணிந்து, மாயையில் விழாது உய்வுபெற அருள் செய்வீர்.*

## 4

அகரமுத லெனவுரைசெய் ஐம்பந்தொ ரக்ஷரமும்
அகிலகலை களும்வெகுவி தங்கொண்ட தத்துவமும்
அபரிமித சுருதியும டங்குந்த னிப்பொருளை
எப்பொருளு மாய

அறிவையறி பவரறியும் இன்பந்த னைத்துரிய
முடிவைஅடி நடுமுடிவில் துங்கந்த னைச்சிறிய
அணுவையணு வினின்மலமு நெஞ்சுங்கு ணத்ரயமு
மற்றதொரு காலம்

நிகழும்வடி வினைமுடிவி லொன்றென்றி ருப்பதனை
நிறைவுகுறை வொழிவறநி றைந்தெங்கு நிற்பதனை
நிகர்பகர அரியதைவி சும்பின்பு ரத்ரயமெ
ரித்தபெரு மானும்

நிருபகுரு பரகுமர என்றென்று பத்திகொடு
பரவஅரு ளியமவுன மந்த்ரந்த னைப்பழைய
நினதுவழி யடிமையும்வி ளங்கும்ப டிக்கினிது
ணர்த்தியருள் வாயே

தகுதகுகு தகுதகுகு தந்தந்த குத்தகுகு
டிகுடிகுகு டிகுடிகுகு டிண்டிண்டி குக்குடிகு
தகுதகெண கெணசெகுத தந்தந்த ரித்தகுத
தத்ததகு தீதோ

தனதனன தனதனன தந்தந்த னத்ததன
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுண்டு டுட்டுடுடு
தரரரர ரிரிரிரிரி யென்றென்றி டக்கையுமு
டுக்கையுமி யாவும்

மொகுமொகென அதிரமுதி ரண்டம்பி ளக்கநிமிர்
அலகைகர ணமிடவுல கெங்கும்ப்ர மிக்கநட
முடுகுபயி ரவர்பவுரி கொண்டின்பு றப்படுக
ளத்திலொரு கோடி

முதுகழுகு கொடிகருட னங்கம்பொ ரக்குருதி
நதிபெருக வெகுமுகக வந்தங்கள் நிர்த்தமிட
முரசதிர நிசிசரரை வென்றிந்தி ரற்கரச
ளித்தபெரு மாளே.

## பதவுரை

தகுதகுகு தகுதகுகு தந்தந்தகுத்தகுகு டிகுடிகுகு டிகுடிகுகு டிண்டிண்டிகுக்குடிகு தகுதகெண கெணசெகுத தந்தந்த தரித்தகுத தத்ததகுதீதோ தனதனன தனதனன தந்தந்தனத்ததன டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுண்டு டுட்டுடுடு தரரரர ரிரிரிரிரி என்று என்று - தகுதகுகு..............ரிரிரிரிரி என்ற தாளவரிசைகளை விதவிதமாக ஒலித்து, இடக்கையும் - இடக்கை என்றதோர் கருவியும், உடுக்கையும் - உடுக்கை என்ற வாத்தியமும், யாவும் - மற்ற எல்லாவிதமான வாத்தியக்கருவிகளும், மொகுமொகு என அதிர - மொகு மொகு என்று முழங்கவும், முதிர் அண்டம் பிளக்க - பழமையான அண்டங்கள் பிளக்கவும், நிமிர் அலகை கரணம் இட - நீண்ட பேய்கள் (களிப்பின் மிகுதியால்) கரணம் போடவும், உலகு எங்கும் பிரமிக்க - உலகமெங்கும் திகைக்கவும், நட முடுகு பயிரவர் பவுரி கொண்டு இன்பு உற - வேகமாக நடனஞ் செய்கின்ற பயிரவர்கள் பவுரிக் கூத்தினையாடி இன்பத்தையடையவும், படுகளத்தில் - அசுர சேனைகள் மாண்டுள்ள இடத்தில், ஒரு கோடி முது கழுகு - ஒரு கோடி கிழக் கழுகுகள், கொடி - காக்கை, கருடன் - கருடன் முதலியவைகள், அங்கம் பொர - மாண்ட பிணங்களைப் பொருந்தியருந்தவும், குருதி நதிபெருக -

உதிர ஆறு பெருகி ஓடவும், வெகுமுக கவந்தங்கள் நிர்த்தம் இட - பல முகங்களைத் தாங்கியிருந்த உடம்புகள் கூத்தாடவும், முரசு அதிர - முரசு வாத்தியம் முழங்கவும், நிசிசரரை வென்று - அசுரரை வென்று, இந்திரற்கு அரசு அளித்த - இந்திரனுக்குப் பொன்னுலக அரசாட்சியைத் தந்த, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! அகர முதல் என உரைசெய் ஐம்பந்தொரு அட்சரமும் - அகரமுதலாக உரைக்கப்படும் ஐம்பத்தொரு எழுத்துக்களும், அகில கலைகளும் - எல்லாவிதமான கலைகளும், வெகு விதம் கொண்ட தத்துவமும் - அநேகவிதமான உண்மைக் கருத்துக்களும், அபரிமித சுருதியும் அடங்கும் தனிப் பொருளை - அளவில்லாத வேதங்களும் அடங்கியுள்ள ஒப்பற்ற மெய்ப்பொருளையும், எப்பொருளும் ஆய அறிவை அறிபவர் அறியும் இன்பந்தனை - எல்லாப் பொருள்களும் ஆகிய அறிவையறிவால் அறிகின்ற இன்பத்தையும், துரிய முடிவை -- துரிய நிலையின் முடிவாக விளங்குவதையும், அடி நடு முடிவில் துங்கந்தனை - முதல் இடை முடிவில் தூய்மையாகத் திகழ்வதையும், சிறிய அணுவை - அணுவுக்கு அணுவாக இருப்பதனையும், அணுவினின் மலமும் - ஆன்மாவை அணுவாக்கும் ஆணவமலமும், நெஞ்சும் - மனமும், குணத்ரயமும் - மூன்று குணங்களும், அற்றது ஒரு காலம் நிகழும் வடிவினை - கடந்ததாகிய ஒப்பற்ற சமயத்தில் விளங்கும் அருளுருவத்தையும், முடிவில் ஒன்று என்று இருப்பதனை - முடிவில் ஒன்றேயாகி இருப்பதையும், நிறைவு குறைவு ஒழிவு அற நிறைந்து எங்கும் நிற்பதனை - நிறைவும் குறைவும் நீங்குதலும் இன்றி எங்கும் எப்பொருளிலும் கலந்து நிற்கின்றதனையும், நிகர்பகர அரியதை - ஒப்பு உரைக்க முடியாததையும், விசும்பின் புரத்ரயம் எரித்த பெருமானும் - ஆகாயத்தில் பறக்கும்படி யான மூன்று புரங்களையும் எரித்த சிவபெருமானும், நிருப - தலைவா! குருபர - மேலான குருவே! குமர - அழியாத இளம்பூரணா! என்று என்று பத்தி கொடு பரவ - என்று கூறி அன்புடன் துதி செய்ய, அருளிய மவுன மந்த்ரந்தனை - உபதேசித்தருளிய பேசாத மந்த்ரமாகிய ஊமை எழுத்தையும், பழைய நினது வழியடிமையும் விளங்கும்படி - தேவரீரது பழமையும் வழிவழியுமான அடிமையாகிய சிறியேனுக்கு விளங்கும்படி, இனிது உணர்த்தி அருள்வாயே - இனிமையாக உணர்த்தி அருள்புரிவீர்.

## பொழிப்புரை

"தகுதகுகு தகுதகுகு தந்தந்த குத்தகுகு, டிகுடிகுகு டிகுடிகுகு டிண்டிண்டி குக்குடிகு, தகுதகெண கெணசெகுத தந்தந்த ரித்தகுத தத்ததகுதீதோ, தனதனன தனதனன தந்தந்த னத்ததன, டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுண்டு டுட்டுடுடு, தரரரர ரிரிரிரிரி" என்று இத்தகைய தாளவரிசைகளுடன் இடக்கை, உடுக்கை முதலிய வாத்தியங்கள் மொகு மொகு என்று முழங்கவும் பழமையான அண்டங்கள் பிளக்கவும், நீண்ட பேய்கள் களிப்பின் மிகுதியால் கரணம் போடவும், உலகமெல்லாம் திகைக்கவும், வேகமாக நடனஞ் செய்கின்ற பயிரவர் கூத்தாடி மகிழவும், போர்க்களத்திலே ஒரு கோடி கிழக்கழுகுகளும் காக்கைகளும் கருடர்களும் கூடி உயிர் பிரிந்த உடம்புகளைப் பொருந்தி யுண்ணவும், இரத்த ஆறு ஓடவும், பல தலைகளைப் பொருந்தி யிருந்த உடம்புகள் நடனஞ் செய்யவும், வெற்றிமுரசு முழங்கவும், சூராதி யவுணர்களை வென்று, தேவேந்திரனுக்கு விண்ணுலக அரசுரிமையைத் தந்த பெருமையின் மிக்கவரே! அகர முதலாக உரைக்கின்ற ஐம்பத்தொரு எழுத்துக்களும், எல்லாவகையான கலைகளும் பலவிதமான உண்மைக் கருத்துக்களும், அளவில்லாத வேதங்களும் அடங்கியுள்ள ஒப்பற்ற ஒரு பொருளையும், எல்லாப் பொருளுமாகி விளங்கும் அறிவையறிவால் அறிகின்ற இன்பத்தையும், துரியாதீதத்தையும், முதலிலும் இடையிலும் முடிவிலும் தூய்மையாக யிருப்பதனையும், சிறிய அணுவினுக்கு அணுவாகியுள்ளதையும், ஆன்மாவை அணுத்தன்மை யாக்கும் ஆணவமலமும் மனமும் மூன்று குணங்களும் அற்ற இடத்தில் விளங்கும் அருள் வடிவத்தையும், முடிவில் தன்னைத் தவிர வேறு பொருளின்றி விளங்குவதையும், நிறைவு குறைவு நீக்கம் இன்றி எங்கும் நிறைந்திருப்பதை யும், சமானமில்லாததையும், விண்ணில் உலாவும் முப்புரங்களை எரித்த சிவபெருமானும் "பரமபதியே! குருபரனே! குமாரக் கடவுளே!" என்று கூறி அன்புடன் துதிக்க, அவருக்கு உபதேசித்தருளிய மவுன மந்திரத்தையும் தேவரீரது பழைய பரம்பரைத் தொண்டனாகிய எனக்கு விளங்குமாறு இனிது உணர்த்தி யருள்புரிவீர்.

## விரிவுரை

அகர முதலென வுரைசெய் ஐம்பந்தொ ரக்ஷரமும்-

உடம்புக்குள் ஆறு ஆதாரங்கள் உள. மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆதாரங்கள் ஆறுக்குள் அகரமுதலாக க்ஷகரம் இறுதியாக ஐம்பத்தோர் அக்ஷரங்கள் அடங்கியிருக்கின்றன. இந்த அக்ஷரங்கட்கு மாத்ருகா மந்திரம் என்றும், மாலாமந்திரம் என்றும் கூறுவர். இம்மாத்ருகா மந்திரமே எல்லா மந்திரங்களினும் உயர்ந்தது. அம்மந்திரத்தின் பெருமை அளவிடற்கரியது.

மாத்ருகா சர்வமந்த்ராணாம் முக்யபூதாபவேதிஹ!
தாச்சக்திருத்ர ஸம்புக்தா; கேவலம் வாஸமப்யஸேத்!!

*- காமிகாகமம்*

மந்திரங்கள் விந்துவினின்றுந் தோன்றியவாம்.

"சுத்தமாம் விந்து தன்னில் தோன்றிய வாத லானும்"

*- சிவஞானசித்தியார்*

உலகத்திற்கு முதற்காரணம் விந்து மோகினி மான் என மூன்றாகும். இந்த விந்து சக்தியே சுத்த மென்றும் பிரகாச மென்றும் அபரவிந்து வென்றும் சொல்லப்படும். ஆகவே, குண்டலினி என்னும் பரவிந்து விந்து முதலிய மூன்றிற்குங் காரணம் என்க. விந்துவினிடம் உண்டான சுத்தப்பிரபஞ்சம் சாந்தாத்மகம் எனப்படும். மோகினியிடம் உண்டாயவை கோராத்மகம் எனப்படும். மானிலே உண்டாயவை மூடாத்மகம் எனப்படும்.

சுத்தமாயை யென்றும் இப் பரவிந்துவினிடத்தே கந்த வேளது ஞானசக்தி பதிய நாதம் உண்டாகும். அந்த நாதத் தின்றும் களங்கமில்லாத சரற்காலத்துச் சந்திரன் போலக் குண்டலி வடிவாக அபரவிந்து தோன்றும். அவ் விந்துச் சத்தியினின்றும் குமரவேளது இச்சையினாலே அம்பிகை யென்றும் விந்துக்காரிய சக்தி தோன்றும். அதினின்றும் வாமை, சேட்டை, ரௌத்ரி என்னும் முச்சக்திகளுந் தோன்றும். அவற்றுள் வாமை நித்திரை செய்யும் குண்டலி வடிவாகவும், சேட்டை தண்டவடிவாகவும், ரௌத்ரி இரண்டு களைக்கொம்பு வடிவாகவும் விளங்கும். அவற்றி லிருந்து ஜயை, விசயை, அஜிதை, பராசிதை என்னும் நான்கு சக்திகள் தோன்றும். அவற்றினின்றும் நிவிர்த்திகலை,

பிரதிஷ்டாகலை, வித்யாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை என்ற ஐந்து கலைகள் காரணமாகச் சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என்ற நான்கு வாக்குகளுந் தோன்றும்.

சூக்குமை என்னும் வாக்கைச் சாந்தி, சாந்தி யதீதம் என்னும் இருகலைகளும், பைசந்தி யென்னும் வாக்கை வித்யா கலையும், மத்திமை என்னும் வாக்கை பிரதிட்டா கலையும், வைகரியென்னும் வாக்கை நிவிர்த்திகலையும் காரியப்படுத்தும்.

இங்ஙனமாய நாதகாரிய வாக்குகளினின்று சுரங்களும், அந்தச் சுரங்கள் சோடசத்தினின்று அட்சரங்களும் தோன்றும் என்க.

அந்த அட்சரங்கள் ஐம்பத்தொன்று வருமாறு காண்க.

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, று, றூ, ளு, ளூ, ஏ, ஐ, ஓ, ஔ,
1 2 3 4 1 2 3 4 1 2 3 4
அம், அ:, க, க, க, க, ங, ச, ச, ச, ச, ஞ, ட, ட, ட, ட, ண,
1 2 3 4 1 2 3 4
த, த, த, த, ந, ப, ப, ப, ப, ம, ய, ர, ல, வ, , ஷ, ஸ, ஹ, ள,
க்ஷ

ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தா கமங்களும்
ஐம்ப தெழுத்தின் அடைவை யறிந்தபின்
ஐம்ப தெழுத்தே அஞ்செழுத் தாமே. *- திருமந்திரம்.*

**அகில கலைகளும்:-**

கலை - அறியாமையை அகழ்ந்து எடுப்பது. கலைகள் அறுபத்து நான்கு என்க. அவை வருமாறு:

அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதி சாத்திரம், சோதிட சாத்திரம், தருமசாத்திரம், யோகசாத்திரம், மந்திர சாத்திரம், சகுன சாத்திரம், சிற்பசாத்திரம், வைத்தியசாத்திரம் உருவசாத்திரம், இதியாசம், காவியம், அலங்காரம், மதுரபாடனம் நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரிட்சை, கனகபரிட்சை, இரதபரிட்சை, கசபரிட்சை, அசுவபரிட்சை, இரத்தினபரிட்சை, பூமிபரிட்சை, சங்கிராமவிலக்கணம், மல்லயுத்தம், ஆகருடணம், உச்சாடனம், வித்துவேடணம், மதனசாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவ வாதம், காரூடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாய கமனம், பரகாயப்பிரவேசம், அதிரிசயம், இந்திரசாலம், மகேந்திர

*சாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத் தம்பம், திட்டித் தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கனனத் தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப்பிரயோகம்.*

**வெகுவிதங் கொண்ட தத்துவம்:-**

*தத்துவம் - உண்மைப் பொருள். சிவபெருமான் முப்புரம் எரித்தார் என்பது வரலாறு. அதன் உட்பொருள் மும்மல நீக்கமாகும்.*

முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாறே. - திருமந்திரம்

**அபரிமிதசுருதி :-**

*அபரிமிதம் - அளவின்மை. சுருதி - செவியால் கேட்டு அறிவது; அதற்கு எழுதாக்கிளவி என்று ஒரு பேருண்டு. பரம்பரையாகக் கேட்டுக்கேட்டு வருவது.*

**அறிவை யறிபவரறியுமின்பம்:-**

*பொன் பொருள் மனை மக்கள் பதவி முதலியவை களில் இன்பம் இல்லை. துன்பமேதான். அறிவை யறிவதுவே இன்பம் என்க. அறிவை யறிவால் அறிதல் வேண்டும்.*

"அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சு
மடியா ரிடைஞ்சல் களைவோனே"
"அறிவை யறிவது பொருளென அருளிய பெருமாளே"
- *திருப்புகழ்*

**துரிய முடிவை :-**

*துரிய முடிவு - துரியாதீதம்.*

*சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என அவஸ்தை ஐந்து வகைப்படும். இந்த ஐந்திலும் ஆன்மா முறையே புருவநடு, கண்டம், இதயம், நாபி, மூலாதாரம் என்ற ஐந்து இடங்களைப் பற்றி நிற்கும்.*

**சாக்கிரம் :-**

*ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, கரணம் 4, புருடன் 1, தன்மாத்திரை 5, வசனாதி 5, வாயு 10, ஆக 35 தத்துவங்களுடன் கூடி ஆன்மா தொழிற்படும்.*

**சொப்பனம் :-**

*தன்மாத்திரை 5, வசனாதி 5, வாயு 10, கரணம் 4, புருடன் 1, ஆக 25 தத்துவங்களுடன் கூடி ஆன்மா நிற்கும்.*

**சுழுத்தி :-**

*சித்தம் 1, பிராணன் 1, புருடன் 1, ஆக இந்த மூன்றுடன் கூடி ஆன்மா ஒடுங்கும்.*

**துரியம் :-**

*பிராணன் புருடன் என்ற இரண்டு மட்டுமேயாகி யிருக்கும்.*

**துரியாதீதம் :-**

*புருடன் மட்டுமே தனித்து நிற்கும்.*

சாக்கிரமா நுதலினிலிந் திரியம் பத்தும்
சத்தாதி வசனாதி வாயு பத்தும்
நீக்கமிலந் தக்கரணம் புருட னோடு
நின்றமுப் பான்ஐந்து நிலவுங் கண்டத்
தாக்கியசொப் பனமதனில் வாயு பத்தும்
அடுத்தனசத் தாதிவச னாதி யாக
நோக்குகர ணம்புருடன் உடனே கூட
நுவல்வர்இரு பத்தைந்தாம் நுண்ணி யோரே.

சுழுத்தியித யந்தனிற்பி ராணஞ் சித்தஞ்
சொல்லரிய புருடனுடன் மூன்ற தாகும்
வழுத்தியநா பியில்துரியம் பிராண னோடு
மன்னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கும்
அழுத்திடுமூ லந்தன்னில் துரியா தீதம்
அதனிடையே புருடனொன்றி அமரும் ஞானம்
பழுத்திடும்பக் குவரறிவர் அவத்தை யைந்தில்
பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசு தானே. *- தாயுமானார்*

**அடிநடு முடிவில் துங்கந்தனை:-**

*எப்போதும் பரிசுத்தமான பொருள். அதன் தூய்மைக்கு ஒருபோதும் இழுக்குறாது. மாறுபாடின்றி விளங்குவதுஎன்க.*

**சிறிய அணுவை :-**

*அணுவுக்கு அணுவாக விளங்குவது.*

அணோரணீயாந மஹதோ மஹீமநாத்மா குஹாயாம்
நிஹிதோஸ்ய ஜந்தோ! தமக்ரதும் பச்யதி விதசோகோ தாது:
ப்ரஸாதாந் மஹிமநீகம்

*- தத்திரியாருணசாகை*

*அணுவிலும் அணுவாய், பெரிதிலும் பெரிதாய் உள்ள (பரம) ஆன்மா இந்தச் செந்துவினது இதய குகையில் இருக் கின்றது. தன்னுடைய மகிமைக்கு ஏதுவாயுள்ள அதனைக் கன்ம நீக்கமுள் ளோன் தனக்கு ஆதாரமான ஈசனது ஒளியினால் சோகமில்லாத வனாய்க் காண்கின்றான்.*

அணுவினின் மலமு நெஞ்சுங் குணத்ரயமுமற்ற தொருகாலம் நிகழும் வடிவினை :-

*ஆன்மாவை அணுவாக்குவதனால் மூலமலம் ஆணவம் எனப்படும். அதைச் சகஜமலம் எனவும் அறிக.*

*மலம், மனம், முக்குணம் இவைகளினின்று நீங்கிய நிலை சுத்தம் எனப்படும்.*

முடிவில் ஒன்றென்றிருப்பதனை:-

*உலகமெல்லாம் ஒடுங்கியபோது அவைகள் ஒடுங்கும் பற்றுக்கோடாய் தான் ஒடுங்காது தானேயாய் நிற்கும் தனிப் பொருள்.*

பிரபஞ்சோபசமம் சாந்தம் சிவம் அத்வைதம்
சதுர்த்தம் மந்யந்தேஸ ஆத்மா ஸவிக்ஞேய:

*- மாண்டூக்ய உபநிடதம்*

*பிரபஞ்ச லயத்தானமாயுள்ளதும் சாந்தமாயிருப்பதும், அத்வைதமாயுள்ளதுமாகிய சிவத்தை (மூவர்க்குமேற்பட்ட) நான்காவது பொருளாக நினைக்கின்றனர். அஃது ஆன்மா; அவனறியத் தக்கவன்.*

நிறைந்தெங்கு நிற்பதனை:-

*இறை யாண்டும் நீக்கமின்றி நிறைந்தும் மறைந்தும் நிற்கின்றது. கடல் நீரில் உப்பு நிறைந்தும் மறைந்தும் இருப்பதுபோல் என்று அறிக.*

"தச்சச்வத் ஸம்வர்த்ததே தம்ஹோவாசாத்ர வாவகில ஸத்சோம்ய நவிபாலயஸே அத்ரைவ கிலேதி." *(எப்படி இந்த உப்பு மறைந்திருக்கிறதோ அப்படி ஸத் மறைந்திருக்கிறது.)*

*- சாந்தோக்ய உபநிடதம்*

நிகர்பகர அரியதை:-

*"சமானரஹிதம் விபு" என்ற செய்யாமொழிப்படியும், "தனக்குவமை யில்லாதான்" என்ற பொய்யாமொழிப்படியும் பரம் பொருள் உவமையில்லாதது.*

"ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்
ஒரூர னல்லன் ஒர்உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவன்அருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே" *- அப்பர்*

புரத்ரயமெரித்த பெருமானும்:-

*மும்மலங்களையெரித்த முக்கட் பெருமானும். உம்மை சிறப்பு.*

பத்திகொடு பரவ:-

*ஆதிகுருமூர்த்தமாகி, கல்லாலின் புடையமர்ந்து, எல்லா மாயல்லவுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிய தென்முக தேசிகன், குருவின் இன்றியமையாமையை உலகினர்க்கு உணர்த்துவான் வேண்டித் தனக்குத்தானே மகனாகி, தன்னிடத்தில் தானே உபதேசம் பெற்றனர்.*

"நாதா குமரா நமவென் றரனார்
ஓதா யெனஓ தியதெப் பொருள்தான்" *- அநுபூதி*

"வேரிமதி மத்தமதி தாதகி கடுக்கைபுனை
வேணியர் துதிப்பதொரு கேள்விக் காரனும்" *- வகுப்பு*

மவுன மந்த்ரந்தனை:-

*சிவபெருமான் செவியில் செவ்வேட் பெருமான் ஓதியருளிய மோனமந்திரம்.*

*மந்திரம் - மந்-நினைத்தல். திர-காப்பாற்றல். நினைப்பவனைக் காப்பாற்றுவது என்று பொருள்படும்.*

*ம-மாயை; திரா-தாண்டுவித்தல். மாயையைத் தாண்டு விப்பது.*

"மகரச் சைவ மாயாஸ்யாத் த்ருசப்தஸ்தாரகோபவேத".
*- அசிதஆகமம்*

பழைய நினது வழியடிமை:-

*அருணகிரிநாதர் ஆறுமுகக் கடவுளுக்கு வழிவழியாக வும், முற்பிறப்புக்களிலும் அடிமைத்திறம் பூண்டவர். இதனை அவருடைய அருமை வாக்குகளினால் அறிக.*

"தஞ்சமாகியெ வழிவழி யருள்பெறும்
அன்பினாலுன தடிபுக ழடிமையென் எதிரேநீ"

*- திருப்புகழ்*

"எழுமையு மெனைத்தனது கழல்பரவு பத்தனென
இனியகவி யப்படிப்ர சாதித்த பாவலனும்"

"முடியவழி வழியடிமை யெனுமுரிமை யடிமை முழு
துலகறிய மழலைமொழி கொடுபாடு மாசுகவி
முதலமொழி வனநிபுண மதுபமுக ரிதமவுன
முகுளபரிமள நிகில கவிமாலை சூடுவதும்" *- வகுப்பு*

விளங்கும்படிக்கினி துணர்த்தி யருள்வாயே:-

*"முருகா! முக்கட் சிவனாருக்கு உபதேசித்த மவுன மறையை அடியேனுக்கு விளங்கும்படியான முறையில் உணர்த்துவீர்" என்று வேண்டுகின்றனர் அருணகிரியார்.*

*சிவமூர்த்திக்கு உபதேசித்தவாறு கூறினால் விளங்காது என்பது குறிப்பு.*

*எல்லாமறிந்தவரும் பிரணவ மந்திரத்தைப் பீடமாகக் கொண்டவருமாகிய பரமேசனுக்கு உபதேசித்ததை, ஒன்று மறியாத எனக்கு உபதேசித்தால்தான் உபகாரமாக இருக்கும் என்று குறிப்பிடுகின்றனர்.*

தகுதகுகு............... இடைக்கையுமுடுக்கையும்:-

*இடக்கை - ஒருவகையான தோற் கருவி.*

*உயுத்த களத்திலே வீரர்களுக்கு வீரவுணர்ச்சி உண்டாகும் பொருட்டு செருப்பறை முழக்குவார்கள். அந்த வாத்தியங் களின் ஒலிவகையை இந்த 5-வது 6-வது அடிகளில் மிகவும் அழகாக அடிகள் கூறுகின்றனர்.*

அலகை கரணமிட:-

*அலகை - பேய்.*

*மாண்ட அசுரர்களது தசைகளைத் தின்று, மகிழ்ச்சியினால்*

*பேய்கள் கரணம் போடுகின்றன.*

**வெகுமுக கவந்தங்கள் நிர்த்தமிட:-**

*அரக்கர்களின் நூறு, ஆயிரம் என்ற பல எண்ணிக்கை உள்ள தலைகள் அறுபட்டபின், அந்த உடம்புகள் வீரவுடைமையினால் கூத்தாடுகின்றன.*

*கவந்தம் - தலையில்லாத உடம்பு.*

**முரசு :-**

*கானகத்திலே தன்னிச்சையாகத் திரியும் ஆனேறு புலியுடன் போராடி அப்புலியைக் கொன்றதானால் அந்த எருதின் தோலால் செய்து வெற்றியின் அறிகுறியாக முழங்கும் முரசு ஆகும். அரசர்கள் முரசு வாத்தியத்தைப் பூசிப்பர்.*

*பாண்டவரில் முதல்வராகிய தருமநந்தனர் சிறந்த வீர ஆற்றலில் அனைவரையும் அடக்கவல்லவர். யுதிஷ்டிரர் (யுத்தத்தில் புறங்கொடாதவர்) என்று அவருக்குப் பெயர் அமைந்திருந்தது. அஹிம்சையை மேற்கொண்டவர். அவர் தனது கொடியில் வீரசின்னமாகிய முரசு வாத்தியத்தை எழுதிக் கட்டினார். "பொருமுரசப் பூங்கொடியோன்" என்று வில்லிபுத்தூரார் பாடுகின்றனர்.*

**நிசிசரர் :-**

*நிசி - இரவு; இருள் நிறைந்தது.*

*சரர் - சஞ்சரிக்கின்றவர்*

*இரவிலே உலாவுபவர் இராக்கதர். அதாவது இருட்டிய பின் பாவநெறியிலே வாழ்கின்றவர்கள். இப்பொழுதும் நியாயத்திற்கு மாறாக விற்பதை இருட்டு வியாபாரம் என்பது வழக்கம். தீயவரை வென்று தூயவரை வடிவேற் பெருமான் வாழ வைத்தனர்.*

## கருத்துரை

*அரக்கரை வென்று இந்திரனுக்கு அரசு தந்த வேலாயுதரே! சிவபெருமானுக்கு உபதேசித்ததை அடியேனுக்கும் விளங்குமாறு உபதேசிப்பீர்.*

## 5

ஆராத காத லாகி மாதர்த
மாபாத சூட மீதி லேவிழி
யாலோல னாய்வி கார மாகியி லஞ்சியாலே

ஆசாப சாசு மூடி மேலிட
ஆசார வீன னாகி யேமிக
ஆபாச னாகி யோடி நாளும மிழிந்திடாதே

ஈராறு தோளு மாறு மாமுக
மோடாரு நீப வாச மாலையு
மேறான தோகை நீல வாசியு மன்பினாலே

ஏனோரு மோது மாறு தீதற
நானாசு பாடி யாடி நாடொறு
மீடேறு மாறு ஞான போதக மன்புறாதோ

வாராகி நீள்க பாலி மாலினி
மாமாயி யாயி தேவி யாமளை
வாசாம கோச ராப ராபரை யிங்குளாயி

வாதாடி மோடி காடு காளுமை
மாஞால லீலி யால போசனி
மாகாளி சூலி வாலை யோகினி யம்பவானி

சூராரி மாபு ராரி கோமளை
தூளாய பூதி பூசு நாரணி
சோணாச லாதி லோக நாயகி தந்தவாழ்வே

தோளாலும் வாளி னாலு மாறிடு
தோலாத வான நாடு சூறைகொள்
சூராரி யேவி சாக னேசுரர் தம்பிரானே.

### பதவுரை

*வாராகி - வராகியாக விளங்குபவரும், நீள்கபாலி - நீண்ட கபாலத்தைக் கரத்தில் தாங்கியவரும், மாலினி - கங்கையாகத் திகழ்பவரும், மாமாயி - பெரிய மாயையைச் செய்பவரும், ஆயி - உலகங்கட்கு அன்னையாகத் திகழ்பவரும், தேவி - ஒளி மயமானவரும், யாமளை - பச்சை நிறமுடையவரும், வாசாமகோசரை - வாக்கிற்கு எட்டாதவரும், பராபரை - பெரிய*

பொருளாகியவரும், இங்குளாயி - அடியவர் உள்ளத்தில் தங்குபவரும், வாதாடி - இறைவரோடு வாது செய்தவரும், மோடி - பிணங்குபவரும், காடுகாள் -துர்க்கையாக வந்தவரும், உமை - உமாதேவியாரும், மாஞாலலீலி - உலகத்தை ஆக்கியும் அளித்தும் அழித்தும் விளையாடுபவரும், ஆலபோசனி - ஆலகால விடத்தையுண்டவரும், மாகாளி - மகாகாளி தேவியானவரும், சூலி - திரிசூலத்தைத் தாங்கியவரும், வாலை - இளமையான வரும், மோகினி - மோகத்தைச் செய்பவரும், அம்பவானி - அழகிய பார்வதியம்மையாரும், பூராரி - மகிடாசூரன் முதலிய அசுரத்தலைவர்களை அழித்தவரும் - மாபுராரி - பெரிய முப்புரங் களை யெரித்தவரும் கோமளை - அழகியவரும், தூளாயபூதி பூசு நாரணி - திருநீற்றுப் பொடியைப் பூசிக்கொள்கின்ற குளிர்ந்தவரும், சோணாசல - சிவந்த மலையாகிய அருணையில் வாழ்பவரும், ஆதிலோக நாயகி - முதன்மை பெற்று உலகங்கட்குத் தலைவியாக வீற்றிருப்பவரும் ஆகிய அம்பிகையார், தந்த வாழ்வே - பெற்றருளிய குமாரக் கடவுளே! தோளாலும் -தோள் வலிமையாலும், வாளினாலும் - வாள்வலிமையாலும், மாறிடு - மாறுபட்டவனும், தோலாத - யாவரிடத்தும் தோல்வியடை யாதவனும், வானநாடு சூறைகொள் - தேவருலகை சூறையிட்ட வனும் ஆகிய, சூராரியே - சூரபன்மனை அடக்கினவரே! விசாகனே - விசாக மூர்த்தியே! சுரர் தம்பிரானே - தேவர்கள் வணங்குந் தனிப்பெருந் தலைவரே! ஆராத காதல் ஆகி - தணியாத காதல்கொண்டு, மாதர்தம் - பெண்களுடைய, மாபாத சூடமீதிலே - அழகிய பாதமுதல் உச்சிவரையிலும், விழி ஆலோ லனாய் - கண்களைச் செலுத்துபவனாகி, விகாரமாகி - உள்ளம் மாறுபட்டவனாகி, இலஞ்சியாலே - உந்தியினாலே, ஆசாபசாசு மூடி மேலிட - ஆசையாகிய பேய் என்னை அமுத்தி மேற் கொள்ள, ஆசார ஈனன் ஆகியே - மேலான ஆசாரத்தைவிட்டு அநாசாரனாகி, மிக ஆபாசனாகி - அசுத்தனாகி, ஓடி - எங்கும் திரிந்து, நாளும் அழிந்திடாதே - நாடோறும் அடியேன் அழிந்து போகாமல், ஈராறு தோளும் - பன்னிருபுயங்களும், ஆறு மாமுகமோடு - ஆறு திருமுகங்களும், ஆரு நீபவாசமாலையும் - (திருமார்பிலே) பொருந்தியுள்ள மணங்கமழ்கின்ற கடப்ப மலர் மாலைகளும், ஏறு ஆன தோகை நீலவாசியும் - உயர்ந்த நீலநிறம் பொருந்திய தோகையுடன் கூடிய மயில் வாகனமும் ஆகிய இவைகளை, ஏனோரும் ஓதுமாறு - உலகிலேயுள்ள எல்லாரும் ஓதியுய்யுமாறு, தீது அற - குற்றங்கள் விலகுமாறு, நான் ஆசுபாடி

- அடியேன் ஆசுகவியாகப் பாடியும், ஆடி - ஆனந்தத்தால் ஆடியும், நாள்தொறும் - நாள்தோறும், ஈடேறுமாறு - கடைத்தேறு மாறு, ஞானபோதம் - சிவஞானபோதத்திலே, அன்பு உறாதோ - அன்பு உண்டாகாதோ?

(இங்குளாயி - உள் - (அடியவர்) உள்ளத்தில் இங்கு - தங்குகின்ற, ஆயி - தாய்)

## பொழிப்புரை

வராகியானவரும், நீண்ட கபாலத்தை யேந்தியவரும், கங்கையாரும், பெரிய மாயையைச் செய்பவரும், ஒளிமயமான வரும், பச்சை நிறத்தினரும், வாக்கிற்கு எட்டாதவரும், பெரிய பொருளாகத் திகழ்பவரும், அடியவருள்ளத்தில் தங்குபவரும், இறைவருடன் வாதாடுகின்றவரும், பிணங்குபவரும், துர்க்கையாக வந்தவரும், உமையம்மையாரும், பெரிய உலகத்தைக் காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடுபவரும், நஞ்சையுண்டவரும், மகாகாளிதேவியாரும், சூலத்தைத் தரித்தவரும், இளமையான வரும், மோகத்தைச் செய்பவரும், அழகிய பவாநியம்மையாரும், மகிஷன் முதலிய அசுரவேந்தர்களை அழித்தவரும், பெரிய முப்புரங்களை யெரித்தவரும், அழகியவரும், திருநீற்றைத் தரித்தவரும், அருணாசலத்தில் எழுந்தருளியிருப்பவரும், உலகநாயகியாகிய ஆதிசத்தியாரும் ஆகிய அம்பிகையார் பெற்ற திருக்குமாரரே! தோள் வலிமையாலும், வாள் வலிமையாலும் மிக்கவனும், மாறுபட்டவனும், தோல்வியில்லாதவனும், தேவருலகைச் சூறையிட்டவனுமாகிய சூரபன்மனை அடக்கிய வரே! விசாக மூர்த்தியே! தேவர்கள் போற்றுந் தனிப்பெருந் தலைவரே! தணியாத காதல் கொண்டு, பெண்களுடைய அடிமுதல் முடிவரையுள்ள அங்கங்களை நோக்கி, சித்தம் மாறுபட்டு, உந்தியினாலே, ஆசைப்பேய் பிடிக்க அநாசாரனாகி மிகவும் அசுத்தனாகி, இங்குமங்கும் திரிந்து அடியேன் நாடோறும் அழியாமல், தேவரீரது பன்னிரு புயங்களையும், ஆறுமுகங்களை யும், கமழ்கின்ற கடப்பமலர் மாலைகளையும், சிறந்த மயில் வாகனத்தையும், அன்பினாலே, அனைவரும் ஓதி உய்யும் பொருட்டும், உலகில் குற்றம் நீங்கவும், ஆசுகவியாகப் பாடியும் ஆடியும், நாடோறும் ஈடேறுமாறு சிவஞானபோதத்தில் அன்பு உண்டாகாதோ?

## விரிவுரை

**ஆராத காதல்:-**

*ஆராத - தணியாத*

*பெண்கள்பால் தணிதலில்லாத காதல் கொண்டு, தவ நெறிவிடுத்து அவநெறியடுத்து அலைவது பேதைமை.*

*இறைவனிடத்துக் காதல் வைக்க வேண்டும். அது ஞானக் காதல். அதனால், எல்லா நலன்களும் உண்டாகும்.*

"காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி" *- சம்பந்தர்*

பெருமை யுடையார் மனைதொறும்போய் பிச்சை யெடுத்தா ரானாலும்
அருமை மணியா ரம்பலத்தே ஆடித் திரிந்தா ரானாலும்
ஒருமை யுடையார் கோவணமே உடையாய் உடுத்தா ரானாலும்
கருமை விழியாய் நான்அவர்மேல் காதல் ஒழியேன் கனவிலுமே.

*- அருட்பிரகாசவள்ளலார்*

**மாதர்தம் பாதாதிகூட மீதிலே விழி ஆலோலனாய்-**

*மகளிருடைய பாதம் முதல் கூந்தல்வரை வியந்து நோக்கியும், புகழ்ந்து கவிகள் பல ஆக்கியும் கெடுவர் பலர்.*

*பஞ்சுபோல் நரைக்கின்ற கூந்தலை முகில் என்றும், அறல் என்றும் புகழ்வர்.*

*பீளைசொரியும் கண்களை வேல் என்றும், சேல் என்றும் கடல் என்றும், கயல் என்றும் கூறுவர்.*

*சளி யொழுகும் நாசியை எள்ளுப்பூவென்றும், குறும்பி வரும் செவியை வள்ளையிலையென்றும், நாறுகின்ற வாயில் உள்ள பல்லை முத்தென்றும், உதட்டைப் பவழமென்றும், சதைக்கட்டிகளை மேரு என்றும் குடம் என்றும், இவ்வாறு அருவருக்கத்தக்க உறுப்புக்களை மிகமிக உயர்வாகச் சிறப்பித்துப் பாடியும், அவைகளை உற்று உற்றுப் பார்த்தும் கண்கள் பூத்தும், உடல் வேர்த்தும், பணத்தைத் தூர்த்தும் அவமே அழிவர். அந்தோ! என்னே மடமை! ஊன உடம்பை விரும்பி அழியாது, இறைவருடைய ஞான உடம்பை நினைந்து உய்ய வேண்டும்.*

பாலென் பதுமொழி பஞ்சென் பதுபதம் பாவையர்கண்
சேலென்ப தாகத் திரிகின்ற நீசெந்தி லோன்திருக்கை
வேலென் கிலைகொற் றமயூர மென்கிலை வெட்சிதண்டைக்
காலென் கிலைமன மேஎங்ங னேமுத்தி காண்பதுவே

*- கந்தரலங்காரம்*

இலஞ்சியாலே :-

*இலஞ்சி – உந்தி.*

"உந்தியென் கின்றமடு விழுவேனை" *- திருப்புகழ்*

ஆசாபசாசு மூடி :-

*ஆசையாகிய பேய்பிடிக்க, அதனால் நன்மையின்னதென்று அறியவும், தீமையை நன்மையென்றும், துக்கத்தைச் சுகமென்றும் கருதி யுழல்வர்.*

ஆசாரவீனனாகி :-

*ஆன்றோர்கள் வடித்த சதாசாரத்தை மேற்கொள்ளாமல், நீராடாமல் உண்பதும், உடுத்த உடையையே மீண்டும் மீண்டும் உடுப்பதும், எச்சில்பட்ட கலங்களில் உண்பதும், பலர் கவ்விய பாத்திரங்களில் பாத்திரங் கடித்துக் குடிப்பதும், மது மாமிசங்களை யுண்பதும், இன்னோரன்ன பிறவும் ஆகிய அநாசாரங்களை யுடையராய் அலையும் மாந்தர் பலர்.*

ஆபாசனாகி :-

*ஆபாசம் – அசுத்தம்.*

*மனத்தினால் தீயவை நினைத்தும், வாக்கினால் தீயவை யுரைத்தும், காயத்தால் தீயவை புரிந்தும் அசுத்தராகி இம்மை நலனையும் மறுமை நலனையும் ஒருங்கேயிழப்பர். மனந் தூய்மையடைய தியானமும், வாக்கு தூய்மையடைய துதியும் காயந் தூய்மையடைய வழிபாடும் புரிதல் வேண்டும்.*

அன்பினாலே ஏனோரு மோதுமாறு:-

*அருணகிரிப் பெருந்தகையார் எந்தை கந்தவேள் கருணை முழுவதும் பெற்று, பாசகரண பசுகரணங்கள் நீங்கி, பதிகரணம் பெற்று, பரஞானபரராய் விளங்கி; உலகில் உள்ள மக்கள் அனைவரும் ஓதி உய்வு பெறும்பொருட்டு திருப்புகழாகிய இத்தமிழ் மறையைப் பாடியருளினார் என்பது "ஏனோரும்*

ஓதுமாறு" என்ற திருவாக்கினால் நன்கு புலனாகின்றது. இவ்வாறே பிறிதோர் இடத்திலும் அடிகள் கூறியருள்வதை நோக்குக.

"உலகேழும்
யானாக நாம அற்புதத் திருப்புகழ்
தேனூற ஒதி எத்திசைப் புறத்தினும்
ஏடேவு ராஜ தத்தினைப் பணித்ததும்"

முத்திக்கு வித்தாக எத்திக்குந் தித்திக்குமாறு சந்தத் தமிழ்மாலையை அடிகளார் ஓதியுபகரித்தனர். ஆதலின், முருக வேள் திருவருளை எளிதிற் பெறுவதற்குச் சிறந்த சாதனம் நாடோறும் திருப்புகழை நியதியாகப் பாராயணஞ் செய்வதேயாகும்.

"பலகாலு முனைத்தொழு வோர்கள்
மறவாமல் திருப்புகழ் கூறி
படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே" - *திருப்புகழ்*

ஏனோரும் என்றமையால், எல்லா மதத்தினரும், எல்லாக் குலத்தினரும், எல்லாப் பக்குவிகளும், எல்லாக் காலத்தவரும், எல்லாக் கொள்கையரும் இத் திருப்புகழை ஓதி உய்வு பெறுதல் வேண்டும் என்பது உறுதியாகின்றது.

**நானாசு பாடி :-**

ஆசு – விரைவு

- ஆசுகவி மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்று கவி நான்கு வகைப்படும். "நாலுகவி த்யாகா" என்பார் அநுபூதியில். அருணகிரியார் ஆசுகவி பாடுவதில் வல்லவர்.

**வாராகி :-**

சத்தமாதர்களில் ஒருவர். சத்தமாதர்களாவார்:– அபிராமி, மகேச்சுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி. இவர்களது வாகனம்: அன்னம், இடபம், மயில், கருடன், சிங்கம் யானை, பேய், இவர்களது ஆயுதம்: மறை, பிநாகம், வேல், ஆழி, கலப்பை, வச்சிரம், சூலம்.

**விசாகனே :-**

விசாக நட்சத்திரத்திற்கு உரியவர்.

வி – சாகம். சிறந்த பட்சங்களுடைய மயில்வாகனத்தை யுடையவர்.

## கருத்துரை

*உமைமைந்தரே! சூரசங்காரரே! பெண்களைக் கண்களால் கண்டு மயங்கியுழலாமல், தேவரீரைப் பாடி உய்யுமாறு அருள் புரிவீர்.*

**6**

ஆராதன ராடம் பரத்து
மாறாதுச வாலம் பனத்து
மாவாகன மாமந் திரத்து மடலாலும்

ஆறார்தெச மாமண் டபத்தும்
வேதாகம மோதுந் தலத்து
மாமாறெரி தாமிந் தனத்து மருளாதே

நீராளக நீர்மஞ் சனத்த
நீடாரக வேதண்ட மத்த
நீநானற வேறின்றி நிற்க நியமாக

நீவாவென நீயிங் கழைத்து
பாராவர வாநந்த சித்தி
நேரேபர மாநந்த முத்தி தரவேணும்

வீராகர சாமுண்டி சக்ர
பாராகண பூதங் களிக்க
வேதாளச மூகம் பிழைக்க அமராடி

வேதாமுறை யோவென் றரற்ற
ஆகாசக பாலம் பிளக்க
வேர்மாமர மூலந் தறித்து வடவாலும்

வாராகர மேழுங் குடித்து
மாசூரொடு போரம் பறுத்து
வாணாசன மேலுந் துணித்த கதிர்வேலா

வானாடர சாளும் படிக்கு
வாவாவென வாவென் றழைத்து
வானோர்பரி தாபந் தவிர்த்த பெருமாளே.

## பதவுரை

*வீர ஆகர சாமுண்டி* - வீரத்திற்கு உறைவிடமாகிய காளியும், *சக்ர பாராகண பூதம்* - வளைவாகப் பெருங்கூட்டமாகிய பூதங்களும் மகிழ்ச்சியுடையவும், *வேதாள சமூகம் பிழைக்க* - பெரும்பேய்க்கூட்டம் உண்டு உய்யும்படியும், *அமர் ஆடி* - போர் செய்து, *வேதா* - பிரமதேவர், *முறையோ என்று அரற்ற* - முறையோ என்று கூறி ஓலமிடவும், *ஆகாச கபாலம் பிளக்க* - விண் முகட்டிலுள்ள மூதண்டம் பிளக்கும்படியும், *வேர் மாமர மூலந் தறித்து* - ஆழமான வேருடன் கூடிய பெரிய மாமரத்தின் அடிப்பகுதியை வெட்டியும், *வடவாலும்* - வடவைத் தீயையும், *வார் ஆகரம் ஏழும் குடித்து* - தண்ணீரின் இருப்பிடமாகிய ஏழுகடல்களையும் வற்றச் செய்தும், *மாசூரொடு போர் அம்பு அறுத்து* - பெரிய சூரபன்மனோடு போருக்குரிய அம்புகளை அறுத்தும், *வாண ஆசன மேலும் துணித்து* - பாணங்களின் இருப்பிடத்தையும் அழித்து அருளிய, *கதிர் வேலா* - ஒளிமிக்க வேற்படையை யுடையவரே! *வானாடு அரசு ஆளும்படிக்கு* - தேவர்கள் தமது வான உலகத்தை யரசு செய்யும்படி, *வாவா என வா என்று அழைத்து* "வாருங்கள் வாருங்கள்" என்று அன்புடன் அனைவரையும் அழைத்து, *வானோர் பரிதாபம் தவிர்த்த* - வானவர்களுடைய துன்பத்தை நீக்கிய, *பெருமாளே* - பெருமையின் மிக்கவரே! *ஆராதனர் ஆடம்பரத்தும்* - ஆராதனை புரிகின்றவர்களது ஆடம்பரமான வழிபாட்டிலும், *மாறா துச ஆலம்பனத்தும்* - மாறுபாடில்லாத கொடிமரத்தில் பற்றுக்கோடாக இருப்பதிலும், *ஆவாகன மாமந்திரத்தும்* -மூர்த்தியை அழைத்துக் கூறும் மந்திரங்களிலும், *அடலாலும்* - மந்திரசத்தியிலும், *ஆறு ஆர்தெசமா மண்டபத்தும்* - ஆறாவது நிலையாக ய என்ற எழுத்துடன் கூடி விளங்கும் ஆக்ஞையை நாடிநிற்கும் நிலைமையிலும், *வேதாகமம் ஓதும் தலத்தும்* - காமியத்தைக் குறித்து வேதம் ஆகமங்களை ஓதுகின்ற இடத்திலும், *ஆம் ஆறு எரிதாம் இந்தனத்தும்* - சுவர்க்கபோகத்திற்கு ஆகும் வழியில் அக்கினி தாவுகின்ற யாகத்திற்குரிய சமித்துக்களிலும், *மருளாதே* - அடியேன் மருட்சியடையாமல்; *நீர் ஆள் அகநீர் மஞ்சனத்த* - குளிர்ச்சியை ஆளுகின்ற இடமாகிய தண்ணீரால் அடியார்களால் ஆட்டப்படுகின்றவரே! *நீள் தாரக* - நீண்ட தாரகப் பொருளாயுள்ளவரே! *வேதண்டம் அத்த* - கைலை மலைக்குத் தலைவரே! *நீ நான் அற* - நீர் வேறு நான் வேறு

என்ற தன்மை நீங்கி, வேறு இன்றி நிற்க - ஒன்றுபட்டு விளங்க, நியமாக - நியதியுடன், நீ வா என நீ இங்கு அழைத்து - அன்பனே! நீ வருக என்று தேவரீர் இவ்விடத்தில் அடியேனை அழைத்து, பாராவர ஆநந்த சித்தி - கரையில்லாத சிவானந்தப் பெருஞ்சித்தியாகிய, நேரே பரம ஆனந்தமுத்தி தரவேணும் - பேரானந்த முத்தி நலத்தை நேரடியாகத் தேவரீர் அடிமையேனுக்குத் தந்தருள வேணும்.

## பொழிப்புரை

வீரத்திற்கு உறைவிடமாகிய காளிதேவியும் பெருங் கூட்டமாக வளைந்துள்ள பூதங்களும் மகிழவும், பெரும் பேய்க் கூட்டம் (அவுணர்கள் சதையுணவை யுண்டு) பிழைக்கவும், போர் புரிந்து, பிரமதேவர் முறையோ என்று ஓலமிடவும், ஆகாய வெளியின் முகடு பிளக்கவும், வேருடன் கூடிய பெரிய மாமரத்தின் அடிப்பகுதியைத் துணித்தும், வடவைத் தீயையும், நீருக்குறை விடமாகிய ஏழு கடலையும் வற்றச் செய்தும், பெரிய சூரபன் மனுடைய போருக்குரிய அம்புகளை அறுத்தும், பாணங்களின் இருப்பிடத்தைத் துணித்தும் அமர் செய்தருளிய ஒளிமிக்க வேலாயுதத்தையுடையவரே! தேவர்களை வானவுலகத்தை யரசு செய்யும்படி "வாருங்கள் வாருங்கள்" என்று கூறி, அவர்களது கவலையைத் தீர்த்தருளிய பெருமிதம் உடையவரே! ஆராதனை புரிகின்றவர்களுடைய ஆடம்பரமான சடங்குகளிலும் மாறிலாத கொடிமரத்தினைப் பற்றுக்கோடாகக் கொண்டு செய்யுங் கிரியை களிலும், ஆவாகன முதலிய மந்திரங்களிலும், அதன் வலிமையிலும், ய என்ற எழுத்துடன் கூடி ஆறாவது ஆதாரமாகிய ஆக்ஞையிலும், வேத ஆகமங்களை யோதும் இடத்திலும், மழை முதலிய நன்மையாகும்படி சமித்துடன் கூடிய வேள்வித் தீயிலும் மருட்சியடையக்கூடாது. குளிர்ந்த தண்ணீரைக் கொண்டு அடியவர்களால் ஆட்டப்படுகின்றவரே! சிறந்த தாரகப் பொருளா னவரே! திருக்கைலாயமலைக்குத் தலைவரே! தேவரீரும் அடியேனும் வேறின்றி ஒன்றுபட்டு நிற்கும்படி நியதியாக, "அன்பனே! வருக" என்று அடியேனை நேரே அழைத்து, கரை யில்லாத சிவானந்த சித்தியாகிய பேரானந்தப் பெருமுத்தியைத் தந்தருளுவீர்.

## விரிவுரை

**ஆராதன ராடம்பரத்து:-**

இந்தத் திருப்புகழில் அருணகிரிநாதர் அன்பில்லாத வெறுங் கிரியைகளுடன் கூடிய ஆடம்பரமான தன்மைகளைக் கண்டிக்கின்றனர்.

அன்பும் பயனும் கருதாமையுமே அருள் நெறிக்கு அங்கங் களென்க. "அன்பு இன்றி பயன் கருதி ஆடம்பரமாகச் செய்யும் வழிபாட்டைக் கண்டு இறைவன் சிரிக்கின்றனன்" என்று கூறுகின்றனர் அப்பரடிகள்.

"பொக்க மிக்கவர் பூவு நீருங்கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே"

எனவே, விரிவாக ஆடம்பரமாகச் செய்யும் பூஜையினும் சுருக்கமாக அன்புடன் செய்யும் பூஜையே சிறந்தது.

**மாறாது சவாலம் பனத்து:-**

மாறா துச ஆலம்பனம் என்று பிரிக்க. மாறா – மாறு பாடில்லாது துவசம் என்பது துசம் என்று வந்தது. ஆலம்பனம் – பற்றுக் கோடு.

ஆடம்பரமாகக் கொடியேற்றுதல் புரிந்து, அதைப்பற்றிச் செய்யும் சடங்குகள்.

**ஆவாகன மாமந்திரத்து:-**

பூஜை கிரியாபூஜை, ஞானபூஜை என்று இருவகைப்படும்.

கிரியா பூஜையென்பது குண்ட மண்டலமிட்டு, ஒரு பொருளில் பரம்பொருளை ஆவாகனஞ் செய்து மந்திரங்களைக் கூறி, அதற்குரிய அங்கங்களுடன் செய்வது.

ஞானபூஜையாவது, உள்ளக் கோயிலில் எங்கும் நிறைந்த பரம்பொருளை யுன்னி, கருவிகரணங்களின்றி நிர்விகல்பமாகப் புரிவது.

இந்தப் பூஜையின் சிறப்பையே தாயுமானார்,

"பண்ணேன் உனக்கான பூசைஒரு வடிவிலே
பாவித் திறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே இருத்திஅப்
பனிமலர் எடுக்க மனமும்
நண்ணேன் அலாமல்இரு கைதான் குவிக்கஎனில்
நாணும்என் உளம்நிற்றி நீ
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்யல் முறையோ."

என்றும்,

"நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்அன்பு
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே."

என்றும் கூறியருளுகின்றார்.

ஆதலின், ஆடம்பரமாக ஆவாகாதி மந்திரங்களைக் கூறிப் புரியும் கிரியா பூஜையையே பெரிது என எண்ணி மயங்கக் கூடாது என்று அடிகள் கூறியருளுகின்றார்.

ஞானபூஜை வாய்க்கும்வரை கிரியாபூஜை வேண்டும். ஞானபூஜை வாய்த்த பெரியவர்களும் கிரியாபூஜை நிகழ்த்துவர். அது உலகவர் நன்னெறிப்படும் பொருட்டு என்க. இல்லையேல், சாமானியர்கள் பூஜையாதிகளைக் கைவிட்டு மெய் விடுவர்.

அதனாலன்றோ, இறைவனை நேரே கண்டு திருவருள் மயமாய் நின்ற நால்வர்களும் கோயில்தோறும் சென்று வழிபட்டனர். அது உலகம் பின்பற்றி உய்யும் பொருட்டு என்க.

**அடலாலும் :-**

அடல் - வலிமை.

மந்திரத்தை உருவேற்றி, அதனால் வந்த மந்திர வலிமை யால் பலப்பல ஆடல்களைப் புரிவர். வசியம், மோகனம், தம்பனம் முதலியவைகளைப் புரியும் வலிமை மந்திர சக்தியால் ஏற்படும். அவைகளைக் கண்டு ஞானசீலர்கள் மருளக்கூடாது என்கின்றார்.

**ஆறார் தெச மாமண்டபத்தும்:-**

ஆறாதாரங்களில் ஆறக்கரங்கள் நடுநாயகங்களாகவும் அவற்றைச் சூழ்ந்து ஐம்பத்தோர் அக்கரங்களும் இருக்கின்றன.

மூலாதாரத்தில் ஓம்; சுவாதிட்டானத்தில் ந; மணி பூரகத்தில் ம; அநாகதத்தில் சி; விசுத்தியில் வ; ஆக்ஞையில் ய;

ஆக்ஞாஸ்தானம் புருவநடு. அங்கிருக்கும் எழுத்து 'ய' தசம் – பத்து. தமிழ்க் கணக்கில் பத்து – ய. தசமண்டபம் என்றால் யகரம் உள்ள ஆக்ஞை யென்று அறிக. ஆக்ஞை யிலே நாட்டத்தைச் செலுத்தித் தியானித்தல் ஒருபடி. ஆனால், அப்படியிலேயே நின்றுவிடக்கூடாது. அதையுங் கடந்து, பிரமரந்திரங் கடந்து சகஸ்ராரப் பெருவெளிசேர்ந்து சிவானந்த வெள்ளத்தில் அழுந்துதல் வேண்டும்.

நாளுமதி வேக கால்கொண்டு தீமண்ட
வாசியன லூடு போயொன்றி வானின்க
ணா்மமதி மீதி லூறுங்க லாயின்ப அமுதூறல்
நாடியதன் மீது போய்நின்ற ஆநந்த
மேலைவெளி யேறி நீயின்றி நானின்றி
நாடியினும் வேறு தானின்றி வாழ்கின்ற தொருநாளே.

ஆறாவது ஆதாரமாக நிறைந்துள்ள யகார எழுத்துடன் கூடிய ஆக்ஞையைக் கண்டு, அங்கேயே நின்று மருட்சியடையாமல் அதற்கப்பாலுஞ் செல்லுதல் வேண்டும் என்று தெளிக. இந்தக் குறிப்பிலேயே அடிகளார்,

தங்கிய தவத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திர வெளிக்குவழி யருள்வாயே. - *திருப்புகழ்*

என்று அருளிச் செய்தனர்.

**வேதாகம மோதுந்தலத்தும்:-**

முத்திநலங்கருதாமல், பத்தி நலமின்றி, காமியங் கருதி வெறும் ஒலியாக வேதாகமங்களை ஓதுவதைப்பற்றி இது குறிக்கின்றது. பொருள் பற்றிச் செய்யும் பூசனை புனித முறாததுபோல், பொருள்பற்றி வேதாகமம் ஓதுவதும் சிறப்புறாது என அறிக.

**ஆமாறெரி தாமிந்தனத்து மருளாதே:-**

சுவர்க்காதி புவனபோகங்களைக் குறித்துச் செய்யும் வேள்விகளை விரும்புதல் கூடாது. மேலும் பகைவர் முதலியோர் அழியுமாறு செய்யும் வேள்விகளும் உண்டு. அதனால் "ஆமா றெரி தாமிந் தனத்தும்" என்று கூறினார்.

வேதவேள்வி முதலியன யாவும் புண்ணியத்தைத் தந்து, அப் புண்ணியத்தின் பயனாக வான் பதம் தருவனவே யாகும். அவை பிறவி நீக்கத்திற்குத் துணையாகா எனத் தெளிக.

நம்முடைய நோக்கம் அனைத்தும் பிறவாமையை நாடியே அமையவேண்டும். கள்ளப் புலக் குரம்பைக் கட்டழிக்க வல்லவனாம் வள்ளல் பிரானை உள்ளபடி யுன்னி, பள்ளமடையை நாடும் வெள்ளம்போல் அவரிடத்து அன்பு செலுத்தி, தெள்ளத் தெளிந்த சிந்தையுடன் இருத்தல் வேண்டும்.

**வீராகர சாமுண்டி:-**

சாமுண்டி - காளி - போர்செய்ய வல்லவள். வீரத்திற்கு உறைவிடமானவள். முருகவேள் அவுணர்களுடன் மிகவும் உக்ரமாகப் போர்புரிந்தபோது, போர்ச்சிறப்பைக் கண்டு போரில் வல்ல காளி களித்தனள்.

**சக்ர பாராகண பூதங் களிக்க:-**

சக்ரம - வளைவு; பாராகணம் - பெருங்கூட்டம். பூதங்கள் - குறுகிய கால்களும் இறுகிய உடம்பும் உள்ளவைகள். இப்பூதங்கள் முருகவேளுடன் படைகளாகச் சென்றன. ஒப்பற்ற ஆற்றல் படைத்தவை.

நீடு தேவர் நிலைகளும் வேண்டிடின்
நாடும் ஐம்பெரும் பூதமும் நாட்டுவ
கோடி கோடி குறட்சிறு பூதங்கள்
பாடி ஆரம் பரப்பது பாங்கெலாம் - *கந்தபுராணம்*

கந்தவேள் அவுணரோடு புரிந்த போர்த்திறத்தை நோக்கிப் பூதங்கள் பெரிதும் மகிழ்ந்தன.

**வேதாள சமூகம் பிழைக்க:-**

வேதாளம் - பெரும்பேய்.

கந்தவேளின் கணைகளால் மாண்ட அவுணரது நிணங்களையுண்டு வேதாள கணம் உய்ந்தன.

"கூதா ளகிரா தகுலிக் கிறைவா
வேதா ளகணம் புகழ்வே லவனே" - *அநுபூதி*

**வேர்மாமர மூலந்தறித்து:-**

சூரபன்மன் இறுதியில் உறுதியுள்ள மாமரமாகக் கடலின் நடுவே நின்றனன். அதன் நிழல் ஆயிரத்தெட்டு அண்டங்களினும் விழுந்தது அதன் எஃகுமயமான கிளைகளும் இலைகளும் அசைவதனால் அண்டங்கள் அதிர்ந்து அல்லற்பட்டன.

*ஆருயிர்கள் நிலைகுலைந்தன.*

*அறுமுகப் பெருமான் அயில்வேலை விடுத்து அப்பெரிய மாமரத்தைப் பிளந்து அழித்தருளினார்.*

**வாராகரம் :-**

*வார் – நீர். ஆகரம் – உறைவிடம். நீருக்கு உறைவிடம் கடல்.*

*சூரபன்மன் கடலிலே ஒளிந்தான். நூறு கோடி சூரிய ஒளியுடன் வேலாயுதம் கடலுக்கு அருகிலே சென்றவுடன் கடல்கள் ஏழும் வற்றித்திடர்பட்டன.*

"வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்டதனி வேலைக்காரனும்" - *திருவகுப்பு*

"வேலை வற்றி வறண்டு சுறில் சுறிலென
மாலை வெற்பு மிடிந்து திடீல் திடீலென
........................................................
........................................................
வேலெ டுத்து நடந்த திவா கரா" - *திருப்புகழ்*

## கருத்துரை

*வேலாயுதக் கடவுளே! தேவர் சிறைமீட்ட தேவதேவரே! ஆடம்பரமான தன்மைகளைக் கண்டு அடியேன் மயங்கா வண்ணம் தேவரீர் அடியேனை அழைத்து முத்திநலத்தைத் தந்தருளுவீர்.*

## 7

ஆனாத ஞான புத்தி யைக்கொ டுத்ததும்
ஆராயு நூல்க ளிற்க ருத்த ளித்ததும்
ஆதேச வாழ்வி னிற்ப்ர மித்தி ளைத்துயி ரழியாதே

ஆசாப யோதி யைக்க டக்க விட்டதும்
வாசாம கோச ரத்தி ருத்து வித்ததும்
ஆபாத னேன்மி கப்ர சித்தி பெற்றினி துலகேழும்

யானாக நாம அற்பு தத்தி ருப்புகழ்
தேனூற வோதி யெத்தி சைப்பு றத்தினும்
ஏடேவு ராஜ தத்தி னைப்ப ணித்ததும் இடராழி

ஏறாத மாம லத்ர யக்கு ணத்ரய
நானாவி கார புற்பு தப்பி றப்பற
ஏதேம மாயெ னக்க னுக்ர கித்ததும் மறவேனோ

மாநாக நாண்வ லுப்பு றத்து வக்கியொர்
மாமேரு பூத ரத்த னுப்பி டித்தொரு
மாலாய வாளி யைத்தொ டுத்த ரக்கரி லொருமூவர்

மாளாது பாத கப்பு ரத்ர யத்தவர்
தூளாக வேமு தற்சி ரித்த வித்தகர்
வாழ்வேவ லாரி பெற்றெ டுத்த கற்பக வனமேவும்

தேநாய காஎ னத்து தித்த உத்தம
வானாடர் வாழ விக்ர மத்தி ருக்கழல்
சேராத சூர னைத்து ணித்த டக்கிய வரைமோதிச்

சேறாய சோரி புக்க ளக்கர் திட்டெழ
மாறாநி சாச ரக்கு லத்தை யிப்படி
சீராவி னால றுத்த றுத்தொ துக்கிய பெருமாளே

## பதவுரை

*மாநாக நாண்* – பெரிய நாகமாகிய வாசுகியை நாணாக, *வலுப்பு உற துவக்கி* – வலிமை பெறக் கட்டி, *ஓர் மாமேரு பூதர தனு பிடித்து* – ஒப்பற்ற பெரிய மேருமலையை வில்லாகப் பிடித்து, *ஒரு மாலாய வாளியை தொடுத்து* – ஒப்பற்ற திருமாலைக் கணையாகத் தொடுத்து, *அரக்கரில் ஒரு மூவர் மாளாது* – இராக்கதர்களில் சிறந்த தலைவர்களாகிய மூவர் மட்டும் மாண்டு போகாமல் பிழைக்கவும், *பாதகபுரத்ரயத்தவர் தூளாக* – பாவங்களைப் புரிந்த முப்புரத்திலுள்ளார் வெந்து பொடியாகவும், *முதல் சிரித்த வித்தகர் வாழ்வே* – முந்நாளில் புன்னகை புரிந்த ஞான வடிவினராகிய சிவபெருமானது புதல்வரே! *வலாரி பெற்றெடுத்த* – வலன் என்ற அரக்கனைக் கொன்ற இந்திரன் வளர்த்த, *கற்பக வனம மேவும் தேம் நாயகா* – கற்பகவனத்தை யுடைய தேசத்திற்குத் தலைவரே! *என துதித்த* – என்று துதி செய்த, *உத்தம வானாடர் வாழ* – உத்தமர்களாகிய தேவர்கள் இனிது வாழும் பொருட்டு, *விக்ரம திருகழல் சேராத* – வீரம் பொருந்திய திருவடியை அணுகாதவனாகிய, *சூரனை துணித்து* –சூரபன்மனைப் பிளந்தும், *அடக்கியவரை மோதி* – பூத வெள்ளங்களை அடங்கச் செய்த கிரவுஞ்ச வெற்பைத் தகர்த்தும்,

சேறு ஆய சோரிபுக்கு அளக்கர் திட்டு எழ – உதிரச்சேறு சென்று கடலில் திட்டு உண்டாகவும், மாறா நிசாசர குலத்தை – மாறுபட்ட அசுரர் குலத்தை, இப்படி – இவ்வாறு, சீராவினால் அறுத்து அறுத்து ஒதுக்கிய – உடைவாளினால் அறுத்து அறுத்துத் தள்ளிய, பெருமாளே – பெருமை மிக்கவரே! ஆனாத ஞான புத்தியை கொடுத்ததும் – நீங்காது நிறைந்த ஞானத்துடன் கூடிய புத்தியைத் தந்ததையும், ஆராயு நூல்களின் கருத்து அளித்ததும் – ஆராய்வதற்குரிய அறிவு நூல்களின் உட்கருத்துக்களை அளித்ததையும், ஆதேச வாழ்வினில் பிரமித்து – திரிபுடைய வாழ்வை மெய்யென்று மயங்கி, இளைத்து உயிர் அழியாதே – இளைப்புற்று ஆவியானது அழிந்துபோகா வண்ணம், ஆசாபய உததியை கடக்க விட்டதும் – ஆசையாகிய நீர்க் கடலைத் தாண்டுமாறு செய்ததையும், வாசாம கோசரத்து இருத்துவித்ததும் – வாக்கும் மனமுங் கடந்த அதீத நிலையில் அடியேனை இருக்கவைத்ததையும், ஆபாதனேன் மிகப்ரசித்தி பெற்று – அசுத்தனாகிய சிறியேன் மிகவும் புகழினால் எங்கும் வெளிப்படும் தன்மையைப் பெற்று, இனிது உலகு ஏழும் யானாக – உலகம் ஏழும் யானாக இனிது விளங்க, நாம அற்புத திருப்புகழ் – அச்சமும் அற்புதமும் நிறைந்த திருப்புகழை, தேன் ஊற ஓதி – இன்பத் தேனூறுமாறு பாடி, எத்திசை புறத்தினும் ஏடு ஏவு ராஜ தத்தினை பணித்ததும் – எல்லாத் திசைகளிலும் அத்திருப்புகழ் ஏட்டினையனுப்பும் இராஜரீகத்தை எனக்குப் பணித்து அருளியதையும், இடர் ஆழி ஏறாத – துன்பக் கடலினின்றுங் கரையேறாமல் செய்வதாகிய, மா மலத்ரய – பெரிய மும்மலங்களும், குணத்ரய – முக்குணங்களும், நானா விகார புற்புத பிறப்பு அற – நாலா வகையான வேற்றுமைகளுடன் கூடிய நீர்க்குமிழிக்கு நிகராக பிறவிகளும் நீங்க, ஏது ஏமமாய் எனக்கு அனுக்கிர கித்ததும் – பரமகாரணமாகிய பாதுகாவலுடன் அடியேனுக்கு அருள்புரிந்ததையும், மறவேனே – ஒருபோதும் மறக்கமாட்டேன்.

## பொழிப்புரை

வாசுகி என்ற பெரிய பாம்பை நாணாக வலிமையுறக் கட்டியும், ஒப்பற்ற மாமேரு மலையை வில்லாகப் பிடித்தும், ஒப்பற்ற நாராயணமூர்த்தியை அம்பாகத் தொடுத்தும், அரக்கர்களின் தலைவர்களாகிய மூவர்கள் மட்டும் அழியாமல் பிழைக்கவும், மற்றைய பாதகர்களாகிய முப்புரவாசிகளாகிய அசுரர்கள்

வெந்து சாம்பலாகவும் முன்னாள் புன்னகை புரிந்த ஞான வடிவினராகிய சிவபெருமானது திருக்குமாரரே! இந்திரன் வளர்த்த கற்பகக் காவுடன் கூடிய பொன்னுலகத்திற்குத் தலைவரே! என்று துதி செய்த உத்தமர்களாகிய தேவர்கள் இனிது வாழும் பொருட்டு, வீரம் பொருந்திய திருவடியைச் சாராத சூரபன்மனைப் பிளந்தும், வீரவாகு தேவர் முதலியோர்கள் தன்னிடத்து அடங்கிய கிரவுஞ்ச மலையைத் தகர்த்தும், உதிரச்சேறு சென்று நீர்நிறைந்த கடலில் திட்டு உண்டாகவும், மாறுபட்ட அரக்கர் குலத்தை இவ்வாறு உடைவாளினால் அறுத்து அறுத்துத் தள்ளிய பெருமிதம் உடையவரே! நீங்காது நிறைந்த சிவஞானத்துடன் கூடிய புத்தியைத் தந்ததையும், ஆராயத்தக்க ஞான நூல்களின் உட்கருத்துக்களை அளித்ததையும், திரிபுடன் கூடிய வாழ்வினில் மயங்கி இளைத்து ஆவியழியா வண்ணம் ஆசைக் கடலைக் கடக்க அருளியதையும், வாக்குமனமும் அற்ற இடத்தில் நிலை நிற்கச் செய்ததையும், அசுத்தனாகிய அடியேன் மிகவும் புகழ் பெற்று இனிது உலகம் ஏழும் யானாகி நிற்க, அச்சமும் அற்புதமும் நிறைந்த திருப்புகழைப் பாடி எல்லாத் திசைகளிலும் அப்பாடலின் ஏட்டை ஏவும் அரசாட்சியைத் தந்ததும், துன்பக் கடலினின்றும் ஏறவொட்டாது தடுக்கும் மும்மலங்களும், முக்குணங்களும், பலவகையான வேற்றுமையுடன் கூடிய நீர்க்குமிழிக்கு நிகரான பிறப்பும் தொலைய பரம காரணமாகிய பாதுகாவலுடன் அடியேனுக்கு அருள் புரிந்ததையும் ஒருபோதும் மறவேன்.

## விரிவுரை

இளம் பூரணனது இன்னருளினை இனிது பெற்ற பெருந்தகை அருணகிரிநாதர். தாம் பெற்ற அருட்டிறத்தை அகிலவுலகமும் உணர ஓதுகின்ற திருப்புகழ் இது; அன்றியும், அதனையுணர்ந்து உலகினரை அவ்வருளைப் பெறுவதற்கு ஊக்கமுள்ளவராகச் செய்யும் கருணைத் திறமுமாகும்.

ஆனாத ஞான புத்தி:-

ஆனாமை - கொடாமை, குறையாமை, நீங்காமை.

ஆன்மா சித்துப் பொருள். சித்து - அறிவு. அவ்வறிவு அறிவிக்க அறிகின்ற அறிவு. அது குறைபாடுடையதும், காமக்ரோதங்களால் நீங்குவதுமாயுள்ளது.

*இறைவர் அறிவு வடிவானவர்; அறிவும் அறியாமையுங் கடந்த அறிவு அவரது திருமேனி. அத்தகைய பரம்பொரு ளாகிய முருகவேள் அருணகிரியாருக்கு தமது நிறைந்த அறிவை அருள்புரிந்தனர்.*

"யாமோ தியகல் வியுமெம் மறிவுந்
தாமே பெறவே லவர்தந் தது"

*என்கின்றார் கந்தரநுபூதியிலும்.*

*இங்கே புத்தியென்பது அந்தக்கரணங்களுள் ஒன்றான புத்தியன்று. ஞான புத்தியென்றது அறிவின் சிகரமாகிய மெய்யறிவு என்க.*

**ஆராயு நூல்களிற் கருத்தளித்ததும்:-**

*நூல் - அறிவைத் தருகின்ற நூல்கள் என்க.*

*மரவேலைபுரிவோன் எத்தனைக் கருவிகளிருப்பினும், முதலில் மரத்தில் நூல் தட்டியே தொழிலைத் தொடங்குவான். மரத்தின் கோணலை நூலால் அகற்றுகின்றனர். அதுபோல் நூலால் மனக்கோணலை யகற்ற வேண்டும். நூல் தட்டிக்கோணலை நீக்கிய மரம் சிறப்பாக நிழலில் பெரிய பெரிய கட்டிடங்களில் அமைந்து விளங்குகின்றது. நூல் தட்டிக் கோணல் நீங்காத மரம் விறகுத் தொட்டியில் வெயிலில் காய்ந்தும், மழையில் நனைந்தும் எரிக்கப்படுகின்றது.*

*அதுபோல், அறிவு நூல்களைக் கற்றவன், மற்றவர்களால் மதிக்கப்படுகின்றான். கல்லாதவன், மற்ற எல்லாம் இருந்தும், எல்லாராலும் இகழப்படுகின்றான்.*

உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா - மரத்தின்
கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு. *-நன்னூல்*

*ஆன்றோர்கள் ஆராய்கின்ற அறிவுநூல்களின் உண்மையுட் கருத்துக்களை முருகக் கடவுள் அருணகிரிநாதருக்கு உணர்த்தியருளினார்.*

"அறிவுமறி தத்துவமு மபரிமித வித்தைகளும்
அறியென இமைப்பொழுதில் வாழ்வித்த வேதியனும்"

*- வகுப்பு*

**ஆதேசவாழ்வினில் ப்ரமித்து:-**

ஆதேசம் - திரிபு.

"ஆதேச வாழ்வினை" என்பார் சிதம்பரம் திருப்புகழில்.

ஐம்பெரும் பூதங்களின் பரிணாமத்தால் ஆகியது இந்த உலகம் என்க. உலகவாழ்வு இன்பம்போல் தோன்றித் துன்பத்தைச் செய்வது, துன்பத்தைச் செய்யும் விளக்கை ஒரு கனியென விரும்பி வீழ்ந்து வேதனையடையும் விட்டிற் பூச்சியைப்போல், உயிர்த்தொகைகள் துன்பத்தை இன்பமாக எண்ணி மயங்குகின்றன.

**இளைத்து உயிர் அழியாதே:-**

தவநெறியை விடுத்து, அவநெறியை யடுத்து, அதில் உழைத்து உழைத்து, உடலும் உயிரும் இளப்புறுகின்றன. இறுதியில் அழிந்து ஒழிகின்றன.

**ஆசாபயோதியைக் கடக்கவிட்டதும்:-**

ஆசை- ஒரு கடல்போன்றது. கடல் கங்கு கரையற்றது. அதன் ஆழத்தையும் அகலத்தையும் நீளத்தையும் அறிந்தார்களில்லை. ஆசையே எல்லா இடர்களுக்கும் பரம காரணம். ஆசையைக் கடல் என்று தாயுமானாரும் அருளிச் செய்கின்றார்.

"ஆசைச் சுழற்கடலில் ஆழாமல் ஐயாநின்
நேசப் புணைத்தாள் நிறுத்தினால் ஆகாதோ"

மண்ணுலகமுற்றும் ஆள்கின்ற மன்னர்கள், அம்மட் டோடு அமையாது கடல்மீதும் தமது ஆணையைச் செலுத்த எண்ணி அமர் தொடுக்கின்றனர்.

குபேரனைப் போன்ற செல்வம் படைத்தவர்களும் இரசவாதஞ் செய்ய முயல்கின்றனர். கன்னம், கரவு, சூது, வாது, வஞ்சனைகள் செய்து, மேலும் மேலும் பொருளீட்ட முயல்கின்றனர்.

நீண்டநாள் வாழ்ந்தோர்களும், நான்குபேருக்குச் சுமையான இவ்வுடம்பை மேலும் சுமந்து அலைய எண்ணி காயகற்பந்தேடி அலைந்து திரிகின்றார்கள். ஆனால், எல்லாவற்றையும் நன்கு தீர ஆராய்ந்து பார்க்குங்கால் பசி தீர உண்பதும் உறங்குவதும் தவிர வேறு இல்லை. ஒருவனுக்கு எத்தனை மாடமாளிகைகள் இருப்பினும் அவன் படுக்குமிடம் 5 ½ அடி நீளந்தானே?

*ஒருவனுக்கு எத்தனை ஏக்கர் நிலங்கள் இருப்பினும் அவன் உண்பது காற்படியரிசி தானே? எத்தனை நூல்- துணி ஆலைகள் இருப்பினும் அவன் உடுப்பது நான்கு முழந்தானே?*

ஆசைக்கோ ரளவில்லை அகிலமெல் லாங்கட்டி
ஆளினுங் கடல்மீதி லே
ஆணைசெல வேநினைவர் அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்த பேரும்

நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்த பேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவர் எல்லாம்

யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவது மாக முடியும்
உள்ளதே போதும்நான் நான்எனக் குளறியே
ஒன்றைவிட் டொன்று பற்றிப்

பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையை அருள்வாய்
பார்க்குமிடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்த மே.

*- தாயுமானார்.*

"ஆசையறு மின்கள் ஆசையறு மின்கள்
ஈசனோ டாயினும் ஆசையறு மின்கள்" *- திருமூலர்*

*ஆசையாகிய பெருங்காற்றில் மனம் ஓர் இலவம்பஞ்சு போல் அகப்பட்டு அலைந்து அல்லல்படுகின்றது. அதனால் அழிந்தவர் அநந்தம். நிராசையின்றேல் தெய்வமுமில்லை. ஆதலின், ஆசையை மெல்ல மெல்ல அகற்ற முயலுதல் வேண்டும்.*

ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவுமன
தலையுங் காலம்
மோசம்வரும் இதனாலே கற்றதுங்கேட் டதுந்தூர்ந்து
முத்திக் கான
நேசமும்நல் வாசமும்போய்ப் புலனாயிற் கொடுமைபற்றி
நிற்பர் அந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசையின்றேல்
தெய்வம் உண்டோ?

*என்று மிகவும் அழகாகத் தாயுமானார் கூறியருளினார்.*

இந்த ஆசைக் கடலைக் கடத்தி அருணையடிகட்கு கந்தவேள் கருணை புரிந்தனர்.

வாசாமகோசரத் திருத்துவித்ததும்:-

வாசமாகோசரம்-வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதது; மனமும் வாக்கும் அற்ற இடத்திலே நிலைத்து நிற்பதுவே சமாதி நிலை.

"பகரொணாதது சேரவொணாதது
நினையொணாதது வானதயாபர
பதியதானச மாதிமநோலயம்"

- திருப்புகழ்.

"வாக்கால் மனத்தால் மதிப்பரியாய் நின்னருளை
நோக்காமல் நோக்கிநிற்கும் நுண்ணறிவைக் காண்பேனா"

- தாயுமானார்.

இந்த அரிய பெரிய நிலை கேவலம் கல்வியறிவினால் உண்டாவதன்று. இறையருள் துணைபுரியத் தவ வலிமையால் உண்டாவதென்று உணர்க.

வாக்கு மனமும் மவுனமுற எந்தைநின்னை
நோக்கும் மவுனமிந்த நூலறிவால் உண்டாமோ.

- தாயுமானார்.

ஆபாதனேன் மிகப்ரசித்தி பெற்று:-

ஆபாதன் - அசுத்தன், "ஆபாதனேனும் நாளும் நினை வது பெறவேணும்" என்பார் விராலிமலைத் திருப்புகழில்.

உலகமெல்லாம் புகழும் மிகப் பெரிய தகுதியை அடிகட்கு அருள்புரிந்தனர் அறுமுகக் கடவுள்.

உலகேழும் யானாக:-

இந்தச் சொற்றொடர் மிகவும் அருமையானது; இனிமை யானது. ஆழமும் அகலமும் உள்ளது. ஏழு உலகங்களிலுள்ள அசையும் பொருள்கள், அசையாத பொருள்கள் யாவும் தானாகக் கண்டு, எனது யான் என்ற எண்ணங்கள் நீங்கி, அகண்டா காரமாய் நிற்கும் நிலை என்க. இந் நிலை நின்றார்க்கு, இன்பம் துன்பம், விருப்பு வெறுப்பு, நன்மை தீமை, உறவு, பகை முதலியன இல்லை.

"எனதி யானும் வேறாக எவரும் யாதும் யானாகும்
இதய பாவ னாதீத மருள்வாயே" *- திருப்புகழ்*

யான்என தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகு புகும். *திருவள்ளுவர்*

நாம:-

*நாமம்– அச்சம். இமயமலையின் அடியில் இருந்து அம் மாமலையைக் கண்டார் அச்சம் எய்துவது போல், திருப்புகழின் ஆழத்தையும் சந்தபேதங்களையுங் கண்டு தமிழ்ப் புலவர்கள் அஞ்சுவர்.*

அற்புதத் திருப்புகழ்:-

*நடையழகு, தொடையழகு, பொருளழகு, சொல்லழகு, ஓசையழகு முதலிய சகல அழகுகளையும் உடையதாய், வேதாகம புராண இதிகாச சாரமாய், யோகஞான உட்பொருள்களை யுடையதாய், திருப்புகழ் விளங்குவதால் "அற்புதம் அற்புதம்" என்று அறிஞர்கள் விம்மிதம் உறுகின் றனர்.*

"பத்தர்க ணப்ரிய நிர்த்தந டித்திடு
பட்சிந டத்திய குகபூர்வ
பச்சிம தட்சிண உத்தர திக்குள
பத்தர்கள் அற்புத மெனவோதும்
சித்ரக வித்துவ சத்தமி குத்ததி
ருப்புகழ்" *- திருப்புகழ்*

"தொண்டத் தொகையி னுடன்கூடி
தொனிக்க இனிக்குந் திருப்புகழை"
*திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்.*

தேனூற ஓதி:-

*திருப்புகழ் சந்தச் செறிவுடன், சிந்தைக் கினிமை பயப்பதாய் தேனினும் இனியதாய் தித்திப்பது. அதன் இனிமையை அடியில் வரும் கவிராஜ பண்டாரத்தையா பாடியருளிய திருமலை முருகன் பிள்ளைத் தமிழின் அமுதவாக்கால் அறிக.*

"உதிருங் கனியை நறும்பாகில்
உடைத்துக் கலந்து தேனைவடித்
தூற்றி யமுதி னுடன்கூட்டி
ஒக்கக் குழைத்த ருசிபிறந்த
மதுரங் கனிந்த திருப்புகழ்"

**எத்திசைப்புறத்தினும் ஏடேவு ராஜதத்தினைப் பணித்ததும்:-**

அருணகிரிநாதர், திருப்புகழை இனிது பாடி, திசைகள் தோறும் உள்ள அடியவர் ஓதியுய்யுமாறு திருப்புகழை எழுதிய ஏடுகளை அனுப்பி கவிராஜ ராஜராய் விளங்கினார். அத்தகைமையைக் குகப்பெருமான் வழங்கினார்.

**புற்புதப் பிறப்பற :**

பிறவி நீர்க்குமிழிக்கு நிகராகும். தோன்றி மறையும் இயல்புடையது. இப் புன்பிறப்பை அடிகளுக்கு அகற்றி மீட்டிங்கு வாராத தன்மையை வடிவேலிறைவர் வழங்கினார்.

**எனக்கு அநுக்ரகித்ததும் மறவேனே:-**

"ஆண்டவனே! அடியேனுக்குத் தேவரீர் புரிந்த அருள் திறத்தை ஒருபோதும் மறவேன்" என்று அடிகள் பல இடங்களில் கூறி மகிழ்கின்றனர். அடியில் வரும் பாடலையுங் காண்க

"சித்ரக வித்துவ சத்த மிகுத்ததி
ருப்புக ழைச்சிறி தடியேனுஞ்
செப்பென வைத்துல கிற்பர வத்தெரி
சித்தஅ நுக்ரக மறவேனே"

**மாநாக நாண் வலுப்புறத்துவக்கி... சிரித்த வித்தகர்:-**

திரிபுர தகனகாலத்தில், தேவர்கள் சிவபெருமானுக்குத் தேரும் வில்லும் ஆயத்தஞ் செய்து தந்தார்கள்.

மேருகிரி வில்லாகவும், வாசுகி என்ற மாநாகம் நாணாகவும், திருமால் அம்பாகவும் அமைந்தார்கள்.

ஆனால், இறைவர் அவ்வில்லையும் கணையையும் பயன்படுத்தாமல் சிரித்தார். முப்புரமும் பொடிபட்டுச் சாம்பராயின. அதன் தலைவர்களும், சிவபக்தியினின்றுந் திறம்பாதவர்களும், சிவ சிந்தையுடன் வாழ்கின்றவர்களுமாகிய, தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்ற மூன்று அரக்கர்கள் மட்டும் எரியாமல் உய்வு பெற்றர்கள். ஏனோர்கள் எரிந்து ஒழிந்தார்கள்.

**தேநாயக:-**

தேசம் என்பது தேம் என்று குறுகியது. வலன் என்ற அசுரனைக் கொன்றதனால் இந்திரன் வலாரி எனப் பெற்றான்.

*அந்த இந்திரன் வளர்த்த கற்பக வனத்துடன் கூடிய அமர லோகத்திற்குத் தலைவர் முருகக் கடவுள்.*

**சீரா:-**

*சீரா என்பது உடைவாள்.*
*அடியில் வருங் கந்தரலங்காரப் பாடலாலும் அறிக.*

தாரா கணமெனுந் தாய்மா ரறுவர் தருமுலைப்பால்
ஆரா துமைமுலைப் பாலுண்ட பாலன் அரையிற்கட்டும்
சீராவும் கையில் சிறுவாளும் வேலும்என் சிந்தையவே
வாரா தகல்அந்த காவந்த போதுயிர் வாங்குவனே.

## கருத்துரை

*சிவ குமாரரே! அசுரகுலகாலரே! தேவரீர் அடியேனுக்குச் செய்த திருவருளை ஒருபோதும் மறவேன்.*

## 8

இரவொ டும்பக லேமா றாதே
அநுதி னந்துய ரோயா தேயே
யெரியு முந்தியி னாலே மாலே — பெரிதாகி

இரைகொ ளும்படி யூடே பாடே
மிகுதி கொண்டொழி யாதே வாதே
யிடைக ளின்சில நாளே போயே — வயதாகி

நரைக ளும்பெரி தாயே போயே
கிழவ னென்றொரு பேரே சார்வே
நடைக ளும்பல தாறே மாறே — விழலாகி

நயன முந்தெரி யாதே போனால்
விடிவ தென்றடி யேனே தானே
நடன குஞ்சித வீடே கூடா — தழிவேனோ

திருந டம்புரி தாளீ தூளீ
மகர குண்டலி மாரீ சூரீ
திரிபு ரந்தழ லேவீ சார்வீ — யபிராமி

சிவனி டந்தரி நீலீ சூலீ
கவுரி பஞ்சவி யாயீ மாயீ
சிலைபெ ணம்பிகை வாலா சீலா — அருள்பாலா

அரவ கிண்கிணி வீரா தீரா
கிரிபு ரந்தொளிர் நாதா பாதா
அழகி ளங்குற மானார் தேனார் மணவாளா

அரிய ரன்பிர மாவோ டேமூ
வகைய ரிந்திர கோமா னீள்வா
னமரர் கந்தரு வானோ ரேனோர் பெருமாளே

## பதவுரை

*திருநடம்புரி தாளீ- அழகிய நடனம்புரிகின்ற திருவடி களை யுடையவரும், தூளீ - திருநீற்றுப் பொடியை அணிந்தவரும், மகர குண்டலி- மகர மீன்வடிவிற் செய்த குழையைக் காதில் தரித்தவரும், மாரீ- துர்க்கையாக விளங்குபவரும், சூரீ- சூரத் தன்மையுடையவரும், திரிபுரம் தழல் ஏவீ- முப்புரங்களின் மீது நெருப்பை ஏவியவரும், சார்வீ- ஆன்மாக்களுக்குப் புகலிடமான வரும், அபிராமி- அழகுடையவரும், சிவன் இடந்தரி- சிவபெரு மானுடைய இடப்புறத்தைத் தரித்தவரும், நீலீ- நீலநிறமுடைய வரும், சூலீ- சூலப்படையை ஏந்தியவரும், கவுரி- பொன்னிற முடையவரும், பஞ்சவி- பாண்டியன் மகளாக வந்தவரும், ஆயீ- உலகுக்கு அன்னையாரும், மாயீ - மாயைக்கு முதல்வியும், சிவை - நன்மையைச் செய்பவரும், பெண் அம்பிகை - அம்பிகை மாதாவும், வாலா - வாலப்பருவ முள்ளவரும், சீலா - சீலம் பொருந்தியவருமாகிய உமையம்மையார், அருள்பாலா - அருளிய புதல்வரே! அரவ கிண்கிணி வீரா - பாம்புகளைக் கிண்கிணி யாகப் பாதத்தில் தரித்த வீரரே! தீரா - தைரியமுள்ளவரே! கிரிபுரந்து ஒளிர் நாதா - மலைகளைக் காத்து ஒளி செய்கின்ற தலைவரே! பாதா - திருவடிகளை யுடையவரே! அழகு இளம் குறமானார் - அழகும் இளமையும் உடைய வள்ளியம்மை யாருடைய, தேன் ஆர் மணவாளா - இனிமை நிறைந்த கணவரே! அரி அரன்பிரமாவோடு மூவகையர் - மால் உருத்திரன் பிரமன் என்ற மும்மூர்த்திகள், இந்திரகோமான் - இந்திரனாகிய அரசன், நீள்வான் அமரர் - நீண்ட வானுலக வாசிகளாகிய தேவர்கள், கந்தருவானோர் - காந்தருவர்கள், ஏனோர் - ஏனையோர்கள் யாவருக்கும், பெருமாளே - பெருந்தலைவரே! இரவொடும் பகல் - இரவும் பகலும், மாறாதே - மாறாமல், அநுதினம் துயர் ஓயாதே - நாடோறும் துன்பம் ஓயாமல் (ஏ.அசை) எரியும் உந்தியினாலே, மாலே பெரிதாகி - எரிகின்ற வயிற்றினால் மயக்கம் பெரியதாகி,*

இரைகொளும்படி உணவு செய்யும் பொருட்டு, ஊடே - இடையில், பாடே மிகுதிகொண்டு - உழைப்பு மிகவும் அடைந்த, ஒழியாதே வாதே - வாதை ஒழியாமல் எய்தி, இடைகளின் சில நாளே போயே - இடையிலே சிற்சில நாள்கள் கழிந்து, வயது ஆகி கிழத்தனத்தையடைந்து, நரைகளும் பெரிதாயே போயே - நரைகள் மிகவும் வந்து இளமை கழிந்து, கிழவன் என்று ஒருபேரே சார்வேன் - கிழவன் என்ற ஒருபேரும் அடைந்தவனாகி, நடைகளும் பல தாறேமாறே விழலாகி - நடைகள் பலப்பல தாறுமறாக நடந்து வீழ்தலாகி, நயனமும் தெரியாதேபோனால் - கண்களும் தெரியாமல் போகுமானால், விடிவதென்று - எனது ஆணவ இருள் என்றுதான் நீங்குவது? அடியேன்- தேவரீருடைய அடிமையாகிய நான், நடனகுஞ்சித வீடே கூடாது அழிவேனோ - திருநடம்புரிகின்ற வளைந்த திருவடியாகிய முத்தியைச்சேராது அழிவேனோ? (அழியமாட்டேன்)

## பொழிப்புரை

அழகிய நடனஞ் செய்யும் திருவடியையுடையவரும், திருநீற்றைத் தரித்திருப்பவரும், மகர குண்டலத்தை யணிந்தவரும், துர்க்காதேவியும், சூரத்தன்மையுள்ளவரும், முப்புரத்தை எரித்தவரும், உயிர்களுக்குப் புகலிடமானவரும், அழகியவரும், சிவபெருமானுடைய இடப்புறத்தைத் தரித்தவரும், நீல நிறமுடையவரும், திரிசூலத்தை ஏந்தியவரும், பொன்னிறமுடைய வரும், பாண்டியனுக்குப் புதல்வியாக வந்தவரும், உலக மாதாவும், மாயையின் முதல்வியும், நன்மையைச் செய்பவரும், பெண்மையுடைய அம்பிகையும், இளமையும் சீலமும் உடைய வரும் ஆகிய பார்வதியம்மையாரது திருக்குமாரரே! பாம்புகளைப் பாதத்தில் கிண்கிணியாகத் தரித்த வீரரே! தீரரே! மலைகளைக் காத்து அருள்புரிந்து ஒளிர்கின்ற தலைவரே! திருவடியையுடைய வரே! அழகும் இளமையும் பூண்ட வள்ளிதேவியின் இனிய மணவாளரே! திருமால் உருத்திரன் பிரமன் இந்திரன் இமையவர் கந்தருவர் முதலிய அனைவருக்கும் பெருந்தலைவரே! இரவும் பகலும் மாறால் என்றும் துன்பம் ஒழியாமல், அழல்போல் எரிகின்ற வயிற்றினால் பெரிய மயக்கமுற்று, உணவை அப்போதைக்கு அப்போது உண்பதற்கு, பெருந்துன்பமுற்று, இடையிடையே நாள்கள் பயனின்றி கழிந்து தளர்ந்த வயதையடைந்து, உடம்பெங்கும் நரைத்து, கிழவன் என்ற பெயரையடைந்து தாறுமாறான நடையைக் கொண்டு தள்ளாடி வீழ்ந்து, கண்களுந்

*தெரியாமல் இருண்டு போகுமானால், அடியேனுடைய ஆணவ இருள் என்று தான் நீங்குவது? ஆதலின், அடியேன் உமது நடன மிடுந் திருவடியைக் கூடாது அழியலாமோ?(அழியமாட்டேன்)*

## விரிவுரை

**இரவொடும் பகலே மாறாதே:-**

*ஏ என்பதை அசையாகக் கொண்டு மாறாதே. மாறாமல் என்று பொருள் செய்யப் பெற்றது. ஏம் மாறாதே என்று பிரித்து, ஏம்- இன்பம். காம இன்பத்தினை மாறாது துய்த்து என்றும் பொருள் கொள்ளலாம்.*

**எரியும் உந்தியினாலே:-**

*வயிற்றில் பசித்தீ கொழுந்துவிட்டெரியும். அதை அடிக்கடி உணவினால் தணிக்க வேண்டும். நெருப்பைப் பன்னீர் விட்டுத்தான் அவிக்கவேண்டும் என்ற நியதியில்லை. தண்ணீரை விட்டும் அவிக்கலாம். அதுபோல் பசித்தீ எழுந்தபோது கஞ்சி, கீரை முதலிய ஏதேனும் ஒன்றினால் அவிக்கலாம். மிகுந்த சுவையுள்ள பொருள்களால்தான் அவிக்க வேண்டும் என்று, நாவிற்கு அடிமையாகி மீன், உணவின் நசையினால் சதா உழன்று உழன்று முடிவில் தூண்டில் உணவினால் அழிவது போல் மக்கள் அழியக்கூடாது.*

"கனியேனும் வறியசெங் காயேனும் உதிர்சருகு
கந்தமூ லங்க ளேனுங்
கனல்வாதை வந்தெய்தின் அள்ளிப்பு சித்துநான்
கண்மூடி மௌனி யாகித்
தனியே யிருப்பதற் கெண்ணினேன்" *- தாயுமானார்*

**மாலே பெரிதாகி:-**

*மால்- மயக்கம். பசிக்கொடுமையால் மயக்கமுண்டாகும். "அழிபசி" என்பார் திருவள்ளுவர். எல்லா நன்மைகளும் அழியவருவது பசி என்பார் பரிமேலழகர்.*

குடிப்பிறப் பழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவி. *- மணிமேகலை*

**இரை கொளும்படி:-**

*இரை- பறவை விலங்கு முதலியவற்றின் உணவு. மனிதன் உணவு நசையில் மிகவும் ஈடுபடக் கூடாது. ஏனைய உயிர்கள் இடையறாது உணவை நாடுவதே வேலையாக உழலும். பெரும் படியாக உணவை நாடுவதனால் மனிதன் விலங்குபோலாகின் றான்.*

இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய் - *திருக்குறள்*

*சிலர் விலங்குபோல் நிரம்ப உண்டு நோய்வாய்ப்பட்டு வருந்துவர்.*

*பசி வந்தபின் கையை வாயிடங் கொண்டுபோக வேண்டும்.*

*பசியடங்குமுன் கையை வாயைவிட்டு எடுத்துவிட வேண்டும்.*

*உடம்பை நெடுநாள் வைத்திருக்க விரும்புவோர் உணவை அளவறிந்து, உடம்புக்கு ஏற்றதாக உண்ணுதல்வேண்டும். மேல்மாடியேறுவதற்கு ஏணி எத்துணை இன்றியமையாததோ அத்துணை யின்றியமையாதது முத்தி வீடு விரும்புவோருக்கு இந்த உடம்பு. மாடிமீது ஏறி விட்டவன் ஏணியை விரும்பாததுபோல் முத்தி நலம் பெற்றவன் இவ்வுடம்பை விரும்பாதவனாவான்.*

அற்றா லளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு. - *திருக்குறள்*

**ஊடே பாடே மிகுதிகொண்டு:-**

*ஊடு-நடு. பாடு-உழைப்பு.*

*ஓயாது உழைத்து உழைத்து மக்கள் உழல்வர். கேவலம் இந்த உடம்பையே மிகப் பெரிதாகக் கருதி, அதனுள் உறையும் உயிரையும், உயிர்க்குள் உறையும் இறையையுங் கருதாது, உடம்பை வளர்ப்பதற்கே முழுநேரமுங் கழித்துக் கண்ணுங்கருத்துமாக உடம்புக்கு உறுதுணையாய மனைமக்கள் சுற்றத்தை மதித்து மாந்தர் அவமே கழிந்து உழன்று திரிவர்.*

அவல வயிற்றை வளர்ப்பதற்கே - *திருவருட்பா*

**ஒழியாதே வாதே:-**

*வாதை என்பது வாதே என்று நீண்டது.*

*வாதை-துன்பம். கருவுற்றநாள் தொட்டு, உடம்புடன் வாழ்கின்ற காலம் முழுவதும் ஒழியாத துன்பந்தான். இன்பமென்பது அணுத்துணையும் இல்லை.*

*இன்பவடிவினன் இறைவன் ஒருவனே. அப் பரமபதியைச் சார்ந்தாலொழிய துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் எய்தா.*

சிலநாளே போயே வயதாகி:-

*வீணாக வாணாள் கழிந்து முதுமைப் பருவம் எய்துகின்றது. இழந்தால் பெறமுடியாதது இளமைப் பருவம் ஒன்றேயாம்.*

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே- ஒலஞ்செய்
துற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
குற்றாலத் தீசனையே கூறு. *- பட்டினத்தடிகள்*

'இளமை கிழம்படுமுன் பதம் பெற அருள்வாயே"

*- திருப்புகழ்*

நரைகளும் பெரிதாயே:-

*எல்லாப் பிறப்புகளினும் மனிதப் பிறப்பு மிகவும் மேலானது. அத்தகைய மனிதப் பிறப்புக்கு நரையை இறைவன் வைத்திருக்கின்றான். காக்கை, யானை, பன்றி முதலியவைகட்கு நரையில்லை. அவைகள் உண்ணவும் உறங்குவதற்கும் மட்டுமே உரியன. மனிதப் பிறப்பு அரிய பெரிய தவஞ் செய்து பரம்பொருளை யடைவதற்குரியது. அதனை மறந்திருப்பவர்க்கு நினைவுறுத்தும் பொருட்டே இறைவன் நரையை மக்கட்கு வழங்கியுள்ளான். நரைக்கத் தொடங்கியதிலிருந்தாவது, சிறிது தியானநெறியில் நின்று உயிர்க்கு உறுதி தேடவேண்டும்.*

"நரைவரும் என்றஞ்சி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார்"

*- நாலடியார்*

கிழவனென்றொரு பேரே சார்வேன்:-

*குழந்தை, குமரன் என்ற பேர்கள் நீங்கிக் கிழவன், கிழப்பயல், கிழப்பிணம் என்று கண்டவர் இகழ்வர்.*

நடைகளும் பல தாறே மாறே விழலாகி:-

*இளமையில் பலப்பல விதமாக அழகுபெற நடந்த நடைகள்*

*நீங்கி தடுமாற்றமான நடை முதுமையில் வருகின்றது.*

"மலர்க்க ணண்டிரு ளாகியு மேநடை தடுமாறி" - *திருப்புகழ்*

**விடிவதென்று :-**

*ஆணவ இருள்மூடி மிகப்பயங்கரமான இரவில் உயிர்கள் உலாவிக்கொண்டிருக்கின்றன; ஞானபானுவாகிய முருகவேள் நீலக்கடலாகிய மயிலின்மீது தோன்றினால் ஆணவ இருள் விடிந்து இன்ப ஒளி தோன்றும்.*

**நடன குஞ்சித வீடு:-**

*மன்றுதோறாடிய வள்ளல் காமுறக் குமரவேள் குன்று தோறாடுகின்றார். இளங்குமரன் எப்போதும் நடனம் புரிந்து ஆன்மாக்களை உய்விக்கின்றான். அவன் ஆடுவதனால் அகிலாண்டங்களும் ஆடுகின்றன. அவன் ஏறிவரும் மயிலும் ஆடுகின்றது. அத் திருவடியே ஆன்மாக்கட்குப் பற்றுக்கோடு. கருணை பொழியும். அப்பாத மலரைச் சார்ந்த வுயிர்கள் பிறவித் துன்பத்தினின்றும் நீங்குகின்றன.*

*குஞ்சிதம் - வளைவு.*

*முருகக் கடவுளின் திருநடனச் சிறப்பை அடிகள் அடியிற் கண்ட திருப்புகழில் அழகாகக் கூறுமாறுங் காண்க.*

தாத தத்தத தாதத தாதத
தூது துத்துது தூதுது தூதுது
சாச சச்சச சாசச சாசச சசசாச

தாட டட்டட டாடட டாடட
டுடு டுட்டுடு டூடுடு டூடுடு
தாடி டிட்டிடி டீடிடி டீடிடி டிடிடீடி

தீதி தித்திதி தீதிதி தீதிதி
தோதி குத்திகு தோதிகு தோதிகு
சேகு செக்குகு சேகுகு சேகுகு செகுசேகு

சேயெ னப்பல ராடிட மாகலை
ஆயு முத்தமர் கூறிடும் வாசக
சேகு சித்திர மாகநி ணாடிய பெருமாளே.

**திருநடம்புரி தாளீ:-**

*முருகன் ஆடுகின்றான்; அக்கருணைக் கடலைப் பெற்ற தாய் அம்பிகையும் ஆடுகின்றாள். தாயைப்போல் குழந்தையும் ஆடுவது*

இயல்புதானே.

**தூளீ :-**

தூள் – திருநீறு.

வினைகளை நீக்குவதால் இப்பெயர் பெற்றது. குழந்தை களின் நோய்தீரத் தாய் மருந்துண்டு பத்தியம் இருப்பதுபோல் தன்னை வணங்கும் உயிர்களின் வினைதீரும் பொருட்டு அன்னை அம்பிகை திருநீற்றைத் தரிக்கின்றனள்.

முத்தியைத் தரவல்லதும், முனிவரர்கள் அணிவதும், உண்மைப் பொருளாக விளங்குவதும், உத்தமர்களால் புகழப் பெற்றதும், அன்பை விளைவிப்பதும், பரவுவதற்கு இனிமை யானதும், எண்பெருஞ் சித்திகளைத் தருவதும் திருநீறு என்று உணர்க.

முத்தி தருவது நீறு முநிவர் அணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே.

எத்தனையோ பிறவிகளிற் செய்த நல்வினைப்பயனாக உயிர்கள் இப்பரதகண்டத்தில் தோன்றுகின்றன. மேலும் பல பிறப்புக்களிற் செய்த புண்ணியவசத்தினால் தென்னாட்டில் தோன்றுகின்றன. அப்படிப் பிறந்து பலப்பல பிறப்புக்களில் செய்த அறத்தின் பயனாக திருநீற்றைப் பூசும் மேலான பிறப்பு எய்துகின்றது. அவ்வாறு எய்த இவ்வரிய தருணத்தில் திருநீற்றைப் பொன்னேபோல் போற்றிப் பூசிச் சிவனருளைப்பெற முயல வேண்டும். திருநீற்றைப் பூசும் சைவ சமயத்திற் பிறந்தும் இப் புண்ணிய திருநீற்றைப் பூசாது கெடும் மாந்தரின் மதிதான் என்னே? அவர்கள் அடையும் கதிதான் யாதோ?

பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோ டிறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியி னான்தன் தொழும்பரோ டழுந்தி யம்மால்
திணிநிலம் பிளந்தும் காணாச் சேவடி பரவி வெண்ணீ(று)
அணிகிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே.

என்பார் மாணிக்கவாசகர்.

"அருள்செய் நீறிடார் அமுதுனக் கிடினும்
அம்ம லத்தினை அருந்துதல் ஒழிக"

என்பார் இராமலிங்க அடிகள்.

**சார்வீ :-**

*சார்வு - புகலிடம், துணை, ஆதாரம்:*

*அகிலாண்ட கோடியீன்ற அன்னையாகிய உமையம்மையார் உயிர்களுக்கெல்லாம் புகலிடமாக அருள்பாலிக்கின்றார்.*

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லா மழை. - *திருக்குறள்*

*சார்வு என்பது இங்குத் துணையென்ற பொருளில் வந்தது. இனி புகலிடம் என்ற பொருளில் புறநானூறு, 205ம் செய்யுளில் பெருந்தலைச் சாத்தனார் "உறுவர்செல் சார்வாகி" என கூறு மாறுங் காண்க.*

**அபிராமி :-**

*அபிராமம் - அழகு.*

*திருக்கடவூரில் எழுந்தருளியுள்ள அம்பிகைக்கு அபிராமி என்ற திருப்பெயர் வழங்குகின்றது.*

தனந்தரும் கல்வி தரும்ஒரு நாளுந் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவு தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாந் தரும்அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாள்அபி ராமி கடைக்கண்களே.

**பஞ்சவி :-**

*பஞ்சவன் - பாண்டியன்.*

*மலையத்துவச பாண்டியனுடைய மாப்பெருந் தவத்தினால், அவன் புரிந்த வேள்வியில் உமாதேவியார் திருவவதாரம் புரிந்தனர்.*

**அரியரன்.........ஏனோர் பெருமாளே:-**

*மூவர், தேவர், இயக்கர், பூதர், சித்தர், முனிவர் ஆகிய எவருக்குந் தனிப்பெருந் தலைவராக விளங்குபவர் முருகக் கடவுள் என்க.*

"மிருத்தனும் பங்கய னலர்க்கணன் சங்கரர்
விதித்தெனுங் கும்பிடு கந்தவேளே"

"படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்

பணித்துத் தம்பயந் தணித்துச் சந்ததம்
பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா”

## கருத்துரை

*பார்வதியம்மையாரது பாலரே! வள்ளிமணவாளரே! மூவர் தேவாதிகள் தலைவரே! அடியேன் கிழத்தனத்தைக் கொண்டு அழியாமல் முத்திவீடு சேரத் திருவருள் புரிவீர்.*

## 9

உமையெனு மயில்பெற்ற மயில்வா கனனே
வனிதைய ரறுவர்க்கு மொருபா லகனே
உளமுரு கியபத்த ருறவே மறவே னெனவோதி

உருகுத லொருசற்று மறியேன் வறியேன்
இருவினை யிடையிட்ட கொடியே னடியேன்
உணர்விலி பெறமுத்தி தருவாய் துகிர்வாய் மடமாதர்

அமையென வளர்சித்ர இருதோள் தழுவா
அமுதென மதுரித்த கனிவா யணுகா
அமளியி லணைவுற்ற அநுரா கமகோ ததிமூழ்கி

அநவர தமுமுற்ற மணிமா முலைதோய்
கலவியி னலமற்ப சுகமா கினுமா
அநுபவ மிதுசற்றும் விடவோ இயலா தியலாதே

தமனிய குலசக்ர கிரியோ கடலோ
விடமென முடிவைத்த முதுபே ரிருளோ
தனுவென முனையிட்ட கொலைமூ விலைவேல்
கொடுபார்வை

தழலெழ வருமுக்ர எமபா தகனோ
யுகஇறு தியில்மிக்க வடவா னலமோ
தனியிவ னெனமிக்க பிசிதா சனபூ பதியாகி

இமையவ ரனைவர்க்கும் அறையோ அறையோ
அரியயன் முழுதுக்கும் அறையோ அறையோ
எழுபுவி யுலகுக்கும் அறையோ அறையோ
பொரவாரும்

எனவரு மொருதுட்டன் முறையோ முறையோ
வடகுல கிரியெட்டும் அபிதா அபிதா
எனவொரு அயில்தொட்ட அரசே யிமையோர்
பெருமாளே.

## பதவுரை

குலசக்ர தமனியே கிரியோ - மேலானவட்டமாக இருக்கும் - பொன்மயமான மேருமலையோ என்றும், விடம் என முடி வைத்த முது பெரு இருளோ - ஆலாலவிடம் என்று இறுதியைச் செய்யும் பழமையான பெரிய இருளோ என்றும், தனு என முனையிட்ட - வில்லைப்போல் வளைத்து கூர்மை செய்யப் பெற்ற, கொலைமூ இலைவேல் கொடு - கொலை செய்யவல்ல மூன்று இலைகளுடன் கூடிய சூலத்தை ஏந்தி, பார்வை தழல் எழவரும் உக்ர எமபாதகனோ - பார்வையில் நெருப்புப் பொறி பரக்க வரும் வேகமுள்ள இயமனாகிய பாவியோ என்றும், யுக இறுதியில் மிக்க வட அனலமோ - யுகாந்தத்தில் பொங்கியெழும் வடவைத்தீயோ என்றும், தனி இவன் என - இவன் ஒப்பற்றவன் என்றும் கண்டவர் கூறும்படி, மிக்க பிசித அசன பூபதியாகி - மிகுந்த மாமிச உணவை யுண்ணும் அரக்கர்கட்கு அரசனாகி, இமையவர் அனைவர்க்கும் அறையோ அறையோ - தேவர்கள் யாவர்கட்கும் அறையோ அறையோ என்றும், அரி அயன் முழுதுக்கும் அறையோ அறையோ - நான்முகன், நாரணன் முதலிய தேவர் தலைவர்கட்கும் அறையோ அறையோ என்றும், எழுபுவி உலகுக்கும் அறையோ அறையோ - ஏழுவகைப்பட்ட உலகங்கட்கும் அறையோ அறையோ என்றும்கூறி, பொரவாரும் எனவரும் ஒரு துட்டன் - போர் செய்ய வாருங்கள் என்று அறைகூவி அழைத்துக்கொண்டு வந்த துட்டனாகிய சூரபன்மன், முறையோ முறையோ - முறையோ முறையோ என்று அலறவும், வடகுலகிரி எட்டும் அபிதா அபிதா என - வடதிசையில் உள்ள மேலான மலைகள் எட்டும் முறையிட்டு அலறவும், ஒரு அயில் தொட்ட அரசே - ஒப்பற்ற வேலாயுதத்தை விடுத்தருளிய தலைவரே! இமையோர் பெருமாளே - தேவர்கள் போற்றும் பெருமை மிக்கவரே! மடமாதர் - அறியாமையோடு கூடிய பெண்களது, அமை என வளர் சித்ர இருதோள் தழுவா - மூங்கில்போல வளர்கின்ற அழகிய இரண்டு தோள்களையும் தழுவி, அமுது என மதுரித்த கனிவாய் அணுகா - அமுதம் என்று இனிக்கின்ற கனிபோன்ற அதரத்தை அணுகி, அமளியில் அணைவுற்ற

அநுராக மக உததி மூழ்கி - படுக்கையில் சேரும் பெரிய ஆசையாகிய பெருங்கடலில் முழுகி, அநவரதமும் உள்ள மணிமா முலைதோய் - நாடோறும் பொருந்திய மணிகளுடன் கூடிய பெரிய தனபாரங்களுடன் சேரும், கலவியின் நலம் அற்பசுகமாகினும் - கலவியின் இன்பம் மிகவும் அற்பசுக மாக இருப்பினும், மாஅனுபவம் இது - இது பெரிய அநுபவமாகிவிட்டது, சற்றும் விடவோ இயலாது இயலாது - இதனைச் சிறிதும் விட்டு ஒழிக்க இயலாமல் இருக் கின்றது, உமை எனும் மயில் பெற்ற மயில்வாகனனே - உமாதேவியார் என்ற மயில்போன்ற மரகதவல்லியார் பெற்ற மயில்வாகனக் கடவுளே! வனிதையர் அறுவர்க்கும் ஒரு பாலகனே - கார்த்திகைப் பெண்கள் ஆறு பேர்கட்கும் ஒரு குழந்தையாக வந்தவரே! உளம் உருகிய பக்தர் உறவே - உள்ளம் உருகி வழிபடும் அடியார்கட்கு உறவாகியவரே! மறவேன் என ஓதி உருகுதல் ஒரு சற்றும் அறியேன் - தேவரீரை ஒருபோதும் மறவேன் என்று கூறி உருகுந் தன்மை ஒரு சிறிதும் அறிந்தேனில்லை; இருவினை இடை யிட்ட கொடியேன் - நல்வினை தீவினை என்ற இரண்டிற் கும் இடையில் இடப்பட்ட கொடியவன்; அடியேன் - அடிமையேன்; உணர்வு இலி பெற - நல்லுணர்வு இல்லாத வனாகிய நாயினேன் பெறுமாறு, முத்தி தருவாய் - முத்தியைத் தந்தருளுவாய்.

## பொழிப்புரை

சிறந்த வட்டவடிவாகிய பொன்மேருமலையோ? ஆலால நஞ்சினைப்போல் முடிவைச் செய்யும் பழைய பெரிய இருளோ? வில்லைப்போல் வளைத்து கூர்மை செய்யப்பட்ட கொலைக் கருவியாகிய மூவிலைச் சூலத்தைத் தாங்கிவரும், அனற்பொறி பரக்கும் கொடிய பார்வையுடைய இயமனாகிய பாதகனோ? உகாந்தத்தில் எழும் வடவைத் தீயோ? என்று ஐயுற்றுக் கூற, மிகுந்த புலால் உணவை யுண்ணும் அசுரர் தலைவனாகி, அமரர்கள் அனைவர்கட்கும் அறையோ அறையோ என்றும், மால் பிரமன் முதலியவர்கட்கும் அறையோ அறையோ என்றும் உலகம் ஏழுக்கும் அறையோ அறையோ என்றும், போர் செய்ய வாருங்கள் என்று கூவியழைத்து வரும் ஒப்பற்ற துட்டனாகிய சூரபன்மன் முறையோ முறையோ என்று அலறவும், வடக்கேயுள்ள குலமலைகள் எட்டும் கதறவும், ஒப்பற்ற வேற்படையை விடுத்தருளிய தேவர் போற்றும் பெருமிதம்

உடையவரே! அறியாமையுடைய அரிவையரது மூங்கில் போன்ற அழகிய தோள்களைத் தழுவி, அமுதம்போல் இனிக்கும் அதரத்தை அணுகி, படுக்கையில் சேரும் பெரிய ஆசையாகிய கடலில் முழுகி, நாடோறும் மணிகள் பொருந்திய தனங்களுடன் பொருந்தும் கலவியின்பம் மிகவும் அற்ப சுகமாயினும், நீண்ட அநுபவமாக வந்தது. ஆதலின், இதனை விடுவது அரிதாக இருக்கின்றது. மயில் போன்ற உமையம்மையார் பெற்ற மயில் வாகனரே! கார்த்திகை மாதர் அறுவர்கட்கும் ஒரு குமாரனாக வந்தவரே! உள்ளம் உருகி வழிபடும் அடியவர்க்கு உறவே! உம்மை ஒருபோதும் மறக்கமாட்டேன் என்று கூறி உருகுந் தன்மை ஒரு சிறிதும் அறிந்தேனில்லை; இருவினைகளின் இடையில் இடப்பட்ட கொடியவன்; அடியேன் நல்லுணர்வு இல்லாதவன்; எனினும் நாயினேன் பெற்றுய்ய முத்தியைத் தந்து அருள்புரிவீர்.

## விரிவுரை

**உமையெனு மயில்பெற்ற மயில் வாகனனே:-**

உமா என்ற வடசொல் தமிழில் உமை என்று வந்தது. ஆகார ஈறு தமிழில் இன்மையால் ஐகார ஈறு பெற்றது. உ-ம-அ என்ற மூன்று எழுத்துக்களும் இணைந்து உமா என்று ஆயிற்று. உ என்ற எழுத்து அளித்தலையும், ம என்ற எழுத்து அழித்தலையும், அ என்ற எழுத்து ஆக்கலையும் செய்யும். அம்பிகை பொதுவே முத்தொழிலுக்கும் உரியவராக இருப்பினும் சிறப்பாக அளித்தலுக்கு உரியவராதலின் உகர எழுத்தை முதலாகக் கொண்டு உமா என்று மறைகளால் அழைக்கப்படுகின்றனர்.

மயில் உருவம் எடுத்து அம்பிகை அரனாரைப் பூசித்தனர். அவ்வாறு வழிபட்ட திருத்தலம் மயிலாப்பூர் என்று இன்று வழங்குகின்றது. திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணுருவாக்கிய அருமைத் திருத்தலம். அதனால், மயில் என்று கூறியருளினார்.

மயில் போன்ற சாயலுடன் கூடிய திருமேனியுடையவர் ஆதலின் அம்பிகையை மயில் என்று கூறினார் எனினும் அமையும்.

இனி, மயில் மழைமுகிலைக் கண்டு மகிழ்வதுபோல், அம்பிகை அருள்மழை பொழியும் முக்கண்ணராகிய முகிலைக்

கண்டு மகிழ்பவர் ஆதலின் மயில் என்று உருவகம் புரிந்தனர்.

மயில் பச்சை நிறம்; பார்வதி தேவியும் பச்சை நிறம்.

மயில் மலையில் வாழும், இமயவல்லியாம் உமையம்மையும் மலைவளர் காதலி.

**மயில்வாகனனே :-**

அயிலேந்தும் பெருமான் மயிலேந்த வந்து அடியவர்க்கு அருள்புரிவார்.

உலகங்களையெல்லாம் ஒரு நொடிப்பொழுதுக்குள் வலம் வந்த அதிவேகமும் ஆற்றலும் அமைந்தது மயில் வாகனம் ஆதலின், அதிவிரைவில் வந்து அடியார்களது அல்லலை அகற்றுவார் என்பது குறிப்பு.

வேதம், ஆகமம், புராணம், இதிகாசம், மூவர், தேவர், முனிவர், சித்தர், முத்தர் முதலிய ஏவருக்குங் கிடைக்கப் பெறாத எந்தை கந்தவேள் திருவடித் தாமரை எப்பொழுதும் தீண்டப் பெறும் பெருந்தவமுடையது மயில் என்று அறிக.

மயிலின் பேராற்றலை அருணகிரிநாதர் மயில் விருத்தத்தில் கூறும் அழகை அறிந்து இன்புறுக.

"தீரப் பயோததி திக்குமா காயமும்
செகதலமு நின்று சுழலத்
திகழ்கின்ற முடிமவுலி சிதறிவிழ வெஞ்சிகைத்
தீக்கொப் புளிக்க வெருளும்
பாரப் பணாமுடி யநந்தன்முத லரவெலாம்
பதைபதைத் தேந டுங்கப்
படர்சக்ர வாளகிரி துகள்படவை யாளிவரு
பச்சைப்ர வாள மயிலாம்"

**வனிதைய ரறுவர்க்கு மொருபாலகனே:-**

அமரர்கட்கு அலக்கண் புரிந்த அசுரர் வேந்தனாகிய சூராதிய வுணர்களை யடக்கும்பொருட்டு, முருகவேள் சரவணப் பொய்கையில் திரு அவதாரம் புரிந்தருளினார். அக்காலை இளம்பூரணனுக்கு பாலமுதந் தருமாறு ஆறு கார்த்திகைப் பெண்கள் அணுகினார்கள். குழந்தைக் குருபரனுடைய கோடி மன்மத சொரூபத்தைக் கண்டு ஆரா அன்பு பூண்டார்கள். ஒரு குழந்தையை அறுவரும் ஒருசேர வந்து எடுத்தனர். அவ்வாறு எடுத்தபோது

*அவ் வாறு மாதர்களின் கரங்களில் தனித்தனியாக ஒவ்வொரு குழந்தையாகச் சென்று, அறுவர் உள்ளம் உவக்க அறுவருக்கும் மகனாக அமுதுண்டு விளையாடி யருள்புரிந்தனர்.*

"உவகையொடு கிர்த்திகைய ரறுவருமெ டுக்கஅவ
ரொருவரொரு வர்க்கவனொ ரோர்புத்ர னானவனும்"

*- வகுப்பு*

"அறுவர் பயந்த ஆறமர் செல்வ" *- திருமுருகாற்றுப்படை*

உளமுருகிய பத்தருறவே:-

*வள்ளலை நினைந்து உள்ளம் உருகி நிற்கும் அடியவர்க்கு இறைவன் உறவாக இருந்து உதவுகின்றான்.*

*கருங்கல் மனதை உருக்கிக் கரைத்துக்கொள்வதே இறைவனை யடையும் எளிய வழி யென்க.*

*அவ்வாறு உருகும் அடியவர் இருவினைகளை வேலவன் விலக்கி விடுகின்றனன்*

"உருகு மடியவர் இருவினை இருள்பொரு முதய தினகர"

*- திருப்புகழ்*

"பாட வேண்டும்நான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்
காட வேண்டும்"

*என்று வேண்டுகின்றனர் மணிவாசகர்.*

"அறுமுக மெனநெக் கென்பெ லாமுரு கன்புறாதோ"

*என்று மதுரைத் திருப்புகழில் அருணையடிகள் வேண்டுகின்றனர்.*

மறவேன் எனவோதி உருகுதல் ஒரு சற்றுமறியேன்:-

*இறைவனை மறவாமையே முத்திக்கு வித்து என உணர்க. "என்றும் மறவாமை வேண்டும்" என்று காரைக்காலம்மையாரும், "மறவாதிரு மனமே" என்று பட்டினத்தாரும், "தினைத்துணைப் பொழுதும் மறந்து உய்வேனோ?" என்று அப்பரடிகளும், "தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழுஞ்சுடரே! வைவைத்த வேற்படை வானவனே! மறவேனுனை நான்" என்று அருணை நாதரும் அருளிச் செய்த அமுத வாக்குகளை உன்னுக.*

*ஆதலின், ஆண்டவனிடம் நாடோறும் மறவாமையை மன்றாடி வரமாகக் கேட்டு ஆன்மகோடிகள் உய்வுபெற வேண்டும்.*

**இருவினை யிடையிட்ட கொடியேன்:-**

*நல்வினை தீவினை என்ற இருவினைகளால் இவ்வுடம்பு வந்திருக்கின்றது.*

"அறம்பாவ மென்னும் அருங்கயிற் றால்கட்டி" *-திருவாசகம்*

*தீவினையைச் செய்யாதிருத்தல் வேண்டும். நல்வினையைப் பயன் கருதாமல் சிவார்ப்பணமாகச் செய்தல் வேண்டும். அப்போது இருவினையொப்பு எய்துகின்றது. நல்வினையும் பிறவிக்கு ஏதுவாகலின் அதனையும் துறத்தல் வேண்டும். தீவினை இரும்பு விலங்கு போலவும், நல்வினை பொன்விலங்கு போலவும் ஆகும். தீவினை நரகாதி துன்பத்தையும் இழிந்த பிறப்பையும் நல்கும். நல்வினை சுவர்க்காதி இன்பத்தையும் உயர்ந்த பிறப்பையும் நல்கும். ஆதலின், இரண்டு வினைகளும் பிறவிக்கு ஏதுக்களாகும்.*

*தீவினை பிறன்மனை போன்றது. நல்வினை தன்மனை போன்றது என்றறிக. அறநூல்களைப் படித்துப் பிறன்மனையை முதலில் வெறுத்துத் தன்மனையுடன் இன்புற்று வாழ்ந்து, பின்னர் ஞான நூல்களைப் படித்துத், தன் மனையையுந் துறந்து வீடு காதலித்துச் செல்வதுபோல், தொடக்கத்தில் தீவினையைச் செய்யாதொழிந்தும், பின்னர் நல்வினையை நிஷ்காம்யமாகச் செய்து இருவினைத் தொடக்கையறுத்துப் பிறவிப் பிணி யினின்றும் வீடுபேறு பெறுதல் வேண்டும்.*

**உணர்விலி பெற முத்தி தருவாய்:-**

*அறிவு – கலையினால் வருவது; உணர்வு – அநுபவத்தினால் வருவது. அழுந்தியறிவது என்பார் மாபாடியக்காரர்.*

*முத்தி – விடுபடுவது; பந்தத்தினின்றும் விடுபடுவதுவே முத்தி வீடு ஆகும். ஆன்மாக்கள் பந்தமாகிய தளையினால் கட்டுப் பட்டிருக்கின்றன. ஆதலினால், பசுக்கள் எனப்படுகின்றன. பாசம் என்னும் தளையைப் பரமன் அறுத்துப் பக்குவ ஆன்மாக்களுக்கு அருள்புரிகின்றான். "பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே" என்பது மணிவாசகம்.*

**கலவியினல மற்ப சுகமாகினுமா அநுபவ மிது சற்றும் விடவோ இயலாதியலாதே:-**

*மண்ணாசையும் பொன்னாசையும் மனிதப் பிறவிக்கே உரியன. ஏனைய பிறவிகட்கு இந்த இரண்டு ஆசைகள் சிறிதும்*

இல்லை. பெண்ணாசை பிறவிகள்தோறும் தொடர்ந்து வருகின்றது. புழுவுக்கும் பெண்ணவா உண்டு. ஆண்டிக்கும் உண்டு; அரசனுக்கும் உண்டு. பெண்ணவாவினால் முடி துறக்கவும் ஒருவன் துணிகின்றான்; நகுஷன் இந்திர பதவியை யிழந்தான். சந்திரன் பெரும் பழியுற்றான்; இராவணன் இராவணமாயினான்; கீசகன் கிம்மீரணன் முதலியோர் அழிந்தனர். காசிபர், பராசரர், விஸ்வாமித்திரர், பாரத்வாசர் முதலியோர் தவமிழந்து அவமுற்றனர். ஆதலின், இப்பெண்ணவாவைத் தன் முயற்சியாலும் மதியினாலுமட்டும் அகற்றிவிட முடியாது. ஞான பண்டிதனாகிய ஞான வேற்பரமன் திருவருள் துணைகொண்டு அகற்றுதல் வேண்டும்.

பெண்ணவா நரகத்தின் பயங்கரமான வாயில் என்று அறிக.

தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வருங்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனு
நாம மில்லை நரகமு மில்லையே.

என்பார் வசிட்ட முனிவர்.

மெய்யில் சிவம்பிறக்க மேவும்இன்பம் போல்மாதர்
பொய்யில்இன் பின்றென்று பொருந்தாநாள் எந்நாளோ.
- *தாயுமானார்*

காமமுற்றவர் கொலைக்கு அஞ்சமாட்டார்கள்; பொய்யை வாய்கூசாமற் புகலுவார்கள்; மானம் என்பதை ஈனம் என்று அகற்றுவார்கள்; அன்னமிட்ட வீட்டில் கன்னம் இடுவார்கள். பழிபாவங்களைப் பூணாரமாகப் பூண்பார்கள். இன்னும் அவர்கள் என்னதான் செய்ய மாட்டார்கள்? ஆ! ஆ! கொடிது; கொடிது.

கொலையஞ்சார் பொய்நாணார் மானமும் ஓம்பார்
களவொன்றோ ஏனையுஞ் செய்வார் - பழியொடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார்.

ஆதலின், காமனையெரித்த கண்ணுதற் கடவுளது ஞானக்கண்ணில் அருட்பெருஞ்ஜோதியாய் வெளிப்பட்ட தனிப்பெருங் கருணைத் தணிகை நாயகனது தண்ணருளை வேண்டி, அருணையடிகளார், "ஐயனே! மாதரால் வரும் இன்பம் ஒரு சிறு அணுவையொத்துக் கணத்தில் மறைவது; ஆயினும், பிறவிகள்தோறும் தொடர்ந்து வந்த அநுபவத்தினால் இதனை

விடுவது கடினமாக இருக்கின்றது· அதனால், பிறவிப்பிணி தொடர்கின்றது. ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகங்களாக அரசு புரிந்த வஜ்ர யாக்கையும் இந்திர ஞாலத் தேரும் ஆற்றலும் ஆண்மையும் படைத்த சூரபன்மனை யழித்தீரே, அதுபோல் நெடுங்காலமாக என்பால் அதிகாரஞ் செலுத்தி என்னை அடிமை கொண்ட இம்மாதராசையை மாற்றி மாசற்ற மனத்தைத் தந்து, திருவருள் புரிவீர்" என்று வேண்டி நிற்கின்றனர். அவர் முருகன் கருணையால் ஆசாநிகளம் அறப்பெற்றவராயினும் நம்போன்றோர் வேலனை வேண்டி வீடுபேறு பெறும்பொருட்டு இங்ஙனம் பாடியருளினார் என்க.

"மங்கையர்கள் காதல் தூரத்தேக" "சந்ததமு வந்து கண்டரிவையர்க் கன்புருகு சங்கதந் தவிர" "பந்தாடு மங்கையர் செங்கயற் பார்வையில் பட்டுழலுஞ் சிந்தாகுலந் தன்னைத் தீர்த்தருள்வாய்" "கூர்வேல் விழிமங்கையர் கொங்கையிலே சேர்வேனருள் சேரவு மெண்ணுமதோ" என்பனவாதி அமுத வாக்குகளை யுன்னுக.

தமனிய குலசக்ரகிரி:-

சூரபன்மன் போருக்கு வந்த திறத்தை இங்ஙனம் வியந்து கூறுகின்றனர்.

தமனியம் – பொன். தளராது, பொன் மேருகிரிபோல் நிமிர்ந்து அவன் அமர் செய்ய வந்தனன்.

கடலோ :-

கடல்போல் திரண்ட பெருஞ் சேனையுடன் வந்தனன்.

விடமென முடிவைத்த முதுபேரிருளோ:-

ஆலகால விடத்தையே மகுடமாக வைத்த இருட்பிழம்பு உருண்டு திரண்டு வந்ததுபோல் அவன் வந்தனன் எனினும் அமையும்.

"அயிலை யிருள்மேல் விடுவோனே" - *திருப்புகழ்*

எமபாதகனோ :-

மூவிலைச் சூலந்தாங்கி, பார்வையினால் கொளுத்தும் விட வேகக் கண்களுடன் உக்ரமாகவரும் கூற்றுவனைப்போல் கொடுமையுடன் வந்தனன்.

**அறையோ :-**

உலகங்களையும் அமரர்களையும் போருக்கு வாருங்கள், வாருங்கள் என்று கூவி யழைத்தல் அறைகூவுதல். போரில் அத்துணை ஆர்வமும் வேகமும் வீரமும் பூண்டவன் சூரபன்மன்.

**ஒரு துட்டன் :-**

சூரபன்மனைத் துட்டன் என்றனர்.

**இராவணன்** பரதாரகமனம் செய்தனன்; பெரியோர்க்கு இடுக்கண் புரிந்தனன்; மேலும் அவன் தவமுனிவரை வருத்தினன்.

**துரியோதனன்** ஆசை கோபம் பொறாமை பொய் சூது வஞ்சனை முதலிய துர்க்குணங்கட்கு உறைவிடமாக இருந்தனன். ஒரு பெண்மணியைச் சபையில் நிறுத்தி மானபங்கம் புரியலுற்றனன்.

**இரணியன்** தன்னையே கடவுள் என்று கூறித் திரிந்தனன். கடவுள் வழிபாடு புரிபவர்களைத் தண்டித்தனன். ஒரு குற்றமும் புரியாத உத்தம குழந்தையாகிய பிரகலாதர் "நாராயணா! நாராயணா" என்று பாராயணஞ் செய்ததைக் குற்றமாகக் கருதி அவரைத் தீயில் இட்டும், மண்ணில் புதைத்தும், மலையினின்று உருட்டியும், கல்லில் கட்டிக் கடலில் வீழ்த்தியும், ஆயுதங்களால் தாக்கியும், அரவங்களை ஏவிக் கடிக்கச் செய்தும், மதயானை களை யனுப்பி மிதிப்பித்தும், அன்னத்தில் நஞ்சினைக் கலந்து தந்தும், இவ்வாறு எண்ணற்ற கொடுமைகளைப் புரிந்தனன்.

**கம்சன்** கள்ளுண்டு களித்துக் கொலைத்தொழிலும் புலைப்புசிப்பும் கொண்டு திரிந்தனன்.

சூரபன்மனிடம் இத்தகைய தீய குணங்கள் ஒன்றேனும் இல்லை. தமது குலத்தை யழித்த அமரரைச் சிறைப்படுத்தி வாட்டி வருத்தினான். அத்தண்டனை அளவுக்குமேல் சென்று விட்டது. இந்த ஒரு குற்றந்தான் அவன் செய்தது.

அங்ஙனமிருக்க அவனை அருணைநாதர் "ஒரு துட்டன்" என்று கூறியதன் நுண்பொருள் யாதோ எனின்; பாவங்களுக்கு எல்லாம் பெரிய பாவம் நன்றிமறப்பது ஆகும். நன்றி கொன்ற பாவத்திற்குக் கழுவாயே கிடையாது.

ஒன்றொரு பயன்றனை உதவி னோர்மனங்
கன்றிட ஒருவினை கருதிச் செய்வரேல்
புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ. - *கந்தபுராணம்*

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. - *திருக்குறள்*

ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர்க் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிய கழுவாயு முளவாம்
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவர்
செய்திகொன் றோர்க்கு உய்தி யின்றென
அறம்பா டிற்றே. - *புறநானூறு*

*சூரபன்மன் இப்பெரும் பாதகத்தைச் செய்தனன் என்க.*

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வார் பயன்தெரி வார்.

*என்பது பொதுமறை, சூரபன்மனுக்குச் சிவபெருமான் எண்ணில்லாத வரங்களை வழங்கியருளினார். அவன் கேட்ட வரங்களுடன் கேளாத வரங்களையும் வலிதில் வழங்கி வாழ்வித்தனர்.*

*வரங் கொடுத்த வள்ளலுடைய திருக்குமாரராகிய வடிவேற் பரமனை எதிர்த்து அமராடியது நன்றி மறந்த செயலாகும். அன்றியும்; வீரவாகு தேவர் தூது வந்து,*

ஈச னேயவன் ஆடலால் மதலையா யினன்காண்
ஆசி லாஅவன் அறுமுகத் துண்மையா லறிநீ
பேசி லாங்கவன் பரனொடு பேதக னல்லன்
தேசு லாஅகல் மணியிடைக் கதிர்வரு திறம்போல்.

முன்ன வர்க்குமுன் னாகுவோர் தமக்குமுற் பட்டுத்
தன்னை நேரிலா தீசனாந் தனிப்பெயர் தாங்கி
இன்னு யிர்க்குயி ராய்அரு வுருவமாய் எவர்க்கும்
அன்னை தாதையாய் இருந்திடும் பரமனே அவன்காண்.

பூத மைந்தினுட் கீழ்நிலைத் தாகிய புவியுள்
ஓது கின்றபல் லண்டத்தின் ஓராயிரத் தெட்டும்
கோதி லாக்கமும் படைகளும் உனக்குமுன் கொடுத்த
ஆதி ஈசனே அவனெனில் மாற்றுவ தரிதோ.

*என்பனவாதி அரிய பெரிய உபதேசவுரைகள் உரைத்தும் உணர்ந்தானலன்.*

*சிங்கமுகாசுரன்,*

ஞானந் தானுரு வாகிய நாயகன் இயல்பை
யானு நீயுமா யிசைத்துமென் றாலஃ தெளிதோ
மோனந் தீர்கலா முனிவரும் தேற்றிலர் முழுதுந்
தானுங் காண்கிலன் இன்னமுந் தன்பெருந் தலைமை.

வான்செய் தேவரை நீயலைக் கின்றதை மதியா
ஊன்செய் கின்றபல் லுயிருக்கும் உயிரதாம் ஒருவன்
தான்செய் கின்றதொல் வரத்தினைத் தான்தவிர்த் திடுமேல்
ஏன்செய் தாயென வினவியே நிறுவுவார் எவரே.

*என்று பற்பல அறவுரை பகர்ந்தும், சூரபன்மன் திருந்தினா னில்லை. தனக்கு எண்ணில்லாத வரமளித்த கண்ணுதற் கடவுளின் திருமகனார் என்று அறிந்தும், பலரால் சிவனே அவன் என்று அறிவித்தும், நன்றி பாராட்டுதலை மறந்து அறந் துறந்து முருகவேளைக் கொல்ல முயன்று பெரும் போர் புரிந்தனன். ஆதலின் 'ஒரு துட்டன்' என்று அடிகள் கூறியருளினார்.*

## கருத்துரை

*சூராதி யவுணரை யழித்த சுப்ரமணியக் கடவுளே! மாதர் மயக்கறுத்து, அடியேன் முத்தி பெற அருள்புரிவீர்.*

## 10

உறவின்முறை கதறியழ ஊரரு மாசையற
பறைதிமிலை முழவினிசை யாகாச மீதுமுற
உலகிலுள பலரரிசி வாய்மீதி லேசொரியு மந்தநாளில்

உனதுமுக கருணைமல ரோராறு மாறிருகை
திரள்புயமு மெழில்பணிகொள் வார்காது நீள்விழியு
முபயபத மிசைகுலவு சீரேறு நூபுரமும் அந்தமார்பும்

மறையறைய அமரர்தரு பூமாரி யேசொரிய
மதுவொழுகு தரவில்மணி மீதேமு நூலொளிர
மயிலின்மிசை யழகுபொலி யாளாய்மு னாரடியர் வந்துகூட

மறலிபடை யமபுரமு மீதோட வேபொருது
விருதுபல முறைமுறையி லேயூதி வாதுசெய்து
மதலையொரு குதலையடி நாயேனை யாளஇங்கன்
வந்திடாயோ;

பிறையெயிறு முரணசுரர் பேராது பாரில்விழ
அதிரஎழு புவியுலக மீரேழு மோலமிட
பிடிகளிறி னடல்நிரைகள் பாழாக வேதிசையில்
நின்றநாகம்

பிரியநெடு மலையிடிய மாவாரி தூளியெழ
பெரியதொரு வயிறுடைய மாகாளி கூளியொடு
பிணநிணமு முணவுசெய்து பேயோடு மாடல்செய
வென்றதீரா

குறமறவர் கொடியடிகள் கூசாது போய்வருட
கரடிபுலி திரிகடிய வாரான கானில்மிகு
குளிர்கணியி னிளமரம தேயாகி நீடியுயர் குன்றுலாவி

கொடியதொரு முயலகனின் மீதாடு வாருடைய
வொருபுறம துறவளரு மாதாபெ றாவருள்செய்
குமரகுரு பரஅமரர் வானாட பேணஅருள் தம்பிரானே.

## பதவுரை

*பிறை எயிறு - பிறைச் சந்திரனைப் போன்ற வளைந்த பற்களையுடையவர்களும், முரண் அசுரர் - மாறுபட்டவர்களு மாகிய அரக்கர்கள், பேராது பாரி விழ - திரும்பாது மாண்டு மண்ணில் விழவும், எழு புவி அதிர - ஏழுதீவுகளுடன் கூடிய இப் பூமண்டலம் நடுங்கவும், உலகம் ஈரேழும் ஓலம் இட - பதினாலு உலகங்களும் அச்சத்தினால் அலறி சத்தமிடவும், பிடிகளிறின் அடல் நிரைகள் பாழாக - பெண் யானை ஆண் யானைகளின் வலிமையான கூட்டங்கள் பாழ்பட்டு அழியவும், திசையில் நின்ற நாகம் பிரிய - எட்டுத்திசைகளின் முடிவில் நிற்கின்ற யானைகள் இடம்விட்டு நீங்கவும், நெடு மலை இடிய - நீண்ட மலைகள் இடிந்து விழவும், மாவாரி தூளி எழ - பெரிய கடல் வற்றித் தூள் உண்டாகவும், பெரியது ஒரு வயிறு உடைய - மிகவும் பெரிய வயிற்றையுடைய, மாகாளி கூளியுடன் - மகாகாளியானவள் பூதங்களுடன், பிண நிணமும் உணவு செய்து - பிணத்தின் தசைகளை உண்டு, பேயோடும் ஆடல் செய - பேய்களுடன் கூத்தாடவும், வென்ற தீரா - அரக்கர்களை வென்ற தீரரே! குறமறவர் கொடி அடிகள் - வீரமுள்ள குறவர் குலத்தில் தோன்றிய வள்ளியம்மையாரது திருப்பாதங்களை, கூசாது போய் வருட - சிறிதும் தயங்காமல் சென்று பற்றி அருள்புரியும் பொருட்டு, கரடி புலி திரிகடிய வாரான கானில்*

- கரடிகளும் புலிகளும் இரை தேடிக்கொண்டு ஓயாது திரிவதற்கிடம் பெற்றதும் கொடுமையானதும் விசாலமானதும் ஆகிய கானகத்தில், மிகு குளிர் கணியின் இளம் மரம் அது ஆகி - மிகவும் குளிர்ச்சி பொருந்திய இளம் வேங்கை மரமாகி நின்று, நீடி உயர் குன்று உலாவி - செழிப்பும் உயரமும் உடைய மலைச் சாரலில் உலாவியவரே! கொடியது ஒரு முயலகனின் மீத - கொடியதாகிய ஒப்பற்ற முயலகன் மீது நின்று, ஆடுவா ருடைய - திரு நடனம் புரிகின்றவருடைய, ஒருபுறம் அது உற வளரும் - ஒரு புறத்தைப் பெற்று விளங்குகின்ற, மாதா பெறா அருள்செய் - உமையம்மையார் பெற்று அருளிய, குமரகுருபர - குமரக் கடவுளாகிய குருமூர்த்தியே! அமரர் வானாடர் பேண அருள் - இறவாத தன்மையைப் பெற்ற தேவலோக வாசிகள் விரும்ப அருள்செய்கின்ற, தம்பிரானே - தனக்குமேல் தலைவன் இல்லாதவரே! உறவின் முறை கதறி அழ - சுற்றத்தார்கள் வாய்விட்டு புலம்பி அழவும், ஊராரும் ஆசை அற - ஊரில் உள்ளவர்கள் ஆசையை விடவும், பறை திமிலை முழவின் இசை - பறை திமிலை முதலிய வாத்தியங்களின் ஓசை, ஆகாச மீதும் உற - ஆகாயம் வரையிலும் ஒலிக்கவும், உலகில் உள பலர் அரிசி வாய் மீதிலே சொரியும் - உலகிலே உள்ள உறவினர் நண்பர் முதலியோர்கள் வாயிலே அரிசி சொரிகின்றதுமாகிய, அந்த நாளில் - முடிவான நாளில், உனது முக கருணை மலர் ஓர் ஆறும் - தேவரீருடைய கருணை பொழிகின்ற ஆறு திரு முகங்களும், ஆறு இருகை திரள்புயமும் - பன்னிரு கரங்களுடன் கூடிய திரண்ட புயங்களும், எழில் பணிகொள்வார் காதும் - அழகிய ஆபரணங்களை யணிந்த தொங்குகின்ற காதுகளும், நீள் விழியும் - நீண்ட கண்களும், உபய பதமிசை குலவு சீர் ஏறு நூபுரமும் - இரண்டு திருவடிகளில் விளங்கும் சிறப்புடைய பாதச் சிலம்பும், அந்த மார்பும் - அழகிய திருமார்பும், மறை அறைய - வேதங்களை ஓதவும், அமரர் தரு பூமாரியே சொரிய - தேவர்கள் கற்பக மலர் மழை பொழியவும், மது ஒழுகு உதர வில் மணிமீது - (பூமாலை களினின்றும்) தேன் வடியும் வயிற்றில் கட்டியுள்ள ஒளி மிக்க மணிவட்டத்தின் மீது, முன் நூல் ஒளிர - முப்புரிநூல் ஒளி செய்யவும், மயிலின் மிசை அழகு பொலி ஆளாய் - மயில் வாகனத்தின் மீது அழகு செய்கின்ற திரு வுருவத்துடன், முன்ஆர் அடியார் வந்து கூட - திருமுன்னே அருமையான அடியார் திருக்கூட்டம் வந்து கூடவும், மறலிபடை யமபுரமும் மீது ஓட - இயமனுடைய சேனைகள் அஞ்சி தங்கள்

ஊரை நோக்கி ஓடுமாறு, பொருது - போர் செய்து, விருது பல முறைமுறையிலே ஊதி வாது செய்து - வெற்றிச் சின்னங்கள் வரிசைவரிசையாக ஊதி வாது செய்து, மதலை - சிறுவனும், ஒரு குதலை - தனிமையான அறிவில்லாதவனுமாகிய, அடி நாயேனை ஆள - அடிமையேனை ஆட்கொள்ளும் பொருட்டு, இ(ங்)ஙன் - இவ்விடம், வந்திடாயோ - வந்தருளமாட்டீரோ?

## பொழிப்புரை

வளைந்த பற்களையுடைய மாறுபட்ட அரக்கர்கள் மீண்டு போகாது மாண்டு மண்ணில் விழவும், ஏழு தீவுகளுடன் கூடிய மண்ணுலகம் நடுங்கவும், பதினாலு உலகங்களும் அச்சத்தினால் ஓவென்று இரையவும், பெண்ணும் ஆணுமாகிய யானைகள் அழியவும், திசைகளின் முடிவில் நிற்கும் யானைகள் நின்ற இடத்தை விட்டு நீங்கவும், நீண்ட மலைகள் இடிந்து விழவும், பெரிய கடல் வற்றித் துகள்படவும், பெரிய வயிற்றையுடைய மகா காளி பூதகணங்களுடன் சேர்ந்து மாண்ட அசுரர்களுடைய தசைகளைத் தின்று, பேய்களுடன் கூடிக் கூத்தாடவும், சூராதியரை வெற்றிபெற்ற தீரரே! வீரமுள்ள குறவர் குலத்தில் வந்த வள்ளி பிராட்டியாருடைய பாதங்களைச் சிறிதும் நாணாமல் சென்று பற்றி அருள்புரியும் பொருட்டு, கரடிகளும் புலிகளும் சதா திரிகின்றதும் கடினமானதும் விசாலமுடையதுமாகிய காட்டில், மிகவும் குளிர்ந்த இளமையான வேங்கை மரமாக நின்று, செழிப்புடன் நீண்ட மலையில் உலாவியவரே! கொடியதாகிய முயலகன் என்ற பூதத்தின் மீது திருநடனம் புரிகின்றவராகிய சிவபெருமானது இடப்புறத்தில் விளங்குகின்ற உமையம்மையார் பெற்றருளிய குமாரக் கடவுளே! குருமூர்த்தியே! தேவலோக வாசிகள் வழிபட அருள்புரிகின்ற தனிப்பெருந் தலைவரே! உறவினர் கதறி அழவும், ஊரவர்கள் என்மீது வைத்திருந்த ஆசையை விடவும், பறை திமிலை முதலிய வாத்தியங்களின் ஒலி விண்வரை செல்லவும், உலகில் உள்ள உறவினரும் ஊரவரும் என் வாய் மீதில் வாக்கரிசி போடவும் ஏற்படுகின்ற முடிவான நாள் ஒன்று உண்டல்லவா? அந்த நாளில், தேவரீருடைய கருணை பொழிகின்ற ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு கரங்களுடன் கூடிய திரண்ட புயங்களும், அழகிய அணிகலங்களுடன் தொங்குகின்ற காதுகளும், நீண்ட திருக்கண்களும், இரண்டு திருவடிகளிலும் விளங்கும் சிறந்த பாதச் சிலம்பும், அழகிய திருமார்பும், வேதங்கள் ஒலிக்கவும், தேவர்கள் கற்பக மலர் மழை

முழுவதும் பெற்றவர். இறவாத தன்மையை யுற்றவர்.

"அவமே பிறந்தனை இறவாம லன்பர்புகும்
அமுதா லயம்பதவி அருள்வோனே"

என்று அடிகளே தனக்குக் கிடைத்த பெரும் பேற்றை வியந்து கூறுகின்றனர்.

"கூகா வெனஎன் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா"

என்ற அநுபூதியில் கூறியருளினார்.

இவ்வாறு, சாகாநிலை பெற்ற அடிகள், "உறவின் முறை கதறியழ" மரணம் வரும் நாளில் நீர் வந்து ஆட்கொள்ள வேண்டும் என்று கூறுவது அருள் பெறாத நம் பொருட்டுக் கூறியதாகும் என்று உணர்க. நாம் இத்திருப்புகழைப் பாடி உய்யும்பொருட்டே அடிகள் இதனைப் பாடியருளினார் என்பதனை,

"ஏனோரு மோது மாறு தீதற
நானாசு பாடி யாடி நாடொறு
மீடேறு மாறு ஞான போதக மன்புறாதோ"- *திருப்புகழ்*

பிறையெயிறு முரணசுரர்:-

அசுரர்கட்குக் கடைவாயில் பிறைச்சந்திரனைப் போன்ற வளைந்த பற்கள் உளவாகும். எப்போதும் நற்குணங்களுடன் மாறுபட்டிருப்பவர்களாதலின், "முரணசுரர்" என்றனர்.

"தரணியி லரணிய முரணிரணியன்"

என்று வகுப்பிலுங் கூறுகின்றனர்.

எழுபுவி அதிர:-

ஏழு தீவுகளோடு கூடிய மண்ணுலகம் ஏழு தீவுகள்:- நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு என்பனவாம்.

உலகம் ஈரேழும் ஓலமிட:-

சூராதியவுணர்கள் செய்த பெருந் தீமைகட்கு ஆற்றாத அமரரும் முனிவரும் ஓலமிட்டனர்.

நண்ணினர்க் கினியாய் ஓலம் ஞானநா யகனே ஓலம்
பண்ணவர்க் கிறையே ஓலம் பரஞ்சுடர் முதலே ஓலம்
எண்ணுதற் கரியாய் ஓலம் யாவையும் படைத்தாய் ஓலம்
கண்ணுதற் பெருமா னல்கும் கடவுளே ஓலம் ஓலம்.

தேவர்கள் தேவே ஓலம் சிறந்தசிற் பரனே ஓலம்
மேவலர்க் கிடியே ஓலம் வேற்படை விமலா ஓலம்
பாவலர்க் கெளியாய் ஓலம் பன்னிரு புயத்தாய் ஓலம்
மூவரு மாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்.

குறமறவர் கொடியடிகள் கூசாது போய் வருட:-

*தீவிரகரமான ஆன்மாக்களை இறைவன் எளிதாகத் தானே சென்று வேண்டி ஆட்கொள்வான் என்று குறிப்பினையுணர்த்து கின்றது வள்ளியம்மையாரை முருகவேள் அடிகள் வருடியருளிய வரலாறு.*

குளிர்கணியின் இளமரமதேயாகி:-

*வள்ளியம்மையார் தன்னையுணராமையால், இறைவன் வேங்கைமரமாகி நின்றான். என்னை? வேட ராஜனாகிய நம்பிக்கு அஞ்சியவாறு ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகங்களாக அரசுபுரிந்த சூராதியவுணரை மாய்த்த சத்ரு சங்கார வேலாயுதத்தையுடைய வித்தகனாதலின் என்க. வள்ளியம் மையாகிய ஆன்மாவுக்கு கலைஞானத்தினை யருளுதற் பொருட்டே வேங்கைமரமாயினார். வேங்கைமரம் கலைஞான மென அறிக.*

ஆங்கது காலை தன்னில் அடிமுதல் மறைக ளாக
ஓங்கிய நடுவண் எல்லாம் உயர்சிவ நூல தாகப்
பாங்கமர் கவடு முற்றும் பல்கலை யாகத் தானோர்
வேங்கையின் உருவ மாகி வேற்படை வீரன் நின்றான்.

கொடிய தொரு முயலகன்:-

*தாருகவனத்து இருடிகள் அபிசார ஓமஞ் செய்து முயலகன் என்ற பூதத்தை உண்டாக்கிச் சிவபிரானைக் கொல்லும் பொருட்டு ஏவினார்கள். பரமபதி அப்பூதத்தைக் கொல்லாது அதனைத் திருவடியால் மிதித்து அதன்மீது நின்று திருநடனம் புரிந்தருளினார்.*

*முயலகன் என்பது ஆணவமலம் என்று உணர்க. ஆணவ மலம் ஒருபோதும் அழியாது. அதன் வலி தேய்ந்து அடங்கி நிற்கும். அதனால், இறைவன் முயலகனைக் கொல்லாது அதன் வலியை அடக்கியருளினார்.*

*முயலகன் என்ற பூதம் மிகவும் கொடியது என்பதனைக் கீழ்வரும் பாடலினாலும் அறிக.*

பொழியவும், மலர் மாலையினின்றும் தேன்பொழியும் திரு வயிற்றில் கட்டியுள்ள ஒளியுடைய மணிவடத்தின்மீது முப்புரிநூல் இலங்கவும், மயில்வாகனத்தின்மீது அழகுமிக்க திருவுருவத்துடன் தோன்றி, திருமுன் நிறைந்த திருத்தொண்டர்கள் கூடிவரவும், இயமனுடைய சேனைகள் தமது ஊரை நோக்கி ஓடுமாறு போர் செய்து, அதனாலாகிய வெற்றியின் பொருட்டுச் சின்னங்களை வரிசை வரிசையாக ஊதி வாதிட்டு, சிறுவனும் அறிவில்லாத தனியனும், திருவடியை நம்பியுள்ளவனுமாகிய நாயினேனை ஆட்கொண்டருளும் பொருட்டு வந்தருளமாட்டீரோ?

## விரிவுரை

**உறவின்முறை கதறி அழ:-**

*நமது ஆதரவில் இருந்தவர்களும், இத்தனைக் காலமாக யார் பொருட்டு இரவும் பகலும் உழைத்தோமோ அந்தத் தாய் மனைவி மக்கள் முதலியோர்களுமாகிய சுற்றத்தினர் உயிர் பிரியும்போது சுற்றியிருந்து அவமே இரங்கி அழுவார்கள். இயமனுடன் வாதிட்டு அவரை விரட்டவோ, நம் பொருட்டு உயிரை விடவோ மாட்டாதவர்களாகிக் கைவிட்டு நிற்பார்கள்.*

**ஊரார்கள் ஆசையற:-**

*எத்தனையோ காலமாகப் பழகிவந்த ஊரில் உள்ளவர்கள் உயிர் பிரிந்தவுடன் நம்மீது வைத்திருந்த ஆசையை விட்டு விடுவார்கள்.*

**பறை திமிலை முழவினிசை ஆகாசமீதுமுற:-**

*உயிர்பிரிந்தவுடன் நமது வீட்டிற்குமுன் பலப்பல வாத்தியங் களை ஒலிக்கச் செய்வார்கள். அவ்வொலி ஆகாயம்வரை செல்லும்.*

**அரிசி வாய்மீதிலே சொரியும்:-**

*காது குத்தும்போது வெல்லந் தடவிய அரிசியைத் தந்தார்கள். காது வழி பஞ்சாக்கரம் சடக்கரம் புகுந்து உயிரில் சிவமாகிய இனிமை ஏறவேண்டும் என்று குறிப்பிட்டார்கள். கல்யாண சமயத்தில் மஞ்சள் தடவிய அரிசியைத் தூவினார்கள். உயிரில் அன்பு என்ற மஞ்சள் நிறம் உண்டாக வேண்டும் என்று குறிப்பிட்டார்கள். சிவமாகிய இனிமையும், அன்பாகிய பசுமையும் என்பால் உண்டாகாமல் உயிர் துறந்ததனால் இறந்தவுடன் என்*

வாய்மீது வெறும் அரிசியைப் போடுவாராயினார்கள்.

**அந்த நாளில்:-**

முடிவான நாள். அந்நாளில் நான்கு நிகழ்ச்சிகள் நிகழும். அவையாவன: 1. உறவினர் அழுவார்கள், 2. ஊரவர்வந்து கூடி ஆசையை விடுவார்கள், 3. பறையறைவார்கள், 4. வாக்கரிசி யிடுவார்கள்.

இந்த நான்கு நிகழ்ச்சிகளுக்குப் பதிலாக வேறு நான்கு நிகழ்ச்சிகள் நிகழவேண்டும். உறவின் முறையாருடைய அழு முகங்களைப் பார்க்கப் படாது; அதற்குப் பதிலாக முருகா! உம்முடைய திருமுகங்களைப் பார்க்க வேண்டும்.

ஆசையறுகின்ற ஊரவர்கட்குப் பதிலாக, உமது திருத் தொண்டர் கூட்டம் வரவேண்டும்; எனது வாழ்நாள் முடிவிலே பறையறையக் கூடாது; அதற்குப் பதிலாக மறையறைய வேண்டும். வாய்மீது அரிசி சொரிவதற்குப் பதிலாக அமரர் தரு பூமாரி சொரிதல் வேண்டும்.

**உனது முககருணை மலரோராறும்:-**

முருகப்பெருமானுடைய திருமுகங்களில் எப்போதுங் கருணை பொழிந்த வண்ணமாக இருக்கும்; மலையினின்றும் அருவி பொழிவதுபோல் என்று அறிக.

"மூவிரு முகங்கள் போற்றி
முகம்பொழி கருணை போற்றி"

"கருணைகூர் முகங்க ளாறும்
கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே" கந்தபுராணம்

"கருணைபொழி கமலமுக மாறும்" - திருப்புகழ்

**மறலிபடை யமபுரமு மீதோடவே:-**

முருகப்பெருமான் வந்து அருள் செய்யும்போது, யம தூதர்கள் அஞ்சி ஓடுவர்.

**நாயேனையாள இங்ன் வந்திடாயோ:-**

"முருகா அடியேனுடைய ஆவி பிரிகின்ற காலத்து தேவரீர் வந்து அருள்புரிதல் வேண்டும்" என்று அடிகள் வேண்டுகின்றனர்.

அருணகிரிநாதர் ஆறுமுகப் பெருமானுடைய திருவருள்

*முழுவதும் பெற்றவர். இறவாத தன்மையை யுற்றவர்.*

"அவமே பிறந்தஎனை இறவாம லன்பர்புகும்
அமுதா லயம்பதவி அருள்வோனே"

*என்று அடிகளே தனக்குக் கிடைத்த பெரும் பேற்றை வியந்து கூறுகின்றனர்.*

"கூகா வெனஎன் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா"

*என்ற அநுபூதியில் கூறியருளினார்.*

*இவ்வாறு, சாகாநிலை பெற்ற அடிகள், "உறவின் முறை கதறியழ" மரணம் வரும் நாளில் நீர் வந்து ஆட்கொள்ள வேண்டும் என்று கூறுவது அருள் பெறாத நம் பொருட்டுக் கூறியதாகும் என்று உணர்க. நாம் இத்திருப்புகழைப் பாடி உய்யும்பொருட்டே அடிகள் இதனைப் பாடியருளினார் என்பதனை,*

"ஏனோரு மோது மாறு தீதற
நானாசு பாடி யாடி நாடொறு
மீடேறு மாறு ஞான போதக மன்புறாதோ"- *திருப்புகழ்*

பிறையெயிறு முரணசுரர்:-

*அசுரர்கட்குக் கடைவாயில் பிறைச்சந்திரனைப் போன்ற வளைந்த பற்கள் உளவாகும். எப்போதும் நற்குணங்களுடன் மாறுபட்டிருப்பவர்களாதலின், "முரணசுரர்" என்றனர்.*

"தரணியி லரணிய முரணிரணியன்"

*என்று வகுப்பிலுங் கூறுகின்றனர்.*

எழுபுவி அதிர:-

*ஏழு தீவுகளோடு கூடிய மண்ணுலகம் ஏழு தீவுகள்:- நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு என்பனவாம்.*

உலகம் ஈரேழும் ஓலமிட:-

*சூராதியவுணர்கள் செய்த பெருந் தீமைகட்கு ஆற்றாத அமரரும் முனிவரும் ஓலமிட்டனர்.*

நண்ணினர்க் கினியாய் ஓலம் ஞானநா யகனே ஓலம்
பண்ணவர்க் கிறையே ஓலம் பரஞ்சுடர் முதலே ஓலம்
எண்ணுதற் கரியாய் ஓலம் யாவையும் படைத்தாய் ஓலம்
கண்ணுதற் பெருமா னல்கும் கடவுளே ஓலம் ஓலம்.

தேவர்கள் தேவே ஓலம் சிறந்தசிற் பரனே ஓலம்
மேவலர்க் கிடியே ஓலம் வேற்படை விமலா ஓலம்
பாவலர்க் கெளியாய் ஓலம் பன்னிரு புயத்தாய் ஓலம்
மூவரு மாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்.

குறமறவர் கொடியடிகள் கூசாது போய் வருட:-

*தீவிரகரமான ஆன்மாக்களை இறைவன் எளிதாகத் தானே சென்று வேண்டி ஆட்கொள்வான் என்று குறிப்பினையுணர்த்து கின்றது வள்ளியம்மையாரை முருகவேள் அடிகள் வருடியருளிய வரலாறு.*

குளிர்கணியின் இளமரமதேயாகி:-

*வள்ளியம்மையார் தன்னையுணராமையால், இறைவன் வேங்கைமரமாகி நின்றான். என்னை? வேட ராஜனாகிய நம்பிக்கு அஞ்சியவாறு ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகங்களாக அரசுபுரிந்த சூராதியவுணரை மாய்த்த சத்ரு சங்கார வேலாயுதத்தையுடைய வித்தகனாதலின் என்க. வள்ளியம் மையாகிய ஆன்மாவுக்கு கலைஞானத்தினை யருளுதற் பொருட்டே வேங்கைமரமாயினார். வேங்கைமரம் கலைஞான மென அறிக.*

ஆங்கது காலை தன்னில் அடிமுதல் மறைக ளாக
ஓங்கிய நடுவண் எல்லாம் உயர்சிவ நூல தாகப்
பாங்கமர் கவடு முற்றும் பல்கலை யாகத் தானோர்
வேங்கையின் உருவ மாகி வேற்படை வீரன் நின்றான்.

கொடிய தொரு முயலகன்:-

*தாருகவனத்து இருடிகள் அபிசார ஓமஞ் செய்து முயலகன் என்ற பூதத்தை உண்டாக்கிச் சிவபிரானைக் கொல்லும் பொருட்டு ஏவினார்கள். பரமபதி அப்பூதத்தைக் கொல்லாது அதனைத் திருவடியால் மிதித்து அதன்மீது நின்று திருநடனம் புரிந்தருளினார்.*

*முயலகன் என்பது ஆணவமலம் என்று உணர்க. ஆணவ மலம் ஒருபோதும் அழியாது. அதன் வலி தேய்ந்து அடங்கி நிற்கும். அதனால், இறைவன் முயலகனைக் கொல்லாது அதன் வலியை அடக்கியருளினார்.*

*முயலகன் என்ற பூதம் மிகவும் கொடியது என்பதனைக் கீழ்வரும் பாடலினாலும் அறிக.*

தூக்கியகால் நோகாதோ துட்ட முயலகன்மேல்
தாக்கியகால் தானுஞ் சலியாதோ - *குருநமச்சிவாயர்*

## கருத்துரை

*அசுரரை வென்ற தீரரே! வள்ளிமணாளரே! உமை மைந்தரே! நமன் வரும் இறுதிநாளில் தேவரீர் வந்தருளி உறுதி யளிக்கவேணும்.*

## 11

ஓது வித்தவர் கூலிகொ டாதவர்
மாத வர்க்கதி பாதக மானவர்
ஊச லிற்கன லாயெரி காளையர் மறையோர்கள்

ஊர்த னக்கிட ரேசெயு மேழைகள்
ஆர்த னக்குமு தாசின தாரிகள்
ஓடி யுத்தம ரூதிய நாடின ரிரவோருக்

கேது மித்தனை தானமி டாதவர்
பூத லத்தினி லோரம தானவர்
ஈசர் விஷ்ணுவை சேவைசெய் வோர்தமை யிகழ்வோர்கள்

ஏக சித்ததி யானமி லாதவர்
மோக முற்றிடு போகித மூறினர்
ஈன ரித்தனை பேர்களு மேழ்நர குழல்வாரே

தாத தத்தத தாதத தாதத
தூது துத்துது தூதுது தூதுது
சாச சச்சச சாசச சாசச சசசாச

தாட டட்டட டாடட டாடட
டூடு டுட்டுடு டூடுடு டூடுடு
தாடி டிட்டிடி டீடிடி டீடிடி டிடிடீடி

தீதி தித்திதி தீதிதி தீதிதி
தோதி குத்திகு தோதிகு தோதிகு
சேகு செக்குகு சேகுகு சேகுகு செகுசேகு

சேயெ னப்பல ராடிட மாகலை
ஆயு முத்தமர் கூறிடும் வாசக
சேகு சித்திர மாகநி ணாடிய பெருமாளே

## பதவுரை

*தாத தத்தத தாதத தாதத தூது துத்துது தூதுது தூதுது சாச சச்சச சாசச சாசச சசசாச தாட டட்டட டாடட டாடட டுடு டுட்டுடு டுடுடு டுடுடு தாடி டிட்டிடி டீடிடி டீடிடி டிடிடீடி தீதி தித்திதி தீதிதி தீதிதி தோதி குத்திகு தோதிகு தோதிகு சேகு செக்குகு சேகுகு சேகுகு செகுசேகு சேஎன - தாத தத்தத..... செகுசேகு சே என்ற தாள வகைகளைச் சொல்லி, பலர் ஆடிட* - பலர் அருகில் நின்று ஆட, *சேகுசித்திர மாகநிண் ஆடிய* - மிக்க அழகாக நின்று திருநடனம் புரிந்த, *பெருமாளே* - பெருமையின் மிக்கவரே! *மாகலை ஆயும் உத்தமர் கூறிடும் வாசக* - சிறந்த கலைகளை ஆராய்கின்ற ஆன்றோர்கள் புகழ்கின்ற சொற்களை யுடையவரே! *ஓதுவித்தவர் கூலி கொடாதவர்* - கல்வி கற்பித்த ஆசிரியருக்குத் தரவேண்டிய பொருள்களைத் தராதவர்களும், *மாதவர்க்கு அதிபாதகம் ஆனவர்* - தவம் செய்கின்ற பெரியோ ருக்கு மிகுந்த பெரும் பாவத்தைச் செய்தவர்களும், *ஊசலில் கனலாய் எரி காளையர்* - ஊஞ்சலைப்போல் அங்கும் இங்கும் அலைந்து காமத்தீயால் வேகும் இளைஞரும், *மறையோர்கள் ஊர்தனக்கு இடரேசெய்யும் ஏழைகள்* - வேதங்களை ஓதுகின்ற அந்தணர்களுடைய கிராமங்களுக்குத் தீங்கையே செய்கின்ற அறிவில்லாதவர்களும், *ஆர் தனக்கும் உதாசின தாரிகள்* - யாரையும் நிந்தனை செய்யும் தீயவர்களும், *ஓடி உத்தமர் ஊதியம் நாடினர்* - உத்தமர்களுடைய இலாபத்தை விரைந்து சென்று கவர்பவர்களும், *இரவோருக்கு ஏதும் இத்தனை தானம் இடாதவர்* - வந்து யாசிப்பவர்க்கு ஒருசிறிதாவது யாதாயினும் ஒன்றைக் கொடுத்து உபசரிக் காதவர்களும், *பூதலத்தினில் ஓரமதானவர்* - மண்ணுலகின்கண் மன்றோரஞ் சொன்னவர்களும், *ஈசர் விஷ்ணுவை சேவை செய்வோர்தமை இகழ்வோர்கள்* - சிவ மூர்த்தியையும் திருமாலையும் சேவைசெய்கின்ற திருத்தொண்டர்களை இகழ்ந்து பேசுகின்றவர்களும், *ஏக சித்த தியானம் இலாதவர்* - ஒருமைப்பாட்டுடன் இறையைத் தியானம் புரியாதவர் களும், *மோகம் உற்றிடு போக இதம் ஊரினர்* - மோகத்துடன் கூடிய போகத்தில் ஆசை வைத்தவர்களும், *ஈனர் இத்தனை பேர்களும்* - இழிந்தவர்களாகிய இத்தனை பேர்களும், *ஏழ் நரகு உழல்வாரே* - ஏழுநரகங்களில் மீட்டு மீட்டுச் சென்று உழல்கின்ற வர்களாவார்கள்.

## பொழிப்புரை

*தாத தத்தத தாதத தாதத தூது துத்துது தூதுது தூதுது சாச சச்சச சாசச சாசச சசசாச தாட டட்டட டாடட டாடட டுடு டுட்டுடு டுடுடு டுடுடு தாடி டிட்டிடி டீடிடி டீடிடி டிடிடீடி தீதி தித்திதி தீதிதி தீதிதி தோதி குத்திகு தோதிகு தோதிகு சேகு செக்குகு சேகுகு சேகுகு செகுசேகு சே என்ற தாள ஒத்துக் களுடன் அருகில் பலர் ஆட, மிக்க அழகாக நின்று திருநடனம் புரிந்த பெருமிதம் உடையவரே! உயர்ந்த கலைகளை ஆய்ந்த உத்தம சீலர்கள் புகழ்ந்து கூறுந் துதிகளையுடையவரே! படிப்பித்த வருடைய கூலியைக் கொடுக்காதவர்களும், உயர்ந்த தவசீலர் களுக்குப் பெரும் பாவத்தைச் செய்தவர்களும், ஊஞ்சலைப்போல் அலைந்து காமத்தீயால் வெந்து உழலும் இளைஞரும், வேதங்களையுணர்ந்த அந்தணர்களுடைய ஊருக்கு இடர்புரிந்த அறிவில்லாதவர்களும், யாரையும் நிந்திக்குந் தீயவர்களும், உத்தமர் களுடைய பொருளை விரைந்து கவர்கின்றவர்களும், யாசிப்ப வருக்கு யாதாமொரு பொருளைச் சிறிதளவாவது வழங்காத வர்களும், மண்ணுலகில் மன்றோரஞ் சொன்னவர்களும், சிவபெரு மானையும் திருமாலையும் வணங்கும் அடியவர்களை இகழ்கின்ற வர்களும், ஒருமையுடன் இறைவனை நினைந்து தியானம் புரியாதவர்களும், மோகத்தீயால் வெதும்பிச் சதா போகிகளாய்த் திரிபவர்களுமாகிய இத்தனைப் பேர்களும் இழிந்தவர் களாவார்கள். இவர்கள் ஏழுநரகங்களில் நெடுங்காலங் கிடந்து துன்புறுவார்கள்.*

## விரிவுரை

**ஓதுவித்தவர் கூலி கொடாதவர்:-**

*ஓதுவித்தவர் - கல்வியைக் கற்பித்தவர்.*

*உணவினால் உடம்பு வளர்கின்றது. கல்வியினால் உணர்வு வளர்கின்றது. ஓதுவதனால் உணர்வு வருகின்றது என்பதை "ஓதியுணர்ந்தும்" என்ற திருவாக்கால் அறிக. கல்வி என்ற சொல்லுக்கு அறியாமையை அகழ்வது என்பது பொருள். கல் என்ற பகுதி தோண்டு என்ற பொருள்பட நிற்பதையறிக.*

*கற்றவரே கண்ணுடையராவார். கல்லாதவர்களைக் கண்ணில் லாத விலங்குகளோடு சேர்த்து எண்ணுதல் வேண்டும்.*

*கல்வி கடலை ஒக்கும். "கல்வியென்னும் பல்கடல்*

பிழைத்தும்" என்பர் மாணிக்கவாசகர். கடலைக் கப்பலின்றிக் கடக்க முடியாது. கப்பலை மாலுமி செலுத்துகின்றான். கப்பல் போன்றது கல்விக்கழகம். மாலுமி போன்றவர் ஆசிரியர். மாலுமி யின்றிக் கப்பலில் ஊர்ந்து கடலில் செல்ல முடியாது. அதுபோல, ஆசிரியர் இன்றிக் கல்வியைக் கற்றுக்கொள்ள முடியாது.

மேலும் கல்வி கடல்நீரை நிகர்க்கும். தாகவிடாய் கொண்ட வன் கடல்நீரை மொண்டு பருகுவானாயின் விடாய் கூடுமே யன்றிக் குறையாது. அதுபோல் சந்தேக விபரீத அறியாமை யுடையவன் தானே கலைகளைக் கற்கத் தொடங்குவானாயின் அவனுடைய ஐய விபரீத அறியாமைகள் அகலா. கடல் நீரை மேகம் பருகி உவரை மாற்றி நன்னீராகப் பொழிவதுபோல், ஆசிரியர் கலைக் கடலைப்பருகிப் பக்குவ நிலைக்குத் தக்கவாறு கூறுவார். மேகம் போன்ற ஆசிரியர் மூலம் கல்வி கற்று நலம்பெற வேண்டும்.

இத்தகைய ஆசிரியருக்குத் தக்கிணை தருவது இன்றியமை யாத கடப்பாடாகும்; குரு தக்கிணை தருவதற்காக உதங்கமுனிவர் செய்த முயற்சி மிகப்பெரியது. குருதக்கிணை தரும் பொருட்டுக் காதிமுனிவர் படாதபாடு பட்டனர். ஆதலின், ஓதுவித்தவருக்கு ஓதனமாகத் தராதவர் நரகில் வீழ்ந்து துன்புறுவர் என்று அடிகள் கூறுகின்றனர். இப்பாடலில் கூறும் நரகில் வீழ்ந்து துன்புறு வோர்களாகிய பதினொரு தீயவர்களில் முதன்மை இடம் பெற்றவர் குருத்துரோகிகள் என்பதை உய்த்துணர்க.

**மாதவர்க்கதிபாதகமானவர்:-**

பாதகம் - பெரும்பாவம்.

"நரரினில் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே" என்ற சிவஞான சித்தியார் திருவிருத்தத்தால் அறிக.

மாதவர் - பெரியதவத்தைச் செய்பவர். தவசீலர்கட்கு உதவு வது உத்தமர்களுடைய தன்மை. தவவொழுக்கத்துக்கு இடை யூறாக அம்மாதவர்க்கு இடர்பல விளைக்கின்றவர்கள் நரகில் வீழ்ந்து வேதனையுறுவார்கள்.

மதுரையில் வணிகர் குலத்தில் தோன்றிய மூர்த்தி நாயனார் "எப்பற்றினையும் அறுத்து ஏறுகைத் தேறுவார் தாள் மெய்ப்பற் றெனப் பற்றி விடாத விருப்பின் மிக்கவராய்" விளங்கினார். ஆலவாய் அரனார்க்குச் சந்தனக்காப்பு இடையறாது தந்து திருத்தொண்டு புரிந்து வந்தார்.

அப்போது கருநட நாட்டிலிருந்து வந்து பாண்டியனை வென்று, பாண்டிநாட்டை அரசாண்டு வந்த சமண் சமயத்தைச் சார்ந்த மன்னன் சிவனடியார்க்குத் தீங்குபல செய்து, மூர்த்தி நாயனார் நாளும் புரியும் சந்தனக்காப்புக்குச் சந்தனக் கட்டை கிடையாத வண்ணந் தடுத்தனன். மூர்த்தி நாயனார் பெரிதும் வருந்தி, சந்தனக் கட்டைக்கு முட்டு வந்ததேயன்றி, அதனை அரைத்துத்தரும் கைக்கு முட்டு வரவில்லையென்று, வட்டமான சந்தனக் கல்லின்மீது தோல் நரம்பு எலும்பு முதலியன தேய முழங்கையைத் தேய்த்தனர். இறைவர் அருள்வாக்கால் அவரைத் தடுத்து அருள் புரிந்தனர். அவர்க்கு அதிபாதகஞ் செய்த மன்னன் உடனே ·மாண்டு தீவாய் நரகிடை வீழ்ந்தான்.

இவ்வா றுலகத்தின் இறப்ப உயர்ந்த நல்லோர்
மெய்வா மூலகத்து விரைந்தணை வார்க ளேபோல்
அவ்வா றரனார் அடியாரை அலைத்த தீயோன்
வெவ்வாய் நிரயத் திடைவீழ விரைந்து வீந்தான்- *பெரியபுராணம்*

**ஊசறிற்கனலாயெரி காளையர்:-**

ஊஞ்சல் இப்படியும் அப்படியுமாக நான்கு கயிறுகளால் கட்டப்பட்டு அலையும். அதுபோல் ஐந்து மாயைகளாகிய சங்கிலிகளால் கட்டப்பட்டு இரவு பகலென்று தெரியாமல் இங்கு மங்குமாகச் சிலர் காமத் தீயினால் வெந்து நொந்து அலைவர் அவ்வாறு அலைபவர் நரகிடை வீழ்ந்து நலிவார். அடியில் வரும் சிந்தாமணி விருத்தத்தினையும் நோக்குக.

காதலாள் கரிந்து நைய கடியவே கனைந்து கன்றி
ஏதிலான் தார நம்பி எளிதென இறந்த பாவத்
தூதுலை யுருக வெந்த ஒள்ளழற் செப்புப் பாவை
ஆதகா தென்னப் புல்லி அலறுமால் யானை வேந்தே.

கீசகன், கிம்மீரணன் முதலியோர் இந்த இனத்தைச் சேர்ந்தவர்களாவார்கள்.

**மறையோர்கள் ஊர்தனக்கிடரே செயுமேழைகள்:-**

மறையோர் - வேதங்களை ஓதி உணர்ந்து ஓதுவிப்பவர்கள். தனக்கென்று வாழாது, நாளைக்கு வேண்டும் என்று சேமித்து வைக்காது, உலக நன்மைக்கு என்று பலப்பல விரதங்களை மேற்கொண்டு, உலகம் வாழ வேண்டுமென்று ஜெபதபங்களைச் செய்துகொண்டு வாழ்வோர்கள்.

"லோகா: ஸமஸ்தா: சுகினோ பவந்து" என்று கூறும் பிரார்த்தனையால் இதனை அறிக.

இவ்வாறு, தனக்கென்று வாழாது, உலகிற்கு என்று வாழும் உத்தமமான அந்தணர்கள் வாழ்கின்ற கிராமத்திற்கு இடர் புரிவோர் உலகிற்கு இடர் புரிந்தவராவார்கள். அதனால்தான் அவர்கள் நரகில் வீழ்கின்றவர்கள் ஆவார்கள். இப்பாவத்தை அறிஞர் புரியார்.

**ஆர்தனக்கு முதாசினதாரிகள்:-**

உதாசினம் - நிந்தனை.

"உள்ளூரையு தாசினங்கள் சொல்லவேண்டாம்" - உலகநீதி.

குறிப்பிட்ட சிலரை நிந்திப்பவர்கள் சிலர். சிலர் பிறரை நிந்திப்பது என்பதையே தமது முதற்கடமையாகக்கொண்டு படலம் படலமாக பிறர்களது குற்றங்களைக் கூறித்திரிவர். இவை மிக இழிந்த குணம். பிறர் குற்றங்குறைகளைக் கூறித் திரிபவன் தன் குற்றத்தையுணரமாட்டான். ஆதலின், அவன் ஒருபோதும் திருந்தவும் மாட்டான். ஆதலினால், அவன் மேலும், மேலும் தீமையே புரிந்து எரிவாய் நரகில் எய்துவான்.

பிறரால் நன்கு மதிக்கப்பட வேண்டுமாயின் மறவாமல் மேற் கொள்ளவேண்டியது ஒன்று உண்டு. அது என்னை? பிறர் குணங் களைத் தாமாகவே வலிந்து கூறவேண்டும். பிறர் குற்றங்களைக் கேட்டாலும் எடுத்துக்கூறக் கூடாது.

> பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
> மறவாது நோற்பதொன் றுண்டு - பிறர்பிறர்
> சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
> யார்யார்க்குந் தாழ்மை சொலல்.
>
> - சிவப்பிரகாசர்

> வையமேல் பிறர்தங் கோலமும் நடையும் வண்ணமும்
> அண்ணலே சிறிதும்
> பையநான் ஊன்றிப் பார்த்ததே யில்லை பார்ப்பனேல் பயமிகப்
> படைப்பேன்.
>
> - திருவருட்பிரகாச வள்ளலார்

**ஓடியுத்தமர் ஊதிய நாடினர்:-**

உத்தமர்கட்கு ஒல்லும் வகையால் ஓவாது செல்லும் வாயெல்லாம் உதவுதல் வேண்டும். அதனால், உலகந் தழைக்கும்.

நம்பியாரூரர் திருவாரூரில் தங்கியிருந்த பொழுது அவரைக் காணவரும் அடியார்கட்கும் அவருக்கும் பயன்படுமாறு குண்டையூர்கிழார் இடையறாது நெல்லும் பருப்பும் வெல்லமுந் தந்தனர் என்ற வரலாறு சிந்தனைக்குரியது.

உத்தமருடைய பொருளைக் கவர்வது மிகப் பெரும் பாவமாகும். இப்பெரும்பாவத்தை அஞ்சாது புரிந்தவர்கள் அருநரகிடை சேர்ந்து அல்லலுறுவார்கள்.

நளமன்னனுடைய நாடுநகரங்களைச் சூதினால் கவர்ந்த புஷ்கரன் இம்மையில் பழியும் மறுமையில் பாவத்தினால் நரகமும் சேர்ந்ததை இங்கு நினைவு கூர்க.

**இரவோருக்கு ஏதுமித்தனை தானமிடாதவர்:-**

உடம்பைவிட்டு உயிர்பிரியும் இறுதியில் உறுதி பயந்து துணையாக வருவது, ஏழைகட்கு அளித்த தானதருமமேயாகும் என்பதை மறவாது மன்பதைகள் கடைப்பிடிக்க வேண்டும். இம்மையில் புகழும் மறுமையில் புண்ணியமும் நல்குவது தருமமேயாகும். புகழில்லாதவன் தோன்றாமல் இருப்பது நல்லது என்பார் திருவள்ளுவர். அப்புகழ் 'வறியார்க்கு ஒன்று ஈவார்மேல் நிற்கும்' என்றும் திட்டமாகக் கூறினார்.

ஏற்றவர்க்கு இட்டது எங்காயினும் வரும்; இடாது வைத்த பொன்னும் மணியும் மாடும் வீடும் நிலமும் பலமும் உயிர் போம்போது உடன் வாரா; அடியில் வரும் கந்தரலங்காரத் திருப்பாடலை நன்கு சிந்திக்க.

**பொங்கார வேலையில் வேலைவிட் டோன்அருள் போலுதவ**
**எங்கா யினும்வரும் ஏற்பவர்க் கிட்ட திடாதுவைத்த**
**வங்கா ரமும்உங்கள் சிங்கார வீடும் மடந்தையரும்**
**சங்காத மோகெடு வீர்உயிர் போம்அத் தனிவழிக்கே.**

நிரம்ப தருவதற்கு ஆற்றல் இல்லாதவர்கள் ஏதாவது ஒரு சிறிதாயினும் வறியவர்க்கு வழங்க வேண்டும். "இலையாயினும் வெந்தது ஏதாயினும் பகிர்ந்து ஏற்றவர்க்கே" "அது தொலையா வழிக்குப் பொதிசோறும் உற்ற துணையுமாக வந்து உதவும்" என்பார் பிறிதோர் அலங்காரப் பாடலில். குறைந்த ஆற்றலுடையவர்கள் "வறிஞர்க்கு என்றும் நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கள்" என்கின்றார். "குன்றிப் பிளவளவு தினையளவு பங்கிட்டு" என்கின்றார் செந்தில் திருப்புகழில். "தவிடினாற்

பதமெனினும் ஏற்பவர் தாழா தீயேன்" என்கின்றார் மற்றொரு திருப்புகழில். தவிடளவாவது தருகின்றேனில்லை என்று வருந்துகின்றனர். மேலும் தரவேண்டும் என்ற எண்ணம் ஒரு தினையளவேனும் இருக்க வேண்டும்" என்று இடித்துக் கூறுகின்றனர்.

"பகிர நினைவொரு தினையள விலுமிலி"

ஈகையும் இரக்கமுமின்றி, பொருள் தேடி, ஒரு சிறிதும் வறியார்க்கு வழங்காது மாள்கின்ற வன்கணாளர்களை இமய தூதர்கள் "தண்ணீர், தண்ணீர்" என்று தாகவிடாயால் தவிக்குமாறு கொடிய வழியில் நடப்பித்துக் கொண்டுபோய் கும்பிபாகம் முதலிய நரகிடை வீழ்த்தி வேதனைப் படுத்துவர்.

"எரிவாய்நரகக்
குழியும் துயரும் விடாய்ப்படக் கூற்றுவ னூர்க்குச்செல்லும்
வழியுந் துயரும் பகரீர் மறந்தவர்க்கே" - *அலங்காரம்.*

"காசுதேடி ஈயாமல் வாழப் பெறுவோரும்"
"மாறிலாத மாகால னூர்புக் கலைவாரே" - *திருப்புகழ்.*

**பூதலத்தினி லோரமதானவர்:-**

ஓரம் – நடுநிலையின்றி ஒரு பக்கமாகச் சாய்ந்து பேசுவது;

நியாய சபையில் நடுநிலை கோடி ஒரு பக்கமாகத் தீர்ப்பு கூறுவது மிகப் பெரும்பாவம். அவ்வாறு கூறியோர் இருந்த இடமும் அழியும்.

வேதாளஞ் சேருமே வெள்ளெருக்கம் பூக்குமே
பாதாள மூலி படருமே - மூதேவி
சென்றிருந்து வாழ்வாளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை.

உள்ள வழக்கிருக்க ஊரார் பொதுவிருக்கத்
தள்ளி வழக்கதனைத் தான்பேசி - எள்ளளவும்
கைக்கூலி தான்வாங்குங் காலறுவான் தன்கிளையும்
எச்சமிறு மென்றால் இறு. - *ஔவையார்*

**ஈசர் விஷ்ணுவை சேவை செய்வோர்தமை இகழ்வோர்கள்:-**

சிவனடியார்களையும் திருமாலடியார்களையும் இகழ்வது கொடிய பாவமாகும்.

திருமால் சிவனுருவில் பாதியென அறிக. சிவமூர்த்தம் இருபத்தைந்தில் கேசவார்த்தமூர்த்தி ஒன்று என்பதையும், சத்தகுரவர்களில் திருமால் ஒருவர் என்பதையும், இறைவனது புருஷசக்தி திருமால் என்பதனையும் "அரியல்லால் தேவியில்லை ஐயன் ஐயாற னார்க்கே" என்ற தமிழ்மறையையும், இங்கு உன்னி உய்வுபெறுக.

அன்றியும் சிவத்தை வணங்கித் திருமாலை நிந்திப்போரும், திருமாலை வணங்கிச் சிவத்தை நிந்திப்போரும் நற்கதிசேரார் என்பதைத் திட்டமாக உணர்க. "தெய்வமிகழேல்" என்ற ஔவையார் திருவாக்கையும் உணர்க. தெய்வநிந்தை செய்து, அத்தெய்வத் தொண்டரையும் நிந்திப்பர். தெய்வநிந்தனையைக் காட்டிலும் அடியார் நிந்தை அதிபாதகம் என்க. சூரியனைச் சிறிது நேரம் எதிர்த்து வெயிலில் நிற்கலாம். சூரியனுடைய அருள் பெற்ற நொய்மணலில் ஒரு நிமிஷங்கூட நிற்க முடியாது என்பதையறிக.

பாண்டி நாட்டில் எண்ணாயிரம் சமண குருமார்கள் சிவநிந்தை நீண்டகாலமாகச் செய்து வந்தார்கள். ஞான சம்பந்தராதி அடியாரை நிந்தை செய்தவுடன் விரைந்து அழிந் தார்கள. இரணியன் ஐந்துகோடி இருபத்தியைந்து லக்ஷத்து முப்பத்தையாயிரம் ஆண்டுகள் திருமாலை நிந்தித்தான். பிரகலாத ராகிய அடியவரை நிந்தித்தவுடன் வல்விரைந்து அழிந்தான்.

**மோகமுற்றிடு போகித மூறினர்:-**

மோகத் தீயினால் வெம்பி சதா நற்சிந்தையின்றி இருண்ட உள்ளத்துடன் போக நுகர்ச்சியையே விரும்பி அம்மாய வாழ்க்கை யிலேயே அழுந்திக் கிடப்பவர்கள். இவர்கள் யாங்ஙனம் நற்கதி பெறுவார்? இவ்வரிய பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும் பிறவிப்பயனைப் பெறாதவர்களாவார்.

**ஏகசித்த தியானமிலாதவர்:-**

நல்ல உணவினால் உடம்பு வலுப்படுவதுபோல் தியானத்தி னால் உயிர் வலுப்படும். ஒவ்வொருவரும் சிறிது நேரமாகிலும் தியானஞ் செய்ய வேண்டும். தியானத்தினால் மனோசாந்தி யுண்டாகும். அரைநிமிடநேரமாகிலும் தியானஞ் செய்யவேண்டும் என்று அடிகள் வற்புறுத்துகின்றனர்.

"சரணகம லால யத்தை அரைநிமிட நேர மட்டில்
தவமுறைதி யானம் வைக்க அறியாத" - *திருப்புகழ்*

ஞானிகளும் மாதவரும் முருகனடியைத் தியானம் செய்கின்றார்கள்.

"திரோத மலமாறு மடியார்க ளருமாதவர்
தியான முறுபாதந் தருவாயே"

ஒருமைப்பட்ட மனத்துடன் தியானிக்க வேண்டும். உருத்திர பசுபதி நாயனார் திருஉருத்திர மந்திரத்தை ஒருமையுடன் தியானித்ததனால் சிவனருள் பெற்றனர்.

அரும றைப்பய னாகிய உருத்திர மதனை
வருமு றைப்பெரும் பகலுமெல் லியும்வழு வாமே
திரும லர்ப்பொகுட் டிருந்தவ னனையவர் சிலநாள்
ஒருமை யுய்த்திட உமையிட மகிழ்ந்தவர் உவந்தார்

- *பெரியபுராணம்*

"ஒருமையுட னினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்" - *இராமலிங்கர்.*

ஆதலினால், தியானாதி நற்கருமங்களைப் பூண்டு நன்னெறி சாராதார் நரகஞ் சார்வார்.

**ஈனர் இத்தனை பேர்களும் ஏழ் நரகுழல்வாரே:-**

ஈனர் – இழிந்தவர்கள். இந்தப் பதினோரு பேர்களும் உலகில் மிகவும் இழிந்தவர்களாவார்கள். இவர்கள் ஏழு நரகங்களில் வீழ்ந்து துன்புறுவார்கள்.

ஏழு நரகங்களாவன :- அள்ளல், இரௌரவம், கும்பி பாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி.

மேலே கண்ட பாவங்களினின்று விலகிச் சிவபுண்ணியங்களைக் கடமையென்று பயனை விரும்பாமல் செய்து மீட்டு இங்கு வாராத நெறிபெற்று, சிவானந்தப் பெருவாழ்வைப் பெறுவதற்கு ஒவ்வொருவரும் முயலுதல் வேண்டும்.

## கருத்துரை

அழகாகத் திருநடனம் புரியும் திருமுருகா! குருத் துரோகம் முதலான பெருந் தீவினை புரிந்தோர்கள் நரகத்தில் வீழ்ந்து நலிவார்கள்.

## 12

பழுதற வோதிக் கடந்து
பகைவினை தீரத் துறந்து
பலபல யோகத் திருந்து மதராசன்

பரிமள பாணத் தயர்ந்து
பனைமட லூர்தற் கிசைந்து
பரிதவி யாமெத் தநொந்து மயல்கூர

அழுதழு தாசைப் படுங்க
ணபிநய மாதர்க் கிரங்கி
யவர்விழி பாணத் துநெஞ்ச மறைபோய்நின்

றழிவது யான்முற் பயந்த
விதிவச மோமற் றையுன்ற
னருள்வச மோயி ப்ரமந்தெ ரிகிலேனே

எழுதரு வேதத் துமன்றி
முழுதினு மாய்நிற் குமெந்தை
யெனவொரு ஞானக் குருந்த ருளமேவும்

இருவுரு வாகித் துலங்கி
யொருகன தூணிற் பிறந்து
இரணியன் மார்பைப் பிளந்த தனியாண்மை

பொழுதிசை யாவிக் ரமன்தன்
மருகபு ராரிக் குமைந்த
புளகப டீரக் குரும்பை யுடன்மேவும்

புயல்கரி வாழச் சிலம்பின்
வனசர மானுக் குகந்து
புனமிசை யோடிப் புகுந்த பெருமாளே.

### பதவுரை

*எழுத அரு வேதத்தும் - எழுதுதற்கு அரியதான வேதத்திலும், அன்றி - அல்லாமல், முழுதினுமாய் நிற்கும் எந்தை என - எல்லாப் பொருள்களிலும் எங்கும் கலந்து நிற்கும் எமது பிதாவே என்றுகூற, ஒரு ஞான குருந்தர் உளமேவும் - ஒப்பற்ற அறிவுக் கொழுந்தாகிய பிரகலாதருடைய உள்ளத்தில் வீற்றிருப்பவரும்,*

இரு உருவு ஆகி துலங்கி - பெரிய விசுவரூபமாக விளங்குபவரும், ஒரு கன தூணில் பிறந்து - ஒப்பற்ற பெருமையுடைய தூணினில் தோன்றி, இரணியன் மார்பை பிளந்த - இரணியனுடைய மார்பினைப் பிளந்தவரும், தனி ஆண்மை பொழுது இசையா- இணையற்ற வலிமை எப்பொழுதும் பொருந்தியவரும், விக்ரமன் தன் மருக - வீரமூர்த்தியுமாகிய திருமாலின் மருகரே! புரஅரிக்கு மைந்த - திரிபுரத்தை யெரித்த சிவபெருமானுடைய திருக் குமாரரே! புளக படீர குரும்பை உடன்மேவும் - மயிர் சிலிர்க்கையும் சந்தனமும் பொருந்த இளநீர் போன்ற தனபாரங்களுடன் கூடியவரும், புயல் கரி வாழ் அச்சிலம்பின் வனசரமானுக்கு உகந்து - மேகமும் யானையும் வாழ்கின்ற அந்த மலையில் வேடர் குலத்தில் வந்தவருமாகிய மான் போன்ற வள்ளியம்மையாரை விரும்பி, புனமிசை ஓடி புகுந்த - தினைப்புனத்தின்கண் விரைந்து சென்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! பழுது அற ஓதி - குற்றமறக் கல்விகளை ஓதியும், கடந்து - உலக ஆசைகளைக் கடந்தும், பகைவினை தீர துறந்து - உட்பகைகள் நல்வினை தீவினைகள் நீங்க விலகியும், பல பல யோகத்து இருந்து - பற்பல வகையான யோக நெறிகளில் இருந்தும், மதராசன் பரிமள பாணத்து அயர்ந்து - மன்மதனுடைய வாசனை பொருந்திய கணைகளினால் மெலிந்து, பனைமடல் ஊர்தற்கு இசைந்து - பனைமடலாற் செய்த குதிரையில் ஏறுவதற்கு உடன்பட்டும், பரிதவியா மெத்த நொந்து - மிகுந்த கவலையுடன் மனம் நொந்தும், மயல்கூர - மயக்கம் மிகுதியடைய, அழுது அழுது ஆசைப்படும் - அன்புபோல் நடித்து அழுது அழுது விரும்பும், கண் அபிநய - கண்களினால் அபிநயிக்கும், மாதர்க்கு இரங்கி - விலைமாதர்களிடம் அன்பு வைத்து, அவர் விழி பாணத்து - அவர்களுடைய கண்களாகிய கணைகளினால், நெஞ்சம் அறை போய் நின்று அழிவது - உள்ளம் கெட்டழிந்து நின்று கெடுவது, யான் முன் பயந்த விதிவசமோ - அடியேன் முன் செய்த ஊழின் தன்மையோ, மற்றை உன்றன் அருள்வசமோ - அல்லது தேவரீரது திருவருள் தன்மையோ இப்ரமம் தெரிகிலேனே - இந்த மயக்கத்தைத் தெரிகின்றேனில்லை.

## பொழிப்புரை

"எழுதாக்கிளவியாகிய வேதத்திலும், மற்று எல்லாப் பொருள்களிலுங் கலந்து நிற்கும் எந்தையே" என்ற ஒப்பற்ற

அறிவுக் கொழுந்தாகிய பிரகலாதருடைய உள்ளக் கோயிலில் இருப்பவரும், பெரிய விசுவரூபமாக விளங்குபவரும், சிறந்த பெரிய தூணில் தோன்றி, இரணியனுடைய மார்பைப் பிளந்தவரும், ஒப்பற்ற வலிமையுடன் எப்பொழுதும் இருப்பவரும், வீரமூர்த்தியுமாகிய திருமாலின் மருகரே! முப்புரமெரித்த முக்கட் பெருமானுடைய குமாரரே! சந்தனமணிந்து உரோமாஞ்சலியுடன் இளநீர் போன்ற தனபாரங்களை யுடையவரும், மேகமும், யானையும் வாழ்கின்ற வள்ளிமலையில் வேடர்குலக் குமரியாரும் ஆகிய மான் போன்ற வள்ளி நாயகியைத் தினைப்புனத்தின்கண் விரைந்து சென்று விரும்பிய பெருமிதமுடையவரே! குற்றமறக் கலைகளை ஓதியும், உலக ஆசைகளைக் கடந்தும், உட்பகை வினைகளின்று விலகியும், மன்மதனுடைய பரிமளமிக்க மலர்க்கணையால் வாடி, பனை மடலாற் செய்த குதிரைமீது ஏறுவதற்கு இசைந்தும், உள்ளம் பரிதவித்து வருந்தியும் மயக்கம் மிகுதியாக அடையும் பொருட்டுப் போலியாக அழுது அழுது அவாவுகின்ற கண்களால் அபிநயஞ் செய்யும் விலைமாதரை விரும்பி, அவர்களுடைய கண்ணாகிய கணையால் மனம் கெட்டழிந்து கேடுறுவது அடியேன் முன்செய்த வினை வசமோ? அல்லது தேவரீருடைய திருவருள் வசமோ? இந்த மயக்கம் இன்னதென்று அறிகின்றேனில்லை.

## விரிவுரை

**பழுதற வோதி:-**

"ஓதுவதொழியேல்" என்ற ஔவையார் திருவாக்கின்படி, அறநூல்களை ஓயாது ஓதுதல் வேண்டும். அங்ஙனம் ஓதுங்கால் குற்றமற ஓதுதல் வேண்டும்.

குற்றம் என்பது என்னை?

ஐயம் திரிபு மயக்கம் என குற்றங்கள் மூன்றென உணர்க. பொருளினிடத்தில் உண்டா, இல்லையா என்று ஐயுறுதல்; ஒன்றை யொன்றாக மாறுபட அறிதல்; உண்மை யறியாமல் மயங்குதல் என்ற குற்றங் கடிந்து கற்றல் வேண்டும்.

இதனையே திருவள்ளுவர் கற்க; கசடறக் கற்க; கற்பவை கற்க; கற்றபின் அதற்குத்தக நிற்க என்று கூறுகின்றார்.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

ஓதுவதன் பயன் ஒழுக்கமுடைமையென்றுணர்க. ஒழுக்கமிலாதார் ஓதியும் பயனில்லையென உணர்க.

"ஓதலின் நன்று ஒழுக்க முடைமை"
"ஓதாதார்க் கில்லை ஒழுக்கமும் உயர்வும்"
"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன்று ஒழுக்க முடைமை" - முதுமொழிக்காஞ்சி

இனி, ஓதுகின்ற நாள்களும் குற்றமில்லாத நாள்களாக அமைய வேண்டும். அட்டமி, சதுர்த்தி, பவுர்ணமி, அமாவாசை, பிரதமை எனவே மாதத்தில் எட்டுநாட்கள் ஓதக்கூடாது.

அட்டமியி லோதினால் ஆசானுக் காகாது
சிட்டருக்குப் பன்னான்கு தீதாகும் - கெட்டவுவா
வித்தைக்கு நாசமாம் வெய்ய பிரதமையில்
பித்தரும் பேசார் பிழை. - ஔவையார்

ஆசிரியர் கற்பிக்கும்போது கவனமின்றிக் கேட்டல்; பராக்குப் பார்த்தல்; சிந்தையை வேறு இடத்தில் செலுத்துதல்; அசட்டையாக இருத்தல்; அவமதிப்புடன் நிற்றல் முதலியவைகளும் குற்றம் என அறிக. எனவே, குற்றங் கடிந்து குணங்கொண்டு அடக்கமும் பணிவும் மேற்கொண்டு, அறிவை வளர்க்கும் அறநூல்களை ஓதுதல் வேண்டும்.

கடந்து :-

புலை, கொலை, களவு, பொய்ம்மை, சூது முதலிய தீமைகளைக் கடத்தல்.

மேற்கூறிய தீமைகளை யகற்றியதோடு அமையாமல் கற்றலின் பயனாக அடங்குதல் வேண்டும்.

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில் - திருவள்ளுவர்

பகைவினை தீரத்துறந்து:-

ஒருவரையும் பகையாதிருத்தல். நமக்கு ஒருவர் கேடு செய்வாராயின், அது நம் வினைவழி வந்ததென அறிதல் வேண்டும். நாம் முற்பிறப்பில் ஒருவருக்குக் கேடு செய்திருப் போம். அவ்வினை வசத்தினால் இப்பிறப்பில் நமக்கு ஒருவர் கேடு செய்தனர். ஆகவே, வினையை நோவதேயன்றி செய்தவரை நொந்து பகைக்கக் கூடாது.

நல்வினை தீவினை இரண்டும் பிறவிக்கு ஏதுக்களாதலின் அவ்விருவினைகளையுந் துறத்தல் வேண்டும். நல்வினை பொன்விலங்கு போலும்; தீவினை இரும்பு விலங்கு போலும்; நல்வினை செய்யும்போது பயனை விரும்பாமல் சிவார்ப்பண மாகச் செய்தல் வேண்டும். தீவினை செய்தலும் நினைத்தலும் உரைத்தலும் கூடாது. எனவே, இவ்வண்ணம் இருவினைகளையும் துறத்தல் வேண்டும்.

தீரத் துறத்தலாவது சிறிதுகூடப் பற்றில்லாமல் முற்றத் துறத்தலாகும்.

துறவு என்னுந் தெப்பமே பிறவியாகிய பெருங்கடலுக்குத் தெப்பமாகும். ஒவ்வொருவரும் உறுதியாக இறுதியில் துறவு பெற்றுப் பிறவியைக் கடத்தலே பிறவியின் பயனாகும்.

இறப்பெனு மெய்ம்மையை யிம்மை யாவர்க்கு
மறப்பெனு மதனில்மேல் கேடுமற் றுண்டோ
துறப்பெனுந் தெப்பமே துணைசெ யாவிடில்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்க லாகுமோ. *கம்பர்*

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
விலைப்பட்டார் மற்றை யவர். *- திருவள்ளுவர்.*

பலபலயோகத்திருந்து:-

யோகம் பலதிறப்பட்டது, ஹடயோகம், சாலம்ப யோகம், நிராலம்பயோகம், மந்திரயோகம், ராஜயோகம் இன்னோரன்ன பிற.

சிவயோகம் ஒன்றே தலையாயது, ஏனைய யோகங்களால் உடல் நலமும், மன அமைதியும், ஆயுள் நீடிப்புமே உண்டாகும்.

அருணகிரிநாதர் பலப்பல யோக நெறிகளையும் பயின்றிருக் கின்றார் என்பது இதனால் புலனாகின்றது. இவைகளைப் பயின்றபின் சிவயோகத்தில் தேர்ச்சி பெற்றனர்.

ஹடயோக முதலிய யோகங்களைக் கண்டித்தும் சிவ யோகத்தைப் பாராட்டியும் பாடுகின்றனர்.

"அனித்த மான வூனாளு மிருப்ப தாக வேநாசி
அடைத்து வாயு வோடாத வகைசாதித்
தவத்தி லேகு வால்மூலி புசித்து வாடு மாயா
அசட்டு யோகி யாகாமல் மலமாயை

செனித்த காரி யோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தை யாகி யான்வேறெ னுடல்வேறு
செகத்தி யாவும் வேறாக நிகழ்ச்சி யாம னோதீத
சிவச்சொ ரூப மாயோகி எனஆள்வாய்”

மதராசன் பரிமள பாணத்தயர்ந்து:-

*மன்மதனுடைய மலர்க்கணைகள். அது பரிமள மிக்க அரவிந்தம், அசோகம், மாம்பூ, முல்லை, நீலம்.*

*அநங்கனுடைய கணைகளினால் அறிவாற்றல் அழியும் அவன் கணையினால் மாதவமழிந்தோர் பலர்.*

பனைமடலூர்தற் கிசைந்து:-

*தான் விரும்பிய பெண்ணையடைவதற்காக, வாள் போல் கூர்மையாக உள்ள பனை மடலாற் குதிரைபோற் கட்டி, அதன் மீது ஊர்ந்து, தான் விரும்பிய பெண்ணின் வடிவத்தை ஒரு கிழியில் எழுதிப் பிடித்து ஊரவர் அறிய ஊரை வலம் வருவது. அப்படி வருங்கால் அவன் உடம்பில் பனை மடலால் அறுப் புண்ட இடத்தில் உதிரம் வராதிருத்தல் வேண்டும். அப்போது உண்மையான காதல் என்று ஊரவர் அப்பெண்மணியை அவன்பால் இசையுறப் புரிவர்.*

பரதவியாமெத்த நொந்து:-

*தான் விரும்பிய நங்கையைப் பெறாதொழியின் அளவற்ற துன்பமடைந்து தவிப்பர்.*

உண்டாரை மட்டும் மயக்குங் கள்.
கண்டாரையும் மயக்குங் காமம்.
உண்டாரை மட்டுங் கொல்லும் நஞ்சு
கண்டாரையுங் கொல்லும் காமம்
அருகிற் சென்றால் கொல்லும் நெருப்பு
நீங்கினாலும் கொல்லும் காமம்.

*நீருள் குளித்தும், குன்றேறி ஒளித்தும், நெருப்பின் துன்பத்தை நீக்கிக் கொள்ளலாம். காமத்தினால் வருந் துன்பத்தை அவ்வாறு போக்கிக்கொள்ள முடியாது. ஆதலினால், கள்ளினும், நஞ்சினும், நெருப்பினுங் காமங் கொடியது என உணர்ந்து, அதனினின்றும் பிழைத்து உய்ய வேண்டும்.*

மயல்கூர அழுதழு தாசைப்படுங்கண் அபிநய மாதர்க்கிரங்கி-

*மயல்-மயக்கம்; கூர்தல் அதிகப்படுதல். அபிநயம் கண்ணா லும் கையாலும் மனக்குறிப்பை வெளிப்படுத்துதல்.*

*விலைமகளிர் தன்னிடம் வருவோர், சிறிது நேரம் பிரிந்து வருவாராயின், உண்மைக் காதல்போல் நடித்து, கண்ணீர் பெருக்கி, விரக தாபத்தினால் உயிர் பிரிவதுபோல் துடித்து, உள்ள மயக்கத்தை வெள்ளம்போல் மிகுதிப்படுத்துவர். அவர் வலைப் பட்டோர் கதிகாணாது அலைவர். அவர் தம்மிடம் வருபவர் மேலும் மேலும் மயங்குதற் பொருட்டுப் புரியும் மாயலீலைகள் எண்ணில.*

நாவார வேண்டும் இதஞ்சொல்லு வார்உனை நான்பிரிந்தால்
சாவேனென் றேயிருந் தொக்கவுண் பார்கள்கை தான்வரண்டால்
போய்வாரு மென்று நடுத்தலைக் கேகுட்டும் பூவையருக்
கீவார் தலைவிதி யோஇறை வாகச்சி யேகம்பனே.

*- பட்டினத்தார்*

அவர்விழி பாணத்தயர்ந்து:-

*மாதர்களின் கண்கள் கணைபோன்ற கூர்மையானது. அப்பார்வையாகிய பாணம் இதயத்தைப் பிளக்கும் வன்மை யுடையது.*

"ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை" *- திருப்புகழ்*

"ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்" *- திருவாசகம்*

அழிவது யான் முற்பயந்த விதிவசமோ மற்றை யுன்றன்
அருள்வசமோ இப்ரமந் தெரிகிலேனே:-

*இப்பாடலின் திரண்ட பொருள்:*

*முருகா! அடியேன் நூல்களை யோதியும் பகை வினை களையகற்றித் துறவுபெற்றும், பற்பல யோகத்திருந்தும், மாதராசை யிற்பட்டு மயங்கி யழிவது முன்னை நாளிற் புரிந்த விதி வசமோ? உமது திருவருளின் வசமோ? இதன் தன்மை இன்னதென்று அறிகிலேன்.*

*சிவபெருமானுடைய நெற்றிக்கண் மதனனை யெரித்த ஞானக்கண். அந்த ஞானக்கண்ணினின்றும் மெய்ஞ்ஞான ஜோதி யாக வெளிப்பட்ட ஞானபண்டிதன் திருவருளைப் பெற்ற அடிய வர்கள் நோக்கும் திசையிலேயே பெண் மயக்கம் வாராதென்று தெளிக.*

*அங்ஙனமாக அருணகிரிநாதர் முருகவேளின் முழுமுதற் கருணைபெற்ற ஜீவன்முத்தரன்றோ? அருள்பெற்ற பின்னரும் பெண் மயக்கம் வந்து சூழுமோ? நிச்சயமாகச் சூழாது. அவருடைய கந்தரலங்காரத் திருப்பாடலைக் காண்க.*

கடத்திற் குறத்திப் பிரானரு ளால்கலங் காதசித்தத்
திடத்திற் புணையென யான்கடந் தேன்சித்ர மாதரல்குற்
படத்திற் கழுத்திற் பழுத்தசெவ் வாயிற் பணையில்உந்தித்
தடத்திற் றனத்திற் கிடக்கும்வெங் காம சமுத்திரமே.

*இவ்வாறு காமக்கடலைக் கடந்தேன் என்று கூறிய அடிகளார், எனக்குப் பெண் மயல் தீரவில்லையெனக் கூறுவரோ? அப்படிக் கூற என்ன நியாயம்? அருள் மயமாய அவரை அது வாட்ட வல்லதோ? அப்படி வாட்டுமாயின் திருவருளின் திறந்தான் யாது?*

*திருவருள் பெறுமுன் பெண் மயலால் வாடுவது பொருந்தும். அருள் பெற்றார்க்கு அது பொருந்தாது.*

*அப்படியாயின் மேலே கண்ட பாடலின் உட்கிடை யாது?*

*ஆன்றோர்களது பாடலில் உள்ள கருத்துக்களை அதன் நுட்பந் தெரியாது, அகச்சான்று எனக்கொண்டு, அல்லல் படக்கூடாது. அப்படிக் கூறுவது பெரும்பாவமாகும்.*

"பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன்"
"பொய்யெல்லாம் மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை"
"வணங்கு மிப்பிறப் பிறப்பிவை நினையாது
மங்கையர் தம்மோடும்
பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்திநான்
பித்தனாய்த் திரிவேனை"

*என்று ஏங்கள் சமயகுரவராம் மணிவாசகனார் கூறுவாரெனின் அத்தனையும் அவர்மேல் ஏற்றிக் கூறுதல் பொருந்துமோ?*

"குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன்"

*என்று எங்கள் மற்றொரு சமய குரவராம் அப்பரடிகள் கூறுவா றெனின், அப்பரடிகள் இழிகுலத்திலே பிறந்தவர் தானோ? குணம் பொல்லாதவரோ? அப்படியெண்ணினாலும் எய்துவது நிரயமன்றோ?*

மற்று இதற்கு வழிதான் யாது? எனின் கூறுதும்.

நமது மணிவாசகர், அப்பர், அருணகிரிநாதர் முதலிய ஆன்றோர்கள் தாம் கூறிய தீமைகள் அனைத்தும் அப்பிறப் பிலேயே செய்தவை யென்று கொள்ளக்கூடாது. ஆன்மா பலப்பல பிறவிகளையெடுத்து வருகின்றதன்றோ? முன்னைப் பிறப்புக்களின் நினைவு அவர்கள் தீர்க்கதரிசிகளாதலின் அவர்கட்கு எய்தும், எனவே, பல்லாயிரம் பிறப்புக்களில் செய்தவைகளைப் பற்றி இப்பிறப்பில் கூறுகின்றனர் என்று அறிதல் வேண்டும். இதுதான் இதற்கு விடையென வுணர்க.

இவ்வாறு, உணராதார் ஆன்றோர் மீது நலமலாதன நவின்று நலமழிவர்.

"விடக் கன்பாய் நுகர் பாழனை"

என்று அருணகிரிநாதர் பாடியிருப்பதனால் அவர் புலால் உண்டார் என்றும்,

"வெறிதரும் புனலுணும்"

என்றதனால் அவர் மதுபானம் புரிந்தார் என்றும் எழுதியும் இயம்பியும் சிலர் இடர்ப்படுகின்றனர்.

எனவே, இவ்வாறு ஆன்றோர்களது அருள்வாக்கை நுனித் துணராது மனம் போனவாறெல்லாம் உரை செய்து உலகிற்குத் தீங்கு செய்யக்கூடாது.

முருகனருள் பெறாத முற்பிறப்புக்களிலே அருணகிரி நாதர், ஓதியுணர்ந்தும், துறவு பெற்றும், யோகம் புரிந்தும், மாதர் மயல் அறப்பெறாது தவித்திருப்பர், அவரது அருள் பெறாதார்க்கு அங்ஙனம் நேருவதுண்டு.

பல்லாயிரம் ஆண்டுகள் மனமடக்கி மாதவம் புரிந்த விஸ்வா மித்திரர் மேனகையைக் கண்டவுடன் தடுமாறியதும், பராசரர் நதியின் இக்கரையிலிருந்து அக்கரை போவதற்குள் மச்சகந்தியைக் கண்டு மயங்கியதும், காசிபர் மாயையைக் கண்டு மனங் கலங்கியதும், இன்னும் பல இருடியர் இடர்ப்பட்டதும் நாம் நூல்கள் மூலங் காண்கின்றோம்.

ஆனால், பரமபதியின் அருள்பெற்ற அப்பரிடம் வந்த அரம்பையர்கள் நாணிச் சென்றனர்.

ஆதலின், அருள் வசப்பட்ட அடியார்கட்குப் பெண் மயல்

*பிடியாதென்பது உறுதி.*

**எழுதரு வேதத்து மன்றி முழுதினுமாய் நிற்கு மெந்தை:-**

*விஷ்ணுமூர்த்தி எங்கும் வியாபகமாக விளங்குபவர். வேதம் எழுதாக்கிளவி, வேதத்தினும் மற்றை யெப்பொருளிலும் நீக்கமற நின்று காத்தற் றொழிலைப் புரிவார்.*

*எங்கும் நிறைந்தவர் ஆதலின் இரணியன் அறைந்த கற்றூணிடை நின்று நரசிங்கமாகத் தோன்றினார்.*

**ஞானக் குருந்தர் :-**

*பிரகலாதரை அருணகிரிநாதர் "ஞானத்தின் கொழுந்து" என்று எத்துணை அழகாகக் கூறுகின்றார் என்பதை அன்பர்கள் கவனிக்க. அத்துணைப் பெருமை பிரகலாதருக்குண்டு. கருவிலேயே திருவுடையவராய்ப் பிறந்து, நாராயண மந்திரத்தைப் பாராயணஞ் செய்து, இரணியன் கொடிய தண்டனைகளால் அவரைப் பலவாறு இடர்செய்தும் தளராத ஊக்கத்துடன் பத்திசெய்த பரம பக்த சீலர் பிரகலாதர். அவருடைய உறுதி இமயமலையினும் உயர்ந்தது.*

**புனமிசை ஓடிப்புகுந்த பெருமாளே:-**

*வள்ளிநாயகியை வடிவேலிறை ஓடித்தேடி நாடி வலிதில் சென்று மணந்தார் என்றதன் குறிப்பு பக்குவப்பட்ட ஆன்மாவை இறைவன் விரைந்து அருளுகின்றார் என்பதாகும்.*

## கருத்துரை

*திருமால் மருகரே! சிவபுதல்வரே! வள்ளி மணவாளரே! பெண் மயல் தீர அருள்புரிவீர்.*

## 13

பாணிக்குட் படாது சாதகர்
காணச்சற் றொணாது வாதிகள்
பாஷிக்கத் தகாது பாதக பஞ்சபூத
பாசத்திற் படாது வேறொரு
பாயத்திற் புகாது பாவனை
பாவிக்கப் பெறாது வாதனை நெஞ்சமான

ஏணிக்கெட் டொணாது மீதுயர்
சேணுக்குச் சமான நூல்வழி
யேறிப்பற் றொணாது நாடினர் தங்களாலும்

ஏதுச்செப் பொணாத தோர்பொருள்
சேரத்துக் கமாம கோததி
யேறச்செச் சைநாறு தாளைவ ணங்குவனோ

ஆணிப்பொற் ப்ரதாப மேருவை
வேலிட்டுக் கடாவி வாசவன்
ஆபத்தைக் கெடாநி சாசரர் தம்ப்ரகாசம்

ஆழிச்சத் ரசாயை நீழலி
லாதித்தப் ப்ரகாச நேர்தர
ஆழிச்சக் ரவாள மாள்தரும் எம்பிரானே

மாணிக்கப் ப்ரவாள நீலம
தாணிப்பொற் கிராதை நூபுர
வாசப்பத் மபாத சேகர சம்புவேதா

வாசிக்கப் படாத வாசகம்
ஈசர்க்குச் சுவாமி யாய்முதல்
வாசிப்பித் ததேசி காசுரர் தம்பிரானே.

## பதவுரை

*ஆணி பொன் ப்ரதாப மேருவை* – ஆணிப் பொன் மயமான புகழ்பெற்ற மேருமலை மீது, *வேல் இட்டு* – வேலாயுதத்தை ஏவியும், *வாசவன் ஆபத்தை கெடா* – தேவேந்திரனுடைய துன்பத்தைக் கெடுமாறு செய்தும், *நிசாசரர் தம்ப்ர காசம்* – இரவிலே உலாவுகின்ற அரக்கர்களுடைய ஒளியுடைய, *ஆழிசத்ர சாயை நிழலில்* – சக்கரம் சத்திரம் முதலிய ஆயுதங் களின் சாயையின் நிழல் நீங்க, *ஆதித்த ப்ரகாசம் நேர் தர* – சூரியனுடைய ஒளியை நிகர்த்து, *ஆழி சக்ரவாளம் ஆள் தரும்* – வட்டமான சக்ரவாளகிரி வரையுள்ள ஆன்மாக்களை ஆண்டருள்புரியும், *எம்பிரானே* – எம்மைப் பிரியாமல் இருப்ப வரே! *மாணிக்கம்* – மாணிக்கமணியும், *ப்ரவாளம்* – பவளமும், *நீலம்* – நீலமணியும் சேர்ந்த, *மதாணி* – மார் பதக்கமணிந்த, *பொன் கிராதை* – பொன்போல் ஒளி பொருந்திய வேடர்குல மகளாகிய வள்ளி நாயகியின், *நூபுரம்* – சதங்கையணிந்த, *வாச பத்ம பாத*

சேகர - மணம் வீசுகின்ற தாமரை போன்ற பாதங்களைத் தரித்தவரே! சம்பு வேதா வாசிக்கப்படாத வாசகம் - பிரமதேவர் படித்துக் கூறமுடியாத தனி மந்திரத்தின் உட்பொருளை, ஈசர்க்கு சுவாமியாய் - சிவபெருமானுக்குக் குருமூர்த்தமாக இருந்து, முதல் - அம்முதலெழுத்தை, வாசிப்பித்த தேசிகா- உபதேசித்துப் படிப்பித்த குருநாதரே! சுரர் தம்பிரானே- தேவர்கள் போற்றுந் தனிப்பெருந் தலைவரே! பாணிக்கு உள்படாது - கரங்களால் தொட்டுப் பிடிக்க முடியாததும், சாதகர் காண சற்று ஒணாது - சாதனை செய்வோர்கள் சிறிதுங் காணமுடியாததும், வாதிகள் பாஷிக்க தகாது - சமயவாதிகளால் வாய்விட்டுச் சொல்ல முடியாததும், பாதக பஞ்ச பூதபாசத்தில் படாது- தடையாகவுள்ள ஐம்பெரும் பூத சம்பந்தமான விருப்பத்திற்கு உட்படாததும், வேறு ஒரு உபாயத்தில் புகாது- வேறு ஒரு தந்திரத்தில் சாராததும், பாவனை பாவிக்க பெறாது- இத்தன்மையது இன்ன வடிவுடையது என்று மனதினால் பாவனை செய்தும் அறிய முடியாததும், வாதனை நெஞ்சம் ஆன ஏணிக்கு, எட்ட ஒணாது - வருந்துகின்ற மனமாகிய ஏணிக்கு எட்ட முடியாது, மீதுயர் சேணுக்கு சமான நூல்வழி குறி பற்ற ஒணாது- மிகவும் உயர்ந்த ஆகாயம் போன்று பரந்துள்ள சாத்திரங்களின் வழி சென்று பிடிக்க முடியாததும், நாடினர் தங்களாலும் எது செப்ப ஒணாதது - அறிவினால் நாடப் பார்த்த வர்களாலும் காரணங் கூற முடியாததும் ஆகிய, ஓர் பொருள் சேர- ஒப்பற்ற பரம்பொருளை அடியேன் சேரவும், துக்கமாமக உததி- பெரிய துன்பமாகிய பெருங்கடலினின்றும், ஏற- கடந்து கரையேறு மாறும் செச்சை நாறு தாளை வணங்குவனோ - வெட்சி மலர் மணக்கின்ற உமது திருவடிகளை அடியேன் வணங்கி உய்வேனோ?

## பொழிப்புரை

ஆணிப் பொன் மயமாகிய மேருமலைமீது வேற் படையை விடுத்தும், இந்திரனுடைய துன்பத்தைக் கெடுத்தும், இரவில் உலாவுகின்ற அரக்கர்களுடைய ஒளி மிக்க சக்கரம் சத்திரம் முதலிய ஆயுதங்களின் நிழல் விலகும்படி சூரிய ஒளியை ஒத்து சக்ரவாளகிரி வரையுள்ள ஆன்மாக்களை ஆண்டு அருள்புரிகின்ற தலைவரே! மாணிக்கமும் பவளமும் நீல மணியும் பதித்த மதாணியை அணிந்த வள்ளியம்மையாருடைய நூபுரந் தரித்துள்ள மணம் பொருந்திய தாமரைத் தாளைத் தரித்தவரே! பிரமதேவர்

படிக்க முடியாத ஓம் என்னும் தனி மந்திரத்தைச் சிவபெரு மானுக்குக் குருவாக இருந்து படிப்பித்த தேசிகரே! தேவர்கள் போற்றும் தனிப்பெருந் தலைவரே! கரங்களால் தொட்டுப் பிடிக்க முடியாததும், சாதனை செய்வோர்களால் சிறிதும் காண முடியாத தும், சமயவாதிகளால் இத்தன்மையதென்று கூற முடியாததும், தடையாகவுள்ள ஐம்பெரும் பூதங்களினால் நிகழும் விருப்பத்திற்கு உட்படாததும், வேறு ஒரு தந்திரத்தில் சாராததும், மனதாலும் பாவனை செய்து அறிய முடியாததும், வருந்துகின்ற மனமாகிய ஏணிக்கு எட்டாததும், மிகவும் உயர்ந்த ஆகாயம்போல் பரந்துள்ள சாத்திரங்களின் வழி சென்று பிடிக்க முடியாததும், அறிவினால் நாடியவர்களாலும் காரணஞ் சொல்ல முடியாததும் ஆகிய ஒப்பற்ற பரம்பொருளைச் சேரவும், துன்பமாகிய பெருங்கடலைக் கடக்கவும் தேவரீருடைய வெட்சி மலர் மணக்கின்ற திருவடி களை அடியேன் வணங்குவேனோ?

## விரிவுரை

**பாணிக்குட்படாது:-**

ஒருபொருளை ஒவ்வொரு வாயிலாகவே அறியமுடியும். மலரின் மணத்தைக் கண்ணால் கண்டு அறிய முடியாது; கரத்தினால் தொட்டு அறிய முடியாது; சுவையைக் காதினால் கேட்டு அறிய முடியாது.

மணத்தை நாசியினாலும், சுவையை நாவினாலும் அறிய முடியும். அதுபோல், பரம்பொருளைக் கரங்களால் தொட்டு அறிய முடியாது. ஏன்? அது அறிவும் அறியாமையுங் கடந்த அறிவே ஒரு திருமேனியாகக் கொண்டது. ஆதலினால், அருளறிவினாலேயே அறிதல் வேண்டும்.

**சாதகர் காணச்சற் றொணாது:-**

சாதனை செய்வோர்கள் பரம்பொருளை இந்த ஊனக் கண்ணால் காண இயலாது. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து தன்மாத்திரைகளையுங் கடந்தது கடவுள். ஆகவே, ஐம்பொறிகளால் அறியமுடியாதது.

> **"முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்**
> **அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்"**

என்கின்றார் சைவத்தின் கருவூலமாக விளங்கும் திருமூலர்.

சுவர்க்காதி புவனபோகங்களிலேயுள்ள பற்றையும், மண்ணுலகில் உள்ள பற்றையும், மாதர்மீதுள்ள பற்றையும், மக்கள் மீதுள்ள பற்றையும், செல்வத்தின்மீதுள்ள பற்றையும், தன் ஆன்மாவின் மீதுள்ள அபிமானத்தையும் அறவே ஒழித்த உண்மையுணர்ந்த சிவயோகிகள் மெய்யறிவினாலே அறிவார்கள்.

"வானத்தில் மண்ணில் பெண்ணில் மைந்தரில் பொருளில் ஆசை
தானற்றுத் தமையு நீத்துத் தத்துவ முணர்ந்த யோகர்
ஞானக்கண் கொண்டே யன்றி நாடருஞ் சோதி"

- *திருவிளையாடற்புராணம்*

வாதிகள் பாஷிக்கத்தகாது:-

சமயவாதிகள் தாம் தாம் தமது சிற்றறிவால் அறிந்ததையே பொருள் என்று துணிந்து வாதிடுவார்கள். அவர்கள் சமயாதீதமாகிய தனிப்பெரும் பொருளை யறிகிலார்.

"திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடு உளற அறிவார்;
ஆறுசம யங்கள்தொறும் வேறுவே றாகிவிளை
யாடுமுனை யாவ ரறிவார்?" - *தாயுமானார்*

"ஊழ்கண்ட சமயத் தன்னார் உருவுகண் டாரை யொத்தார்"

- *கம்பர்.*

பாதகபஞ்சபூத பாசத்திற் படாது:-

பாதகம் - தடை

பஞ்சபூதங்களினால் நிகழும் விருப்பங்கள் உண்மைப் பொருளையறியத் தடைகளாகும். மண்ணினால் நாற்றமும், தண்ணீரினால் சுவையும், நெருப்பினால் வடிவமும், காற்றினால் பரிசமும், வெளியினால் ஒலியும் ஆக இந்த ஐந்தையும் ஆன்மா விரும்புகின்றது. இந்த விருப்பம் அற்றவர்க்கே அது விளங்கும். ''பொறிவாயில் ஐந்தவித்தான்'' என்றபடி ஐந்தையும் அவித்தவர்க்கே அருள் கிடைக்கும்.

வேறொருபாயத்தில் புகாது:-

உபாயம் - தந்திரம்.

இறைவனை அவனருளே கண்ணாகக் கொண்டு காணுதல் வேண்டும். அந்த அருள் அன்பினாலே எய்தும். எனவே, இடை

யறாத அன்பு செய்து, அந்த அன்பினால் அருளைப் பெற்று, அத்திருவருளால் பரம்பொருளை யடைதல் வேண்டும்.

இந்த நெறியை விடுத்து யாகம், யோகம் முதலியவை செய்தும் வேறுபல முயற்சிகள் செய்தும் எளிதில் பரம் பொருளையடைய முடியாது எனவுணர்க.

**பாவனை பாவிக்கப் பெறாது:-**

மனதினால் அப்பொருள் இப்படித்து என்று பாவனை செய்யவும் முடியாதது. பாவனாதிதமானது.

"எனதியானும் வேறாக எவரும்யாதும் யானாகும்
இதயபாவ னாதீத மருள்வாயே"

என்ற திருப்புகழடியும் இங்கு உணர்க.

பாவனை மனதால் புரிவது. மனமற்ற இடத்திலேதான் மெய்யுணர்வு அரும்புகின்றது. ஆகவே, அங்கே பாவனைக்கு இடமேயில்லை.

**வாதனை நெஞ்சமான ஏணிக்கெட்டொணாது:-**

உள்ளத்தில் சதா ஆசாபாசத்தினால் வாதனையே குடி கொண்டுள்ளது. கிடைத்த பொருளில் திருப்தியுறாமலும், கிடையாத பொருளை அவாவுவதுமாக நெஞ்சம் உலைகின்றது. மேலும், துன்பத்தை இன்பமாகவும் மாறுபட அறிந்து துன்பத்தைத் தரும் பொருளையே நாடி நாடி நலிகின்றது.

இப்படி யுழல்கின்ற உள்ளமாகிய ஏணியால் இறைவனை அறிய முடியாது.

**நூல்வழி ஏறிப்பற்றொணாது :**

வேத புராண கலைகள் யாவும் அபரஞானமேயாகும். பரஞானம் ஒன்றே பதியையறிய வழியாகும். அபரஞானத்தால் அறியமுடியாது.

"வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரித்த
போதக் காட்சிக்கும் காணலன்" - *கந்தபுராணம்*

"வாசித்துக் காணொணாதது" "சுருதியூடு கேளாது" என்றபடி பரம்பொருள் மறைகளுக்கும் எட்டாததாய், வாக்கிறந்த பூரண மாய் விளங்குவது.

*நூல் பலவாக விரிந்திருப்பதனால் அது ஆகாயம் போன்றது என்றார். "கல்வி யென்னும் பல்கடல் பிழைத்தும்" என்பார் மாணிக்கவாசகர். "நூலறிவுக்கு அப்பாற்பட்டவன் வாலறிவன்" என்பார் திருவள்ளுவர்.*

நாடினர் தங்களாலும் ஏதுச்செப் பொணாது:-

*அதனை அறியவேண்டும் என்று நாடியவர்களாலும் காரணங் கடந்த கடவுளுக்கு ஒரு காரணத்தைக் கற்பித்துக் கூற முடியாது.*

*ஏது - காரணம்.*

"காரண காரிய லோகப்ர பஞ்சச்
சோகமெ லாமற வாழ்வுற நம்பிற்
காசறு வாரிமெய்ஞ் ஞானத வஞ்சற் றருளாதோ?"

*- திருப்புகழ்*

ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி
மாதுக்கம் நீங்கலுறு வீர்மனம் பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே.

*- சம்பந்தர்*

*"மூவருமறிகிலர் யாவர் மற்றறிவார்" என்றபடி இறைவனைத் தேவரும் மூவருமறிகிலர். அவன் உயிர்கள்தோறும் உள்ளும் புறமும் கீழும் மேலும் முன்னும் பின்னுமாக இருக்கின்றான். போக்கு வரவு அற்று விளங்குகின்றான். அவனை இனிய பாடல்களால் பாடுவதையன்றிக் கண்டார் அரிது.*

"பூதங்கள் தோறுநின் றாயெனி னல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரை

*- திருவாசகம்*

*ஆனால், ஆண்டவனை அறியவே முடியாதோ? முடியும்; அன்பினாலேயே முடியும். அமரர்க்கு அரியவன்; அன்பர்க்கு எளியவன்.*

அதுபழச் சுவையென அமுதென அறிதற்
கரிதென எளிதென அமரரும் அறியார்
இதுஅவன் திருவுரு இவன்அவன் எனவே
எங்களை யாண்டுகொண் டிங்கெழுந் தருளும்

2

மதுவளர் பொழில்திரு வுத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா
எதுஎமைப் பணிகொளு மாறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. *- திருவாசகம்*

*அமரர்க்கு "அது" என்று சேய்மைச் சுட்டாக நின்ற இறைவன் அடியார்க்கு "இது" என்று அண்மைச் சுட்டாக எதிர் நின்று அருள்புரிவான். "அமரர்க்கும் அரிய அவன் இதோ வந்து விட்டான்" என்று அடியார் மகிழ வந்து ஆட்கொள்வான்.*

**துக்கமா மகோததி ஏறச் செச்சை நாறு தாளை வணங்குவேனோ :**

*துன்பப் பெருங்கடலைத் தாண்டி இன்பப் பெருங்கடலை யடைந்து இறைவனைச் சாரவேண்டுமானால் அவன் திருவடி களை இடையறாது வணங்க வேண்டும். அதுவே அதற்கு வழி யென்று அடிகள் இத்திருப்புகழில் குறிப்பிடுகின்றார். ஆகவே, அன்பர்கள் அனைவரும் இறைவனை அன்புடன் தொழுது துதித்து உய்வுபெறுக.*

**ஆணிப்பொற் ப்ரதாப மேருவை வேலிட்டு:-**

*முருகவேளது சாரூபம் பெற்றவரில் ஒருவர் மதுரை உக்ரப் பெருவழுதியாக அவதரித்தனர். மதுரையில் கொடிய பஞ்சம் வந்தபோது, மேருவிடம் சென்று பொற்குவியலைக் கேட்க, அது தராமையால் செண்டால் எறிந்து பொற்குவியலைப் பெற்றனர். அது முருகவேள் திருவருளால் நிகழ்ந்ததனால் அச்செயலை முருகன் செயலாக வைத்து இங்கே பேசப்பட்டது.*

**நிசாசரர் தம்ப்ரகாசம்........ ஆள்தரும்:-**

*அசுரர்களுடைய ஆயுதங்களையெல்லாம் ஒழித்துச் சக்ரவாள கிரி வரையுள்ள ஆன்மாக்களை ஆண்டவன் காத்தருளினான்.*

*பூமியின் முடிவில் அதற்கொரு கோட்டை வைத்ததுபோல் வளைந்திருக்கும் மலை சக்ரவாளகிரி.*

*அத்திரம் - வில்லை விட்டுச் சென்று போர்புரிவது.*

*சத்திரம் - கையை இருந்தபடியே போர்புரிவது. அசுரர் களுடைய பாணங்கள் யாவும் முருகனுடைய அருள் ஒளியில் மறைந்தன என்கின்றார்.*

**எம்பிரான் :-**

*பிரியான் என்பதன் மரூஉ பிரான் என்பது. நம்மை விட்டு*

*ஒருபோதும் பிரியாதவன்.*

**கிராதை........... பாத சேகர:-**

*கிராதை - கிராத குலத்தில் வந்தவள்; வள்ளி. வள்ளியின் பாதத்தைத் தரித்தவன் என்பது அடியவர்க்கு எளியவன் என்பதைக் குறிக்கின்றது.*

"வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே"

*என்ற அநுபூதி வாக்கையும் இங்கு உன்னுக.*

**சம்புவேதா வாசிக்கப்படாத வாசகம்:-**

*பிரமதேவர் வேதத்தின் முதல் எழுத்தாகிய ஓம் எனும் தனி மந்திரத்தின் உட்பொருளைக் கூறமாட்டாது திகைத்து நின்றனர்.*

**ஈசர்க்குச் சுவாமியாய் முதல் வாசிப்பித்த தேசிகா:-**

*சிவபிரானுக்கு அத் தனிமந்திரத்தைக் குருமுகமாக இருந்து ஓதுவித்தருளினார். அதனால், சிவகுருவானார்.*

## கருத்துரை

*வள்ளியையாண்ட வள்ளலே! சிவகுருநாதரே! மெய்ப் பொருளையடைந்து துன்பங்கடந்து இன்பமுற உமது திருவடிகளை வணங்க அருள் புரிவீர்.*

## 14

புகரில் சேவல தந்துர சங்க்ரம
நிருதர் கோபக்ர வுஞ்சநெ டுங்கிரி
பொருத சேவக குன்றவர் பெண்கொடி மணவாள

புனித பூசுர ருஞ்சுர ரும்பணி
புயச பூதர என்றிரு கண்புனல்
பொழிய மீமிசை யன்புது ளும்பிய மனனாகி

அகில பூதவு டம்புமு டம்பினில்
மருவு மாருயி ருங்கர ணங்களு
மவிழ யானுமி ழந்த இடந்தனி லுணர்வாலே

அகில வாதிக ளுஞ்சம யங்களும்
அடைய ஆமென அன்றென நின்றதை
யறிவி லேனறி யும்படி யின்றருள் புரிவாயே

மகர கேதன முந்திகழ் செந்தமிழ்
மலய மாருத மும்பல வெம்பரி
மளசி லீமுக மும்பல மஞ்சரி வெறியாடும்

மதுக ராரம்வி குஞ்சணி யுங்கர
மதுர கார்முக மும்பொர வந்தெழு
மதன ராஜனை வெந்துவி மும்படி முனிபால

முகிழ்வி லோசன ரஞ்சிறு திங்களு
முதுப கீரதி யும்புனை யுஞ்சடை
முடியர் வேதமு நின்றும ணங்கமழ் அபிராமி

முகர நூபுர பங்கய சங்கரி
கிரிகு மாரித்ரி யம்பகி தந்தருள்
முருக னேசுர குஞ்சரி ரஞ்சித பெருமாளே.

## பதவுரை

*மகர கேதனமும்* – மகரமீனக் கொடியும், *திகழ் செம் தமிழ் மலய மாருதமும்* – இனிமை திகழ்கின்ற செம்மையான தமிழ் முழங்கும் சந்தன மலையாகிய பொதிய மலையில் பிறந்த தென்றல் காற்றும், *பல வெம்பரிமள சிலீமுகமும்*– நானாவிதமான ஆசையை யூட்டுவதாகிய மணமுள்ள மலர்க் கணைகளும், *பல மஞ்சரி வெறி ஆடும்* - பலவித பூங்கொத்துகளில் உள்ள மணத்தில் விளையாடும், *மதுகர ஆரம் விகுஞ்ச அணியும்* – வண்டுகளின் வரிசையாகிய நாணுடன் மேலான மலர்க் கொத்துக்களின் வரிசையும், *கர மதுர கார்முகமும்* – கரத்தில் ஏந்திய இனிய கரும்பு வில்லுங் கொண்டு, *பொர வந்து எழு மதன ராஜனை* – போர் செய்ய எழுந்து வந்த மன்மதனை, *வெந்து விழும்படி முனி* – வெந்து சாம்பலாக விழும்படி சினந்த, *பால முகிழ் விலோசனர்* – குவிந்திருக்கின்ற நெற்றிக் கண்ணரும், *அம் சிறு திங்களும்* – அழகிய இளம்பிறைச் சந்திரனையும், *முதுபகீரதியும் புனையும்* – பழமையான கங்கா நதியையும் சூடியிருக்கின்ற, *சடைமுடியர்* – சடா மகுடமுடையவருமாகிய சிவபெருமானும், *வேதமும் நின்று மணங்கமழ் அபிராமி* – அறுபத்து நான்கு கலைகளுடன் வேதமும் நின்றுதொழஞான

மணம் வீசுகின்ற அபிராமியம்மையையும், முகர நூபுர பங்கய சங்கரி - சங்குகளாற் செய்த நூபுர மணிந்த திருவடித் தாமரை யுடன் கூடியவரும் சுகத்தைச் செய்பவரும், கிரிகுமாரி - மலையரையன் மகளாரும், த்ரியம்பகி - மூன்று கண்களையுடைய வரும் ஆகிய உமையம்மையாரும், தந்து அருள் - பெற்றருளிய, முருகனே - முருகக் கடவுளே! சுர குஞ்சரி ரஞ்சித - தேவயானை யம்மையார் விரும்புகின்ற, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! புகரில் சேவல - குற்றமில்லாத சேவற் கொடியுடையவரே! தந்துர - உயர்ந்த பற்களையுடையவர்களும், சங்க்ரம - போரை விரும்பு கின்றவர்களுமாகிய, நிருதர்கோப - அசுரர்கள் மீது கோபிக்கின்ற வரே! க்ரவுஞ்ச நெடுங்கிரி பொருத சேவக - நீண்ட மலையாகிய கிரவுஞ்சத்தைப் பிளந்த வீரமூர்த்தியே! குன்றவர் பெண் கொடி மணவாள - வேடர் குல கொழுந்தாகிய வள்ளியம்மையாரது கணவரே! புனித பூசுரரும் சுரரும் பணி - தூய்மையான அந்தணர்களும், தேவர்களும் வணங்குகின்ற, புயச பூதர என்று - மலைகள்போன்ற தோள்களையுடையவரே என்று துதித்து, இருகண்புனல் பொழிய - இரண்டு கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் சொரியவும், மீ மிசை அன்பு துளும்பிய மனனாகி - மேன் மேலும் அன்பு பெருகிய மனத்தை யுடையவனாகி, அகில பூத உடம்பும் - எல்லா பூதங்களும் சேர்ந்த உடம்பும், உடம்பினில் மருவும் அரு உயிரும் - உடம்பினில் பொருந்தியுள்ள அரிய உயிரும், கரணங்களும் - மனம் முதலிய கரணங்களும் அவிழ - கட்டு நீங்கவும், யானும் இழந்த இடந்தனில் - யான் என்ற பசு போதமும் விலகிய இடந்தனில், உணர்வாலே - சிவ போதத் தினாலே, அகிலவாதிகளும் - தேகாத்மாவாதி, கரணாத்மவாதி, ஏகாத்மவாதி, கணபங்கவாதி முதலிய மாறுபட்ட எல்லாவாதிகளும், சமயங்களும் - சமய ஞானமும், அடைய - ஒதுங்கி ஒளிய, ஆம் என அன்று என நின்றதை - ஆம் என்றும் அன்று என்றும் நின்ற உண்மைப்பொருளை, அறிவிலேன் அறியும்படி இன்று அருள் புரிவாயே - அறிவில்லாத சிறியேன் அறிந்து உய்யும்படி இன்று உபதேசித்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

மகர மீனக் கொடியுடனும், செம்மையான தமிழ் விளங் குகின்ற சந்தன மரங்களுடன் கூடிய பொதிய மலையிலிருந்து வருகின்ற தென்றல் காற்றுடனும், பலப்பல ஆசையை மூட்டுகின்ற மணமிக்க மலர்க்கணைகளுடனும் பல மலர்க்

கொத்துகளில் உள்ள நறுமணத்தில் விளையாடுகின்ற வண்டுகளின் வரிசையாலாகிய நாணுடனும், மேலான பூங்கொத்துக்களுடனும், கரத்தில் ஏந்திய இனிய கரும்பு வில்லுடனும் எழுந்து போர் செய்யவந்த மன்மதனை எரிந்து விழும்படி சினந்த சிறிது குவிந்த வண்ணமாக இருக்கும் நெற்றிக் கண்ணரும், அழகிய இளந்திங்களையும் பழமையான கங்காநதி யையும் சூடியுள்ள சடைமுடியை யுடையவருமாகிய சிவபெரு மானும், சகல கலைகளுடன் வேதமும் நின்று துதிக்க ஞான வாசனை வீசுகின்ற அபிராமியும், சங்கினாற்செய்த நூபுரம் அணிந்த திருவடிக் கமலங்களை யுடையவரும், உயிர்களுக்குச் சுகத்தைச் செய்பவரும், மலையரையன் மகளாரும், மூன்று கண்களை யுடையவரும் ஆகிய உமாதேவியாரும் பெற்றருளிய முருகக் கடவுளே! தெய்வயானை விரும்புகின்ற பெருமிதம் உடையவரே, குற்றமில்லாத சேவற்கொடியையுடையவரே! தூக்கிய பல்வரிசையுடையவர்களும் போரில் விருப்பமுள்ளவர்களுமாகிய அரக்கர்கள் மீது கோபிக்கின்றவரே! நீண்ட கிரவுஞ்ச மலையைப் பிளந்த வீர மூர்த்தியே! வேடர் குலத்தில் வந்த வள்ளியம்மை யாருடைய கணவரே! தூய வேதியர்களும் தேவர்களும் தொழுகின்ற மலைபோன்ற தோள்களையுடையவரே! என்று துதித்து, இருகண்களிலும் (அருவிபோல்) கண்ணீர் பொழியவும், மேன்மேலும் அன்பு பெருகிய மனத்தையுடையவனாகி, மண் முதலிய பூதங்களால் ஆகிய இவ்வுடம்பும், இவ்வுடம்பிற் பொருந்திய அரிய உயிரும், மன முதலிய கரணங்களும் கட்டு நீங்கிய பற்றற்ற இடத்தினில் நின்று அங்கு எழும் உணர்வினாலே, எல்லா வாதிகளும் சமய ஞானமும் ஒதுங்கி ஒளிய, ஆம் என்றும் அன்றென்றும் நின்ற உண்மைப் பொருளை அறிவில்லாத சிறியேன் அறிந்து உய்ய உபதேசித்து அருள் புரிவீர்.

## விரிவுரை

**புகரில் சேவல்:-**

புகர் - குற்றம். குற்றமில்லாத சேவல்.

சேவல் - ஓங்கார மந்திரத்தை ஒலியால் உணர்த்துவது. நாத ரூபமானது. ஆதலின், சேவலைச் செவ்வேட் பரமனார் கொடியாகக் கொண்டருளினார்.

அன்றியும் சூரியனுடைய வரவை உலகுக்கு உணர்த்துவது சேவல். ஒளியைக் கண்டு உவகையுறுவது. உறக்கத்தை விட்டு

உலகினரை எழுப்பி உதவிபுரிவது. அதனால், குற்றமில்லாதது என்றனர்.

**தந்துர:-**

தந்துரன் - தூக்கிய தெற்றுப்பல்லன். அரக்கர்களுக்கு பல் வரிசையாக அமையாமல் முன்னும் பின்னுமாகத் தூக்கியிருக்கும்.

**சங்க்ரமம்:-**

சங்க்ராமம் - போர். அரக்கர்கள் போரை எப்பொழுதும் விரும்புகின்றவர்கள்.

**நிருதர் கோப:-**

அரக்கர்கள்மீது கோபிக்கின்றவன்.

முருகக் கடவுள் கருணையே வடிவானவர். அவர் உலக பிதா. உயிர்கட்குத் தந்தையுந் தாயுமானவர். அவருக்கு வானவரும் தானவரும் ஒன்றுதான். விருப்பு வெறுப்பு அற்றவர். இன்னாரும் இனியாரும் அவருக்கு இல்லை. அப்படியாயின் அரக்கர் மீது கோபிப்பானேன்? மெலியாரை வலியார் ஒறுப்பரேல் வலியாரைத் தெய்வம் ஒறுக்கும். மெலிந்த மகனை வலிந்த மகன் அடிப்பானேல் தந்தை மெலிந்த மகன் பொருட்டு வலிந்த மகனைத் தண்டிப்பான். அதனால், தந்தைக்குப் பாரபட்சம் சாராது.

இனி சுரர் - சமம், தமம், உபரதி முதலிய தூய குணங்கள்; அசுரர் - அவா, வெகுளி, மயக்கம், பொறாமை முதலிய தீய குணங்கள். தேவாசுர யுத்தம் என்பது தூய குணங்களுக்கும் தீய குணங்களுக்கும் நிகழும் போராட்டம் என அறிக. இறைவர் தூய குணங்களை ஆதரித்துத் தீய குணங்களை அடக்குவர்.

**சேவக:-**

சேவகன் - வீரன்.

சிறந்த வீரமூர்த்தி முருகவேள் ஆதலின், அவரை அருணகிரிநாதர்,

"திருச்செந் தூர்வரு சேவக னேசுரர் பெருமாளே" -திருப்புகழ்

"வளைகடல் கதற நிசிசரர் மடிய
மலையொடு பொருத முழுச்சே வகனே" - திருவகுப்பு

என்று தெரிவிக்கின்றனர்.

மாலயனாதி தேவரையும் 108 யுகங்களாக ஏவல் கொண்டு வருத்திய சூராதியவுணர்களை அழித்தவர் முருகவேள் ஆதலின்,

*அவரே முழுச்சேவகர் ஆவார்.*

"எதிர் சூரோ டேயமர் அடலாகி
அமரில் வீட்டியும் வானோர் தானுறு
சிறையை மீட்டர னார்பால் மேவிய
அதிப ராக்ரம வீரா வானவர் பெருமாளே"
*- திருப்புகழ்*

என்றிரு கண்புனல் பொழிய:-

*இறைவன் உயிர்க்குயிராகப் பிரிவற நின்று இடையறாது பெருங்கருணை புரிகின்றான். ஆதலின், அப்பரமபதியின் ஒப்பற்ற கருணையை எண்ணி எண்ணி உள்ளம் உருகுதல் வேண்டும். அதன் அடையாளமாகக் கண்களில் அருவிபோல் தண்ணீர் பெருகும்.*

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும். *- திருவள்ளுவர்*

"விரும்பியே கூவினேன் உலறினேன் அலறினேன்
மெய்சிலிர்த் திருகை கூப்பி
விண்மாரி எனஎனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனி யான்" *- தாயுமானார்*

*இறைவனுடைய திருவருளைப் பெறுவதற்கு எளிமையான வழி அப்பரம கருணாநிதியை நினைந்து குழந்தைபோல் விம்மியழுது உருகுவதேயாகும்.*

"சந்தித் தரஹர சிவசிவ சரணென
கும்பிட் டிணையடி யவையென தலைமிசை
தங்கப் புளகித மெழுஇரு விழிபுனல் குதிபாய" *- திருப்புகழ்*

*கண்ணீர் மல்கிக் காதலாகிக் கசிந்துருகும் அடியவர்களது உள்ளத்தை இறைவன் திருக்கோயிலாகக் கொண்டு நீங்காது உறைகின்றான்.*

சகமலா தடிமை யில்லை தானலால் துணையு மில்லை
நகமெலாந் தேயக் கையால் நாண்மலர் தொழுது தூவி
முகமெலாங் கண்ணீர் மல்க முன்பணிந் தேத்துந் தொண்டர்
அகமலாற் கோயி லில்லை ஐயன்ஐ யாற னார்க்கே.
*- அப்பரடிகள்*

அவிழ:-

*உடம்பும் உயிருங் கரணங்களும் கழன்று நிற்றலே சிவ யோக*

மென அறிக. அவைகளோடு ஒற்றித்து நிற்றலினால் உலக வாசனை யெய்துகின்றது.

செனித்த காரி யோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தை யாகி யான்வேறென் உடல்வேறு
செகத்தி யாவும் வேறாக நிகழ்ச்சி யாம னோதீத
சிவச்சொ ரூப மாயோகி எனஆள்வாய்.
- *திருப்புகழ்*

**யானும் அவிழ்ந்த இடம்:-**

*யானும் என்ற எச்சவும்மையால் எனது என்பதும் அற வேண்டும் என்று தெளிக. எனது - புறப்பற்று; யான் - அகப்பற்று. முதலில் அறவேண்டியது புறப்பற்று; பின்னர் அற வேண்டியது அகப்பற்று. நான் கெட்ட இடத்திலே சிவக்காட்சி தோன்றும்.*

"ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"
- *மணிவாசகர்*

"யானா கியஎன் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே" - *அருணகிரிநாதர்*

"நான்காணா இடத்ததனைக் காண்பேம் என்று
நல்லோர்கள் நவில்கின்ற நலமே" -*இராமலிங்கர்*

**அகிலவாதிகளும் சமயங்களும் அடைய ஆமென அன்றென நின்றதை:-**

*தேகமே ஆன்மா என்பவன் தேகாத்மாவதி; கரணமே ஆன்மா என்பவன் கரணாத்மவாதி; இந்திரியங்களே ஆன்மா என்பவன் இந்திரியாத்மவாதி; ஆன்மாவைத் தவிர வேறு இல்லை என்பவன் ஏகான்மவாதி; பிரமத்தின் நிழலே உலகம் என்பவன் பிம்பப் பிரதிபிம்பவாதி; பால் தயிராவதுபோல் பிரமமே உலகமாகியுளது என்பவன் பரிணாமவாதி; பிரம்மத்திினின்றும் உலகம் வந்தது என்பவன் விவர்த்தனவாதி; கணந்தோறும் வேறுவேறு ஆன்மா உடம்பில் வருகின்றது என்பவன் கணபங்க வாதி; இப்படி பலப்பல வாதிகளும் சமய பேதர்களும் ஆம் என்றும், அன்று என்றும் கூறநின்ற அரிய பொருளை அடி யேனுக்கு உபதேசிக்க வேணும் என்கின்றார் அடிகள்.*

"வாதமுஞ் சமய பேதமும் கடந்த
மநோலய இன்பசா கரமே!

ஏதுமொன் றறியேன் யாதுநின் செயலே
இறைவனே ஏகநா யகனே" - *பட்டினத்தார்*

"உருவெனவு மருவெனவு முளதெனவு மிலதெனவும்
உழலுவன பரசமய கலையார வாரமற
உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை உணருமவ ரநுபூதி யானதுவும்"
- *வகுப்பு*

மகரகேதன.... மதனராஜனை வெந்துவிழும்படி முனி:-

*சிவபெருமான் கல்லாலின் புடையமர்ந்து நால்வர்க்கு எல்லாமாய் அல்லவுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி மௌன நிலையில் இருந்தபோது, தேவர்கள் தூண்டி வேண்ட, அவரை மயக்குதற் பொருட்டு வந்த மன்மதனைச் சாம்பராகும் படி நெற்றிக் கண்ணால் இறைவர் எரித்த தன்மையை இந்த ஆறுவரிகள் விளக்குகின்றன.*

*மகரம் என்ற மீன் கடலில் மட்டுமே வாழும். அதனால், அதற்கு மகராலயம் என்றுபேர். மகரமீன் வடிவாய் காதில் குண்டலம் தரிப்பார்கள். அதற்கு மகரகுண்டலம் என்று பேர். மகரமீனைக் கொடியில் எழுதியிருப்பதனால் மன்மதனுக்கு மகரத்துவஜன் என்று ஒரு பேருண்டு.*

*மன்மதனை எரித்த நெற்றிக் கண்ணிலிருந்து அவதரித்தவர் ஞானபண்டிதர். அவருடைய திருவடியை நினைப்பார் காமாதி பகைவர் இலராவார்.*

## கருத்துரை

*சிவகுமாரரே! வள்ளிதெய்வயானை கணவரே! அன்புமிக்க வனாகி அடியேன் இருக்க, சமயவாதிகளுக்கு எட்டாத உண்மைப் பொருளை உபதேசித்து அருள்புரிவீர்.*

## 15

புவிக்குன் பாத மதைநினை பவர்க்குங் கால தரிசனை
புலக்கண் கூடு மதுதனை அறியாதே
புரட்டும் பாத சமயிகள் நெறிக்கண் பூது படிறரை
புழுக்கண் பாவ மதுகொளல் பிழையாதே

கவிக்கொண் டாடு புகழினை படிக்கும் பாடு திறமிலி
களைக்கும் பாவ சுழல்படு மடிநாயேன்
கலக்குண் டாகு புவிதனி லெனக்குண் டாகு பணிவிடை
கணக்குண் டாதல் திருவுள மறியாதோ

சிவத்தின் சாமி மயில்மிசை நடிக்குஞ் சாமி யெமதுளே
சிறக்குஞ் சாமி சொருபமி தொளிகாணச்
செழிக்குஞ் சாமி பிறவியை யொழிக்குஞ் சாமி பவமதை
தெறிக்குஞ் சாமி முநிவர்க ளிடமேவுந்

தவத்தின் சாமி புரிபிழை பொறுக்குஞ் சாமி குடிநிலை
தரிக்குஞ் சாமி யசுரர்கள் பொடியாகச்
சதைக்குஞ் சாமி யெமைபணி விதிக்குஞ் சாமி சரவண
தகப்பன் சாமி யெனவரு பெருமாளே.

## பதவுரை

*சிவத்தின் சாமி* – நன்மையைச் செய்கின்ற சுவாமியே, *மயில் மிசை நடிக்கும் சாமி* – மயிலின் மீது நின்று நடனஞ் செய்கின்ற சுவாமியே! *எமது உளே சிறக்கும் சாமி* – அடியவர்களாகிய எங்கள் உள்ளக்கோயிலிலே சிறப்பாக வீற்றிருக்கின்ற சுவாமியே! *சொருபம் இது ஒளிகாண செழிக்கும் சாமி* – திருவுருவமானது சோதியாய் விளங்க ஓங்கும் சுவாமியே! *பிறவியை ஒழிக்கும் சாமி* – பிறவித் துன்பத்தை நீக்கும் சுவாமியே! *பவம் அதை தெறிக்கும் சாமி* – பாவத்தைச் சிதற வைக்கும் சுவாமியே! *முனிவர்கள் இடம் மேவும்* – இடையறாது மெய்ப்பொருளையே நினைக்கும் மாதவர்களிடத்தில் விளங்கித் தோன்றுகின்ற சுவாமியே! *புரி பிழை பொறுக்கும் சாமி* – ஆன்மாக்கள் அறியாமையால் செய்கின்ற குற்றங்களைப் பொறுக்கின்ற சுவாமியே! *குடிநிலை தரிக்கும் சாமி*– குடிகளை நிலைபெற வைக்கும் சுவாமியே! *அசுரர்கள் பொடியாக சிதைக்கும் சாமி* – இராக்கதர்கள் மடிந்து பொடியாகும்படி அழித்த சுவாமியே! *எமை பணி விதிக்கும் சாமி* – அடியவர்களாகிய எங்களை நற்பணிகளைச் செய்யுமாறு நியமிக்கும் சுவாமியே! *சரவண* – சரவணபவரே! *தகப்பன் சாமி எனவரு பெருமாளே* – தகப்பனாருக்கு உபதேசித்த சுவாமி யென்று புகழுமாறு வருகின்ற பெருமையின் மிக்கவரே! *புவிக்கு உன்பாதம் அதை நினைபவர்க்கும்* – பூமியில் தேவரீரது திருவடியை நினைக்கின்றவர்கட்கும், *காலதரிசனை புலம் கண்கூடும்* – பக்குவ காலத்தில் அறிவில் தேவரீர் தரும் காட்சி

வெளிப்படும்; அது தனை அறியாதே - அந்தத் திருவருளின் எளிமையை அறிந்துகொள்ளாமல், புரட்டும் பாத சமயிகள் - தருக்கவாதங்களால் நானாவிதமாகப் புரட்டிப்பேசும் சமயிகளது, நெறிக்கண் பூது படிறரை - வழியில் புகும் பொய்யர்களை, புழுக்கண் பாவம் அது கொளல் பிழையாதே - புழுக்கள் நிறைந்த நரக பூமி கொள்ளுதல் தவறாது; கவி கொண்டாடு புகழினை - சிறந்த கவிகள் புகழ்ந்து போற்றுகின்ற உமது திருப்புகழை, படிக்கும் பாடு திறம் இலி - ஓதுகின்ற நட்பும் திறமையும் இல்லாதவன்; களைக்கும் பாவசுழல் படும் அடிநாயேன் - பாவத்தின் சுழற்சியில் பட்டு களைப்புறுகின்ற தாழ்ந்த நாயேனுக்கு, கலக்குண்டாகு புவிதனில் - கலக்கத்தைத் தருகின்ற இப்பூமியில், எனக்கு உண்டாகு பணிவிடை கணக்கு உண்டாதல் - அடியேனுக்கு நியமிக்கத்தக்க தொண்டு இது என்ற கணக்கை, திருவுளம் அறியாதோ - தேவரீரது திருவுள்ளம் அறியாததோ? (அறியும்).

## பொழிப்புரை

நன்மையைத் தருகின்ற சுவாமியே! மயிலின்மீது திருநடஞ் செய்கின்ற சுவாமியே! அடியார்களாகிய எங்கள் உள்ளக் கோயிலில் சிறப்பாக வீற்றிருக்கும் சுவாமியே! திருவுருவம் இது என்று ஒளிமயமாக விளங்கும் சுவாமியே ! பிறவித் துன்பத்தை யகற்றும் சுவாமியே! பாவத்தைச் சிதறச் செய்யும் சுவாமியே! மெய்ப்பொருளை ஒருமையுடன் இடையறாது நினைக்கும் தவசீலர்களிடத்தில் வசிக்கும் சுவாமியே! ஆன்மாக்கள் அறியாமல் புரியும் குற்றங்களைப் பொறுக்கும் சுவாமியே! குடிகளைத் தாங்கும் சுவாமியே! அரக்கர்கள் மாண்டு பொடிபட அழித்த சுவாமியே! அடியார்களாகிய எங்களை இன்ன இன்ன தொண்டுகளைச் செய்ய வேண்டும் என்று நியமிக்கும் சுவாமியே! சரவணத்தில் வெளிப்பட்டவரே! தந்தையாருக்கு உபதேசித்த சுவாமி என்று வருகின்ற பெருமிதம் உடையவரே! இப் பூமியின் கண் தேவரீரது திருவடிமலர்களை நினைப்பவர்களுக்குங்கூட, பக்குவ காலத்தில் உண்டாகும் தேவரீரது தெரிசனை யுண்டாகும்; அத்தகைய திருவருளின் எளிமையை அறியாமல், தருக்கம் பல பேசி நானாவகையாகப் பேசிப் புரட்டுகின்ற சமயிகளுடைய வழியிற் சென்று இடர்படும் பொய்யர்களை, புழுக்கள் மலிந்த நரகமானது கொள்ளுதல் ஒருபோதும் தவறாது. கவிகள் போற்றித் துதிக்கின்ற உமது திருப்புகழை ஓதி உய்யும் நட்பும் திறமையும் இல்லாதவன்; பாவச் சுழலுக்குள் பட்டு இளைக்கின்ற தாழ்ந்த

நாயேன்; கலக்கத்தைத் தரும் இப்பூமியில், அடியேனுக்கு ஏற்ற திருத்தொண்டு இது என உமது திருவுள்ளம் அறியாதோ? (அறியும். அதனையருள்புரிவீர்)

## விரிவுரை

புவிக்குன் பாதமதை நினைபவர்க்கும்
காலதரிசனை புலக்கண்கூடும்.-

இந்தத் திருப்புகழ் அடிக்கு வேறு சில பொருள்களும் உண்டு.

புலக்கண்கூடும் என்பதில் உள்ள உம்மையை எதிர்மறையாகக் கொண்டு, "பூமியில் உமது பாதத்தை நினைபவர்கட்கும் இயம தரிசன புலனாகிய கண்ணில் கூடாது" (உண்டாகாது) என்றும், இனி, காலதரிசனை என்பதற்கு 'முக்காலங்களையும் அறிதல்' எனப்பொருள் கொண்டு, "பூமியின்கண் தேவரீரது திருவடியை நினைப்பவர்கட்கும் முக்காலங்களையும் அறியும் அறிவாற்றல் உண்டாகும்" என்றும் கூறலாம்.

காலதரிசனை:-

பக்குவ காலத்தில் உண்டாகும் தரிசனை; ஆன்மாக் களுக்கு இருவினை யொப்பு மலபரிபாகம், சத்திநிபாதம் நிகழ்ந்தபோது, இறைவனுடைய அருட்காட்சி வெளிப்படும் என்க.

"உணக்கி லாததொர் வித்துமேல் விளையாமல் என்வினை
யொத்தபின்
கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே"

என்கின்றார் மணிவாசகனார்.

இது பொதுவிதி; சிறப்பு விதியாக முருகவேளை உள்ளம் உருகி நினைப்பவர்கட்கு, பக்குவம் எய்திய காலத்தில் தோன்றும் தெரிசனை வெளிப்படும். அத்துணை எளிதில் அருள் செய்யும் கருணைக் கடவுள் கந்தவேள் ஆகும்.

அதுதனையறியாதே புரட்டும்பாத சமயிகள்:-

ஒருமையுடன் உணர்ந்து உன்னியவுடன் அருள்புரியும் கருணைக் கடவுள் கந்தவேள் என்பதை அறிந்து உய்யாமல், சமயவாதிகள் தொடக்கத்திலேயே உண்மைக்கு மாறாகப் பேசி, பற்பல வாதங்களால் புரட்டுவார்கள்.

நெறிக்கண் பூது படிறரை:-

அவ்வாறு உண்மை நெறியறியாது உழலும் சமய நெறிகளில் புகுந்து பொய்மையை மெய்மை யென்று பிறழ உணர்வார் பலர்.

புழுக்கண் பாவமது கொளல் பிழையாதே:-

அங்ஙனம் உழல்கின்றவர்கள் நரகத்தை யடைவார்கள், அதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. ஆதலின், முத்திநெறியறியாத மூடரொடு கூடி முயங்காமல், பத்திநெறி கண்ட அடியாரொடு இணங்கித் திருவருளைப் பெறுதல் வேண்டும்.

எல்லாச் சமயங்களும் ஒவ்வொரு தன்மையைக் கொண்டு அதுவே மெய்ந்நெறி யென்று கூறும். சைவ சமயம், ஏனைய சமயங்கள் எல்லாவற்றையும் படிமுறை யாகக் கொண்டு, ஒப்பற்ற உயர்நிலையை உணர்த்தும் என்று தெளிக.

சைவ சமயஞ் சமயமெனில் அச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனில்- ஐவரைவென்
றானந்த வெள்ளத் தழுந்துவது முத்தியெனில்
வானங்காள் பெய்க மழை.

சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளிக் காட்டும் இந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டாம் முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே.

வாழ்வெனு மையல் விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்
தாழ்வெனுந் தன்மை யோடுஞ் சைவமாஞ் சமயஞ் சாரும்
ஊழ்பெறல் அரிது; சால உயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி னானைப் போற்றுவார் அருள்பெற் றாரே.

என்பனவாதி ஞானத் திருவாக்குகளால் சைவ சமயத்தின் அருமை பெருமைகளை அறிமின்கள். இத்தகைய அருட்சமய மாகிய சைவசமயத்தை விடுத்து வேறு சமயத்தை நாடுவார், மாணிக்கத்தை எறிந்துவிட்டு, உடைந்த வளையல் ஓட்டை விரும்பும் புத்தி சிகாமணிகளை யொப்பார் என்று விடுக.

கவிக்கொண்டாடு புகழ்:-

ஒருவனுடைய உடம்பு அழிந்தும் அழியாமல் இருப்பது புகழ் ஒன்றேயாம். புகழ் இன்றித் தோன்றுவதை விடத் தோன்றாமல் இருப்பதுவே நல்லது என்கின்றார் திருவள்ளுவர்.

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதில்லார்
தோன்றலில் தோன்றாமை நன்று.

*ஏனையோர் புகழ் அனைத்தும் கருப்புகழாகும். முருகவேள் புகழ் ஒன்றே திருப்புகழாகும். முருகவேள் புகழை வசிட்ட மகாமுநிவரும், காசிபரும், அகத்தியரும், இடைக்காடரும், நக்கீரரும், பாடித் துதித்துள்ளார்கள். ஆனால், அவற்றுள் நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படை ஒன்றே இன்று கிடைத்திருக்கின்றது. ஏனையோர் பாடிய பாடல்கள் அருணகிரியார் காலத்தில் இருந்தன. இற்றைநாள் மறைந்துவிட்டன. இச்செய்தியைக் கீழேவரும் திருப்புகழடியால் அறிக.*

"வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்
அகத்ய மாமுனி இடைக்காடர் கீரனும்
வகுத்த பாவினில் பொருட்கோல மாய்வரு முருகோனே"

**படிக்கும் பாடு திறமிலி:-**

*முருகப் பெருமானுடைய புகழ்பாடல்களைப் படிப்பதுவே உய்யுநெறியென வுணர்க.*

படிக்கின் றிலைபழ நித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காஎன் கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின் றிலைபர மானந்த மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச மேது நமக்கினியே

*- அலங்காரம்*

*முருகவேளுடைய புகழைப் பதினாறாயிரம் பாடல்களாகப் பாடியருளிய அருணகிரிநாதர் தனக்குப் படிக்குந் திறமையிருந்தும், திறமையிலி என்று கூறுகின்றார். ஆன்றோர்கள் தமக்குள்ள ஆற்றலைத் தற்போதமின்மை யால் அறிவதில்லை. அன்பு வடிவாகிய திருவாதவூரர் "அன்பிலேன்" என்று கூறுவதும் காண்க. இறைவனுடைய புகழையே காண்கின்ற அவர்கட்குத் தமது புகழ் தோன்றாதன்றோ? இறைபுகழைக் காணாதார் தம் புகழ் காண்பர்.*

**கலக்குண்டாகு புவிதனில் எனக்குண்டாகு பணிவிடை**
**கணக்குண்டாதல் திருவுளம் அறியாதோ:-**

*இறைவன் இன்னாருக்கு இன்ன தொண்டு என்று அறிந்து அவரவரை அந்த அந்த தொழிலில் செலுத்தி ஆட்டுவிப்பான். பாவைக் கூத்தில் ஆட்டுவிப்பான் செயல் வழி பாவை ஆடுவது போல், இறைவன் செலுத்திய வழி ஆன்மாக்கள் செல்லும்.*

ஊட்டுவிப் பானும் உறங்குவிப் பானும்இங் கொன்றோடொன்றை
மூட்டுவிப் பானும் முயங்குவிப் பானும் முயன்றவினை
காட்டுவிப் பானும் இருவினைப் பாசக் கயிற்றின்வழி
ஆட்டுவிப் பானும் ஒருவனுண் டேதில்லை யம்பலத்தே

*- பட்டினத்தார்*

*ஆகவே, "அடியேனுக்கு இன்னபணி என்று முன்னரேயே திருவருள் கணக்கில் பதிவாகியிருக்குமே? அப் பணியில் அடியேனைச் செலுத்துவது தேவரீர் கடமையன்றோ? ஆகவே, அங்ஙனம் எனக்குள்ள பணியை விதித்தருள்வீர்" என்று அடிகளார் முறையிடுகின்றார்.*

*இன்ன பணியில் என்னை ஏவுதல் வேண்டும் என்று தலைவனைப் பணியாளர் கேட்பது முறைமையாகாது. தலைவன் இட்ட கட்டளையையே பணியாளர் புரிவர். அவர்களை எப்படி எப்படி ஏவ வேண்டும் என்ற கணக்கைத் தலைவன் அறிவானன்றோ?*

கண்ணார் நுதலோய் கழலிணைகள்
கண்டேன் கண்கள் களிகூர
எண்ணா திரவும் பகலுநான்
அதுவே எண்ணும் அதுவல்லால்
மண்மேல் யாக்கை விடுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா எண்ணக் கடவேனோ?
அடிமை சால அழகுடைத்தே *- திருவாசகம்*

**சிவத்தின் சாமி:-**

*சிவம்- நன்மை, மங்கலம்.*

*உயிர்களுக்கு நன்மையே புரிகின்றான் முருகன், ஆதலின், சிவத்தின் சாமி.*

*சாமி, என்ற சொல்லுக்கு உடையவன் என்பது பொருள். ஸ்வம்- சொத்து; உலகங்களையும் உயிர்களையும் உடைமையாக உடையவன் முருகன். வடமொழி நிகண்டில் முருகவேள் பெயர்த் தொகுதி சுவாமி என்று பேசுகின்றது. எனவே, சுவாமி என்ற பேர் முருகவேளுக்கு உரியது ஏனைய தேவர்களைச் சுவாமி யென்று அழைப்பது உபசார வழக்கு என்க.*

"தேவசேனாபதிச் சூர சுவாமி கஜமுகானுஜ"

ஆதலினால், அண்ட கோடிகள் அனைத்திற்குந் தனிப்பெருந் தலைவர் முருகவேள் ஒருவரே என வுணர்க. உடையவர் தமது உடைமைகட்கு நன்மையே புரிவது இயல்புதானே.

மயில்மிசை நடிக்குஞ்சாமி:-

அறுபத்தி நான்கு கலைகளில் நனி சிறந்தது நடனக் கலை. அந்த நடனக்கலைக்குத் தலைவர் நடராஜமூர்த்தி. எண்பத்து நான்கு நூறாயிர யோனிபேதங்களுள் இயற்கையாகவே, ஒருவர் கற்றுக் கொடுக்காமலேயே ஆடவல்லது மயில் ஒன்றேயாம். அதனை வாகனமாகக் கொண்டு, மயிலும் ஆட, அதன்மிசை தாமும் ஆடி அருள் புரிகின்றார் குன்றுதோறாடிய குமாரக் கடவுள்.

எமதுளே சிறக்கும் சாமி:-

அடியவர் உள்ளக் கோயிலில் இறைவன் விளங்கித் தோன்று கின்றான். அல்லாதார் உள்ளத்தில் பாலில் நெய்போல் மறைந் திருப்பான். அடியார் உள்ளத்தில் தயிரில் நெய்போல் விளங்கித் தோன்றுவான்.

ஏனைய அடியவர்களையும் உடன்படுத்தி எமது என்று பன்மையில் கூறியருளப்பட்டது.

சொருபமி தாளிகாண செழிக்குஞ்சாமி:-

இறைவன் ஒளிவடிவாகத் திகழ்கின்றனன். "சுடரொளியதாய் நின்ற நிட்கள சொரூப முதல் ஒருவாழ்வே" என்று பிறிதொரு திருப்புகழில் கூறுகின்றனர்.

"பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாக"

என்பது கந்தபுராணத் திருவாக்கு.

பிறவியை ஒழிக்குஞ்சாமி:-

"பெம்மான் முருகன் பிறவா னிறவான்"

என்ற கந்தரநுபூதித் திருவாக்கின்படி முருகவேள் பிறப் பில்லாதவர். பிறப்பிறப்பில்லாத ஒருவரே ஆன்மாக்களின் பிறவியை ஒழிக்க வல்லாராவார். ஏனைய தேவர்கள் பிறப் பிறப்புடையவர்கள்.

"செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை யாடியருளே" - *குமரகுருபரர்*

**பவமதை தெறிக்குஞ் சாமி:-**

*பிறவிக்குக் காரணம் ஆன்மாக்கள் செய்த பாவமேயாகும். அப் பாவ வினைகளைப் பொடிபடுத்திப் பிறவாமையை வழங்குங் கருணைக் கடவுள் கந்தப் பெருமான் என்க.*

"பலதுன்பமு ழுன்றுக லங்கிய
சிறியன்புலை யன்கொலை யன்புரி
பவமின்றுக ழிந்திட வந்தருள் புரிவாயே" -*திருப்புகழ்*

**முனிவர்களிடமேவும் தவத்தின் சாமி:-**

*முநிவர்– நினைப்பவர். மந்–பகுதி; நினைக்க வேண்டியதை நினைப்பவர்கள். அவர்கள் இடையறாது தவநெறியில் நிற்பார்கள். அத்தவத்திற்கு அருள்புரிபவர் தயாநிதியாகிய எந்தை கந்தவேள்.*

**புரிபிழை பொறுக்கும் சாமி:-**

*ஆன்மாக்கள் அறியாமையால் புரியுங் குற்றங்களைக் கடவுளாகிய கந்தநாயகன் எல்லையில்லாத கருணையினால் பொறுத்தருளுவார்*

*பயனிலாத சொற்களைக் கூறுதலும், பொய் புகலுதலும், புறங்கூறுதலும், கடுஞ்சொற்களைக் கழறுதலும் வாக்கினால் வரும் பிழைகள்.*

*பொறாமை, காமம், கோபம், பகை முதலியவைகள் மனத்தினால் வரும் பிழைகள்.*

*களவு, கொலை, புலை, சூது முதலியவைகள் காயத்தினால் வரும் பிழைகள்.*

*பிறர்மனைவியரை விரும்பிப் பார்த்தல், பெரியோர்களை அவமதித்துத் காணல்; கடவுளது திருவுருவங்களை அலட்சியமாகப் பார்த்தல் முதலியவைகள் கண்களினால் வரும் பிழைகள்.*

*தெய்வ நிந்தனை, வேத நிந்தனை, அடியவர் நிந்தனை முதலியவைகளைக் கேட்டல் செவியினால் வரும் பிழைகள்.*

*இத்தகைய பிழைகள் அறியாமையால் நிகழ்ந்துழி அவைகளை ஆண்டவன் பொறுத்தருளுவான். அறிந்தபின் மீண்டும் மீண்டும் இப்பாவங்களைச் செய்தல் கூடாது.*

சொல்லால் வருங்குற்றஞ் சிந்தனை யால்வருந் தோடஞ்செய்த
பொல்லாத தீவினைப் பார்வையில் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடுந் தீங்குகள் ஆயவும்மற்று
எல்லாப் பிழையும் பொறுத்தரு ளாய்கச்சி ஏகம்பனே

*- பட்டினத்தார்*

ஏதுபிழை செய்தாலும் ஏழையே னுக்கிரங்கித்
தீது புரியாத தெய்வமே - நீதி
தழைக்கின்ற போரூர்த் தனிமுதலே நாயேன்
பிழைக்கின்ற வாறுநீ பேசு

*- சிதம்பர சுவாமிகள்*

**குடிநிலை தரிக்குஞ் சாமி:-**

இல்லறமாகிய நல்லறத்தில் நின்று விருந்தோம்பிப் பொய், கொலை, களவு முதலிய குற்றங்களைக் கடிந்து, அன்பு, அறன் என்ற இரு கண்களையுடையவராகி நிற்கும் குடிகளை, நன்கு தாங்கி வள்ளிமணவாளன் அருள்புரிகின்றான்.

முருகன் திருவுருவத்தை வீட்டில் வைத்து வழிபட்டால், ஆண்டியாக்கிவிடுவார் என்பது பிழை. குடித்தனஞ் செய்யும் வீட்டில் முருகனை வைத்து நன்கு வழிபட வேண்டும். ஒரு குறையும் வராது.

**அசுரர்கள் பொடியாகச் சிதைக்குஞ் சாமி:-**

தீமைகட்கு உறைவிடமாகிய அரக்கர்கள் பொடியாகுமாறு மெய்ஞ்ஞான வீர மூர்த்தியாகிய விமலன் அழித்தருளினான்.

**எமை பணி விதிக்குஞ் சாமி:-**

இறைவர், அடியார்கள் ஒவ்வொருவருக்கும் அவரவர் கட்குத் தக்க பணிவிடைகளை நியமித்தருளுவார்.

**தகப்பன்சாமி:-**

தகப்பனாருக்குப் பிரணவ மந்திரத்தின் உட்பொருளை உபதேசித்த ஞான குருபரன் ஆதலின் முருகவேள் தகப்பன் சுவாமி எனப் புகழ்பெற்றார்.

ஆசிரியரிடம் அறநூல்களைப் படியாமலும், தாய் தந்தையருக்குக் கீழ்ப்படியாமலும், அடங்காப் பிடாரிகளாய்த் திரியும் மூடப் பிள்ளைகளைத் 'தகப்பன்சாமி யாகிவிட்டான்' எனச் சிலர் அறியாமையால் கூறுகின்றனர்.

"தழைத்த சாத்திர மறைபொரு ளறிவுள
குருக்கள் போல்சிவ நெறிதனை யடைவொடு
தகப்ப னார்க்கொரு செவிதனில் உரைசெய்த முருகவித்
தகவேளே" - *திருப்புகழ்*

*புத்ரகுரு, சுவாமிநாதன், குழந்தைக்குரு, குமர குருபரன், தகப்பன்சாமி என்று அறுமுகப் பெருமானை அடியவர் புகழ்வார்.*

## கருத்துரை

*தகப்பன் சுவாமியாக விளங்கும் குமாரக் கடவுளே! எளிதில் அருள்புரியும் உமது பெருமையை உணர்ந்து உய்யுமாறு அடியேனுக்குத் தக்க பணியைக் கட்டளை யிட்டருள்வீர்.*

## 16

மதனேவிய கணையாலிரு
வினையால்புவி கடல்சாரமும்
வடிவாயுடல் நடமாடுக முடியாதேன்

மனமாயையொ டிருகாழ்வினை
அறமூதுடை மலம்வேரற
மகிழ்ஞானக அநுபூதியி னருள்மேவிப்

பதமேவுமு னடியாருடன்
விளையாடுக அடியேன்முனெ
பரிபூரண கிருபாகர முடன்ஞான

பரிமேலழ குடனேறிவி
ணவர்பூமழை அடிமேல்விட
பலகோடிவெண் மதிபோலவெ வருவாயே

சதகோடிவெண் மடவார்கட
லெனசாமரை யசையாமுழு
சசிசூரியர் சுடராமென ஒருகோடிச்

சடைமாமுடி முனிவோர்சர
ணெனவேதியர் மறையோதுக
சதிநாடக மருள்வேணிய னருள்பாலா

விதியானவ னிளையாளெ்ன
துளமேவிய வளிநாயகி
வெகுமாலுற தனமேலணை முருகோனே

வெளியாசையொ டடைபூவணர்
மருகாமணி முதிராடக
வெயில்வீசிய அழகாதமிழ் பெருமாளே.

## பதவுரை

சதகோடி வெண்மடவார் - வெண்மையான ஆடையுடுத்த நூறுகோடி பெண்மணிகள், கடல் என - கடல் திரண்டு வந்தது போல் திரண்டு வந்து, சாமரை அசையா - சாமரைகளை வீசவும், முழு சசி சூரியர் சுடராம் என - பூரண சந்திர சூரியரது ஒளியை யொத்த, ஒரு கோடி சடைமாமுடி முனிவோர் சரண் என - பெருமைமிக்க சடைமுடியுடன் கூடிய ஒருகோடி முனிபுங்க வர்கள் சரணம் என்று கூறவும், வேதியர் மறை ஓதுக - மறை யவர்கள் வேதகீதம் ஓதவும், சதி நாடகம் அருள் - தாளவொத்துடன் கூடிய திருநடனம் புரிந்தருள்கின்ற, வேணியன் அருள் பாலா - சடை முடிப்பரமன் அருள் புரிந்த திருக்குமாரரே! விதி ஆனவன் இளையாள் - எல்லா வுயிர்களுக்கும் விதியை விதிக்கும் பிரமதேவனது தங்கையும், எனது உளமேவிய வளிநாயகி - அடியேனுடைய உள்ளக் கமலத்தில் எழுந்தருளியுள்ளவருமாகிய வள்ளிப் பிராட்டி, வெகுமால் உற - மிகவும் அன்பு கொள்ளும் படி, தன்மேல் அணை முருகோனே - தனபாரங்களின்மீது பொருந்து கின்ற முருகக் கடவுளே! வெளி ஆசையொடு அடை பூவணர் மருகா - ஞானவெளியின் மீது அன்பு வைத்து வருகின்ற காயாம்பூ நிறமுள்ள திருமாலின் மருகரே! மணி - இரத்தின மணிகளைப் போலவும், முதிர் ஆடக - மாற்றுமிக்க தங்கம் போலவும், வெயில் வீசிய அழகா - ஒளிபரப்புகின்ற அழகுடைய வரே! தமிழ் பெருமாளே - தமிழ்க்கடவுளாகிய பெருமிதம் மிக்கவரே! மதன் ஏவிய கணையால் - மன்மதன் விட்ட கணை களாலும், இரு வினையால் - நல்வினை தீவினை யென்ற இரு வினைத் தொகுதியாலும், புவி கடல் சாரமும் வடிவாய் - மண்ணும் உப்பும் சேர்ந்த ஒரு வடிவத்தை யெடுத்து, உடல் நடமாடுக முடியாதேன் - சரீரத்துடன் உலகில் நடமாடித் திரிய முடியாதவனாகிய அடியேன், மனம் - மனமும், மாயையொடு - மாயையும், இருகாழ் வினை - மிகுந்த இரு வினைகளும், அற - அற்றுப்போகவும், மூது உடை மலம் வேர் அற - பழமையான

ஆணவ மலத்தின் வேர் அற்றுப் போகவும், மகிழ் ஞான அக - மகிழ்ச்சியைத் தரும் ஞானத்தின் இருப்பிடமாகிய, அநுபூதியின் அருள்மேவி - சிவாநுபூதியின் திருவருளைப் பெற்று, பதமேவும் உன் அடியார் உடன் விளையாடுக - திருவடியை யடைந்த உமது அடியார் திருக்கூட்டத்துடன் அடியேன் விளையாடி இன்புறும் பொருட்டு, அடியேன் முனே - அடியேனுக்கு முன், பரிபூரண கிருபாகரம் உடன் - நிறைந்த பெருங்கருணையுடன், ஞானபரிமேல் -திருஞானமாகிய புரவிமேல், அழகுடன் ஏறி - அழகாக ஆரோகணித்து, விண்ணவர் பூமழை அடிமேல்விட - தேவர்கள் தேவரீரது திருவடிமேல் மலர்மழை பொழிய, பலகோடி வெண்மதிபோலவே - அநேகங் கோடி சந்திர ஒளிபோல், வருவாயே - வந்தருளுவீர்.

## பொழிப்புரை

வெள்ளைக் கலையுடுத்த நூறு கோடி மாதர்கள் கடல்போல் திரண்டு வெண்சாமரை யிரட்டவும், பூரண சந்திர சூரியர்களது ஒளிபோன்ற சடாமகுடங்களுடன் கூடி ஒரு கோடி முனிவரர் "சரண்" என்று துதி செய்யவும், வேதியர்கள் வேத கீதம் ஓதவும், தாளவொத்துடன் திருநடனம் புரிகின்ற சடைமுடிக் கடவுள் பெற்றருளிய திருப்புதல்வரே! நான்முகக் கடவுளின் தங்கையாரும், அடியேனுடைய உள்ளக் கோயிலில் எழுந்தருளியிருப்பவரு மாகிய வள்ளிநாயகியார் மிகவும் அன்பு கொள்ள, தனபாரங் களின் மீது பொருந்துகின்ற முருகவேளே! ஞான வெளியின்மீது அன்புகொண்டு வருகின்ற பூவண்ணராகிய திருமாலின் திருமருகரே! இரத்தினமணி போலவும் மாற்றுயர்ந்த தங்கம் போலவும் ஒளி வீசுகின்ற கட்டழகரே! தமிழ்க் கடவுளாக விளங்கும் பெருமிதம் உடையவரே! மன்மதன் ஏவிய கணைகளி னாலும், இரு வினைகளினாலும், மண் உப்பு இவைகளின் சம்பந்தத்தினால் வடிவங் கொண்டு, உலகில் நடமாடித் திரிகின்ற அடியேன், இனி அவ்வாறு திரியாமற்படிக்கு மனமும் மாயையும் மிகுந்த இருவினைகளும் அறவும், மூலமலமாகிய ஆணவம் வேரற்றுப் போகவும், மகிழ்ச்சியைத் தரும் ஞானத்தின் இருப்பிட மாகிய சிவாநுபூதியின் திருவருளையடைந்து உமது பதத்தைப் பெற்ற அடியார் திருக்கூட்டத்தினுடன் விளையாடும்பொருட்டு, ஞானப்புரவிமீது அழகுடன் ஏறி, திருவடிமீது தேவர்கள் மலர் மழை பொழிய, பலகோடி சந்திர ஒளியுடன் அடியேன்முன் வருவீர்.

## விரிவுரை

மதனேவிய கணையால்:-

இந்த வுடம்பு மன்மதன் ஏவிய கணையினால் வருகின்றது. கரும்பு வில்லும் சுரும்பு நாணும் பூங்கணை ஐந்துங்கொண்டு தென்றல் தேரேறி உயிர்களுக்கு விருப்பத்தை விளைவித்து இந்த உடம்பை உண்டு பண்ணுமாறு செய்கின்றான்.

இரு வினையால்:-

நல்வினை தீவினை யென்ற இரு வினைகளினால் இந்த வுடம்பு வந்தது. அவ் வினைப்போகந் துய்க்குமளவும் இது நிலைபெறும். துய்ப்பு முடிந்தவுடன் தினையளவு நேரங்கூட இவ்வுடம்பு நில்லாது; வீழ்ந்துபடும்.

"அறம்பாவம் என்னும் அருங்கயிற் றால்கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை - *திருவாசகம்*

வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தால்
தினைப்போ தளவுநில் லாதுகண் டாய்சிவன் பாதநினை
நினைப்போரை மேவு நினையாரை நீங்கிந் நெறியினின்றால்
உனைப்போல் ஒருவருண் டோமன மேஎனக் குற்றவரே.
- *திருவெண்காடர்*

இந்த வுடம்பு ஓர் அகல்; புண்ணிய பாவம் அதில் விட்ட நெய்; வாழ்நாள் அதில் இட்ட திரி; உயிர் எரிகின்ற விளக்கு; நெய்யுள்ளவரை விளக்கு எரியும்.

"புண்ணிய பாவ மிரண்டும் நெய்யென்று மனங்கரி
பூட்டும் வாணாளதில் போட்டுவைத்த திரி
எண்ணிப்பார்க்கிலிதில் உயிர் விளக்கே சரி
இரண்டும் போனால் விளக்கிருக்குமோ அரிகரி"
- *அருணாசலக் கவி*

புவி கடல் சாரமும் வடிவாய்:-

கடல்சாரம் - உப்பு.

இந்த வுடம்பு மண்ணாலும் உப்பாலும் ஆயது. ஐந்து பூதங்களின் பரிணாமமென்றாலும், மண், உப்பு இவைகளின் பகுதி அதிகம் என்க.

**உடல் நடமாடுக முடியாதேன்:-**

*"இந்தப் புலால் உடம்பைப் பொருளென்று எண்ணிச் சுமந்து இனி அடியேன் உலாவுதலை விரும்பேன்" என்று அடிகள் கூறுகின்றனர்.*

"யோகத்தைச் சேரு மாறுமெய்ஞ்
ஞானத்தைப் போதி யாயினி
ஊனத்தைப் போடி டாதும யங்கலாமோ" *- திருப்புகழ்*

"ஆனாலும் இந்த உடம்போ டிருப்ப தருவருப்பே"

*- பட்டினத்தடிகள்*

**மனம் :-**

*மனம் – அந்தக்கரணங்களுள் ஒன்று. இது நினைக்குங் கருவி; மனத்தையுடையவன் மனிதன்; மன் என்ற பகுதியடியாகப் பிறந்தது மனம் என்ற சொல்.*

*இந்த மனந்தான் பந்தத்திற்கும் மோட்சத்திற்குங் காரண மாகும். தீயமனம் துன்பத்தையும், தூயமனம் இன்பத்தையும் நல்கும்.*

*மனத்தை யடக்குவதுதான் யோகம்; மனத்தால்தான் எல்லாப் பாவங்களும் வருகின்றன.*

"மநயேவ மநுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ"

*மனம் ஒடுங்கிய இடத்தில்தான் ஒப்பில்லாத ஆனந்தம் உண்டாகின்றது.*

*மனதை நோக்கி, பட்டினத்துப் பிள்ளையார் கூறுவதைக் காண்க.*

சிவன் பாதநினை;
நினைப்போரை மேவு; நினையாரை நீங்கிந் நெறியில்நின்றால்
உனைப்போல் ஒருவருண் டோமன மே!எனக் குற்றவரே.

*மனதிற்கு அடிகள் கூறும் உபதேசத்தையும் உன்னுக.*

ஒன்றென் றிரு;தெய்வம் உண்டென் றிரு;உயர் செல்வமெல்லாம்
அன்றென் றிரு;பசித் தோர்முகம் பார்;நல் லறமுநட்பும்
நன்றென் றிரு;நடு நீங்காம லேநமக் கிட்டபடி
என்றென் றிரு;மன மே!உனக் கேயுப தேசமிதே.

அந்தோமன மே!நம தாக்கையை
நம்பாதேயி தாகித சூத்திரம்
அம்போருக னாடிய பூட்டிது"

என்று அடிகள் பிறிதொரு திருப்புகழில் மனதிற்கு உபதேசிக்கின்றனர்.

மன சம்பந்தமில்லாததே மௌனம் என அறிக.

மனத்தாலும் வாக்காலும் மன்னவொண்ணா மோன
இனத்தாரே நல்ல இனத்தார் - கனத்தபுகழ்
கொண்டவரும் அன்னவரே கூறரிய முத்திநெறி
கண்டவரும் அன்னவரே காண்.

சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

- *தாயுமானார்*

மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. - *திருவள்ளுவர்*

ஆதலின், குருவருளாலும், திருவருளாலும், அரிதின் முயன்று, காடுங் கரையுங் கால் விட்டோடுகின்ற மனக்குரங்கை ஓட விடாமல் கட்டிப்பிடித்து, அசைவற்று இருக்கவேண்டும்.

ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமனம் எல்லாம்நீ
என்றறிந்தால் எங்கே இயங்கும் பராபரமே. - *தாயுமானார்*

**மாயை :-**

மா - தோற்றம்; யா - ஒடுக்கம். தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் எது காரணமோ அது மாயை என்க.

உலகிற்கு முதற்காரணம் மாயையென்க. அது நித்தமாய், சடமாய், முதல்வனுக்குப் பரிக்கிரக சத்தியாய், முதல்வனின் வியாப்யமாய் மெய்ப்பொருளாய், அருவாய் நிற்பதென்று அறிக.

மாயை சுத்தமாயை அசுத்தமாயை என இருவகைப்படும்.

சுத்தமாயை - மாமாயை, குடிலை, குண்டலி, விந்து என்ற பெயர்களையுடையது.

அசுத்தமாயை - அதோமாயை, மாயை, மோகினி என்ற பெயர்களையுடையது.

சுத்தப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் சுத்தமாயை; அசுத்தப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் அசுத்தமாயை.

சுத்தப் பிரபஞ்சம் சிவதத்துவம் முதலாயின.

அசுத்தப்பிரபஞ்சம் கலாதத்துவம் முதலாயின.

அநந்ததேவர் ஸ்ரீகண்டர் முதலியோர் விஞ்ஞானகலர். பிரளயாகலரிற் பக்குவமுடையோராய், சகச மலத்தின் நீங்கி, முதலவன் திருவருளால் முழுதுணர்ந்து, படைப்பு முதலிய தொழில்களைச் செய்வதற்கு ஏதுவாகிய அதிகார மலவாசனை மாத்திரமுடையவராய் முதல்வன் ஏவல்வழி நின்று அசுத்தமாயை முதலியவற்றைக் காரியப்படுத்துவர். ஆதலின், அவர்களுடைய தநுகரணாதிகட்குக் காரணமாய் நிற்பது சுத்தமாயை என உணர்க.

கலைமுதல் நிலம் ஈறாகிய அசுத்தப் பிரபஞ்சத்திற்குக் காரணமாய், வினைக்குப் பற்றுக்கோடாய், ஆணவமலம் போல் சிறப்புவகையானன்றிப் பொதுவகையால் வினையில் கட்டுண்ட ஆன்மாக்களை மயக்குவதாய் நிற்பது அசுத்த மாயை என அறிக. இன்னும் இதன் விவரங்களைச் சிவஞானபோத மாபாடியத்திற் காண்க.

**இருவினையால் :-**

**வினையின் விளக்கம்**

உலகில் உள்ள உயிர்கட்கு எப்போதும் இன்ப துன்பங்கள் மாறிமாறி வந்துகொண்டேயிருக்கின்றன. சிலர் வாழ்வதும், சிலர் தாழ்வதும், சிலர் சுவர்க்கம் புகுவதும், சிலர் நரகம் புகுவதும், சிலர் உயர்குடிப் பிறப்பதும் சிலர் இழிந்த குடிப்பிறப்பதும் ஏன்? உயிர் தன் விருப்பப்படி செய்யுமாயின் எல்லாவுயிர்களும், தன வந்தர் வீட்டில்தானே பிறக்கும்? உயர்குடியில்தானே பிறக்கும்?

இறைவன் ஆணையின்வழி இவை நிகழ்கின்றன. அங்ஙன மாயின் இறைவன் பட்சபாத முள்ளவனாகின்றான். இறை வனுடைய அருட்குணத்திற்கு முரணும், உயிர்களின் இரு வினைக்கு ஏற்ப இறைவன் இவ்வாறு ஐந்தொழில்களையும் புரிகின்றான். அதனால், இறைவனுக்குப் பட்சபாதம் இன்று என்று அறிக.

நிமித்த காரணனாகிய இறைவனுக்கு, ஆணையேயன்றி வினையுந் துணைக்காரணம் என்க.

வினையின் வண்ணமே எல்லாம் நடக்கும் என்றால்,

இறைவன் எதற்கு? எனின், வினை சடப்பொருள் ஆதலின் தானே வந்து செய்தவனைப் பொருந்தாது; ஆதலின் அந்தந்த காலத்தில் அவ்வவ் வினையை அறிந்து பொருத்து வதற்கு இறைவன் வேண்டும் என்று உணர்க.

இனி, உயிர்கள் சித்துப்பொருள்தானே? அவ்வுயிர்களே அவ் வினைகளை எடுத்து நுகருமே? ஆதலின், வினைகளை யூட்டு வதற்கு இறைவன் எதற்கு? எனின்; உயிர்கள் தாமேயறியா; அறிவித்தால் மட்டுமே யறியும்; ஆதலின், அறிந்து ஊட்டுவதற்கு இறைவன் இன்றியமையாதவ னாகின்றான்.

- "அவ்வினையைப்
பேராம லூட்டும் பிரானின் நுகராரேல்
ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு" - *சிவஞானபோத அதிகரணம்*

அப்படியாயின் வினையின் வழியே உயிர்கட்கு, இறைவன் சுக துக்கங்களைத் தருகின்றான் என்றால் இறைவனுடைய சுதந்திரத்திற்கு இழுக்கு எய்துமே எனின், எய்தாது என்க. குடி களுடைய குற்றங் குணங்கட்கு ஏற்ப அரசன் அருளுந் தண்டமுஞ் செய்வதனால் அரசனுடைய சுதந்திரத்திற்கும் இழுக்கில்லை யல்லவா?

வினை ஆதியா? அநாதியா? என்று ஐயம் நிகழ்வது இயல்பு; ஆதியாயின் இல்லது தோன்றாது என்ற சற்காரிய வாதம் பிழைபடும்; ஆகவே, வினை அநாதியே உண்டு என்க. அது எதுபோலெனின்; நெல்லிற்கு உமியும், செம்பிற்குக் களிம்பும்போல் உயிர்கட்கு வினை தொன்மையென அறிக.

நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையோ - வல்லி
மலகன்மம் அன்றுளவாம்; வள்ளலார் பொன்வாள்
அலர்சோகஞ் செய்கமலத் தாம்.

இருவினையின் காரியமான இன்பதுன்ப முதலாயின.

### வினை மூவுருவங் கொள்ளும்

வினை, ஈட்டப்படுங்கால் மந்திர முதலிய அத்துவாக்களிட மாக, மனவாக்குக் காயங்கள் என்ற மூன்று கரணங்களால் ஈட்டப்பட்டுத் தூலகன்மமாய் ஆகாமியம் எனப் பெயர் பெறும்.

பின்னர், பக்குவமாகும்வரை புத்திதத்துவத்தினிடமாக மாயையிற் கிடந்து, சாதி, ஆயு, போகம் என்னும் மூன்றற்கும்

ஏதுவாகி, முறையே சனகம், தாரகம், போக்கியம் என்ற மூவகைத் தாய், அபூர்வம், சஞ்சிதம், புண்ணிய பாவம் என்னும் பரியாயப் பெயர் பெறும்.

வினை பக்குவமாதல் என்பது அவ்வப் பயன்களைத்-தோற்றுவித்தற்குரிய துணைக் கருவிகள் எல்லாவற்றோடு கூடுதல் என அறிக.

அது, பின்னர்ப் பயன்படுங்கால், ஆதிதைவிகம், ஆதியான் மிகம், ஆதிபௌதிகம் என்ற முத்திறத்தால் பல வகைப்பட்டு பிராரத்தம் எனப் பெயர் பெறும்.

எனவே, ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என வினை மூவுருவங்கொள்ளும்.

ஆகாமியம் - செய்யப்படுவது.

சஞ்சிதம் - பக்குவப்படாமல் இருப்பாக நிற்பது.

பிராரத்தம் - அநுபவிப்பது.

இனி, பிராரத்தம், ஆதிதைவிகம், ஆதியான்மிகம், ஆதி பௌதிகம் என்ற மூன்று வழியாக வரும் என்றோமே அதன் விவரம் வருமாறு:

1. ஆதிதைவிகம்:- தெய்வத்தால்வரும் இன்ப துன்பங்களாம்.

அவை: கருவிற் சேர்தல்; பிறக்கும்போது எய்தும் இடர்; நரை திரை மூப்பு முதலியன. நரகத்தில் ஆழ்தல்; உலகை யரசு புரிதல் முதலிய துன்ப இன்பங்களாம்.

**கருவிற் றுயர்செனிக்குங் காலைத் துயர்மெய்**
**திரைநரைமூப் பிற்றிளைத்துச் செத்து - நரகத்தி**
**னாழுந் துயர்புவியை யாளின்ப மாதியெலாம்**
**ஊழுதவு தைவிகமென் றோர்.**

2. ஆதியான்மிகம்:- தன்னாலும் பிறராலும் வரும் இன்ப துன்பங்களாம்.

அவை: மனத்துயர்; பயம்; சந்தேகம்; கோபம்; மனைவி, மக்கள், கள்வர், பகைவர், நண்பர், விலங்கு, பேய், பாம்பு, தேள், எறும்பு, கரையான், அட்டை, நண்டு, முதலை, மீன் முதலியவை களால் வரும் துன்ப இன்பங்களாம்.

தன்னாற் பிறரால் தனக்குவருந் தீங்குநலம்
இன்னா விலங்கலகை தேளெறும்பு - சென்முதனீர்
அட்டையல வன்முதலை மீனரவ மாதியினாங்
கட்டமுமிங் கான்மிகமே காண்.

3. *ஆதிபௌதிகம்:- மண் முதலிய பூதங்களால் வரும் இன்ப துன்பங்கள்.*

*அவை: குளிர்ச்சி, மழை வெயில், கடுங்காற்று, இருள், மின்னல், இடி, தென்றல் முதலியன.*

பனியால் இடியால் படர்வா டையினால்
துனிதென் றலினாஞ் சுகமும் - தனையனைய
நீரினாம் இன்பின் னலுநெருப்பி னாந்துயரின்
போரில் பவுதிகமா கும்.

*இன்னும், உலகம், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம் என வினை ஐவகைப்படும்.*

1. உலகவினை :- *கிணறு, குளம், தண்ணீர்ப்பந்தல் முதலியன செய்தலால் உண்டாவதாய், நிவிர்த்திகலையில் அடங்கிய புவனபோகங்களைத் தருவது.*

2. வைதிக வினை :- *வேதத்துள் விதித்த அக்கினிட்டோமம் முதலிய வேள்வி முதலியன செய்தலால் உண்டாவதாய் பிரதிட்டாகலையில் அடங்கிய புவன போகங்களைத் தருவது.*

3. அத்தியான்மிக வினை :- *வேதநெறியாற் செய்யும் பூசனை துறவு முதலியவற்றால் உண்டாவதாய் வித்தியாகலையில் அடங்கிய புவன போகங்களைத் தருவது.*

4. அதிமார்க்க வினை :- *இயமம் நியமம் முதலிய யோகப் பயிற்சியால் உண்டாவதாய்ச் சாந்திகலையில் அடங்கிய புவன போகங்களைத் தருவது.*

5. மாந்திர வினை :- *சுத்தமந்திரங்களைக் கணித்தல் முதலிய ஞானப்பயிற்சி விசேடங்களால் உண்டாவதாய் சாந்தியதீத கலையில் அடங்கிய புவன போகங்களைத் தருவது.*

*இதுகாறும் ஆராய்ந்தவற்றால் அறியப்படுவது பிறவிக்கு வினை காரணம். அவ்வினை அற்றாலன்றிப் பிறவி அறாது எனத் தெளிக.*

இருவினைமு மலமுமற இறவியொடு பிறவியற
ஏகபோகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையரு ளிடைமருதில்
ஏகநாயகா லோகநாயகா!" - *திருப்புகழ்*

அவையே தானேயாய் இருவினையில்
போக்குவரவு புரிய ஆணையில்
நீக்கமின்றி நிற்குமன்றே.

*என்ற சிவஞானபோத இரண்டாஞ் சூத்திரத்தினாலும், இதற்கு மாதவச் சிவஞான யோகிகள் எழுதிய பேருரையாலும், சித்தியார், சிவப்பிரகாசம் முதலிய வழிநூல் புடை நூல்களாலும் வினையின் விளக்கத்தை விரிவாகக் கண்டு தெளிக.*

"வேலுண்டு வினையில்லை"

மூதுடை மலம் வேரற:-

*மூது உடை மலம் - பழமையான மலம்; ஆணவம். ஆணவ மலமே எல்லா அனர்த்தங்கட்குங் காரணமான மூலமலம் என்க.*

அடியாருடன் விளையாடுக:-

*அடியவர் உறவு இன்றியமையாதது. வாசனாமலம் தாக்காதிருக்கும் பொருட்டு, அருள்பெற்ற பிறகும் அது வேண்டற் பாலது. "அன்பரொடு மரீஇ" என்ற சிவஞான போதத் திருவாக்கி னாலும் அறிக.*

பல கோடி வெண்மதிபோலவே வருவாயே:-

*ஆண்டவனுடைய அருட்பிரகாசம் அநேகங் கோடி சந்திர ஒளி ஒருங்கு திரண்டாற்போல் இருக்கும். அந்தக் குளிர்ந்த ஒளியினால் பிறவியின் வெம்மை விலகும்.*

விதியானவன் இளையாள்:-

*திருமாலினது திருக்கண் மலரில் தோன்றிய சுந்தர வல்லியே வள்ளிநாயகியாகும்; அதனால், திருமாலின் புதல்வராகிய பிரமதேவருடைய தங்கையென்றனர்.*

எனதுளமேவிய வளி நாயகி:-

*அருணகிரிநாதர் எப்போதும் வள்ளிநாயகியை உள்ளக் கமலத்தில் எழுந்தருளப் புரிந்து தியானஞ் செய்வர்.*

வெளியாசையொடடை பூவணர்:-

*வெளி – ஞானாகாசம். சிதம்பரத்தில் திருமாலுக்கு அளவற்ற அன்பு; அதனால், சிதம்பரத்தில் என்றும் அகலாமல் படுத்துச் சிவயோக நித்திரை புரிகின்றனர்.*

*பூ – காயாம்பூ; அது நீலநிறமாக இருக்கும். அம்மலர் போன்ற திருமேனியுடையவர் திருமால்.*

## கருத்துரை

*சிவகுமாரரே! வள்ளி மணவாளரே! தமிழ்க் கடவுளே! இரு வினையும் மும்மலமும் நீங்க, அடியேன்முன் பலகோடி சந்திர ஒளியுடன் தேவரீர் வந்து அருள் புரிவீர்.*

## 17

மாண்டாரெ லும்பணி யுஞ்சடை
யாண்டாரி றைஞ்சமொ ழிந்ததை
வான்பூத லம்பவ னங்கனல் புனலான

வான்பூத முங்கர ணங்களு
நான்போயொ டுங்கஅு டங்கலு
மாய்ந்தால்வி ளங்கும தொன்றினை யருளாயேல்

வேண்டாமை யொன்றைய டைந்துள
மீண்டாறி நின்சர ணங்களில்
வீழ்ந்தாவல் கொண்டுரு கன்பினை யுடையேனாய்

வேந்தாக டம்புபு னைந்தருள்
சேந்தாச ரண்சர ணென்பது
வீண்போம தொன்றல என்பதை யுணராதோ

ஆண்டார்த லங்கள ளந்திட
நீண்டார்மு குந்தர்த டந்தனில்
ஆண்டாவி துஞ்சிய தென்றுமு தலைவாயுற்

றாங்கோர்சி லம்புபு லம்பிட
ஞான்றூது துங்கச லஞ்சலம்
ஆம்பூமு ழங்கிய டங்கும ளவில்நேசம்

பூண்டாழி கொண்டுவ னங்களி
லேய்ந்தாள வென்றுவெ றுந்தனி
போந்தோல மென்றுத வும்புயல் மருகோனே

பூம்பாளை யெங்கும ணங்கமழ்
தேங்காவில் நின்றதொர் குன்றவர்
பூந்தோகை கொங்கைவி ரும்பிய பெருமாளே.

## பதவுரை

*ஆண்டார் - உலகங்களைக் காத்தவரும், தலங்கள் அளந்திட நீண்டார் - மூவுலகங்களை அளக்கும் பொருட்டு நீண்டவரும், முகுந்தர்- முத்தியைத் தருகின்றவரும் ஆகிய நாராயணர்; தடந்தனில் - பெரிய நீர்நிலையில், முதலைவாய் உற்று - முதலையின் வாயில் அகப்பட்டு, ஆண்டு ஆவி துஞ்சியது என்று - அவ்விடத்தில் உயிர் அழிவுறும் என்று அஞ்சி, ஆங்கு ஓர் சிலம்பு புலம்பிட, அம் மடுவின்நடுவில் நின்ற ஒப்பற்ற மலைபோன்ற யானை ஓ என்று கதறி அழைத்திடலும், ஞான்று - அப்போது, ஊது துங்க சலஞ்சலம் - ஊதப்பட்ட தூய வலம்புரிச் சங்கம், ஆம்பூ முழங்கி அடங்கும் அளவில்-பூ என்று ஆகிய ஒலியுடன் ஒலித்து அவ்வொலி அடங்குமுன், நேசம் பூண்டு - அன்பு கொண்டு, ஆழி கொண்டு - சக்கரத்தை யேந்தி, வனங்களில் ஏய்ந்து ஆள என்று - பல காடுகளைக் கடந்து ஆட்கொள்ளும் பொருட்டு, வெறும் தனி போந்து - தன்னந்தனியே சென்று, உதவும் புயல் - உதவிபுரிந்த நீலமேகம் போன்றவருமாகிய நாராயண மூர்த்தியின், மருகோனே - திருமருகரே! பூம் பாளை எங்கும் மணம் கமழ் - மேல்மடலுடன் கூடிய பூக்களின் மணம் எங்கும் வீசுகின்ற, தேம் காவில் நின்றது ஒரு குன்றவர் - இனிய சோலையில் வாழ்கின்ற ஒப்பற்ற வேடர்களது, பூந்தோகை கொங்கை விரும்பிய - அழகிய புதல்வியாகிய வள்ளியம்மையின் ஞானமாகிய தனங்களை விரும்பிய, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! மாண்டார் எலும்பு அணியும் சடை ஆண்டார் - மாட்சிமை யுடையாருடைய எலும்புகளைத் தரிக்கின்ற சடாபாரத்தையுடைய தலைவராகிய சிவபெருமான், இறைஞ்ச மொழிந்ததை - வணங்கிக் கேட்க உபதேசித்த உபதேசப் பொருளை, வான் - விண், பூதலம் - மண், பவனம் - காற்று, கனல் - நெருப்பு, புனல் - நீர், ஆன வான் பூதமும் - ஆகிய உயர்ந்த பூதங்களும், கரணங்களும் - இந்திரியங்களும் மனம்*

முதலிய உட்கருவிகளும், நான்போய் ஒடுங்க - நான் என்ற ஜீவபோதம் விலகி ஒழியவும், அடங்கலும் மாய்ந்தால் விளங்கும் அது ஒன்றினை - பொறிபுலன்கள் முதலிய யாவும் இறந்த இடத்தில் விளங்குவதாகிய ஒப்பற்ற பொருளை, அருளாயேல் - அருள்புரியாதிருப்பீராயின், வேண்டாமை ஒன்றை அடைந்து - ஒருபொருளையும் விரும்பாத தன்மையை அடைந்து, உளம் ஈண்டு ஆறி உள்ளமானது இங்கு ஆறுதலாக இருந்து, நின் சரணங்களில் வீழ்ந்து தேவரீருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி, ஆவல்கொண்டு உருகு அன்பினை உடையேனாய் - ஆவல் கொண்டு உள்ளம் உருகுகின்ற அன்பை உடையவனாகி, வேந்தா - அரசரே! கடம்பு புனைந்து அருள் சேந்தா-கடப்ப மலர்மாலையணிந்து அருள்புரிகின்ற செம்மைப்பண்புடையவரே! சரண் சரண் என்பது வீண்போம் அது ஒன்று அல என்பதை - சரணம் சரணம் என்று அடியேன் கூறுவது வீண்போகத்தக்க ஒரு பொருள் அன்று என்பதை, உணரா்தோ - தேவரீர் திருவுள்ளம் அறியாததோ?

## பொழிப்புரை

உலகங்களைக் காப்பவரும், மூவுலகங்களையும் அளவிடும் பொருட்டு நீண்டவடிவை யெடுத்தவரும், முத்தியைத் தருகின்றவரும், பெரிய நீர்நிலையில் முதலை வாய்ப்பட்டு மடிந்ததுபோல் வருந்தி ஒப்பற்ற மலை போன்ற யானை கதறிக் கூப்பிடலும், (தமது திருக்கரத்திலுள்ள) ஊதுகின்ற புனிதமான வலம்புரிச் சங்கத்தை முழக்கி அவ்வொலி அடங்கு முன்னரேயே அன்பு கொண்டு, சக்ராயுதத்தைத் தாங்கிக்கொண்டு, பல காடுகளைக் கடந்து தன்னந்தனியாகவே, அந்த யானையைக் காப்பாற்றும் பொருட்டு அபயம் என்று கூறிச்சென்று உதவி புரிந்த நீலமேகம் போன்றவரும் ஆகிய திருமாலின் மருகரே! மடலுடன் கூடிய மலர்களின் நறுமணம் எங்குங் கமழ்கின்ற இனியசோலை ல் வாழுகின்ற வேடர்களது குலத்தில் வந்த வள்ளியம்மையாரது தனங்களை விரும்பிய பெருமிதம் உடையவரே! மாட்சிமைப் பட்டவருடைய எலும்புகளை யணிகின்ற சடாபாரமுடைய சிவ மூர்த்தி வணங்கிக் கேட்க உபதேசித்த உபதேசப்பொருளை, விண், மண், காற்று, தீ, நீர் என்ற ஐம்பெரும் பூதங்களும், கரணங்களும், ஜீவபோதமும், ஏனைய கருவிகள் யாவும் அழிந்த இடத்தில் விளங்குவதாகிய ஒப்பற்ற பொருளை, அடியேனுக்கு அருள் புரியாதிருப்பீராயின், எல்லாவற்றிற்கும் தலைவரே! கடப்ப

*மலர்மாலை புனைந்திருக்கும் செம்மையரே! சரணம் சரணம் என்று கூறுவது வீண்போகாது என்பதைத் தேவரீர் திருவுள்ளம் அறியாததோ?*

## விரிவுரை

**மாண்டா ரெலும்பணியுஞ் சடையாண்டார்:-**

*மாண்டார் - மாட்சிமையுடையவர்.*

*மாண்பு என்பதும் மாண்ட என்பதும் ஒருபொருட் கிளவிகள்.*

"மாண்டவென் மனைவியொடு மக்களும் நிரம்பினர்" *- புறநானூறு*

*சர்வ சங்கார காலத்தில் சிவபெருமானார், மாலயனாதி வானவரைத் தமது நெற்றிக்கண்ணாலெரித்து, அவர்கள் சிறந்த சிவ பக்தியுடையவராதலின் அவர்கள் நலங்கருதி அவர்களுடைய எலும்புகளை அணிந்துகொள்வார்.*

*எல்லாம் அவரிடத்திலே ஒடுங்கும் என அறிக.*

"பன்றியங் கொம்புகம டம்புயங் கஞ்சரர்கள்
பண்டைஎன் பங்கமணி பவர்சேயே" *- திருப்புகழ்*

**இறைஞ்ச மொழிந்ததை:-**

*இறைவர் இறைஞ்சிக் கேட்க உபதேசித்த ஓங்காரத்துட் பொருளை உபதேசிக்கவேணும் என்று அடிகள் அறுமுக குருபரனை வேண்டுகின்றார்.*

"நாதா குமரா நமஎன் றரனார்
ஓதா யெனஓ தியதெப் பொருள்தான்" *- அநுபூதி*

"சயிலாங்க னைக்கு ருகியி டப்பக்
கங்கொ டுத்த கம்பர் வெகுசாரி
சதிதாண்ட வத்தர் சடையி டத்துக்
கங்கை வைத்த நம்பர் உரைமாளச்
செயல்மாண்டு சித்த மவிழ நித்தத்
த்வம்பெ றப்ப கர்ந்த உபதேசம்
சிறியேன்த னக்கு முரைசெ யிற்சற்
றுங்கு ருத்து வங்கு றையுமோதான்"

"விசும்பின் புரத்ரயமெ ரித்தபெரு மானும்
நிருபகுரு பரகுமர என்றென்று பக்திகொடு
பரவஅரு ளியமவுன மந்த்ரந்த னைப்பழைய
நினதுவழி யடிமையும்வி ளங்கும்ப டிக்கினிது ணர்த்தியருள் வாயே"

என்று பல இடங்களில் அருணகிரிநாதர் ஆறுமுகக் கடவுளை இவ்வாறு வேண்டுகின்றார். அவ்வாறு வேண்டிய அவருக்குக் குமரகுருபரன் உபதேசித்தருளினான்.

வான்பூதலம்........................நான்போயொடுங்க அடங்கலும் மாய்ந்தால் விளங்கும தொன்றினை:-

சிவாநுபவப் பேரின்பம், பொறி புலன் கருவி கரணங்கள் எனது யான் என்ற எல்லாம் மாய்ந்த இடத்தில் உண்டாகும் என உணர்க. மிகவும் பாடுபட்டார்க்குக் கிடைக்கும்.

எல்லாம் ஒடுங்கிய இடத்தில் ஆன்மாவும் இறைவனும் சந்திக்கின்ற சந்திப்பில் உண்டாகின்ற இன்பத்தேன் அது. கருவிகரணங்களோடு நான் என்ற தற்போதத்தோடு இறைவனை நினைக்கின்றவர்கட்கு அது தோன்றாது.

ஒரு காதலி, பலருக்கு மத்தியில் தன் காதலனைச் சந்திக்கின்ற போது அவள் இன்ப நலனையடைவதில்லை. யாருமில்லாத தன்னந் தனியான இடத்தில் தனது காதலனைச் சந்தித்தபோது அவள் பூரண இன்பத்தை யெய்துகின்றாள்.

எனவே, இறைவனைச் சந்திக்க எண்ணுவோர், மெய் வாய் கண் மூக்கு செவி, வாக்கு பாணி பாதம் பாயு உபத்தம், மண் நீர் கனல் வளி வெளி, மனம் புத்தி சித்தம் அகங்காரம், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற கருவி கரணங்களையும் எனது யான் என்ற புற அகப்பற்றுக்களையும் ஒடுக்கி ஏகாந்தமான பரவெளியில் சந்தித்து மௌனானந்த முத்தியின்பத்தைப் பெற வேண்டும் என்க.

இக்கருத்தைப் பின்வரும் திருவுரைகளால் அறிக.

"எல்லா மறஎன் னையிழந் தநலம்" - அநுபூதி.

"பூதமுங் கரணம் பொறிகளைம் புலனும்
பொருந்திய குணங்களோர் மூன்றும்
நாதமுங் கடந்த வெளியிலே நீயு
நானுமாய் நிற்குநாள் உளதோ" - பட்டினத்தார்

"அல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே ஒளித்துச் சும்மாயிருக்கப்
போதா யினிமனமே"

"சொல்லுகைக் கில்லையென் றெல்லா மிழந்துசும் மாவிருக்கும்
எல்லையுட் செல்ல எனைவிட் டவா"

"அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியை"

*- கந்தரலங்காரம்*

**வேண்டாமை ஒன்றை யடைந்து:-**

*வேண்டும் என்பது உள்ளவரை பிறவிப்பிணி விலகாது.*

*வேண்டும் என்பது ஒன்று உண்டாயின் அது பிறவாமையே யாகும். அப்பிறவாமை வேண்டாமை யெய்தினால் எய்தும்.*

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

*- திருக்குறள்*

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்
வேண்டின்அஃ தொன்றுமே வேண்டுவது - வேண்டினது
வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால்.

*- திருக்களிற்றுப்படியார்.*

*வேண்டும் என்ற தன்மையுள்ளவரை துன்பந்தான். ஆதலின், வேண்டும் என்ற எல்லாவற்றையும் ஒருங்கே விடவேண்டும்.*

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு.

*என்ற வள்ளுவனார் வானமுது வாக்கை நன்கு உணர்ந்து அதனைச் செயலில் கொண்டுவர வேண்டும்.*

**உளமீண்டாறி :-**

*உள்ளம் மீண்டு ஆறி என்றும், உள்ளம் ஈண்டு ஆறி என்றும் இருவிதமாகக் கொள்ளலாம்.*

*மீண்டுஆறி :- உலகப் பொருள்களில் பற்றியிருந்த ஆன்மா அப்பற்றினின்றும் விடுபட்டு மீண்டு முருகவேள் திருவடியில் சார்ந்து ஆறுதல் அடைதல்.*

*ஈண்டு :- இவ்விடம் பிறவி வெப்பத்தினின்றும் விலகி இப்பிறவியெடுத்த இவ்விடமேயே ஆறுதல் பெற்று என்றும் கொள்ளலாம்.*

**நின்சரணங்களில் வீழ்ந்தாவல் கொண்டுருகு அன்பினை உடையேனாய் :-**

*அன்பினால் அகங்குழைந்து உருகி, தணியாத காதலுடன் முருகன் திருவடியில் வீழ்ந்து தொழுதல் வேண்டும். அங்ஙனந் தொழுவோர்க்கு உண்மைப் பொருட்காட்சி யெய்தும். அக்காட்சியின் மாட்சி இத்தன்மைத்தென்று சொல்லாலும் எழுத்தாலும் அளவிட முடியாது. தாந்தாமே அநுபவத்திற் கண்டாலன்றி விளங்காது. இதனை அடியில் வருங் கந்தரலங்காரத் திருப்பாடலாலும் அறிக.*

வேலே விளங்குகை யான்செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளஇங்ஙன் காண்பதல் லால்மன வாக்குசெய
லாலே யடைதற் கரிதாய் அருவுரு வாகிஒன்று
போலே இருக்கும் பொருளைஎவ் வாறு புகல்வதுவே.

**சரண்சரணென்பது வீண்போமதொன்றல:-**

*முருகவேளைச் சரணடைந்து, அவருடைய திருநாமங்களைத் துதித்து நிற்கும் அடியார்கட்கு, அத்திருவருளடைவு வாய்த்தே தீரும். வீண் போகாது. மேலெறிந்த கல் கீழே வந்தே தீரும் என்பதுபோல் என அறிக.*

*முருகவேளுடைய திருநாமத்தை அன்புடன் ஓதித் துதிப்போர் பிறவிக்கடலினின்றுங் கரையேறுவார்; இம்மையில் வறுமைப் பிணியினால் வாடி வருந்தார்.*

முடியாப் பிறவிக் கடலில் புகார்முழு துங்கெடுக்கு
மிடியால் படியில் விதனப் படார்வெற்றி வேற்பெருமாள்
அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு நாமம் புகல்பவரே.

**தலங்களளந்திட - நீண்டார்:-**

*இரணியன் புதல்வர் பிரகலாதர்; பிரகலாதருடைய புதல்வன் விரோசனன்; விரோசனனுடைய புதல்வன் மகாபலிச் சக்ரவர்த்தி. இவர் மூவுலகங்களையுங் கைப்பற்றிக்கொண்டு மிகவும் ஆற்றலுடன் அரசுபுரிந்தனர். இந்திராதி இமையவர் மாவலியின் வலிமையைக் கண்டு மனந்தளர்ந்து திருமாலிடம் முறையிட்டார்கள். ஆயிரம் ஆண்டு புதல்வர்ப்பேறு குறித்து மாதவஞ் செய்த காசிபருக்கும் அவர் மனைவி அதிதி தேவிக்கும் புதல்வராகச் சிறு குறள்வடிவமாக அவதரித்தார்.*

மாவலி மன்னர் ஒரு சிறந்த அஸ்வமேத யாகம் புரிந்து, வந்தவர்கள் கேட்டவையெல்லாம் வாரிவாரி வழங்குவாரா யினார். அவரை அடக்க அது தக்க தருணம் என்று கருதி வாமன மூர்த்தி, மெல்ல நடந்து, யாக சாலையை நண்ணினார். புண்ணியம் என்று கருதிய மாவலி, வந்த வாமனரைத் தொழுது, திருவடி விளக்கி, "தேவரீருடைய வரவினால் அடியேன் வாழ்ந்தேன்; என்னினும் உயர்ந்தோர் இல்லை" என்று இன்னுரை இயம்பினார்.

வாமனர், "வள்ளலே! என் காலினால் அளக்கக்கூடிய அளவு மூவடி மண் வேண்டும்" என்றனர். மாவலி "கொடுத்தேன்" என்றனர். அங்கிருந்த மந்திரியாகிய வெள்ளி என்ற சுக்கிரர் தடுத்து, "அப்பா! மாவலி மன்னா! சற்றுப் பொறு. இவர் திருமால். தமது திருவுருவை மறைத்து வஞ்சனையாக வந்துள்ளார். ஆதலின், இவர் மாய வலையிற் சிக்காதே. தானம் தருவது சரியன்று" என்றார்.

மாவலி புன்னகை பூத்து, "வெள்ளிபகவானே! உமது பேருக்கு ஏற்ற அறிவே உமக்கு இருக்கின்றது. தாங்கள் கூறியவண்ணம் இவர் திருமாலாயின் திருமால் யாசிக்க நான் தருவேனாயின் அதைவிடப் பெரும்பேறு யாதுளது? உயிரே யாயினும் கொள்ளுதல் தீது; கொடுத்தல் நன்று:

வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ என்சில இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால். - கம்பர்

மாய்ந்தவர்கள் மாய்ந்தவர்கள் அல்லர்; இரு கரங்களை நீட்டி இரந்தவர்களே இறந்தவர்கள்; இறந்தவர்களே யானாலும் அறஞ்செய்தவர்கள் இருந்தவர்களேயாவார்கள்" என்று கூறி, அமைச்சராகிய சுக்கிரருடைய சொற்களைக் கேளாது, வாமனரை நோக்கி, "நீர் உம்முடைய திருவடியால் நிலத்தை அளந்து கொள்ளும்" என்று தண்ணீரை யெடுத்து, வாமனருடைய கரமலரில் வார்த்தான். உயர்ந்தவர்க்கு உதவிய உதவியைப்போல் வாமனர் நீண்டார். அவர் திருமுடி ககன கூடத்தை முட்டியது.

கயந்தரு நறும்புனல் கையில் தீண்டலும்
பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கினான்
உயர்ந்தவர்க் குதவிய உதவி யொப்பவே. - கம்பர்

வாமன மூர்த்தி தமது திருவடியை நீட்டி நிலவுலக மெல்லாம் ஓரடியாக அளந்தனர்.

ஆங்கோர் சிலம்பு புலம்பிட.......................... போந்தோல மென்றுதவும் புயல்:-

ஆயிரம் யானைகளுக்குத் தலைவனாகிய கஜேந்திரன் என்ற யானையரசன், பெரிய நீர்நிலையில் நீராடித் திரும்பும்போது வலிமையுள்ள முதலை அதன் புறந்தாளைப் பற்றிக்கொண்டது. நீண்டநாள் போராடியும் யானையால் முதலையை வெல்ல முடிய வில்லை. ஆற்றல் இழந்த கஜபதி நம்பிக்கையுடன் தும்பிக்கையைத் தூக்கி ஆதிமூலம் என்று அழைத்தது.

பாற்கடலில் பாம்பணைமீது பள்ளிகொண்டிருந்த பரந்தா மனார், ஒரு கணநேரமுந் தரிக்காமல், பாஞ்ச ஜன்யத்தை முழக்கி, சக்கரத்தை விடுத்து முதலையைக் கொன்று, பறவையரசன் மீது வந்து தோன்றி அந்த யானையரசனைக் காத்தருளினார்.

பூந்தோகை கொங்கை விரும்பிய பெருமாளே:-

வள்ளியம்மையார் - ஆன்மா; அந்த அம்மையாருடைய கொங்கை என்பது, ஆன்மாவிடந் தோன்றுகின்ற அபரஞானம் பரஞானம் என்ற இரு ஞானங்கள் என்க. அந்த ஞானங்களையே ஞானபண்டிதன் விரும்புகின்றான்.

ஞானம் – அறிவு. இறைவன் ஞான வடிவாக விளங்குபவன். "ஞானந்தான் உருவாகிய நாயகன்" என்பது கந்தபுராணத் திருவாக்கு. "அறிவும் அறியாமையுங் கடந்த அறிவு திருமேனி" என்பது திருப்புகழ். அறிவு வடிவாகிய அமலனுக்கு வேறு எதன்மீது விருப்பம் நிகழும்? ஒன்றிலும் நிகழாது. ஞானம் ஒன்றையே அவர் விரும்புவார். ஞானமே பரகதியை நல்கும். ஞானத்தளையினால் இறைவனைக் கட்டவேண்டும். ஞானத்தி னால் வணங்கவேண்டும்.

முன்னை ஞான முதற்றனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே.

ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேன்உனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாய்உனை நானுந் தொழுவனே. - திருமூலர்

## கருத்துரை

*திருமால் மருகரே! வள்ளிமணவாளரே! சிவபெருமானுக்கு உபதேசித்ததும், கருவிகரணங்கள் அற்ற இடத்தில் விளங்குவது மாகிய தத்துவப் பொருளை, உம்மையே நினைந்து உருகிப் பணியும் அடியேனுக்கு உபதேசித்தருள்வீர்.*

## 18

முனைய ழிந்தது மேட்டிகு லைந்தது
வயது சென்றது வாய்ப்பலு திர்ந்தது
முதுகு வெஞ்சிலை காட்டிவ ளைந்தது பிரபையான

முகமி ழிந்தது நோக்குமி ருண்டது
இருமல் வந்தது தூக்கமொ ழிந்தது
மொழித ளர்ந்தது நாக்குவி ழுந்தது அறிவேபோய்

நினைவ யர்ந்தது நீட்டல்மு டங்கலு
மவச மும்பல ஏக்கமு முந்தின
நெறிம றந்தது மூப்புமு திர்ந்தது பலநோயும்

நிலுவை கொண்டது பாய்க்கிடை கண்டது
சலம லங்களி னாற்றமெ ழுந்தது
நிமிஷ மிங்கினி யாச்சுதென் முன்பினி தருள்வாயே

இனைய இந்திர னேற்றமு மண்டர்கள்
தலமு மங்கிட வோட்டியி ருஞ்சிறை
யிடுமி டும்புள ராக்கதர் தங்களில் வெகுகோடி

எதிர்பொ ரும்படி போர்க்குளெ திர்ந்தவர்
தசைசி ரங்களு நாற்றிசை சிந்திட
இடிமு ழங்கிய வேற்படை யொன்றனை யெறிவோனே;

தினைவ னங்கிளி காத்தச வுந்தரி
அருகு சென்றடி போற்றிம ணஞ்செய்து
செகம றிந்திட வாழ்க்கைபு ரிந்திடு மிளையோனே

திரிபு ரம்பொடி யாக்கிய சங்கரர்
குமர கந்தப ராக்ரம செந்தமிழ்
தெளிவு கொண்டடி யார்க்குவி ளம்பிய பெருமாளே.

## பதவுரை

இந்திரன் இனைய - தேவேந்திரன் வருந்த, ஏற்றமும் - அவனுடைய உயர்வும், அண்டர்கள் தலமும் - தேவர்களது பொன்னுலகமும், மங்கிட - மங்குமாறு, ஓட்டி இரும் சிறையிடும் - அவர்களை ஆடுமாடுகளைப்போல் ஓட்டி பெரிய சிறைச்சாலையில் இட்ட, இடும்பு உள ராக்கதர் தங்களில் வெகுகோடி - கொடுஞ்செயலையுடைய அரக்கர்களில் கோடிக்கணக்கானவர்கள், எதிர்பொரும்படி - எதிராகப் போர் புரியுமாறு, போர்க்கு உள் எதிர்ந்தவர் - யுத்த களத்தில் நேர் வந்து மலைந்தவர்களின், தசை சிரங்களும் நால்திசை சிந்திட - தசைகளும் தலைகளும் நான்கு திசைகளிலும் உதிருமாறு, இடிமுழங்கிய - இடியைப் போல் முழங்கிய, வேல்படை ஒன்றனை - வேலாயுதமாகிய ஒப்பற்ற படையை, எறிவோனே - விடுத்தவரே! தினைவனம் - தினைப் புனத்திலே, கிளிகாத்த - கிளிகள் வந்து தினைக்கதிர்களைக் கொய்யா வண்ணங் காவல்புரிந்த, சவுந்தரி - மிக்க அழகுடைய வள்ளிநாயகியின், அருகு சென்று - சமீபத்தில் சென்று, அடி போற்றி - அவரது திருவடியை வணங்கி, மணஞ் செய்து - திரு மணஞ் செய்துகொண்டு, செகம் அறிந்திட - காதல் மணத்தின் உண்மையை உலகம் உணர்ந்திடுமாறு, வாழ்க்கை புரிந்திடும் - வள்ளியம்மையாரோடு எழுந்தருளிய, இளையோனே - என்றும் இளமையாக இருப்பவரே! திரிபுரம் பொடிஆக்கிய - முப்புரங்களைச் சாம்பலாக எரித்தருளிய, சங்கரர் குமர - சிவபெருமானுடைய திருக்குமாரரே! கந்த - கந்தப்பெருமானே! பராக்ரம - பேராற்றல் படைத்தவரே! செந்தமிழ் தெளிவு கொண்டு - செம்மைப் பண்புடைய தமிழின் தெளிந்த தன்மையைக் கொண்டு, அடியார்க்கு விளம்பிய - அடியவர்க்கு விளக்கமாகக் கூறிய, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! முனை அழிந்தது - இளமை முறுக்கினால் ஆங்காங்கு சென்று நான் செய்த சண்டை அழிந்து விட்டது மேட்டி குலைந்தது - எதற்கும் தலைமை தாங்கி நின்ற எனது மேட்டிமை குலைந்துவிட்டது வயது சென்றது - இளம் வயது நீங்கிவிட்டது வாய்பல் உதிர்ந்தது - வாயிலே உள்ள பற்கள் யாவும் உதிர்ந்து விட்டன வெம் சிலை காட்டி முதுகு வளைந்தது - வெப்பமாக போருக்குரிய வில்லை உவமமாகக் காட்டி என் முதுகு வளைந்து விட்டது ப்ரபையான முகம் இழிந்தது - ஒளியுடன் கூடிய முகம் சுருங்கிவிட்டது; நோக்கும் இருண்டது - கண்களின் பார்வை

கெட்டு இருள் சூழ்ந்து விட்டது இருமல் வந்தது - இருமல் நோய் பற்றிக்கொண்டது தூக்கம் ஒழிந்தது - நித்திரை தவிர்ந்து விட்டது மொழி தளர்ந்தது - சொற்கள் குழறலாயிற்று நாக்கு விழுந்தது - நாக்கு தன்னிலையினின்றும் வீழ்ந்து விட்டது; அறிவே போய் நினைவு அயர்ந்தது - அறிவு அகன்று நினைவாற்றல் மங்கி விட்டது நீட்டல் முடங்கலும் - கைகால்கள் தானாக நீட்டவோ முடக்கவோ முடியாமல் பிறர்கள் அவற்றைச் செய்யவும், அவசமும் - மயக்கமும், பல ஏக்கமும் முந்தின - பற்பலவிதமான எண்ணங்களை யெண்ணி ஏக்கமும் முற்பட்டன; நெறி மறந்தது - நல்ல நெறி மறந்துவிட்டது மூப்பு முதிர்ந்தது - கிழத்தன்மை அதிகரித்தது பல நோயும் நிலுவை கொண்டது - பற்பல நோய்கள் என்பால் இருப்பாக நின்றன பாய் கிடைகண்டது பாயில் அசைவற்று படுக்க நேர்ந்தது சலமலங்களின் நாற்றம் எழுந்தது - மல மூத்திரங்களின் நாற்றம் மிகுந்துவிட்டது நிமிஷம் இங்கு இனி ஆச்சுது - இங்கே அடியேனுக்கு இன்னும் ஒரு நிமிஷநேரத்தில் உயிர் பிரியும் தன்மை வந்துவிட்டது என் முன்பு இனிது அருள்வாயே - அடியேன் முன் இனிது தேவரீர் வந்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

இந்திரன் வருந்த அவனது பெருமையும் தேவர்களது பொன்னுலகமும் பாழாகும்படி, தேவர்களை விலங்குகளைப் போல் நடத்திப் பெரிய சிறையில் இட்ட அகந்தையுள்ள பல கோடி அரக்கர்கள், போர் செய்யும்படி உயுத்த களத்தில் எதிர்த்த போது, அவர்களது தசையும் தலைகளும் நான்கு திசைகளிலும் சிந்துமாறு, இடியோசைபோல் முழங்கிய திருவேற்படையை ஏவியவரே! தினைப்புனத்தில் கிளிகள் வந்து அப்பயிரை யழிக்காத வண்ணங் காவல் புரிந்த கட்டழகியாகிய வள்ளிப் பிராட்டியின் அருகிற் சென்று, அவரைப்போற்றி, திருமணம் புரிந்துகொண்டு, களவியல் அறத்தை உலகெலாம் உணரும் பொருட்டு அவருடன் எழுந்தருளியுள்ள என்றும் இளமை யானவரே! முப்புரத்தைச் சாம்பராக எரித்த சிவபெருமானது திருப்புதல்வரே! செந்தமிழின் தெளிவை இனிது அடியார்கட்கு நன்கு எடுத்துக் கூறிய பெருமிதம் உடையவரே! இளமையில் உதிரமுறுக்கினால் செய்து கொண்டிருந்த சண்டை அழிந்தது; மேட்டிமை குலைந்தது; இளமை அகன்றது; வாயிலேயுள்ள பற்கள் உதிர்ந்தன; வெப்பமான வில்லைப்போலே முதுகு வளைந்தது;

ஒளியுடைய முகம் சுருங்கியது; கண் பார்வை இருண்டு விட்டது; இருமல் வந்தது; அதனால், தூக்கம் நீங்கியது; சொற்கள் குழறியது; நாக்கு வீழ்ந்தது; அறிவு அகன்று நினை வாற்றல் மங்கியது; கை கால்கள் பிறர் நீட்டவும் முடக்கவுமாயின; மயக்கமும், பற்பல ஏக்கமும் முற்பட்டன; ஆசார நெறி மறந்து விட்டது; முதுமை முதிர்ந்தது; பல நோய்களும் குடிகொண்டன; பாயும் படுக்கையுமாயின; மலசல நாற்றம் மிகுந்துவிட்டது. இன்னும் ஒரு நிமிஷத்தில் என் வாழ்நாள் முடியும்; அதற்குள் தேவரீர் அடியேன் முன் வந்து திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**முனையழிந்தது;:-**

முனை - போர்; "முனைமுகத்து நில்லேல்" ஆத்திச்சூடி.

இளஞ் செருக்கினாலும், இரத்த முறுக்கினாலும் ஊரில் எங்கே சண்டை நடந்தாலும் முன்னேபோய் நின்று அதில் பங்கெடுத்துக்கொள்வது இளமையின் இயல்பு. சண்டைக்கு நான் என்று மார்தட்டி நிற்பர். கிழப்பருவம் வந்தபடியால் சண்டை அழிந்துவிட்டது.

**மேட்டி குலைந்தது:-**

மேட்டிமை - தலைமை.

இளமையில் நகராண்மைக் கழகம், பஞ்சாயத்துக் கழகம் முதலியவைகட்குத் தலைமை தாங்கி நிற்பர். இன்னும் பல கருமங்கட்கு முதன்மை பெறுவர். இளமையின் வளமை தளர்ந்தவுடன் அத் தலைமைப் பதவிகள் தானேயகன்றுவிடும்; அதுமட்டுமின்றிக் குடும்பத்தின் தலைமையும் நீங்கும்; கிழவரை ஒருவரும் பொருள்படுத்த மாட்டார்கள். முன்பெல்லாம் தன்னைக் கேட்டு தன் அனுமதி பெற்றவர்கள் இப்போது ஒன்றுக்கும் தன்னைக் கேட்பதில்லை; தன்னிடம் கலப்பதில்லை. இவற்றை எண்ணி எண்ணி ஏங்குவர். இளமையில் தன்னை மதித்தவர்கள் முதுமை எய்திய இப்போது மதியாதிருந்தால் மனம் வருந்துவது இயல்புதானே.

**வயது சென்றது:-**

வயது என்பது இங்கே வாலிபத்தைக் குறிக்கின்றது; "வால வயதாகி" "வயதளவிலே வளர்ந்து" என்ற திருப்புகழ் அடிகளைக் காண்க. வாலைப்பருவம் நீங்கியது.

**வாய்ப்பல்லுதிர்ந்தது:-**

உடல் வளர்ச்சியின்றித் தளர்ச்சியுற்று, முத்தைப்போல் வரிசையாக வாயில் அழகு செய்திருந்த பற்கள் ஒவ்வொன்றாக உதிர்ந்துகொண்டிருக்கும். பற்கள் கழன்றவுடன் சொற்களும் குழறத் தொடங்கும்.

**முதுகு வெஞ்சிலை காட்டி வளைந்தது:-**

நிமிர்ந்திருந்த முதுகு வில்லைப்போலே நிலத்தைப் பார்த்து வளைந்துவிட்டது.

"ஏ! கூற்றுவனே; தளர்ந்த பருவத்தில் என்னை உற்றாரும் மற்றாரும் வெறுக்கின்றார்கள். இனி நான் மண்ணில் இருந்து என்ன பயன்? என் முதுகாகிய வில்லில் உன் பாசக்கயிற்றைக் கட்டி, திரிசூலத்தை அதில் தொடுத்து விடுத்து, என் உயிரைக் கொண்டுபோ" என்ற குறிப்பில் நமனுடைய பாசக் கயிற்றுக்கு வில்லைப்போலே காட்டி வளைந்தது.

"ஏ பூதேவி! நான் உன்னிலே பிறந்தேன்; உன்னிடத்தே தவழ்ந்தேன்; இருந்தேன்; உன்மீது நடந்தேன்; கிடந்தேன்; உன்னிடம் ஊறிய நீரைப் பருகினேன்; உன்னிடம் விளையும் உணவை உண்டேன்; அகந்தை கொண்டேன்; இளமை முறுக்கினால் உன்னைப் பார்த்து அடக்கமாக நடக்காது வானைநோக்கி நிமிர்ந்து நடந்தேன். இப்போது உன்னிடம் சேரவேண்டிய காலம் நெருங்கிவிட்டது; அன்னையே! என்னை உன்னிடம் சேர்த்துக் கொள்" என்று பூமிக்குக் காட்டி வளைந்தது.

**ப்ரபையான முகமிழிந்தது:-**

ப்ரபை - ஒளி, உதிரப் பெருக்கினால் இளமையில் முகம் தளதளவென்று ஒளியுடன் திகழும். முதுமையில் உதிரம் வற்றி முகம் திரைத்து, கண்கள் குழிந்து, புருவம் மடிந்து, உதடு வாழைப்பூவின் மட்டைபோல் தொங்கி விகாரமடையும்.

**நோக்கு மிருண்டது:-**

கண் சென்று அறியுங் கருவி; இளமையில் மிகுந்த தொலைவில் உள்ள பொருள்களையுஞ் சென்று அறியும்; அதன் ஓட்டந் தடைபட்டு அருகில் நின்ற பொருள்களையும் அறிய மாட்டாது, பார்வை இருண்டுவிடும்.

**இருமல் வந்தது:-**

முதுமையில் வந்து ஒறுக்குந் துன்பங்கள் பலவற்றுள் ஒன்று இருமல்; இரவில் வெண்கலம் போன்ற கணீர் என்ற ஒலியுடன்

கிழவர் இருமுகின்ற போது, தனக்கு மட்டுமே யன்றிப் பிறருக்கும் இடர் விளையும்.

முக்காலுக் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்
அக்கா லரைக்கண் டஞ்சாமுன் - விக்கி
இருமாமுன் மாகாணிக் கேகாமுன் நெஞ்சே
ஒருமாவின் கீழரையின் றோது. - *காளமேகம்*

**தூக்கமொழிந்தது :-**

இருமலின் விளைவால் தூக்கம் ஒழிந்துவிட்டது. தலை சாய்த்துப் படுத்தால் இருமல் வரும், அதற்காக இருந்த வண்ண மாகவே இரவெல்லாம் காலங்கழிக்க நேரும். நல்ல தூக்கம் இன்மையால் எல்லா நோய்களும் வந்து தாமே குடிபுகும்.

**மொழிதளர்ந்தது நாக்கு விழுந்தது:-**

பற்கள் கழன்றபடியால் செம்மையாக இலக்கணப் பிழை யின்றிப் பேசிக்கொண்டிருந்த சொற்கள் குழைந்துவிடும். மேலும் நாக்கு உள்ளே இழுத்துக் கொண்டது. அந்தோ! முதுமையில் ஒன்றன்பின் ஒன்றாக வருந் துன்பங்கள்தான் எத்தனை?

**அறிவே போய் நினைவயர்ந்தது:-**

இளமையில் தெளிந்திருந்த அறிவு முதுமையில் கலங்கி மங்கிவிடும். அதனால் நினைவாற்றல் இன்றி இடர் விளையும். நினைவில்லாமையால் ஒரு விஷயத்தையே பலமுறை கேட்டு அருகிலிருப்போரை அல்லற்படுத்துவர்.

**நீட்டல் முடங்கலும்:-**

கை கால்கள் தானே நீண்டு மடங்கும் ஆற்றலை யிழந்தன. பிறரைக்கொண்டு நீட்டவும் மடக்கவும் வேண்டும். அதனால், தனக்கும் பிறருக்கும் வேதனை.

**அவசமும் :-**

உணவு குறைவதனாலும், பிணிகள் நிறைவதனாலும் வலிமை குன்றி, முதுமையில் அடிக்கடி இளைப்பும் மூர்ச்சையும் உண்டாகும்.

**பல ஏக்கமும் :-**

பற்பல விஷயங்களைக் குறித்து முதுமையில் ஏங்குவர்; முன்னே தன்னை மதித்தவர்கள் இப்போது மதிப்பதில்லை.

தன்னைக் கேட்டு ஒன்றுஞ் செய்வதில்லை. கேட்டாலுஞ் சொல் வதில்லை. சொன்னாலுங் காது கேட்பதில்லை. உணவு நசை நீங்கவில்லை. ஏதாவது உண்டுவிட்டால் செரிப்பதில்லை. இவை களினால் முன்தான் இருந்த இருப்பையும், இப்போது தன்னைப் பற்றி வீட்டிலுள்ளார்க்கு ஏற்பட்டுள்ள வெறுப்பையும், முன் னிருந்த பெருமையையும், இப்போதுள்ள சிறுமையையும் எண்ணி எண்ணி ஏக்கமுண்டாகும்.

மூர்ச்சையும் ஏக்கமும் முற்பட்டன. முந்தின - முற்பட்டன.

**நெறி மறந்தது:-**

இளமையில் தான் மேற்கொண்டிருந்த ஆசார அநுஷ்டான நெறிகள் பலகாலமாகச் செய்துவராமையால் மறந்தே விட்டன.

**மூப்பு முதிர்ந்தது:-**

முதுமை மிகமிக அதிகரித்துவிட்டது. நன்கு பழுத்து விட்டது. இனி உதிரவேண்டியதுதானே.

**பலநோயும் நிலுவை கொண்டது :-**

கெட்டு நொந்த வியாபாரியை நோக்கி "நீ செய்த வாணி பத்தில் நிலுவை யாது?" என்று ஊரவர் கேட்பர். ஓட்டை உடையல் கோணல் முதலிய சாமான்களே முடிவில் நிலுவையாக நிற்கும். அதுபோல், மனிதன் பிறந்து தவழ்ந்து இருந்து நடந்து வளர்ந்து நிமிர்ந்து உயர்ந்து தளர்ந்து விழுகின்றபோது நிலுவை யாக நிற்பவை பற்பல நோய்களேயாகும் என்று அடிகள் அறி வுறுத்துகின்றனர். எத்துணை அநுபவமாக மனிதனுடைய வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகின்றனர். ஆ! ஆ! உன்னுக; உன்னி உய்வுபெறுக.

**பாய்க்கிடை கண்டது:-**

தளர்ச்சியின் மிகுதியால் பாயிலே கிடந்தவண்ணமாகத் துன்புறுங்காலம் வந்துவிட்டது.

"ஏ உடம்பே! நீ முதிர்ந்து உதிருங்கால், தாயும் சுற்றமும் பெண்டிரும் உன்னைக்கை நழுவ விடுவார்கள்; அக்காலையில் நீயார்? நானார்? என்று வெறுத்துரைப்பார்கள். அப்போது நோய் மிகவும் அன்புடன் வந்து உன்னை அணைத்துக்கொண்டு உன்பால் குடிபுகும்; அப்பொழுது நோயும் பாயும் நீயும் மிகுந்த பட்சத்துடன் நட்பாகுவீர்; வேறு நட்பு உனக்கு ஏது?" என்று

உடம்பை நோக்கி உரைக்கின்றனர் திருவெண்காடர்.

தாயாரும் சுற்றமும் பெண்டிருங் கைவிட்டுத் தாழ்ந்திடும்நாள்
நீயாரு நானார் எனப்பகர் வார்அந்த நேரத்திலே
நோயாரும் வந்து குடிகொள்வ ரேகொண்ட நோயும்ஒரு
பாயாரும் நீயும்அல் லால்பின்னை ஏதுநட் பாம்உடலே.

**சலமலங்களின் நாற்ற மெழுந்தது:-**

நோயும் பாயுமாயுள்ள அந்நாளில் மலமூத்திரங்களின் நாற்றம் மிகுதியாக எழும். தனக்கும் பிறருக்கும் தாங்க முடியாத வேதனை.

**நிமிஷ மிங்கினியாச்சுதென் முன்பினி தருள்வாயே-**

"முருகா! மேலே கூறிய முதுமைத் துன்பங்கள் நிறைந்து, ஒரு நிமிஷத்தில் உயிர் பிரியும் முடிவான ஆபத்து வந்திருக்கின்றது; இந்த வேளையில் தேவரீர் திருவுளம் இரங்கி, தாயினும் சிறந்த தயாவுடன் அடியேனுக்கு முன்தோன்றி அருள்புரிவீர்; இந்த வேளையில் கருணையே வடிவாகவுடைய கந்தப் பெருமானே! ஆபத்து வேளையில் அஞ்சலென்று ஆட்கொள்வீர்" என்று அடிகள் மிகவும் உருக்கமாக வேலவனை வேண்டுகின்றனர்.

**இனைய இந்திரன்:-**

இனைதல் - வருந்துதல்; இல் நைய எனப்பிரித்து, இந்திரனுடைய மனைவியாகிய இந்திராணி வருந்த என்றும் பொருள் செய்யலாம். சூரபன்மனால் கணவன் படுகின்ற வேதனையைக் கண்டு, மனைவி துன்புறுவது இயல்புதானே.

மிதிலையிலே இராகவன் நடந்துபோவதைக் கண்டு சீதாதேவி வருந்துவதாகக் கம்பர் கூறுவதையுங் காண்க. "மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்."

**வேற்படை ஒன்றனை எறிவோனே:-**

இந்திரனுடைய பொன்னுலகத்தை அழித்து, அமரர்களைச் சிறைசெய்த சூராதியவுணர்களின் உடல் தசைகள், எல்லாத் திசைகளிலும் சிந்தும்படி, இடியைப்போல் முழங்கிய வேலாயுதத்தை இளம்பூரணர் விடுத்தருளினார்.

**தினைவனங் கிளி காத்த சவுந்தரி...............இளையோனே:-**

தினைப்புனத்தில் வள்ளிநாயகியை, முருகவேள் அடிபணிந்து மணங்கொண்டது கருணைப்பெருக்கினால் என்க.

*மணம் களவியல், கற்பியல் என இருவகைப்படும். செந்தமிழ் நூல்கள் இருவகை மணங்களைப்பற்றியும் இனிது எடுத்துக் கூறுகின்றன; தமிழ்த்தெய்வமாகிய கந்தவேள், கற்பு மணத்தின் உயர்வைத் தெய்வயானையம்மையார் திருமணத்தினாலும், களவு மணத்தின் உயர்வை வள்ளியம்மையார் திருமணத்தினாலும் உணர்த்தியருளினார்.*

**செந்தமிழ் தெளிவு கொண்டடியார்க்கு விளம்பிய பெருமாளே-**

*செந்தமிழின் அரிய நுட்ப திட்பங்களை ஆறுமுகக் கடவுள், அகத்தியனாருக்கும், சிகண்டி முனிவருக்கும் கூறியருளினார்.*

"சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே"

*- திருப்புகழ்*

*அபர சுப்ரமண்ய மூர்த்தங்களில் ஒன்று மதுரையில் உருத்ர ஜன்மராக அவதரித்து, இறையனார் அகப் பொருளுக்குச் சங்கப் புலவர்கள் உரை கண்டு, தத்தம் உரையே சிறந்தது என்று கலகஞ் செய்தபோது, அப்புலவர்களின் கலகந் தீர, உரைகளின் மென்மை வன்மைகளின் தெளிவைக் குறிப்பினால் உரைத் தருளியது என்க.*

## கருத்துரை

*அசுரர்கள் மீது வேலை விடுத்தருளியவரே! வள்ளி மணாளரே! சிவகுமாரரே! தமிழ்த் தெய்வமே! முதுமை மிகுந்து உயிர் பிரிகின்றபோது வந்து திருவருள்புரிவீர்.*

## 19

மோது மறலியொரு கோடி வேற்படை
கூடி முடுகியெம தாவி பாழ்த்திட
மோக முடையவெகு மாதர் கூட்டமு மயலாரும்
மூளு மளவில்விசை மேல்வி ழாப்பரி
தாப முடனும்விழி நீர்கொ ளாக்கொடு
மோக வினையில்நெடு நாளின் மூத்தவ ரிளையோர்கள்

ஏது கருமமிவர் சாவெ னாச்சிலர்
கூடி நடவுமிடு காடெ னாக்கடி
தேழு நரகினிடை வீழ்மெ னாப்பொறி யறுபாவி

ஏழு புவனமிகு வான நாட்டவர்
சூழு முனிவர்கிளை தாமு மேத்திட
ஈச னருள்குமர வேத மார்த்தெழ வருவாயே

சூது பொருதரும னாடு தோற்றிரு
வாறு வருஷம்வன வாச மேற்றியல்
தோகை யுடனுமெவி ராட ராச்சிய முறைநாளிற்
சூறை நிரைகொடவ ரேக மீட்டெதி
ராளு முரிமைதரு மாறு கேட்டொரு
தூது செலவடுவ லாண்மை தாக்குவ னெனமீள

வாது சமர்திருத ரான ராட்டிர
ராஜ குமரர்துரி யோத னாற்பிறர்
மாள நிருபரொடு சேனை தூட்பட வரிசாப
வாகை விஜயனடல் வாசி பூட்டிய
தேரை முடுகுநெடு மால்ப ராக்ரம
மாயன் மருகஅமர் நாடர் பார்த்திப பெருமாளே.

## பதவுரை

*சூது பொரு தருமன்* - சூது போர் செய்த தருமபுத்திரர், *நாடு தோற்ற* - நாட்டினைச் சூதில் தோற்று, *இரு ஆறு வருஷம் வனவாசம் ஏற்று* - பன்னிரண்டு ஆண்டுகள் கானக வாசத்தை மேற்கொண்டு வனத்தில் வசித்தபின், *இயல் தோகையுடனும்* - கற்பியல் உடைய திரௌபதி தேவியோடும், *விராட ராச்சியம் உறைநாளில்* - விராட நாட்டில் வாழ்கின்றபோது, *நிரை சூறை கொடு* - பசுக் கூட்டங்களைக் கொள்ளைகொண்டு, *அவர் ஏக* - துரியோதனாதிகள் செல்ல, *எதிர் மீட்டு* - அப் பசுக் கூட்டங் களை எதிராக மீட்டு, *ஆளும் உரிமை தருமாறு கேட்டு* - தாங்கள் அரசுபுரியும் உரிமையான நாட்டினைத் தருமாறு பாண்டவர் கேட்டு, *ஒரு தூது செல* - ஒப்பற்ற கண்ணபிரான் தூதாகச் செல்ல, *அடுவல் ஆண்மை தாக்குவன் என* - துரியோதனன் "அவர்களைக் கொல்லுவேன்; அவர்களது ஆண்மையைத் தடுத்துப் போர் புரிவேன்" என்று கூற, *மீள* - மீண்டு பாண்டவர் பால் வர, *வாது சமர் திருதரான ராட்டிர ராஜகுமரர்* - வாது செய்து போர்புரிகின்ற திருதராட்டிர மன்னனுடைய புதல்வர் களும், *துரியோதனால் பிறர்* - துரியோதனனால் ஏனைய அரசர் களும், *மாள* - மாண்டு ஒழியவும், *நிருபரொடு சேனை தூள்பட*

– அரசர்களோடு சேனைகள் துகள்பட்டு அழியவும், வரி சாப வாகை விஜயன் – வரிகள் பொருந்திய காண்டீபம் என்ற வில்லி னால் வெற்றியுடைய அர்ச்சுனனது, அடல்வாசி பூட்டிய தேரை முடுகு – வலிமைமிக்க குதிரைகளைப் பூட்டியுள்ள தேரை வேக மாகச் செலுத்திய, நெடுமால் – பெருமைமிகுந்து நீண்டவரும், பராக்ரம மாயன் – ஆற்றல் பொருந்தியவருமாகிய திருநாராயண மூர்த்தியின், மருக – திருமருகரே! அமர் நாடர் பார்த்திப – தேவர் தேவ நாட்டாருக்குத் தலைவரே! பெருமாளே – பெருமை யின் மிக்கவரே! மோது மறலி – பாவிகளைத் தண்டிக்கின்ற வனாகிய இயமன், ஒரு கோடி வேல் படை கூடி – ஒப்பற்ற கூர்மையான வேலாயுதத்தை யெடுத்துக்கொண்டு என்பால் வந்து, எமது ஆவி பாழ்த்திட – எமது உயிர் பாழ்படுத்திட, மோகம் உடைய வெகு மாதர் கூட்டமும் – மிகவும் என்மீது மோகமுடைய அநேக பெண்களது கூட்டமும், அயலாரும் – மற்றையரும், மூளும் அளவில் – துக்கமானது மூண்டு, விசை மேல் விழா – வேகமாக மேல் வீழ்ந்து, பரிதாபமுடனும் – இரக்கத்தோடும், விழிநீர் கொளா – கண்ணீர்விட்டு அழவும், கொடு மோக வினையில் நெடு நாளில் மூத்தவர் – தீய மோகத் தொழிலில் நீண்ட நாள்கள் இருந்த முதியவர்களும், இளையோர்கள் – இளையவர்களும், ஏது கருமம் இவர் சாவு எனா – என்ன தன்மையினால் இவருக்கு மரணம் வந்தது என்று சொல்லவும், கூடி நடவும் இடுகாடு எனா – சேர்ந்து சுடலைக்குச் செல்லும் என்று சொல்லவும், கடிது ஏழு நரகின் இடை வீழ்மெனா – விரைவில் ஏழு நரகினிடம் வீழும் என்று கூறவும், பொறிஅறு பாவி – ஐம்பொறிகளை அற்ற பாவி யாகிய அடியேன்முன், ஏழு புவனம் – ஏழு புவனத்தில் உள்ளவர் களும், மிகு வான நாட்டவர் – மிகுதியான தேவலோகவாசிகளும், சூழு முநிவர் கிளை தாமும் – சூழ்ந்துள்ள முனிவர்களது கூட்டமும், ஏத்திட – புகழ்ந்து துதிசெய்ய, ஈசன் அருள் குமர – சிவபெருமான் பெற்ற குமார மூர்த்தியே, வேதம் ஆர்த்து எழ – வேதங்கள் ஒலித்து வரவும், வருவாயே – வந்தருள்வீர்.

## பொழிப்புரை

தருமபுத்திரர் சூதாட்டத்தில் நாடு நகரங்களைத் தோற்று, திரௌபதையோடு பன்னிரண்டு வருடம் வனத்தில் வசித்தபின், விராட நாட்டில் வாழ்கின்றபோது, துரியோதனாதிகள் வந்து பசுக்கூட்டங்களைக் கவர்ந்து கொண்டுபோக, அப் பசுக்களை மீட்டு, தங்கட்கு உரிமையான அரச பாகத்தைத் தருமாறு தூது

செலுத்த, துரியோதனன் நாடுதர மறுத்துப் போர் செய்வேன் என்று கூற, வாதிட்டுப் போரிடும் திருதராட்டிர வேந்தனுடைய புதல்வர்களாகிய துரியோதனாதிகளும், மற்ற அரசர்களும் சேனைகளும் துகள்பட்டு அழிய, வரிகளுடன் கூடிய காண்டீப மென்ற வில்லையெடுத்து வெற்றிமாலை சூடிய அர்ச்சுன னுடைய வலிமை மிக்க குதிரைகள் கூட்டிய இரதத்தைச் செலுத்தியவரும், நீண்டவரும், பெருமை மிக்கவரும், வலிமை யுடையவருமாகிய திருமாலின் மருகரே! தேவ நாட்டவர்களுக்குத் தலைவரே! பெருமிதமுடையவரே! பாவிகளைத் தண்டிக்கின்ற இயமன் ஒப்பற்ற கரிய ஆயுதத்தை எடுத்துக் கொண்டு வேகமாக வந்து உயிரை வதைத்தபோது, என்மீது மோகமுள்ள பெண்களும் பிறரும் துக்கம் மூண்டு வேகமாக என் மீது வீழ்ந்து இரக்கத்துடன் கண்ணீர் விட்டுக் கதறவும், கொடுமையான மோகாந்தகாரத்தில் மூழ்கிய முதியவர்களும் இளையவர்களும் என்ன தன்மையினால் இவருக்கு மரணம் வந்தது என்று சொல்லவும், சிலர் ஒன்றுகூடிச் சுடலைக்கு நடவும் என்று சொல்லவும், விரைவில் ஏழு நரகினிடை வீழும் என்று கூறவும், ஐம்பொறிகளையற்ற பாவி யாகிய அடியேன்முன், ஏழு புவனவாசிகளும், தேவர்களும், முனிவர் கூட்டமும் புகழ்ந்து துதி செய்ய, சிவகுமாரரே! வேதங்கள் ஆரவாரித்து வரவும், தேவரீர் வந்தருள்வீர்.

## விரிவுரை

**மோதுமறலி :-**

மோதுதல் - தண்டித்தல், கீழ்வருந் திருப்புகழிலும் இந்தப் பொருளில் இப்பதம் வருவதைக் காண்க.

> **"கனகநிற வேத னபயமிட மோது**
> **கரகமல சோதிப் பெருமாள்காண்"**

பாவஞ் செய்தாரை அறக் கடவுள் அச்சத்தைத் தரும் கோர வடிவாக நின்று தண்டிப்பார்.

**ஒரு கோடி வேற்படை:-**

ஒரு - ஒப்பற்ற; கோடி - கூர்மை; வேல் - ஆயுதப் பொது. இயமன் கூரிய ஆயுதங்களைத் தாங்கித் தீயவரை ஆயுதங்களால் தாக்கியும் பாசக்கயிற்றால் வீக்கியும் ஒறுப்பன்.

"இறுக்கிப் பிடித்துக் கட்டி
உதைத்துத் துடிக்கப் பற்றி
இழுத்துத் துவைத்துச் சுற்றி யமதூதர்"

என்று கற்குடித் திருப்புகழில் யமதண்டனையைக் கூறுமாறு காண்க.

**எமதாவி பாழ்த்திட:-**

எமது - தன்மைப் பன்மை; மன முதலியவைகளை உடனாக்கி எமது என்றார் எனினும் அமையும்.

**மோகமுடைய வெகுமாதர் கூட்டமும்:-**

ஒருவன் ஒரு மனைவியோடு வாழவேண்டும். மனித நெறியும் அதுதான்; ஒருத்திக்கு ஒருவன் என்பதுபோல், ஒருவனுக்கும் ஒருத்திதான். இந்தச் சிறந்த நெறியை அறவே யிகந்து, பல பெண்டிர்களைப் புணர்ந்து ஆவியும் ஆக்கையும் ஆக்கமும் அவ மாக்குவர் பலர். அவ்வாறு பலப்பல மாதரொடு வாழ்ந்தவர் மாண்டு ஒழியின் அவர்பால் மோகமுடைய மாதர் பலர் கூடிக் கண்ணீர் இறைத்து இரங்கியழுவர். இது எத்துணைப் பரிதாபம்? அந்தோ!

**ஏது கருமமிவர் சாவெனா:-**

இறந்தவர் வீட்டிற்கு வருபவர் "எவ்வாறு மாண்டு போயி னார்? என்னநோய்? கடைசிவரை நினைவு இருந்ததா?" என்று வினாவுவார்.

**சிலர் கூடி நடவும் இடுகாடெனா:-**

சிலர் ஒன்று சேர்ந்து, "ஏன் இன்னுந் தாமதம்? போனவன் போனாலும் இருக்கின்றவர்களுடைய நலத்தைக் கவனிக்க வேண்டாவோ? சீக்கிரம் எடும்; மயானத்திற்குச் செல்லும்" என்று துரிதப்படுத்துவர்.

**ஏழு நரகினிடை வீழ்மெனா:-**

நரகம் என்பது பாவிகள் பூத சரீரத்துடன் சென்று தத்தந் தீவினைப் பயன்களைத் துய்க்கும் இடமாகும்.

நரகங்கள் ஒன்றன்மேல் ஒன்றாக ஒவ்வொன்று தொண்ணூறு இலட்சம் யோசனை அளவுடைய முப்பத்து மூன்று தளங்களும், தனித்தனியே ஓர் இலட்சம் யோசனையளவுடைய முப்பத்

திரண்டு இடைவெளியும் உடையனவாயுள்ளன.

இந்த நரகங்கள் நான்கு வகைப்படும்.

அவை நரகம் - மாநரகம் - இராசநரகம் - இராச ராசேச்சுர நரகம் என்பன.

இவற்றுள்

**நரகம் :-**

இரவுரவம் என்ற பிரதான நரகமும், துவாந்தம், சீதம், வெப்பம், சந்தாபம், பதுமம், மாபதுமம், காலசூத்திரம் என்ற ஏழும் ஆக எண்வகையென அறிக.

**மாநகரம் :-**

சூசிமுகம் என்ற பிரதான நகரமும், காலகட்கம், குரதாரம், அம்பரிடம், தத்தாங்காரம், மாதாகம, சந்தாபம், பீபற்சம் என்ற ஏழும் ஆக எண்வகையென அறிக.

**இராசநரகம் :**

இலாக்காப்பிரலேபம் என்ற பிரதான நரகமும், மாஞ்சாதம், நிருச்சுவாசவுச்சுவாசம், யுக்குமாத்திரி, சான்மலி, உலோகப் பிரதீப்தம், சூற்பிபாசம், கிருமி நிசயம் என்ற ஏழும் ஆக எண்வகையென அறிக.

**இரசராசேச்சுர நரகம்:-**

உலோகத்தம்பம் என்ற பிரதான நரகமும், விண்மூத்திரம், வைத்ரணி, தாமிச்சுரம், அந்ததாமிச்சுரம், கும்பிபாகம், மாரௌரவம், அபீசி என்ற ஏழும் ஆக எண் வகையென அறிக.

இவ்வாறு நாலேழு 28 நரகங்களும், நான்கு பிரதான நரகங்களும் ஆக முப்பத்திரண்டு நரகலோகங்களாகும்.

இங்ஙனம் முப்பத்திரண்டு இடைவெளிகளின் அளவு தனித்தனி இலட்சமும், முப்பத்து மூன்று தளங்களின் அளவு தனித்தனி தொண்ணூறு லட்சமுமாக நரகலோகம் மூன்று கோடியே இரண்டு லட்சம் யோசனை உயர முடைத்தெனக் கண்டுகொள்க.

இவ்வாறு மாதவச் சிவஞான யோகிகள் சிவஞானபோத மாபாஷ்யத்தில் கூறுமாறு காண்க.

*இனி, நரக உலகம் ஒன்று உளதோ? என்றும், அவ்வுலகில் பாவிகளைத் தண்டிக்கும் தொழில் பூண்ட தலைவன் நமன் என்பான் ஒருவனும் உளனோ? என்றும் ஐயுறுவாரும், இல்லவேயில்லை என்று புறக்கணிப்பாரும் உண்டு.*

உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு

*அளறு – நரகம்.*

அடக்க மமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

*இருள் – நரகம்.*

கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. *- திருவள்ளுவர்*

*கூற்றம் – இயமன்*

"பேராது காமத்திற் சென்றார்போ லன்றியே
பிரியா துள்கிச்
சீரார்ந்த அன்பராய்ச் சென்றுமுன் னடிவீழுந்
திருவி னாரை
ஓராது தருமனார் தமர்செக்கி லிடும்போது
தடுத்தாட் கொள்வான்
பேராளர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப்
பெற்றா மன்றோ"

*என்று சுந்தரமூர்த்தி நாயனாரும்,*

வம்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து பிறர்பொருள்
தாரமென் றிவற்றை
நம்பினார் இறந்தால் நமன்தமர் பற்றி ஏற்றிவைத் தெரியெழு கின்ற
செம்பினா லியன்ற பாவையைப் பாவீ தழுவென மொழிவதற் கஞ்சி
நம்பனே! வந்துன் திருவடி யடைந்தேன் நைமிசா ரணியத்துள்
எந்தாய்.

*என்று திருமங்கையாழ்வாரும் நமன்செய்யும் இடரை எடுத்து ஓதியருளினார்கள்.*

*"கூற்றுவன் நரகிடைவீழ்த்திக் குண்டர்களைத் தண்டனை புரிவான்; இது சத்தியம்;" என்று கந்தரந்தாதியில் எம் அருணகிரிப் பெருந்தகை கூறுகின்றனர்.*

தியங்காப் பொறியுண் டெனுந்தனுத் தீதலு மேதியையூர்
தியங்காப் பொறியுண் டவமிலி யேயென்று செப்பலுஞ்சத்
தியங்காப் பொறியுண் டயன்கைப் படாது திரவெற்புநி
தியங்காப் பொறியுண்டை பண்டுயப் போர்செய்த சேவகனே.

*(கொண்டு கூட்டு)*

*திரவெற்பு நிதியங்காப் பொறியுண்டை பண்டு உயப்போர் செய்த சேவகனே! தியங்காப் பொறியுண்டு எனுந் தனுத்தீதலும், மேதியை ஊர்தி தவமிலியே! அங்கா; பொறியுண் என்று செப்பலும் சத்தியம்; பொறியுண்டு அயன் கைப்படாது கா.*

*உரை :*

*திருவெற்பு - நிலைபெற்ற கிரவுஞ்சமலையுடன், நிதியம் - சங்கநிதி பதுமநிதிகளும், கா - கற்பகத் தருவும், பொறி உண்டை - செல்வத்திரளும் உடைய பொன்னுலகானது, பண்டு உய - முன்னாள் பிழைக்கும்படி, போர் செய்த - போர்செய்து அழித்த, சேவகனே - வீரமூர்த்தியே! தியங்கா - மயங்காத, பொறியுண்டு எனும் தனுதீதலும் - ஐம்பொறிகளை யுடைய உடல் வேகின்றதும், மேதியை ஊர்தி - எருமைக்கடாவை வாகனமாக வுடைய இயமன், "தவமிலியே - ஏ தவஞ் செய்யாத பாவியே! அங்கா -வாயைத்திற என்றும், பொறிஉண் - நெருப்பை யுண்ணு, என்று செப்பலும் சத்தியம் - என்று கூறுவதும் சத்தியமாகும்; பொறி உண்டு அயன் கைப்படாது கா - பிரமன் எழுத்துக் குட்பட்டு அவன் கைப்படாது பிறவியைத் தொலைத்தருளி அடியேனைக் காத்தருள் புரிவீர்.*

"எரிவாய் நரகக்
குழியுந் துயரும் விடாய்ப்படக் கூற்றுவன் ஊர்க்குச்செல்லும்
வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே" - *அலங்காரம்*

"நமன்வரின் ஞானவாள்கொண்டே யெறிவன்" - *அருணகிரியார்*

கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லிடிக் காரர் வலிக்கயிற் றால்கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடு மென்று நிறுத்துவர் தாமே. - *திருமூலர்*

"காலன் வருமுன்னே" - *பட்டினத்தார்*

"காலனையும் வென்றோம்" - *காரைக்காலம்மையார்*

"வஞ்சநமன் வாத னைக்கும்" - *தாயுமானார்*

"செல்பவந் நரகந் தன்னுள் தீவினைத் தேர்க ளூர்ந்தே"
- *திருத்தக்கதேவர்*

"எரிவாய் நரகத்து வீழ்வர்" - *நாலடியார்*

"கணிச்சிக் கூர்ம்படை கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை இரங்குவிர்" - *புறநானூறு*

"புலைநரகத் துய்ப்பிக்கும்" - *வளையாபதி*

"அக்கா லரைக்கண் டஞ்சாமுன்" - *காளமேகம்*

இன்னோரன்ன ஆன்றோர் பலரும், பழைய இலக்கியங் களும் கூறும் நரகையும் நமனையும் நாம் ஒப்புக் கொள்ளி மாட்டோம் என்பது அறியாமையின் சிகரமன்றோ? ஆன்றோர் வழிவந்த நாம் ஆன்றோர் திருவாக்குகளைப் பொன்போல் போற்ற வேண்டாவோ? ஆன்றோர்களது அரிய கருத்தை உடன்படாது தம்மைத்தாமே அறிவுடையவர் என்று கருதுவது எத்துணைப் பேதைமை? பரம்பரையாக வருவது அன்றோ அறிவுடைமை; "தாய் தந்தையர் எற்றுக்கு? யாமே பிறப்போம். எமது பிறப்புக்கு அவர் வேண்டா" எனவுரைக்குந் தான்தோன்றிகளாகக் கூடாது.

**வேத மார்த்தெழ வருவாயே:-**

இறைவன் அடியார் முன்னே எழுந்தருளி வரும்போது இருபுடையும் வேதங்கள் ஒலித்துக்கொண்டு வரும்.

"சுருதி புடைதர வருமிரு பரிபுர
கமல மலரடி கனவிலு நனவிலு மறவேனே"

**சூதுபொரு தருமன்:-**

அடிகள், இத் திருப்புகழின் பின்னுள்ள நான்கு அடிகளில் மகாபாரதத்தையே முடித்திருக்கின்றனர்.

தருமன் சூது போராடினார் என்ற பகுதி சிந்தனைக்கு உரியது. ஐம்பெரும் பாதகங்களில் ஒன்று சூது.

காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்மொழிதல்
ஈதல் மறுத்தல் இவையன்றே — போதில்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி. - *நளவெண்பா.*

நல்லவையே நினைந்து, நல்லவையே மொழிந்து நல்லவையே

செய்யும் தருமர், அல்லவையாகிய சூதாடல் பொருந்துமா? அவ்வாறு சூது ஆடிய அவரை அக்காலத்தில் உள்ள ஆன்றோர்கள் வெறுத்தாரில்லையே? கோயில்கட்டி வணங்கினார்களே? தருமராஜா கோயில்கள் என்று எங்கும் பெருவழக்காக அவருடைய கோயில்கள் காணப்படுகின்றனவே. அவர் சுவர்க்கம் போன அரிய இனிய பகுதியும் பாரத வரலாற்றின் முடிவில் மணிமுடிபோல் விளங்குகின்றதே. அவர் செய்தது பாவமாகாதா? எனின் கூறுதும். நுனித்து உணர்மின்.

தொழிலைக் கொண்டே பாவம் புண்ணியம் என்று முடிவு கட்டிவிடக்கூடாது. மனத்தில் அரும்பியுள்ள எண்ணத்தின் பாகுபாட்டை நுனித்து நோக்க வேண்டும். தருமம் மிகவும் சூட்சுமமானது.

பாண்டவர்கள் இந்திரப் பிரத்தத்தில் வாழ்கின்றபோது நாரத முனிவர் அவர்கள்பால் வந்தனர். தருமரை நாரதர் தனியே அழைத்து, "உன்பொருட்டு உலகில் மன்னர் குலம் மாய்ந்தொழியும்" என்று கூறிவிட்டு நீங்கினார். அது கேட்டது முதல் தருமருக்கு அளவிறந்த வருத்தம் ஏற்பட்டது. அகிம்சையை மேற்கொண்ட அவர் மனந் துடித்தது. புல்லுக்குந் தீங்கு நேரா வண்ணம் தருமநெறி தவறாது அரசு புரியும் நம் பொருட்டு உலகில் அரசர் குலம் அழிவதா? அந்தோ! என் செய்வேன்? என்று அதனையே நினைந்து நினைந்து நெஞ்சு புண்ணாயினார்.

பின்னர், இராஜசூய யாகம் நிகழ்ந்தது. அதில் முதல் தாம்பூலம் கண்ணபிரானுக்குத் தந்தது பற்றிச் சிசுபாலன் கொதித்து எழுந்து எதிர்த்துப் போராடினான். கண்ணபிரானால் சிசுபாலனும் அவனைச் சேர்ந்தவரும் மாண்டனர். யாகம் முடிந்தது. எல்லாரும் சென்றபின், தருமர் வியாதரை நோக்கி, "எந்தையே! என் பொருட்டு மன்னர் குலம் மடியும் என்று நாரத பகவான் கூறினார். அது சிசுபால வதத்துடன் முடிவு பெற்றதோ?" என்று வினவினார்.

வேதவியாதர், "தருமநந்தனா! நாரதர் கூறிய நிகழ்ச்சி இன்னும் நிகழவில்லை. உன்மூலமாகப் பெரும் போர் நிகழப் போகின்றது. அதனால், அரச வம்சமே அழியப் போகின்றது. ஓர் அழகிய வீரபுருடன் ஒரு விடையின்மீது ஆரோகணித்துத் திரிசூலத்தைக் கையில் ஏந்தித் தென்திசை போவதும் வருவதுமாக எந்த இரவில் கனவுகாணப் போகின்றாயோ அன்று தொடங்கிப் பதின்மூன்றாவது ஆண்டின் முடிவில் உன்பொருட்டு மன்னர் குலம்

மாண்டொழியும்; இந்தக் குறிப்பினால் உணர்வாய்" என்று கூறி யகன்றனர்.

சில காலத்திற்குப் பின் ஒருநாள் இரவு தருமர் அந்த சொப்பனங் கண்டு திடுக்கிட்டு எழுந்தார் துணைவர் நால்வரையும் திரௌபதியையும் அழைத்து, "வியாத முனிவர் கூறியவாறு, ஒரு சுந்தர புருடன் சூலமேந்தி வெள்விடை யூர்ந்து தென்திசை போவதும் வருவதுமாக இப்பொழுது கனாக் கண்டேன். அதனால், இன்றுமுதல் பதின்மூன்றாவது ஆண்டின் முடிவில் அரசகுலம் என்பொருட்டு அழியப் போகின்றது. அந்த அழிவுக்கு நான் காரணமாகக் கூடாது. அதனால், இப்போது ஒரு விரதம் மேற்கொள்ளப் போகின்றேன். என்னை யார் எவ்வாறு நிந்தித்தாலும் நான் கோபிக்கமாட்டேன்; என் மனைவியை ஒருவன் தொட்டு ஈர்த்தாலும் நான் அவனைப் பகைக்க மாட்டேன். செய்யத்தகாத காரியத்தை ஒருவன் செய்யச் சொன்னாலும் செய்வேன். செய்யமாட்டேன் என்றால் அது காரணமாகப் பகை நேருமன்றோ? இந்த ஏற்பாட்டுக்கு நீங்களும் என்னுடன் ஒத்துழையுங்கள்" என்று கூறினார். இப்படி ஐவரும் பேசித் திட்டமிட்டுக் கொண்டார்கள். அந்தத் திட்டமிட்ட சிறிது நேரத்திற்குள், மண்டபங்கள் காண வாருங்கள் என்று விதுரர் வந்து பாண்டவரை அழைத்தனர். "தீயவன்பால் போவது தீமை நேரும்" என்று தெரிந்தும் மன வேற்றுமைக்கு இடந்தரக் கூடாது, வருவது வந்தே தீரும். அதனால், போவதுவே சரி என்று கருதிப் பாண்டவர்கள் அத்தினபுரத்திற்கு வந்தார்கள்.

துரியோதனன் தருமரைச் சூது விளையாடுமாறு அழைத்தான். தருமர் சூது விளையாடுவது தக்கதன்று என்று மறுத்தார். உடனே, சகுனி அவரை உலோபி என்றான். தன் தமையனை உலோபி என்ற நாவைச் சேதிப்பேன் என்றான் தனஞ்சயன்.

தான் சூது விளையாட மறுத்தால் வாக்குவாதம் நிகழ்ந்து அது காரணமாகப் போர்மூண்டு பலர் மாள நேரும். சூதுவிளை யாடி நாம் நரகிடை ஆழ்ந்தாலும் ஆழலாம். போர் விளைந்து மன்னர் குலம் அழியக்கூடாது. என்பொருட்டு யுத்தம் நிகழக் கூடாது; யார் எதைச் செய்யச் சொன்னாலும் செய்துவிட வேண்டும். மறுத்தால் தானே விரோதமும் போரும் நிகழும். ஆதலின், உலக நலத்தின் பொருட்டு நாம் இதைச் செய்வோம் என்று கருதிச் சூதாடினார். இந்த உத்தமமான எண்ணத்தினால் தான் அவர் சூதாடியதால் பாவமெய்தாது புண்ணிய புருடராயி

னார். புண்ணிய பாவம் செயலினால் வாரா; மனத்தின் கண்ணுள்ள நினைவினால் வருவனவாகும்.

அமர் நாடர்:-

அமரர் நாடர் என்பது அமர் நாடர் என வந்தது. தேவர்கள் வணங்குந் தேவதேவர் திருமுருகேசர்.

## கருத்துரை

திருமால் மருகா! முருகா! கூற்றுவன் வந்து என்னை அழையாமுன் தேவரீர் வந்து ஆண்டருளும்.

## 20

துள்ளுமத வேள்கைக் கணையாலே
தொல்லைநெடு நீலக் கடலாலே
மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே
தெள்ளுதமிழ் பாடத் தெளிவோனே
செய்ய குமரேசத் திறலோனே
வள்ளல்தொழு ஞானக் கழலோனே
வள்ளிமண வாளப் பெருமாளே.

## பதவுரை

தெள்ளு தமிழ் பாட - தெளிந்த தமிழ் மொழியினால் அடியார்கள் பாடல்கள் கூற, தெளிவோனே - உள்ளம் உவந்து தெளிகின்றவரே! செய்ய - செம்மைப் பண்புடைய, குமர ஈச - குமாரக் கடவுளே! திறலோனே - (அடியவர் அல்லல்களை யகற்றும்) ஆற்றல் உடையவரே! வள்ளல் தொழும் - அடியவர்கள் கேட்ட வரங்களை வழங்கும் வள்ளலாகிய சிவபெருமான் உபதேசங் கேட்கும்பொருட்டு வணங்கிய, ஞான கழலோனே - சிவஞானமேயாகிய திருவடிகளையுடையவரே! வள்ளிமணவாள - வள்ளியம்மையாருடைய கணவரே! பெருமாளே - பெருமை யின் மிக்கவரே! துள்ளுமத வேள்கை கணையாலே - எத்தகை யோரையும் மயக்குவேன் என்று துள்ளுகின்றவனும் செருக்குடை யவனுமாகிய மன்மதனுடைய கரத்தில் உள்ள மலரம்புகளாலும்,

தொல்லை நெடு நீல கடலாலே - துன்பத்தைத் தரும் நீண்ட சமுத்திரத்தினாலும், மெள்ள வரு சோலை குயிலாலே - மெல்லப் பறந்துவருவதும் சோலையில் வாழ்வதுமாகிய குயிலினாலும், மெய் உருகும் மானை - உடம்பு உருகுகின்ற பெண்ணாகிய அடியேனை, தழுவாயே - தழுவியருள்புரிவீர்.

## பொழிப்புரை

அடியவர்கள் பாடுகின்ற தெளிந்த தமிழ்ப் பாடல்களைக் கேட்டுத் திருவுள்ளம் மகிழ்ந்து தெளிகின்றவரே! செம்பொருளாக விளங்குங் குமாரக் கடவுளே! (அடியார்களது இடர்களை விலக்கும்) வலிமை யுடையவரே! உருகும் அடியவர்கள் உள்ளிய அனைத்தும் உவந்து தருகின்ற வள்ளன்மையுடைய சிவபெருமான் பிரணவ மந்திரத்தைக் கேட்கும்பொருட்டுத் தொழுத ஞான மேயாகிய திருவடியை யுடையவரே! வள்ளியம்மையாருடைய நாயகரே! பெருமிதம் உடையவரே! எவரையும் மயக்குவேன் என்று துள்ளும் செருக்குடைய மன்மதனுடைய மலர்க்கணை களாலும், துயரத்தைத் தரும் நீண்ட கடலினாலும், மென்மை யாகப் பறந்து வருவதும் சோலையில் வாழ்வதுமாகிய குயிலி னாலும், (உள்ளத்துடன்) உடம்பும் உருகுகின்ற பெண்ணாகிய மான்போன்ற என்னைத் தழுவியருள்புரிவீர்.

## விரிவுரை

இத் திருப்புகழ் நாயகி நாயகத் தன்மையில் அமைந்தது. இறைவனை யடைகின்ற நெறிகள் நான்கு.

1. தாசநெறி - ஆண்டானடிமைத்திறம்
2. சற்புத்ர நெறி - தந்தையும் மைந்தனுமாக நிற்றல்
3. தோழ நெறி - தோழமைகொண்டு வணங்குதல்
4. நாயகி நாயகநெறி - இறைவனைக் கணவனாகக் கொண்டு ஆன்மா நாயகியாகி நின்று அன்பு செய்தல்.

இந்த நான்காவது நெறிதான் சாலவும் சிறந்தது.

ஆண்டான் அடிமைத் திறத்திலே சிறிது அச்சம் நிற்கும். அதனைவிட நெருங்கிய தொடர்பு இறைவனைத் தந்தையாகக் கொண்டு தன்னை மைந்தனாக நின்று அன்பு செய்யும் சற்புத்ர மார்க்கத்தில் உண்டு. ஆண்டான் அடிமைத் திறத்தில் இறைவன் தந்த ஊதியத்தை மட்டும் பெற முடியும். சற்புத்ர மார்க்கத்தில்

இறைவனுடைய செல்வம் அத்தனையும் மைந்தனுக்கு உரியவை தானே.

இந்தச் சற்புத்ர நெறியினும் அதிக தொடர்புடையது தோழமை நெறி, மைந்தனைக் காட்டிலும் தோழன் அதிக மாக நெருங்கிப் பழகுவான்.

இந்தத் தோழமை நெறியினும் மிகமிகத் தொடர்புடைய நெறி சன்மார்க்கம். அதாவது நாயகி நாயகநெறி. தோழனுடைய உடைமைகளையெல்லாம் தோழன் அனுபவிக்கலாம். ஆனால், தோழனையே அனுபவிக்க முடியாது.

நாயகி நாயக நெறியில் கணவனுடைய உடைமைகளை அனுபவிப்பதோடு கணவனையே அனுபவிக்கும் வாய்ப்பு உண்டு. நாயகியும் நாயகனும் இரண்டற்று ஒன்றுபட்டு உவக்கும் இன்பம் வேறு எதனிலும் எய்தாது.

இந்த நாயகி நாயக நெறியே நான்காவது நெறி. இத் திருநெறியை நன்கு விளக்கி யருளிய வித்தகர் மாணிக்க வாசகப் பெருமான். அவர் வழிவந்த இராமலிங்க அடிகளும் இந்நெறியைப் பலவாறு பன்னிப்பன்னிப் பாடிப் பரம சுகம் பெற்றார்.

**கண்ணுறங்கேன் உறங்கினுமென் கணவரொடு கலக்கும்**
**கனவன்றி யிலையென்றேன் அதனாலே அன்றி**
**எண்ணுறங்கா நிலவிலவர் இருக்குமிடம் புகுவேன்**
**என்றுரைத்தேன் இதனாலோ எதனாலோ அறியேன்**
**பெண்ணடங்காள் எனத்தோழி பேசிமுகங் கடுத்தாள்**
**பெருந்தயவால் வளர்த்தவளும் வருந்திஅய லானாள்**
**மண்ணடங்காப் பழிகூறி மற்றவர்கள் இருந்தார்**
**வள்ளல்நட ராயர்திரு வுள்ளம்அறிந் திலனே.**

*- இராமலிங்க அடிகள்*

இந்த உயர்ந்த நாயகி நாயக நெறியில் பரமகுருநாதராகிய அருணகிரிநாதப் பெருமானார் பற்பல திருப்புகழ்ப் பாடல்கள் பாடியிருக்கின்றார். அவற்றுள் சில அடிகள் பின் வருகின்றன.

**"நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே**
**நீவந்த வாழ்வைக்கண் டதனாலே**
**மால்கொண்ட பேதைக்குன் மணநாறு**
**மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே"**

"வாரிமீ தேயெழு திங்களாலே
மாரவே ளேவிய அம்பினாலே
பாரெலா மேசிய பண்பினாலே
பாவியே னாவிம யங்கலாமோ"

"அகுதிஇவள் தலையில்விதி யானாலும் விலகரிது
அடிமைகொள உனதுபரம் ஆறாத ஒருதனிமை
அவளையணை தரஇனிதி னோகார பரியின்மிசை
வரவேணும்"

"தெருவினில் நடவா மடவார் திரண்டொ றுக்கும் வசையாலே
தினகர னெனவே லையிலே சிவந்து திக்கும் மதியாலே
பொருசிலை வளையா இளையா மதன்தொ டுக்குங்
கணையாலே
புளகித முலையாள் அலையா மனஞ்ச லித்தும் விடலாமோ"
- *அருணகிரிநாதர்*

துள்ளுமத வேள்கைக் கணையாலே:-

*வேள் - விருப்பம்; விருப்பத்தை விளைவிப்பவன்.*

*மதம் - செருக்கு.*

*திருமாலின் மனத்தினின்றும் பிறந்தவனாதலின் மதவேள் "மன்மதன்" எனப்பட்டனன். "சித்தஜன்" என்பதும் அப்பொருள் குறித்ததுவே.*

*"எத்தகைய தேவர்களையும், பொறிபுலன்களை வென்ற முனிவர்களையும் நான் வெல்லுவேன்" என்று துள்ளுகின்ற வன் மன்மதன்.*

*மால், அயன், இந்திரன், சந்திரன், வாயு, ஆதித்தன், அக்கினி முதலிய அமரரையும்,*

*காசிபன், விசுவாமித்திரன், பராசரன், புலத்தியன், வியாழன், விபாண்டகன் முதலிய முனிவரரையும் மதனன் மலர்க்கணை களால் மயக்கி வெற்றி கண்டனன்.*

*ஆனால், சிவபெருமானிடம் அவனுடைய ஆற்றல் அழிந்து வெந்தான். சிவனடியார்களிடத்திலும் அவன் ஆற்றல் அழியும். திருநாவுக்கரசு சுவாமிகளிடத்திலும், அருச்சுனனிடத்திலும், மாதவச் சிவஞான யோகிகளிடத்திலும் மதனன் தோல்வியுற்றான்*

என உணர்க.

இங்கே முருகனைக் காதலித்த ஆன்மா மதனனுடைய மலர்க் கணையினால் வருந்தி இறைவனைத் தழுவும் பொருட்டு அவாவுகின்றது.

மன்மதன், தேவர்கள்மீது மலர் வில்லும், மனிதர்கள் மீது கரும்பு வில்லும், அரக்கர்கள்மீது இரும்பு வில்லுங் கொண்டு அமராடுவான்.

**தொல்லை நெடு நீலக் கடலாலே:-**

எல்லார்க்கும் இன்பத்தைத் தருகின்ற குயில், தென்றல், திங்கள், கடல் முதலியவைகள் கணவனைப் பிரிந்திருக்கின்ற கற்புடைய காரிகையர்க்குக் கவலையைத் தரும்.

மன்மதனுக்குக் கடல் முரசம் ஆகும். அக் கடல் ஒலி பிரிவுத் துன்பத்தைப் பெருக்கிப் பெருந்துயர் விளைக்கும்.

இனிமையான கடல் ஒலி நாராசம்போல் இருக்கும்.

"எழுகடலின் முரசினிசை நாராச முறுவதென"

என்று பழநித் திருப்புகழில் அடிகள் பகர்கின்றனர்.

"அந்தரத் தமரர் துந்துபி முழங்க
அநங்க துந்துபி எதிர்மு ழங்க"

என்பார் வில்லிபுத்தூரார்.

கணவனைப் பிரிந்து உள்ளங் கரிந்து, மிகவும் பரிந்து ஒரு தலைவி புலம்புகின்றாள். உள்ளத்தை உருக்கும் அத்தமிழ்ப் பாடல் பின்னே வருகின்றது. அக்கவியின்பம் நமக்குச் செவியின்பத்தைத் தருகிறது.

ஆழிவாய் சத்தம் அடங்காதோ நான்வளர்த்த
கோழிவாய் மண்கூறு கொண்டதோ - ஊழி
திரண்டதோ கங்குல்? தினகரனுந் தேரும்
உருண்டவோ பாதாளத் துள் - *தனிப்பாடல்*

**மெள்ளவரு சோலைக் குயிலாலே:-**

மிகவும் இனிய குரலுடையது குயில்; அது சோலையில் வாழ்வது. மெல்லப் பறந்து வருவது. குயிலின் இனிய குரலும் பிரிவுத்துன்பத்தை அதிகப்படுத்தும்.

குயில் முட்டையிட்டதும் தாய்க்குயில் முட்டையை விட்டுப் போய்விடும். அம் முட்டையைத் தன் முட்டை யென்று காக்கை

*அடைகாக்கும். முட்டையவிழ்ந்து குஞ்சு வெளிப்பட்ட பின்னும் நிற உருவ ஒற்றுமையால் தன் குஞ்சு என்றே கருதிக் காக்கை உணவூட்டி வளர்க்கும். குயிற்குஞ்சு சிறிது வளர்ந்து கூவத் தொடங்கியவுடன் வளர்ப்புத் தாயாகிய காக்கை அடித்து விரட்டிவிடும்.*

*இக்கருத்தை மனதில் அமைத்துக்கொண்டு பிரபுலிங்கரை விரும்பிக் காதல் தீயினால் கரிந்து வாடும் மாயை புலம்புகின்றாள்.*

*"ஏ குயிலே, நீ பிறந்தவுடனே வடிவமேனும் குரலேனும் காணாமுன்னுங் கேளாமுன்னும், உன் தாயான குயில் உன்னை விட்டுப் பிரிந்தாள்; அன்புடன் வளர்த்த காக்கையாகிய செவிலித் தாய் உன் குரல் கேட்டவுடன் உன்னை வெறுத்து அகலும். எங்கும் பெற்றவளும், வளர்த்தவளும் குழந்தையை விருப்புடன் ஆதரிப்பார்களேயன்றி வெறுப்புற மாட்டார்கள். உன்னைக் கண்டு உன்னைப் பெற்றவளும் வளர்த்தவளும் இளமையிலேயே வெறுத்து அகல்வார்களாயின் உன் கொடுமை அதனாலேயே புலப்படுகின்றது. ஆகவே, நான் உன்னை வெறுப்பதில் குற்றமொன்றும் இல்லை" என்று மிகமிக இனிமை யாகக் கூறுகின்றாள். இக் கருத்துக்கள் நிறைந்த கனியினும் இனிய கவி அடியில் வருகின்றது.*

உயிர்த்த பொழுதே நின்குரல்கே
ளாமுன் னோடிற் றீன்றதாய்
நயத்தின் வளர்த்த தாய்குரல்கேட்
டலுமே நடுங்கத் துறந்ததால்
பயத்த மலர்ப்பூங் காவகத்தில்
இருந்து பல்கால் கூவினால்
செயிர்த்து நின்னைக் குயிலேநான்
வெறுத்தல் செப்ப வேண்டுமோ — *சிவப்பிரகாச அடிகள்*

மெய்யுருகு மானைத் தழுவாயே:-

*இறைவனைக் கலந்து இன்புற விழைந்த ஆன்மா, ஞானக் காதல் மேலீட்டினால் உள்ளம் உருகும், "அவருடைய கருணையை நோக்கி அசரங்கள் கூட உருகுகின்றன. அறிவுள்ள தன் உள்ளம் உருகவில்லையே" என்று கூறி உருகுகின்றார் இராமலிங்க அடிகள்.*

கள்ளுருகு மலர்மணம்போல் கலந்தெங்கு நிறைந்தோய்நின்
கருணைக் கந்தோ
முள்ளுருகும் வலியபராய் முருடுருகும் உருகாத
முறைசேர் கல்லும்

வள்ளுருகும் மலையுருகும் மண்ணுருகும் மரமுருகும்
மதியி லேன்றன்
உள்ளுருகும் வகையிலையென் செய்கேன்நான் ஏன்பிறந்தேன்
ஒதிய னேனே.

*நெருப்பைக் கண்டவுடன் நெய்யுருகுவதுபோல் இறைவனுடைய திருவடி மீதுள்ள பக்தியினால் உள்ளம் உருகுதல் வேண்டும். இனி, அதிக தீயின் வெப்பத்தினால் நெய்யிருந்த பாத்திரங்கூட உருகிவிடும். அதுபோல், அளவற்ற பக்தியினால் உள்ளத்தைத் தாங்கிய இந்த உடம்பும் உருகிவிடும். இந்த நிலையைத்தான் அடிகள் இங்கே குறிப்பிடுகின்றார்.*

"மெய்யுருகு மானைத் தழுவாயே"

*என்ற இந்த அடியை உற்று உணர்க.*

*"உன்னுடைய அழகையும் அருளையும் உன்னுகின்றபோது உள்ளம் உருகுவதோடு அமையாமல் உடம்பும் உருகுகின்றது" என்று தொண்டரடிப் பொடியாழ்வார் கூறுகின்றார்.*

குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி
கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலு மாகண்(டு)
உடலெனக் குருகு மாலோ என்செய்கேன் உலகத் தீரே.

*மான் மிகவும் அச்சமுள்ள விலங்கு. அடியேன் மானைப் போலே அச்சமுள்ளவன் என்பதைக் குறிப்பிடுவதற்காக "மானைத் தழுவாயே" என்கின்றார். பயம் முதலில் வரும். அதற்குப்பின் பக்தி வரும். "பயபக்தி" என்பார்கள்.*

"ஆனபய பக்திவழி பாடுபெறு முத்தியது
வாகநிகழ் பக்தஜன வாரக்காரனும்"

*திருவகுப்பு*

*அஞ்சுவதற்கு அஞ்சுதல் அறிஞர் இயல்பு.*

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ
தஞ்சல் அறிவார் தொழில். *- திருக்குறள்*

"ஆனாலும் மெத்தப் பயந்தவன் யான் என்னை
ஆண்டநீ கைவிடாதே"

*என்கின்றார் தாயுமானார்.*

காட்டுய ரணைமேல் இருக்கவும் பயந்தேன்
காலின்மேற் கால்வைக்கப் பயந்தேன்
பாட்டயல் கேட்கப் பாடவும் பயந்தேன்
பஞ்சணை படுக்கவும் பயந்தேன்
நாட்டிய உயர்ந்த திண்ணைமே லிருந்து
நன்குறக் களித்துகால் கீழே
நீட்டவும் பயந்தேன் நீட்டிப்பே சுதலை
நினைக்கவும் பயந்தனன் எந்தாய். *- இராமலிங்க அடிகள்*

ஆகவே, நல்லறத்திற்கு அஞ்சுதல் வேண்டும். ஆனால் தீமைக்கு அஞ்சுதல் கூடாது. அதில் அஞ்சா நெஞ்சும் துணிவும் திரமும் இருக்கவேண்டும்.

"நமனை யஞ்சோம்" "அஞ்சுவதுமில்லை அஞ்ச வருவது மில்லை" "காலன் தனக்கு ஒரு காலும் அஞ்சேன்" என்ற வீர முழக்கங்கள் அந்நிலையில் எழுந்தன என அறிக.

தழுவாயே :-

"ஆன்மாவாகிய அடியேனைப் பரமபதியாகிய தேவரீர் கலந்து பேரின்பத்தை வழங்குதல் வேண்டும்" என்று வேண்டு கின்றார். இரண்டற்ற அத்துவித முத்தியை இது குறிக்கின்றது.

தெள்ளுதமிழ் :-

தெளிந்த தமிழ்; தெள்ளுதல் – தெள்ளி வடிகட்டுதல். பலப்பல சங்கப் புலவர்களால் ஆய்ந்து ஆய்ந்து ஒழுங்கு செய்து செப்பஞ் செய்த மொழி தமிழ்மொழி யென்க. தமிழ்மொழி ஒன்றே திருக்கயிலாயமலை சென்று அரங்கேறியது. சேரமான்பெருமாள் நாயனார் பாடியருளிய திருக்கயிலாய ஞானவுலா, கயிலையில் அரங்கேறிய வரலாறு உலகறிந்த ஒன்று.

ஆகவே, மொழிகளுக்குள் முதன்மை பெற்று விளங்குவது தமிழ் என உணர்க.

தெள்ளுதமிழ் பாடத் தெளிவோனே:-

நக்கீரர் முதலிய நற்றமிழ்ப்புலவர்கள் சொற்றமிழ்ப் பாடல்களைப் பாடக் கேட்ட பரமன் மிகவும் மகிழ்ச்சி அடைந் தனர். ஏனைய பாடல்களைக் கேட்டுக் கேட்டுக் கலங்கிய அவரு டைய திருவுள்ளம் தெளிந்த தீஞ்சுவைத் தமிழ்ப் பாடல்களைக் கேட்டுத் தெளிவடைகின்றது.

"விரித்தருண கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்தபல முடனோத மகிழ்வோனே"

*தமிழ் :- தமி என்ற பகுதியடியாகப் பிறந்த சொல். பிறிதொரு மொழியின் கலப்பும் துணையுமின்றித் தானே யியங்குந் தனிச் சிறப்புடையது. இனி, அமிழ்தம் போன்றது. இனிமையானது.*

"இனிமையும் நீர்மையுந் தமிழெனலாகும்"

*தமிழில் மூவகை இனம் உண்டு; வல்லினம், மெல்லினம், இடையினம். தமிழ் என்ற சொல்லில், த - வல்லினம்; மி- மெல்லினம்; ழ்-இடையினம். இம் மூவினங்களும் சேர்ந்த ஒரு சொல்லால் அது அமைந்துள்ள அழகை உன்னுக.*

**செய்ய குமரேச :-**

*செய்ய - செம்மைப்பண்பு. அதனால், முருகக் கடவுளுக்குச் சேய், சேயோன் என்ற திருநாமங்கள் உளவாயின. "சேயோன் மேய மைவரை யுலகு" என்பார் தொல்காப்பியர். உயிர்கட்குச் செந்தண்மை நல்கும் கருணைக் கடவுள் முருகவேள் என்ப.*

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு.

*என்ற வள்ளுவர் வாக்கையும் இங்கு உன்னுக. "செம் பொருள்" செம்மைப் பண்புடைய பரம்பொருள் என்று உணர்க. அப் பொருள்தான் அறுசமயத்தார்க்குப் பொதுத் தெய்வமாகிய முருக வேள் என அறிக.*

**திறலோனே :-**

*அடியவர்களது வல்வினைகளை அகற்றுவதில் வலிமை யுள்ளவர். திறல்-வலிமை. அவருடைய ஆறு முகங்களில் ஒருமுகம் வினை தீர்ப்பது.*

"கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே"

**வள்ளல் தொழும் :-**

*வள்ளல் - வரையாது வழங்குபவன்.*

*வள்ளல்கள் என்போர்கட்கெல்லாம் தலையாய வள்ளல், பரசிவமூர்த்தி ஒருவரே யாவார். தனக்கென்று ஒன்றும் வேண்டாது, தவக்கோலத்துடன் இருப்பவர். அவர் இருக்குமிடம் மயானம்; உண்பது நஞ்சு; உடுப்பது தோல்; அணிவது அரவம்;*

பூசுவது சாம்பல்;

இனி, "பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்" ஆதலின், அடியவர்கள் நினைத்தவை யத்தனையும் அருளும் கரணாகரர்.

"வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்"

என்பார் அப்பர்.

"வள்ளிக் கணவன் தனையீன்ற வள்ளல்"

என்கின்றார் வடலூர் முனிவர்.

வள்ளல் வறியவனாக இருப்பானாயின் வந்து கேட்பவர்கட்கு என் தரவல்லான்? என்ற ஐயம் நிகழும்.

வெள்ளிமலையும் பொன்மலையும் அவருக்குச் சொந்தம். "பிரிவிலா அடியார்க் கென்றும் வாராத செல்வம் வருவிப் பானை" "சென்றடையாத திருவுடையானை" என்ற திரு வாக்குகளாலும் அவர் குறைவிலா நிறைவுடையர் எனத் தெளிக.

காலமுண் டாகவே காதல்செய் துய்ம்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டான்எங்கள் பாண்டிப் பிரான்தன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே

*- திருவாசகம்*

முக்கட் பெருமான் இவ்வாறு அடியார்கட்கு மூல பண்டாரத்தை எடுத்து எடுத்து அள்ளி அள்ளி வழங்குவாராயின், அது ஒரு சமயம் குறைந்துவிடாதோ? என்று ஐயுறுவார்க்கு, அது ஒரு போதும் குறையாது. எடுக்க எடுக்க வளர்ந்து கொண்டே யிருக்கும். இந்தக் குறிப்பில் மணிவாசகனார்,

"முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே"

என்று அருளிச் செய்கின்றார்.

ஆகவே, வள்ளலை உள்ளி எல்லா நலன்களையும் பெறுதல் வேண்டும்.

ஞானக்கழலோனே :-

இறைவனுடைய திருவடிகளையே எல்லாரும் விரும்புகின் றார்கள்; வேண்டுகின்றார்கள். அத்திருவடிகள் இரண்டும்

பரஞானம் அபரஞானம் என்ற இருஞானங்கள் என அறிக. ஞானமேயாய திருவடியைப் பூசித்தும் நேசித்தும் வழிபடுவார்கள் அடிஞானம் பெறுவார்கள்.

**வள்ளிமணவாளப் பெருமாளே:-**

*வள்ளலின் புதல்வராகிய குமார வள்ளலின் பத்தினி வள்ளிநாயகி; வள்ளி - வழங்குபவள். ஆன்மாக்கட்கு ஞானத்தை வழங்குபவள். வள்ளியம்மைக்கு "ஞானபத்தினி" என்று பேருண்டு.*

"திருமால ளித்தருளும் ஒருஞான பத்தினியைத்
திகழ்மார்பு றத்தழுவும் இளையோனே" *- திருப்புகழ்*

## கருத்துரை

*தமிழ்த்தெய்வமே! குமார மூர்த்தியே! ஞான பண்டிதரே! வள்ளிமணவாளரே! உம்மையே நாடி விரக வேதனையால் வாடும் அடிமையாகிய என்னைத் தழுவித் தண்ணருள் புரிவீர்.*

## 21

**நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே**
**நீவந்த வாழ்வைக்கண் டதனாலே**
**மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்**
**மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே**
**வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே**
**வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா**
**நாலந்த வேதத்தின் பொருளோனே**
**நானென்று மார்தட்டும் பெருமாளே.**

## பதவுரை

*வேல்கொண்டு - வேலாயுதத்தைத் திருக்கரத்தில் பற்றி, வேலை பண்டு எறிவோனே - கடல் வற்றும்படி முன்னாள் விடுத்தவரே! வீரம்கொள் சூரர்க்கும் குலகாலா - வீரம் படைத்த சூராதியவுணர்களை அவர்கள் குலத்துடன் அழிக்க வந்தவரே! நால் அந்த வேதத்தின் பொருளோனே நான் என்று - நான்கு அழகிய வேதத்தின் உட்பொருளாக விளங்குபவனே நான் என்று கூறி, மார்தட்டும் பெருமாளே - திருமார்பைத் தட்டுகின்ற*

பெருமையின் மிக்கவரே! நீலம் கொள் மேகத்தின் மயில் மீது - நீல நிறமுடைய மேகம் போன்ற மயிற்பறவையின் மீது, நீ வந்த வாழ்வைக் கண்டு - தேவரீர் எழுந்தருளி வந்த பெரு வாழ்வைத் தெரிசித்து, அதனாலே மால்கொண்ட பேதைக்கு - அக்காட்சியின் பயனாக உமது எழிலில் மயக்கங்கொண்ட அறிவில்லாத பெண்ணாகிய எனக்கு, உன் மணநாறும் மார் தங்கு தாரைத் தந்து அருள்வாயே - தேவரீருடைய திருமார்பிலே விளங்குகின்ற மணம் நிறைந்த மலர்மாலையைத் தந்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

வேற்படையை எடுத்துக் கடலின் மீது முன்னாள் விடுத் தருளியவரே! வீரம் மிகுந்த சூரபன்மனாதி யவுணர்களது குலத்தை யழித்தவரே! "அழகிய நான்கு வேதங்களின் உட்பொருள் நானே" என்று திருமார்பைத் தட்டுகின்ற பெருமிதம் உடையவரே! நீல நிறமுடைய மேகம் போன்ற மயிலின் மீது தேவரீர் எழுந்தருளி வந்த அழகிய கோலத்தைக் கண்டவுடன் உமது மீது மயக்கங் கொண்ட பேதைப் பெண்ணாகிய எனக்கு உமது மார்பில் விளங்குகின்ற மணம் நிறைந்த மலர் மாலையைத் தந்து திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**நீலங்கொள் மேகத்தின் மயில்:-**

மேகத்திற்கு இயல்பாகவுள்ள நிறம் வெண்மை; கடல் நீரைப் பருகிய பின்னர் அது நீல நிறத்தை யடைகின்றது. சூல் கொண்ட நீலமேகமே மழை பொழிந்து உலகிற்கு உதவுகின்றது. அதுவும் கைம்மாறு கருதாது பொழிகின்றது. "மழையின்றி மாநிலத்தார்க்கு இல்லை". பிறர் இன்பத்தைக் கண்டு தம்முடைய இன்பமாக எண்ணி இன்புறுகின்றவர்களே தலைசிறந்தவர்கள்; பொதுநலப் பிரியர்கள். ஆகவே, மழை பொழிந்து மன்னுயிர்க்கு நலஞ் செய்ய வந்த கருமுகிலைக் கண்டு களிநடம் புரிவது மயில். எண்பத்து நான்கு நூறாயிர பேதங்களில் மழைமுகிலைக் கண்டு மகிழ்வது மயில் ஒன்றே.

பிறருக்கு எய்தும் இன்பத்தைக் கண்டு புழுக்கங் கொள்ளு தலும், பிறருக்கு எய்தும் துன்பத்தைக் கண்டு "அந்தப் பயலுக்கு இதுவேண்டும். இன்னும் வேண்டும். மேலும் வரட்டும். படட்டும்" என்று கூறி மகிழ்ச்சியுறுதலும் யாண்டும் பலரிடத்துங் காண

கின்றோம்.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

என்ற திருவள்ளுவர் திருவாக்குக்கு இலக்கியமாக நின்று, பிறர்கட்கு உண்டாகும் இன்பம் தமக்கு வந்த இன்பமாக எண்ணி மகிழ்கின்றவரே பெரியோராவார்.

தனக்கென்று உள்ளங் கையளவு நிலங்கூட இல்லாத வள்ளலார், "வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்" என்கின்றார். ஏன்? அப்பயிருக்குடையவன் பட்டினியால் பரி தவிப்பானே என்று இவர் பரிதவிக்கின்றார். "பிறர் துயர் என் துயர்" என்கின்றான் பீமன். ஆகவே, அடுத்தவர்களுடைய துன்பத் தைத் தன் துன்பமாக எண்ணி நம்மால் முடிந்த அளவு முயன்று அவர்கள் துன்பத்தை யகற்ற வேண்டும்.

துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் மழையினால் உண்டாகும். மழையே மாநிலத்தின் உயிர்நாடி. பயிர் தழைக்க உயிர் தழைக்கும். அத்தகைய மழை பொழிய வானில் இருண்ட மேகம் எழுந்த வுடனே உலகிற்கு உண்டாகும் நலனைக் கருதி அந்நலம் தனக்கு எய்தியது போல உவந்து, தோகையை விரித்துக் களிநடம் புரிகின்றது மயில். இத்தகைய பண்பு வேறு எந்த விலங்குகட்கும் பறவைகட்கும் இல்லை.

இத்தகைய சிறந்த பண்புடைய மயிலைக் கருணை நாயக ராகிய கந்தப்பெருமான் தமக்கு வாகனமாகக் கொண்டு அடியார் கட்கு அருளும் பொருட்டு வருவார்.

**மயில்மீதே நீ வந்த வாழ்வு:-**

சிவந்த பவளமலை போன்ற குமாரக் கடவுள் நீல மணி போன்ற மயிலின் மீது எழுந்தருளி வருகின்றபோது அக்காட்சி மாட்சி மிக்கதாக விளங்கும். அதனால், ஆருயிர்கட்கு எல்லா நலன்களும் உண்டாகும். வாழ்வைத் தரவருவதனால் "நீ வந்த வாழ்வு" என்கின்றார். ஆங்காரம் நீங்கினார்க்கு ஓங்கார மயிலில் முருகன் காட்சி தருவான்.

அருணகிரிநாதருக்கு அறுமுகப் பெருமான் மயில்மிசை வந்து அற்புதக்காட்சியை யருளினார்.

"சயிலமெ றிந்தகை வேற்கொடு மயில்மிசை வந்தெனை
யாட்கொளல்
சகமறி யும்படி காட்டிய முருகோனே" - *திருப்புகழ்*

**வாழ்வைக் கண்டதனாலே மால் கொண்டபேதை-**

*இப்பாடல் நாயகி நாயக பாவத்தில் அமைந்தது. முருகவேள் அழகிய மயில்வாகனத்தின் மீது கோடி சந்திரப் பிரகாசமாக எழுந்தருளி வந்த அற்புதக் காட்சியைக் கண்ட தலைவி அப்பரம நாயகன்மீது காமுற்று மயங்குகின்றாள். தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட முருகனை நினைந்து நினைந்து உருகுகின் றாள். அவன் மீது பித்தாகி நிற்கின்றாள். அவளுக்கு ஊணும் உறக்கமும் தவிர்கின்றன. உலகமெல்லாம் உறங்குகின்றன. ஆனால், அவளுக்கு விழிகள் மூடவில்லை.*

"விண்ணுறங்கும் மண்ணுறங்கும் வேறுளஎல் லாமுறங்கும்
கண்ணுறங்கேன் எம்மிறைவர் காதலால் பைங்கிளியே"
- *தாயுமானார்*

*உடம்பிலே பசலை யுண்டாகின்றது. உடல் மெலிகின்றது. அதனால், சங்குவளையல்கள் கழன்று விடுகின்றன. பறவை களைக் கண்டு தன் குறைகளைக் கூறி விம்முகின்றாள்.*

"பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே"
-*திருஞானசம்பந்தர்*

*மயங்குகின்றாள்; தியங்குகின்றாள். அதனால், அவள் அப்போது பேதை யென்று பேர் பெறுகின்றாள். அவள் உள்ளம் வெயிலைக் கண்ட வெண்ணெய்போல் உருகுகின்றது. காதலால் உள்ளங் கசிந்து கண்ணீர் பெருகுகின்றது. கருவி கரணங்கள் ஓய்ந்து விடுகின்றன. பிச்சியாகி நிற்கின்றாள். அந்தப் பிச்சுக்கு மருந்து மருத்துவர்களிடம் கிடையாது. விடாய்கொண்டான் தண்ணீரை நாடுவதைப்போல் தான் காதலித்த தலைவனுடைய கருணையை நாடுகின்றாள். அவள் விடாய் சிறிது தணியும் பொருட்டு, அவள் காதலித்த தலைவனுடைய நாமத்தை ஒருவர் கூறினார். இன்னும் ஒருவர் அவருடைய நிறம் குணம் இவைகளைக் கூறுகின்றார். ஒருவர் அவர் வசிக்கும் அருமையான ஊரைக் கூறுகின்றார். இத்தனையுங் கேட்ட அவளுக்கு நெருப்பில் நெய்விட்டதுபோல் மேலும் மேலும் ஆராத காதல் அதிகரிக்கின்றது. அப்பதியையே நினைந்து பிச்சியாகின்றாள். தன்னைப் பெற்ற தாயையும்*

தந்தையையும் அன்றே நீத்தாள். தன்னையே மறந்து விடுகின்றாள். அங்கே, அவள் பேருங்கெட்டுவிட்டது. இது அருட் காதல். இதன் பெருமை அளவிடற்கரியது. இதனை அப்பரடிகள் கூறுகின்றார்.

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள்தன் நாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.

மார்தங்கு தாரைத் தந்தருள்வாயே:-

இவ்வாறு, இறைவனிடங் காதல் கொண்ட ஆன்மாவுக்கு அக்காதல் நோயைத் தணிக்கும் மருந்து, இறைவனுடைய திரு மார்பிலேயுள்ள மாலைதான். மாலை போக்கும் மாலையை அருணகிரிநாதர் இங்கே வேண்டுகின்றார்.

"குளிர்மாலை யின்கண் அணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ"

என்று செந்தில் திருப்புகழிலும் பாடுகின்றார்.

இறைவனுடைய திருத்தோள்களைத் தழுவ வேண்டும் என்று வாடுகின்ற ஆன்மாவுக்கு அத்திருத்தோள்களில் தங்கியுள்ள மாலை மிகுந்த இன்பத்தைத் தரும்.

வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே:-

இறுதிநாளில் உறுதியுடன் சூரபன்மன் கடலில்போய் ஒளிந்தான். நூறாயிரங்கோடி அண்டங்களின் கனலும் ஒருங்கே திரண்டது போன்ற உத்தண்டவேல் அக்கடலின் அருகிற் சென்றதும் அக்கடல் நீர் வற்றி வறண்டுவிட்டது.

சூரபன்மன் - ஆணவ மலம். கடல் - பிறவித்துன்பம். வேல் - ஞானம். ஆணவ மலமாகிய சூரன் பிறவிப் பெருங்கடலில் ஒளிந்தபோது ஞானமாகிய வேல் சென்றவுடனே அப்பிறவிப் பெருங்கடல் வற்றிவிட்டது என்று உணர்க.

"வேலைவற்றி வறண்டு சுறீல் சுறீலென" - *திருப்புகழ்*

வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா:-

சூரபன்மன் சிங்கமுகன் தாரகன் என்ற மூன்று அவுணர்களும்

மிகுந்த வீரம் படைத்தவர்கள். தேவரையும் மூவரையும் வென்றவர்கள். 1008 அண்டங்களையும் 108 யுகங்களாக ஆண்டவர்கள். அவர்கட்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை.

சூரர்க்கும் என்ற சொல்லில் வரும் உம்மை சிறப்பும்மை. அத்துணைச் சிறந்தவர்கள் சூரபன்மனாதியர். அவர்களிடம் அமரர்கள் அனைவரும் பணிவிடை புரிந்தார்கள். குமாரக் கடவுள் தனிவேல் தாங்கிச் சூரன் குலங்களையெல்லாம் அழித்து அருள்புரிந்தனர்.

சூரபன்மன் ஆணவமலம் என்று முன்னே குறிப்பிட்டனம். இனி, அவனுடைய குலம் என்பது ஆணவ மலத்திற்கு அனுகூலமாக நிற்கும் அவா, கோபம், மயக்கம், அழுக்காறு, கொலை புலை முதலிய துர்க்குணங்களாகும்.

**நாலந்த வேதத்தின் பொருளோனே நான் என்று மார்தட்டும் பெருமாளே :-**

“அழகிய நான்கு வேதங்களின் உட்பொருளாக இருப்பவன் நானே” என்று முருகவேள் மார்தட்டிக் கூறுகின்றார். ஏன்? உலகம் உணர்ந்து உய்யும்பொருட்டு.

வேதம் இறைவன் திருவாக்கு. “தூமறைபாடும் வாயார்” (பெரியபுராணம்). அவ்வேதம் பொதுவானது. முருகவேள் ஆறு சமயங்கட்கும் பொதுவானவர். “அறுசமய சாத்திரப் பொருளோனே”. ஆகவே, மறைகள் கூறும் உட்பொருள் அவரேயாவார். “மறையாயிரங்களும் குமரகுருவென வலிய சேடனஞ்ச வந்திடுவோனே” என்ற திருப்புகழாலும் இதனை யறிக.

இதனால், வேதகாரணர் முருகப் பெருமானே என்பதும் ஞான வீரரும், ஆணவத்தினையடக்கிப் பிறவிப் பெருங் கடலைக் கடத்துபவரும் அக்கருணாகரரே என்பதும் விளங்கும். ஆகவே, அன்பர்கள் அனைவரும் முருகனே முழுமுதற் கடவுளென உணர்ந்து, அப்பரமபதியை நேசித்தும், அவருடைய திருவடியைப் பூசித்தும், அவருடைய திருப்புகழை வாசித்தும் இருமையும் ஒருமையில் பெறுவார்களாக.

## கருத்துரை

வேலை வற்ற வேல் விட்டவரே! சூர குலாந்தகரே! வேதங்களின் உட்பொருளாகிய வித்தகரே! உம்மீது காதல் கொண்டிருக்கின்ற தலைவியாகிய எனக்கு உமது திருமார்பில் விளங்கும் மலர் மாலையைத் தந்து ஆட்கொள்வீர்!

## 22

பிறவியலை யாற்றினிற் புகுதாதே
பிரகிருதி மார்க்கமுற் றலையாதே
உறுதிகுரு வாக்கியப் பொருளாலே
உனதுபத காட்சியைத் தருவாயே
அறுசமய சாத்திரப் பொருளோனே
அறிவுளறி வார்க்குணக் கடலோனே
குறுமுனிவ னேத்துமுத் தமிழோனே
குமரகுரு கார்த்திகைப் பெருமாளே.

### பதவுரை

அறுசமய சாத்திர பொருளோனே - ஆறுசமயங்கள் கூறும் உண்மை நூல்களின் உட்பொருளாக விளங்குபவரே! அறிவுள் அறிவார்குண கடலோனே - அறிவுள் அறிபவர்கள் அறிகின்ற அருட்குணக் கடலாகத் திகழ்பவரே! குறுமுனிவன் ஏத்து முத்தமிழோனே -அகத்தியமுனிவர் துதிக்கின்ற மூன்று தமிழ்க்கும் உரியவரே! குமரகுரு-- இளமையுடன் விளங்கும் குருமூர்த்தியே! கார்த்திகை பெருமாளே- கார்த்திகைப் பெண்கள் வளர்த்த பெருமையின் மிக்கவரே! பிறவி அலை ஆற்றினில் புகுதாதே - இன்ப துன்ப அலைகள் வீசுகின்ற பிறவியாகிய ஆற்றில் அடியேன் வீழ்ந்து தவிக்காமலும், பிரகிருதி மார்க்கம் உற்று அலையாதே - மாயை நெறியே பற்றி இங்கும் அங்குமாக அலையாமலும், உறுதி குரு வாக்கிய பொருளாலே - உறுதியைத் தரவல்ல குருநாதர் உபதேசித்த உபதேசப் பொருளினாலே, உனது பத காட்சியை தருவாயே- தேவரீருடைய திருவடி தரிசனத்தை அடியேனுக்குத் தந்து அருள்புரிவீர்.

### பொழிப்புரை

ஆறு சமயங்கள் கூறும் உண்மை நூல்களின் உட்பொருளாக இருப்பவரே! அறிவினுக்குள் அறியும் அறிவாளர்கள் அறிகின்ற அருட்குண சாகரமே! அகத்திய முனிவர் துதிக்கின்ற முத் தமிழுக்கும் உரியவரே! இளம் பூரணராக விளங்குங் குருநாதரே! கார்த்திகை மாதர்கள் வளர்த்த பெருமிதம் உடையவரே! இன்ப துன்பங்களாகின்ற அலைகள் வீசுகின்ற பிறவியாகிய நதியில் வீழ்ந்து அடியேன் அலையாமலும், மாயை வழியிலே சென்று

இடர்ப்படாமலும், உறுதியைத் தருகின்ற குருநாதருடைய உபதேச மொழியின் உட்பொருளையுணருமாறு செய்து, தேவரீருடைய திருவடி தரிசனத்தை அடியேனுக்குத் தந்து அருள்புரிவீர்.

## விரிவுரை

**பிறவியலையாறு:-**

ஆறு, அலைகளுடன் கூடியது. நம்முடைய வாழ்வில் இன்பமுந் துன்பமும் மாறிமாறி வந்துகொண்டே இருக்கின்றன. ஆறு நீளமாகப் போவதுபோல் நமது பிறவியும் நீளமாக வந்து கொண்டேயிருக்கின்றது. எண்ணில்லாத காலமாக எண்ணில்லாத பிறவி எடுத்து ஆன்மாக்கள் இளைத்துவிட்டன. "எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்" என்பது சிவபுராணம்.

இப்பிறவிக்கு வித்து அவா என அறிக. பற்பல அவாக்களை ஆன்மா கொள்வதனால் பற்பல பிறவிகள் வருகின்றன. அவாவை அறுத்து வேண்டாமை யெய்தினால் பிறவாமை தானே வரும்.

அவாஎன்ப எல்லா வுயிர்க்கும்எஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும் - திருக்குறள்

ஆறு கடலில் முடிவதுபோல், நமது பிறவி இன்பக் கடலாகிய இறைவனிடத்தில் முடிய வேண்டும்.

**பிரகிருதிமார்க்கம் உற்று அலையாதே:-**

பிரகிருதி - உலகிற்கு முதற் காரணமாகிய மாயை; அம்மாயை மயக்கத்தையும் புரியும். ஆகவே, அம் மாயையின் வழி சென்று அலைதல் கூடாது.

மா - தோற்றம்; யா- ஒடுக்கம். தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் நிலைக்களமாகவுள்ளது மாயை என அறிக.

தோற்றமும் நிலையும் ஈறும் மாயையின் தொழில தென்றே
சாற்றிடும் உலகம் வித்துச் சாகாதி அணுக்க ளாக
ஏற்றதேல் ஈண்டு நிற்கும் இல்லதேல் இயைவ தின்றாம்
மாற்றநீ மறந்தாய் இத்தால் மாயையை மதித்தி டாயே
- சிவஞான சித்தியார்

இதன் பொருள்:- தோற்றம், நிலை, இறுதி என்னும்

முத்தொழிலும் மாயை தரும் என்பதற்கு மாயையே பிரகிருதி என்றறிக என்று கூறுகின்ற வேதமொழியும், வித்தின் கண்ணே இலை முதலியன சூக்கும வடிவாய் அடங்கி நின்றனவாயின் அவை தூலவடிவாக வெளிப்படும் என்று கூறும் உடன் பாட்டாலும், வறுத்த வித்தின்கண் சூக்கும வடிவாய் அடங்கி நிற்றல் இல்லையாயின் அவை தூலவடிவாக வெளிப்படுதலு மின்றாம் என்று கூறும் எதிர்மறையாலும் வழங்குகின்ற உலக மொழியுஞ் சான்று ஆதலின், அதனை நீ மறந்தாய்; அவயவமாகிய உறுப்பில்லாமை மாத்திரையேயன்றி, வேதமொழி, உலக மொழி சான்றாதலாகிய இதனாலும் அணுகாரணவாதத்தை விட்டு, மாயையே முதற்காரணமென்று அறிவாயாக.

ஒரு குடத்திற்கு, மண் முதற்காரணம்; குயவன் நிமித்த காரணன்; தண்டசக்கரம் துணைக்காரணம்.

மண்ணாகிய முதற் காரணத்திலிருந்து, தண்ட சக்கரமாகிய துணைக்காரணத்தைக் கொண்டு, குயவன் நிமித்த காரணனாய் நின்று குடத்தை வனைகின்றான்.

அதுபோல் மாயை உலகிற்கு முதற்காரணம்; திருவருட் சக்தி துணைக் காரணம்; இறைவன் நிமித்த காரணன்.

நிமித்த காரணனாகிய இறைவன், திருவருட் சக்தியாகிய துணைக் காரணத்தைக் கொண்டு, மாயையாகிய முதற் காரணத்தி னின்றும் உலகத்தைத் தோற்றுவிக்கின்றான் என்று தெளிக.

பிரமத்தை முதற் காரணமாகக் கொண்டு, பிரமத்தினின்றும் உலகம் தோன்றும் என்று மயங்கக் கூறினோரும் உளர். அது உண்மையன்று என உணர்க. பிரமம்- சித்து (அறிவுடைப் பொருள்) உலகம் - அசித்து (அறிவில்லாத பொருள்) அறிவுடைய பொருளாகிய பிரமத்தினின்றும் அறிவில்லாத பொருளாகிய உலகந் தோன்றாதென்று அறிக. எனவே, மாயையிலிருந்தே உலகம் தோற்றுவிக்கப்பட்ட தென்பது உறுதியாகும்.

பிரமத்தினிடத்திலிருந்து உலகந் தோன்றியதாக சில வேத வசனங்கள் கூறுகின்றனவே; அதற்குப் பொருள் யாது? எனிற் கூறுதும், சேற்றினிடத்திலிருந்து தோன்றுவது பங்கஜம். (தாமரை)

பங்கம் - சேறு; ஜம் - தோன்றுவது

உண்மையாக உற்று நோக்கினால் தாமரை கொட்டை யிலிருந்தே தோன்றுகின்றது. ஆனாலும், கொட்டையை ஒரு

கல்லின்மேல் வைத்தால் தாமரை தோன்றுவதில்லை. தாமரை கொட்டையினின்றும் தோன்றுவதற்குச் சேறே காரணமாக நிற்பதனால் தாமரை பங்கஜம் எனப்பட்டது. அதுபோல், மாயையிலிருந்து உலகந் தோன்றுமாயின் அதற்கு இறைவன் காரணமாக நிற்றலின் பிரமத்தினிடமிருந்து உலகந் தோன்றுவதாக அவ்வேத வசனம் கூறியது எனத் தெளிக. இதையே "பங்கஜ நியாயம்" என்று கூறுவர்.

இனி, மாயையின் இலக்கணத்தையும் அறிந்து கொள்வது அவசியமாகும். அதனை ஈண்டுச் சிந்தித்தல் பயனுடையதாகும்.

நித்தமாய் அருவாய் ஏக நிலையதாய் உலகத் திற்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமல னுக்கோர்
சத்தியாய்ப் புவன போகந் தநுகர ணமுமு யிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யு மன்றே.

உலகிற்கு முதற்காரணம் எனப்படும் மாயையின் இலக்கணம் யாதெனின்: உற்பத்தியில்லாததால் நித்தமாகியும், கண்ணுக்குத் தோற்றாமையால் அருவமாகியும், அழிதல் இல்லாமையால் ஒன்றாகியும், உலகம் உண்டாவதற்கு ஒரு காரணமாதலால் வித்தாகியும், அறிவில்லாததால் சடமாகியும், எவ்விடத்தும் ஆன்மாக்களுக்குத் தநு கரண புவன போகங்களைத் தருவதால் வியாபகமாயும், முதல்வன் வியாபகத்துக்குள் அடங்குதலால் முதல்வனுக்கு ஒரு வைப்புச் சத்தியாகியும், புவனமும் போகமும் தநுவும் கரணமுமாக உயிர்களின் பொருட்டு விரிதலால் ஒரு மலமாகியும், விபரீத வுணர்வினைச் செய்தலால் மயக்கஞ் செய்வதாகியும் உள்ள இலக்கணங்களையுடையதாம்.

புவனபோகம் தநுகரணமும் உயிர்க்காய் என்றதனால் மாயையின் வடிவம் புவனாதிகள் என்பது கூறப்பட்டது.

இதனால், உலகிற்கு மாயை முதற்காரணம் என்பது வலியுறுத்தப்பட்டது.

மாத்துமிகர் மாயையைச் சூனியம் என்பர். அதனை மறுத்தற்கு "உலகத்துக்கோர் வித்துமாய்" என்றார்.

கணிகவாதிகள் ஒன்றன் சார்பில் ஒன்று தோன்றும் என்பர்; எனவே, ஒன்று தோன்றுங்கால், அது தோன்றுவதற்கு முன்னுள்ளது கெடும் என்பது அவர் கொள்கை. அதனை, மறுத்தற் பொருட்டு "நித்தமாய்" என்றார்.

உலகாயதர் உலகத் தோற்றத்திற்குப் பூதங்களே காரணம் என்பர். அவரால் கொள்ளப்படுவன நான்கு பூதங்களேயாம். ஆகாய பூதத்தை ஒப்புக் கொள்வதில்லை. அவை உருவமாதலின் அதனை மறுத்ததற்கு "அருள்வாய்" என்றார்.

வைசேடிகர் முதலியோர் உலகத்திற்குக் காரணம் பரமாணுக்கள் என்பர். அணுக்கள் என்றதனாலேயே வியாபகமில்லாதது என்று பெறப்படும். அதனை மறுத்ததற்கு "எங்கும் வியாபியாய்" என்றார்.

சாங்கியர் உலகத்திற்குக் காரணம் முக்குண மயமாகிய பிரகிருதி என்பர். அதனை மறுத்தற்கு "ஏக நிலையதாய்" என்றார்.

பாற்கரியர் உலகத்திற்குக் காரணம் பிரமம் என்பர். அதனை மறுத்ததற்கு "விமலனுக்கோர் சத்தியாய்" என்றார்.

சிவாத்துவிதர் உலகத்திற்குக் காரணம் சிற்சக்தி என்பர். அதனை மறுத்ததற்கு "அசித்தாய்" என்றார்.

மாயாவாதிகள் உலகத்திற்குக் காரணமாகிய மாயை அநிர்வசனம் என்பர். அதனை மறுத்ததற்கு "வைத்ததோர் மலமாய்" என்றார்.

இத்தன்மைத்தாகிய மாயை ஆணவமலம்போல் மயக்கமே செய்யும் என்பர். சைவருள் ஒரு சாரார். அதனை மறுத்ததற்கு "மயக்கமுஞ் செய்யும்" என்றார்.

மயக்கமே செய்யும் என்றதில் வந்த பிரிநிலை ஏகாரம் தநுகரணாதிகளைச் செய்யாதென விளக்கும். மயக்கமும் என்ற உம்மை தநுகரணாதிகளால் அறிவை விளக்குவித்து மயக்கமுஞ் செய்யும் என்பது குறித்தது. இங்கு மயக்கம் என்பது விபரீத உணர்வு. அவ்விபரீத வுணர்வைச் செய்தல் மாயைக்குத் தன்னியல்பன்று என்பதை மயக்கமும் என்ற உம்மை உணர்த்தி நின்றது. மாயையின் தன்னியல்பு ஏகதேச அறிவைச் செய்தல்.

உறுதி குருவாக்கியம்:-

அன்பு நெறிக்கு முக்கியமான அங்கம் உறுதியேயாகும். ஒரு கொள்கையை ஒருவன் மேற்கொள்வானாயின் அதனை இறுதிவரை உறுதியாகக் கடைப்பிடிக்கவேண்டும்.

அப்பரடிகள் திருக்கயிலையைக் காணும் காதலுடன் இமவரை கடந்து செல்லுகின்றார். இரவும் பகலும் ஒழியாது நடந்த அவருடைய கால்கள் தேய்ந்தன. கரங்களால் தாவிச் செல்ல கரங்களுந் தேய்ந்தன; மார்பினால் நீந்திச் சென்றனர். தசைகள் தேய்ந்து, எலும்புகள் முறிந்து, புரண்டு சென்ற முயற்சியும் அற்று அயர்ச்சியுற்றனர்.

இறைவர் ஒரு முனிவர் திருவுருவில் தோன்றி, "ஐயா! கரசரணங்கள் தேய்ந்து அழிய இக்கொடிய வெப்பமான கானகத்தில் தனியே வந்த காரணம் யாது?" என்றார். அப்பர், "முனிவரே! கயிலையில் எம்பிரான் விளங்கும் திருக்கோலத்தைக் கண்டு கும்பிடும் பொருட்டு வந்தேன்" என்றார்.

முனிவராக வந்த முக்கட்பெருமான், "அன்பனே! கயிலைமால் வரையை மண்ணுலகிலுள்ள மானுடர்கள் அடைவதற்கு எளிதோ? அமரரும் அடைய முடியாதே? இக்கொடிய வெயில் வீசும் வெய்ய சுரத்தில் நீர் என்ன செய்தீர்," என்றார்.

> கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
> பயிலும் மானுடப் பான்மையோர் அடைவதற் கெளிதோ
> அயில்கொள் வேற்படை அமரரும் அணுகுதற் கரிதால்
> வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர் வந்தென விளம்பி.
>
> *- பெரியபுராணம்*

இதற்கு ஆண்ட அரசு கூறிய உறுதி மொழியைப் படியுங்கள். உடம்பெல்லாந் தேய்ந்தும் என்பு முறிந்தும் அவருடைய அன்பு முறியவில்லை.

> "மீளும் அத்தனை உமக்கினிக கடன்" என விளங்கும்
> தோளும் ஆகமுந் துவளுமுந் நூல்முனி சொல்ல
> "ஆளும் நாயகன் கயிலையில் இருக்கைகண் டல்லால்
> மாளும் இவ்வுடல் கொண்டுமீ ளேன்"என மறுத்தார்
>
> *- பெரியபுராணம்*

உறுதியே பரகதிக்குச் சாதனம். உறுதி திருவருளினால் கிடைக்கும். நூல் பல கற்பதனாலும், அறிவினாலும், வேறு பல திறமைகளாலும் அது வாய்க்காது. மாதவத்தினால் திருவருள் கிடைக்கும்; திருவருளினால் உறுதியும் அன்பும் உண்டாகும். அவைகளினால் பரகதி கிடைக்கும்.

உன்திரு வடிக்கீழ் உறுதியும் அன்பும்
உன்திரு வருளினால் கிடைப்ப
தன்றிநூல் பலவும் ஆய்ந்ததால் உரைசெய்
யளப்பருந் திறமையால் மதியால்
மன்றவே கிடைப்ப தன்றுமற் றதனை
மாதவஞ் செய்திலாக் கயமைப்
புன்றலைப் புலையர் யாங்ஙனம் பெறுவார்
சோதியே கருணைவா ரிதியே.

*- சிவதத்துவ விவேகம்*

*உறுதியைத் தருகின்ற குருநாதருடைய உபதேச மொழியை இடையறாது சிந்தித்து வருதல் வேண்டும். அங்ஙனஞ் சிந்திப்பார்க்கு முருகனுடைய திருவடிக் காட்சி யுண்டாகும். திருவடி பிறவியலையாற்றைக் கடத்தும் புணையாகும்.*

"உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
உருவுடைய மலினபவ ஜலராசி ஏறவிடும்
உறுபுணையும்"

*ஆதலின், பிறவியலையாற்றைக் கடக்க முயலும் அன்பர்கள், மாயை நெறியைக் கடந்து, உறுதியுடன் குரு மொழியாகிய திருமொழியை இடையறாது சிந்தித்து, திருவடி தெரிசனம் பெற்று, அப்புணைகொண்டு பிறவி வெள்ளத்தைக் கடந்து முத்தியின்பம் பெறுதல் வேண்டும்.*

**அறுசமய சாத்திரப் பொருளோனே:-**

*ஆறு சமயங்களாவன: சைவம், வைணவம், காணாபத்யம், கௌமாரம், சாத்தம், சௌரம் என்பனவாகும். இவைகள் ஒரே குறிக்கோளைக் கொண்டவைகளாகும். ஒரு கடவுளுக்கு ஆறு தன்மைகள்; சிவம்- மங்கலம்; விஷ்ணு- வியாபகம்; காணா பத்தியம் - இடரின்மை; கௌமாரம் - இளமை, சாத்தம் - வலிமை; சௌரம் - ஒளி. கடவுளுக்கு இந்த ஆறுதன்மைகளும் உண்டு. இவைகளைத் தனித் தனியே வைத்து ஒவ்வொரு சமயமும் பேசுகின்றது. இவைகளின் நுட்பமறிந்தார் இணங்குவரேயன்றிப் பிணங்கார்.*

*சிவமூர்த்தியின் அருள் தன்மைகளே இந்த ஆறும் என்க. அண்டகோடிகள் முற்றும் வியாபகமாக நிற்பவர் அவரேயென்க. அதனால், அவர் விஷ்ணு எனப்படுவார். சிவபெருமானுடைய*

* நவ வடிவங்களில் ஒன்று விஷ்ணு வடிவம். காத்தற்றொழிலைச் செய்யும் விஷ்ணு வேறு என அறிக. அவர் திரிமூர்த்திகளில் ஒருவர். திரிமூர்த்திகளும் பசுக்களேயாவார்.

எனவே, ஒரு தனிப் பொருளாம் பரம்பொருளைக் குறித்து ஆறு கோணங்களில் பார்ப்பவர்களே மேற்கூறிய ஆறு சமயிகளாவார்கள். இவைகள் ஒன்று நன்று; ஒன்று தீது என்று கூறுதல் மடமையாகும். இந்த ஆறுசமயங்களும் ஒரே முடிவை யுடையனவாகும்.

"அறுசமயத் தலைவராய் நின்றவர்"

*- சேக்கிழார்*

ஆறு குருடர்கள் ஒரு யானையை ஆறு பக்கம் நின்று தடவிப் பார்த்தார்கள். ஒருவன் யானையின் முதுகைத் தடவிப் பார்த்தான். ஒருவன் வாலைத் தடவிப் பார்த்தான்; ஒருவன் கொம்பைத் தடவிப் பார்த்தான்; ஒருவன் காதைத் தடவிப் பார்த்தான்; ஒருவன் தும்பிக்கையைத் தடவிப் பார்த்தான்; ஒருவன் காலைத் தடவிப் பார்த்தான்; தடவிப்பார்த்தவர்கள் முறையே பானை என்றும், உலக்கையென்றும், கோல் என்றும், முறம் என்றும், தூண் என்றும், உரல் என்றும் கூறினார்கள். யானை என்றால் அவர்கள் உள்ளத்தில் தனித்தனியே அந்த ஆறு உறுப்புக்களேயாகும் என்று கொண்டார்கள். ஆனால், இந்த ஆறும் யானையின் அங்கங்களேயாகும். இந்த ஆறும் சேர்ந்தது யானையாகும். அதுபோலவே, மேற்கூறிய கடவுளின் தனித் தனி அங்கங்களைக் கொண்டு அமைதியுறுகின்றார்கள். அந்த ஆறு சமயங்கள் கூறும் அத்தனையும் ஒன்று கூடியது கடவுள் தன்மை என்று உணர்க. இந்த அழகிய கருத்தைத் திருமூலர் கூறுகின்றார்.

---

* அந்த நவ(ஒன்பது) வடிவங்களாவன: பிரமன், திருமால், உருத்திரன், மகேச்சுரன், சதாசிவம், விந்து, நாதம், சத்தி, சிவம்; இவற்றுள் முன்னுள்ள நான்கும் உருவத் திருமேனிகள்; பின்னுள்ள நான்கும் அருவம்; நடுவில் உள்ளது உருவருவத் திருமேனி.

சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்தி ரன்தான் மால்அயன் ஒன்றி னொன்றாய்ப்
பவந்தரும் அருவ நாலிங் குருவநா லுபய மொன்றாய்
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்

*சித்தியார்*

முதல ஒன்றனை முதுகுடன் வாலும்
திதமுறு கொம்பும் செவிதுதிக் கைகால்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூறல் ஒக்கும் ஆறு சமயமே

'ஒரு பெரிய ஊருக்கு ஆறு வழிகள் உண்டு. எவ்வழி யேகினும் அவ்வூரையே அடைவர். அதுபோலே மேலே கூறிய ஆறு சமயங்களில் நின்றார் ஒரே முத்தியைப் பெறுவர். இதில் நன்று தீது கூறுதல் ஆகாது. அவ்வாறு கூறுவார்களானால் அது குன்று நோக்கி நாய் குரைத்தது போலாகும்' என்பார் திருமூலர்.

ஒன்றதே பேரூர் வழியதற் காறுள
தென்றது போலும் இருமுச் சமயங்கள்
நன்றிது தீதிது என்றுரை மாந்தர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தாரே

அறிவுளறிவார்க் குணக் கடலோனே:-

இறைவன் அறிவே வடிவானவன். "அறிவே சிவமாய மர்ந்திருப்பாரே" என்பது திருமந்திரம். "அறிவு திருமேனி" என்பது திருப்புகழ். "ஞானந்தான் உருவாகிய நாயகன்" என்பது கந்தபுராணம். அறிவுமயமாகிய இறைவனை அறிவினால்தான் அறிதல் வேண்டும். அறிவு என்பது இப்போது உலகத்தை அறிகின்ற அறிவு அன்று. இது சுட்டியறிகின்ற அறிவு; அறிவிக்க அறிகின்ற அறிவு; தடைபடுகின்ற அறிவு; மற்றுங் கல்வியறிவினாலும் இறையையறிய வொண்ணாது. இந்த அறிவு முற்றிலும் அற்றபின் எய்தும் திருவருள் அறிவினால் இறைவனை யறியவொண்ணும்.

"அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ" - அநுபூதி

இறைவனுக்கு அருட்குணங்கள் எட்டு. அவை அடியில் வருமாறு.

"தன்வயத்தவன் தூயவுடம்பினான்
தானியற்கை உணர்வினனாகுதல்
பன்னுமுற்ற உணர்தல் இயல்பினன்
பாசநீங்குதல் பேரருளாதல்
மன்னும் ஈறில் ஆற்றலுடைமையும்
வரம்பில் இன்பமும் ஆகிய எண்குணம்"

ஆன்மாக்களுக்கு உள்ள குணங்கள் மூன்று. சத்துவம், இராஜசம், தாமசம் என்பன; இவை, பிராகிருத குணங்கள். இவைகள் இறைவனுக்கு இல்லாமையால் நிர்க்குணன் என்று இறைவனை அழைப்பர். நிர்க்குணன் - ஒரு குணமும் இல்லாத வன் என்று பொருள் செய்யக் கூடாது. குணமில்லாத பொருளே இருக்க முடியாது. எனவே, ஆண்டவன் அருட்குணங்களை யுடையவன். அக்குணங்கள் கடல்போல் வற்றாமலுங் குறை யாமலும் இருக்கின்றன.

## குறுமுனிவன் ஏத்து முத்தமிழோனே:-

குறுமுனி - அகத்திய முனிவர். இவர் முருகனடியாருடைய முதல் வரிசையில் முதல் எண்ணில் இருப்பவர். தமிழையும், ஓம் எனும் எழுத்தின் உட்பொருளையும் முருகவேளிடம் கேட்டு உபதேசம் பெற்றுக் கொண்டவர். பொதியமலையில் இருந்து முத்தமிழையும் வளர்த்தவர். விருத்திராசுர வதத்தின் பொருட்டு இந்திரன் வேண்டுதலும், கடலைக் கையால் எடுத்துக் குடித்தவர். விசும்பை மூடி வளர்ந்த விந்தமலையை அடக்கினவர். தொல் காப்பியர் முதலிய பன்னிரு மாணவர்களைப் படைத்தவர்.

> "சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
> செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே"
>
> - *திருப்புகழ்*

## குமரகுரு:-

குமரகுரு உலகமாயையை நீக்குகின்ற குருநாதன். குமார மந்திரத்தின் பொருளை, எனது கந்தரலங்கார வுரையில் காண்க.

## கார்த்திகை பெருமாளே:-

சரவணத்தில் அவதரித்த முருகக் கடவுளுக்குப் பால் தர கார்த்திகைப் பெண்கள் அறுவரையும் மாலயனாதி வானவர்கள் ஏவினார்கள். அவ்வறுவரும் ஆராத அன்புடன் வந்து ஒரு மகவைக் கண்டு தனித்தனியே பால் கொடுக்க விரும்பினார்கள். வேண்டுவார்க்கு வேண்டியதை வழங்கும் விமலன், ஆறு மாதரும் தனித்தனி பால்கொடுத்து மகிழுமாறு ஆறு குழந்தைகளாகப் பிரிந்தனர். அப் பெண்கள் பால் கொடுத்துத் தாலாட்டி வளர்த்தார்கள். அதனால் மனவாக்கிற்கு எட்டாத இறைவன் கார்த்திகேயன் எனப் பேர்பெற்றனர். கார்த்திகை நாளில் முருகனை அன்புடன் வழிபட்டோர் இகபர நலன்களை எளிதிற் பெறுவார்கள்.

## கருத்துரை

*அறுசமய நூல்களின் உட்பொருளாக விளங்குபவரே! அறிவுள் அறிவார் அறிவின் பயனே! அகத்தியர் துதிக்கும் தமிழ்க் கடவுளே! கார்த்திகைப் பெருமாளே! பிறவித் துன்பம் நீங்கி உய்ய உமது திருவடி தரிசனத்தைத் தருவீர்.*

## 23

பொன்னை விரும்பிய பொதுமாதர்
புன்மை விரும்பியெ தடுமாறும்
என்னை விரும்பிநி ஒருகால்நின்
எண்ணி விரும்பவு மருள்வாயே
மின்னை விரும்பிய சடையாளர்
மெய்யின் விரும்பிய குருநாதா
அன்னை விரும்பிய குறமானை
அண்மி விரும்பிய பெருமாளே.

## பதவுரை

*மின்னை விரும்பிய சடையாளர்- மின்னலை விரும்புகின்ற சடை முடியையுடைய தலைவராகிய சிவபெருமான், மெய்யின் விரும்பிய குருநாதா- உண்மையாக விரும்பிய குருமூர்த்தியே! அன்னை விரும்பிய - உலக மாதாவாகிய உமாதேவியார் விரும்புகின்ற, குறமாதை அண்மி விரும்பிய பெருமாளே- வள்ளியம்மையாரை நெருங்கி விரும்புகின்ற பெருமையின் மிக்கவரே! பொன்னை விரும்பிய - பணத்தையே விரும்புகின்ற பொதுமாதர்- பொதுமகளிரது, புன்மை விரும்பியெ தடுமாறும்- தாழ்மையான உறவை விரும்பி நின்று (பலகாலும்) தடுமாற்றத்தை யடைந்த, என்னை விரும்பி- அடியேனை விரும்பி, ஒருகால்- ஒருமுறையாவது, நின் எண்ணி விரும்பவும் நீ அருள்வாயே- உம்மையே நினைத்து அன்பு செய்யும்படி தேவரீர் அருள்புரிவீர்.*

## பொழிப்புரை

*மின்னை விரும்புகின்ற (சிவந்த) சடாபாரத்தையுடைய சிவபெருமான் உண்மையில் விரும்புகின்ற குருமூர்த்தியே! உலக மாதாவாகிய உமையம்மையார் விரும்புகின்ற வள்ளியம்மையை*

யடைந்து விரும்புகின்ற பெருமித முடையவரே! பொன்னையே விரும்புகின்ற பொதுமகளிரது இழிந்த உறவை விரும்பி உழல்கின்ற அடியேனை விரும்பி, ஒருமுறையாவது உம்மையே நினைத்துக் காதலிக்கத் தேவரீர் அருள்புரிவீர்.

## விரிவுரை

**பொன்னை விரும்பிய பொதுமாதர்:-**

பொது மகளிருக்குப் பொருட் பெண்டிர் என்றும் ஒரு பேருண்டு. பொன்னையே பெரிதும் விரும்புவார்கள். அவர்கள் எத்தனைக்கு எத்தனை அதிகம் பொன் தருவார்களோ அத்தனைக்கு அத்தனை நேயஞ்செய்வார்கள். பொன் தர முடியாதபோது அவர்கள் வெறுப்பார்கள். விளக்கு ஒளியும் வேசியர் நட்பும் இரண்டும் ஒன்று. அகலிலே உள்ள நெய்யைத் திரி கொண்டுபோய் எரிகின்ற விளக்கொளிக்குத் தருகின்றது. அதுபோல் வீட்டிலேயுள்ள பொன்னை ஒருவன் கொண்டுபோய் விலைமகளிருக்குத் தருகின்றான். நெய்யற்றவுடன் விளக்கொளி நின்றுவிடும். கையற்றவுடன் வேசி நட்பும் நின்றுவிடும்.

**விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டுந்**
**துளக்கற நாடின்வே றல்ல - விளக்கொளியும்**
**நெய்யற்ற கண்ணே அறுமே அவரன்புங்**
**கையற்ற கண்ணே அறும்.** *- நாலடியார்*

இராமர் மான் பின்னே போனபோது, அம் மான் நெடுந்தூரம் அவரை அலைக்கழித்தது. அந்த மானின் தன்மையைக் கூறவந்த கம்பநாடர் "பொதுமகளிர் மனம் போலே! அம் மான் மறைந்தது" என்கின்றார்.

**"நிதிவழி நேய நீட்டும்**
**மன்றலங் கோதை மாதர்**
**மனமெனச் சென்ற தம்மான்"**

**புன்மை விரும்பிய அடியேன்:-**

பொதுமகளிரது உறவு நன்மையான தன்று; புன்மை யானது. செல்வத்தை மட்டும் அழிக்காது; புகழையும் உடல் நலத்தையும் முத்தி நலத்தையும் அழிக்கும். "கதியை விலக்கு மாதர்கள்" என்கின்றார் மற்றொரு திருப்புகழில். "மை விழியார் மனையகல்" என்ற ஆத்திசூடியின் வாக்கும் கருதத்தக்கது. மிகவும் கொடுமை

*வாய்ந்த அம்மாதர் மயக்கத்தில் ஆழ்ந்தார் நரகில் வீழ்ந்தாரே யாவார்.*

"கண்டுமொழி பேசிமணங் கண்டுகொண்டு கைவிலையா
கொண்டுவிடு மானார்பொய்க் கூத்தொழிவ தெந்நாளோ" -

*தாயுமானார்.*

என்னை விரும்பி:-

*"ஐயனே! உன்னை விரும்பாது பொன்னை விரும்பிய பொது மகளிரை விரும்பித் தடுமாறும் அடியேனை நீ விரும்பியாட் கொள்ளவேண்டும். நான் உன்னை விரும்ப வில்லையானாலும் நீ என்னை விரும்பவேண்டும். தாயைச் சேய் விரும்பவில்லை யானாலும், சேயைத் தாய் விரும்புவாளன்றோ? சேயாகிய அடியேனைத் தாயாகிய நீ வெறுக்காது விரும்பியருள் செய்தல் வேண்டும்"*

என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்- புன்னை
விரகமகிழ் சோலை வியனாரையூர் முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான் *- நம்பியாண்டார் நம்பி*

ஒருகால் நின் எண்ணி விரும்பவும் அருள்வாயே:-

"ஒருமுறையாவது உன்னையே நினைத்து விரும்பி உய்ய
அருள்புரிவாய்"

"ஒருகால் முருகா பரமா குமரா உயிர்கா எனவோ தருள்தாராய்"

*- திருப்புகழ்*

*மாதராசையாகிய நோய்க்கு மருந்து ஞானபண்டிதனுடைய நினைவு. நெருப்பின் அருகில் சென்றார்க்குப் பனிவாடை யணுகாததுபோல், முருகனை இடையறாது நினைப்பார்க்கு மாதராசை யணுகாது.*

"மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டும்உனை
மறவா திருக்க வேண்டும்" *- திருஅருட்பா*

*"அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றபடி "உன்னை அடியேன் எண்ணவேண்டி நீ என்னை எண்ணு" என்கின்றார். இறைவனை இடையறாது எண்ணுதலே இன்ப நிட்டையாகும். பட்டினத்தடிகளும் காரைக்காலம்மையாரும் இறைவன்பால் மறவாமை வேண்டும் என்றே வரமிரந்தார்கள். இறைவனை*

மறவாமையால் பிறவாமையைப் பெறலாம்.

"எத்தான் மறவாதே நினைக்கின்றேன்" *சுந்தரர்*

"இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும்" *-அப்பர்*

"உன்னை மறந்திடுவேனோ " *- இராமலிங்கர்*

**மின்னை விரும்பிய சடையாளர்:-**

சிவபெருமானுடைய சடாபாரம் மின் வண்ணமாக விளங்கும். மின்னலைப் போன்ற நெளிவும் ஒளியும் உடையது. இறைவனுடைய அளப்பரிய பெருமைகளுள் ஒன்று சடையாகும். சடைமகுடமே மணிமகுடத்தை நிலைநிறுத்தும். அதனாலேயே, சடைமகுடமுடைய வசிட்டர் இராமருக்கு மணிமகுடஞ் சூட்டினார் என்று வரலாறு பேசுகின்றது. அகில வுலகங்களையும் சடைமுடியுடன் ஆளுகின்றவர் ஆதலின், "சடையாளர்" என்று கூறுகின்றார். இனி, சடைமுடி தனக்கென ஒன்றும் வேண்டாத தன்மையைத் தெரிவிக்கின்றது.

**மெய்யின் விரும்பிய குருநாதா:-**

உண்மைப் பொருளை உபதேசிக்குமாறு சிவபிரான் விரும்பிய குருநாதர். இதனால், சிவபெருமான் தந்தையாராக இருக்க மைந்தனாகிய கந்தனிடத்திலே நின்று உபதேசம் பெறுவது முறையோ? அது சிவபெருமானுடைய முழுமுதற் றன்மைக்கு இழுக்கன்றோ? என்றெல்லாம் பேசி இடர்ப்படுவாரும் உளர்.

சிவன் வேறு குகன் வேறு அன்று; "ஈசனே அவன்" என்பது கந்த புராணம். தனக்குத் தானே மகனாகித் தனக்குத் தானே உபதேசித்துக் கொண்டார் என உணர்க. முருகவேளை சிவனென்றே அறியாமையால் சூரபன்மன் தனது குலமும் திருவும் இழந்தான் என்ற கந்த புராணக் கருத்தைக் கருத்தில் இருத்துக. ஐம்முகச் சிவனும் அறுமுகச் சிவனும் ஒன்றேயென வுணர்க. சிவனுடைய தொல்லைவடிவு ஆறுமுக வடிவு என்பதை "தனது தொல்லைத் திருமுகம் ஆறுங்கொண்டான்" "ஆடலால் மதலையாயினன் காண்" "மணியிடைக் கதிர்வரு திறம்போல்" எனவரும் திருவாக்குகளால் இதனைத் தெளிக. முருகவேளைச் சிவம் என்றே எண்ணாமையால் சூரபன்மன் கேடுற்றான் என்பதை யறிந்தும் அவ்வண்ணம் உன்னியும் உரைத்தும் இடர்ப் படுகின்றார் பலர்.

காலமாய்க் கால மின்றிக் கருமமாய்க் கரும மின்றிக்
கோலமாய்க் கோல மின்றிக் குணங்களாய்க் குணங்க ளின்றி
ஞாலமாய் ஞால மின்றி யாநதியாய் நங்கட் கெல்லாம்
மூலமா யிருந்த வள்ளல் மூவிரு முகங்கொண் டுற்றான்.

*- கந்தபுராணம்*

அன்னை விரும்பிய குறமாதை:-

*அன்னை- உமையம்மையார்.*

எல்லா வுலகங்கட்கும் உயிர்கட்கும் அவளே அன்னை. ஏனைய அன்னையர் உடம்புக்கு வந்தவர்கள். இன்று நம்மைப் பெற்ற அன்னை, பின்னர் மாய்ந்து தான் ஓர் அன்னையை நாடிச் செல்லுவாள், ஆகவே, அகில உலக அன்னை அம்பிகையேயாகும்.

அகிலாண்ட கோடி யீன்ற
அன்னையே! பின்னையுங் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூப மயிலே" - *தாயுமானார்*

வள்ளியம்மையார் ஞானவல்லியாகும். "சுந்தரஞான மென்குறமாது", ஞான குறமாது" என்றமையாலறிக. உமையம்மையார் ஞானமேயாகும். ஆகவே, ஞானப் பூங்கோதையாகிய உமாதேவி ஞான குறமாதை விரும்புகின்றனர். ஞானத்தை ஞானம் விரும்புமன்றோ?

குறமாதை அண்மி விரும்பிய பெருமாளே:-

*அண்முதல்- பொருந்துதல்*

வள்ளி - ஞானம். முருகன் - ஆனந்தம். ஞானத்தை ஆனந்தம் விரும்பும். ஞானத்தின் பயன் இன்பம். முருகன் வள்ளியை விரும்புகின்றான் என்ற செய்தியைக் கூறும் இடங்களில் எல்லாம் இக்கருத்தையே உன்னுக. காமனை எரித்த கண்ணிலிருந்து ஞானச் சுடராய் வந்த எம்பிரான் ஒரு பெண்ணை விரும்பமாட்டான் என்பது யாவருக்கும் விளங்கக் கூடியதுதானே.

## கருத்துரை :—

சிவ குருநாதரே! வள்ளிமணாளரே! உம்மையே விரும்பி உய்யுமாறு என்னை விரும்பி அருள்புரிவீர்.

## 24

மனைமக்கள் சுற்ற மெனுமாயா
வலையைக்க டக்க அறியாதே
வினையிற்செ ருக்கி அடிநாயேன்
விழலுக்கி றைத்து விடலாமோ
சுனையைக்க லக்கி விளையாடு
சொருபக்கு றத்தி மணவாளா
தினநற்ச ரித்ர முளதேவர்
சிறைவெட்டி விட்ட பெருமாளே.

### பதவுரை

*சுனையை கலக்கி விளையாடும் - சுனை நீரைக் கலக்கி விளையாடல் புரிகின்ற, சொருப குறத்தி மணவாளா- அழகுமிக்க வள்ளியம்மையாருடைய கணவரே! தினம் நல் சரித்ரம் உள - நாளும் தவறாத நல்ல ஒழுக்கமுடைய, தேவர் சிறை வெட்டி விட்ட - தேவர்களுடைய சிறைத்தளையை அறுத்தெறிந்த, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! மனைமக்கள் சுற்றம் எனும் - மனைவி குழந்தைகள் உறவினர்கள் என்று சூழ்ந்துள்ள, மாயா வலையை கடக்க அறியாதே - மாயையாகிய வலையை அறுத்து எறிய அறிந்துகொள்ளாமல், அடிநாயேன் - நாய் போன்ற அடியேன், வினையில் செருக்கி - வினைவசத்தால் அகந்தை கொண்டு, விழலுக்கு இறைத்துவிடலாமோ? விழலாகிய புல்லுக்கு தண்ணீர் இறைப்பதுபோல் வீணாகலாமோ? (ஆகக்கூடாது).*

### பொழிப்புரை

*வள்ளிமலையிலே சுனை நீரில் நன்றாக முழுகி விளையாடு கின்ற குறமகளாகிய அழகிய வள்ளியம்மையாரது கணவரே! வழுவாத நல்ல ஒழுக்கமுடைய அமரர்களுடைய சிறைத் தளையை நீக்கியருளிய பெருமிதமுடையவரே! மனைவி, மக்கள், சுற்றத்தார் என்று சூழ்ந்துள்ளவர் மீது வைத்துள்ள பாசமாகிய மாய வலையை அறுத்து எறியாமல், அடியேன் வினை வாழ்வில் மயங்கி அகந்தை கொண்டு, விழல் புல்லுக்குத் தண்ணீர் இறைப்பதுபோல் பயனின்றி உழைத்து வீண் போகலாமோ? (போகக்கூடாது; அவ்வாறு போகாமல் அருள் செய்யும்)*

## விரிவுரை

**மனைமக்கள் சுற்றமெனு மாயாவலை:-**

*எண்ணில் கோடி உகங்களாக எண்ணில் கோடி பிறப்புக் களை மாறிமாறி எடுக்கின்ற ஆன்மாக்களுக்கு, ஒவ்வொரு பிறப்பிலும் மனைவி மக்கள் முதலியோர் மாறி மாறி வருகின்றார் கள். அந்தந்தப் பிறப்பில் அந்தந்த மனைவி மக்களுக்காக உழைத்து நல்வழியிலும் அல்வழியிலும் பொன்னையும் பொருளையும் ஈட்டி அவர்களுக்கு அவைகளைத் தந்து மாண்டொழிகின்றார்கள். என்ன மதியின்மை?*

"ஊரனந் தம்பெற்ற பேரனந் தம்சுற்றும்
உறவனந் தம்வினை யினால்
உடலனந் தம்செயும் வினையனந் தம்கருத்
தோஅனந்தம்" *-தாயுமானார்*

**வினையில் செருக்கி:-**

*நல்வினை தீவினையால் எய்தும் இவ்வுலக வாழ்வில் மயங்கி, அகந்தை கொள்ளுதல் கூடாது.*

*செருக்கு - அகந்தை*

"செருநர் செருக்கறுக்கும்" *- திருக்குறள்*

*நீர்க்குமிழிபோல் தோன்றிமறையும் இவ்வாழ்வு நிலை யில்லாதது.*

நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை *- திருக்குறள்*

*ஆகவே, அறிவுடையோர் அழிகின்ற வாழ்வைப் பெரி தென்று கருதாமல் அழியாத முருகவேளுடைய முத்தி யின்பத்தை நாடி அதற்குரிய வழிவகைகளை யுணர்ந்து, அதனை இப் பிறப்பிலேயே பெறுவதற்கு அதிதீவிரமாக முயலுதல்வேண்டும்.*

**விழலுக்கு இறைத்துவிடலாமோ:-**

*விழல் ஒருவகைப் புல். அது ஒன்றுக்கும் பயன்படாது. ஒருவன் பெரிய கிணறு வெட்ட பெரும் பொருள்கொடுத்து மாடு வாங்கி, நன்றாக உழுது, எருவிட்டு, இன்னும் உழவுக்கு வேண்டியன எல்லாஞ் செய்தான். நெற்பயிரை ஆக்கினான் இல்லை. அதில் விழல் என்ற புல் முளைக்க அப்புல்லுக்கு இரவும்*

பகலுந் தண்ணீர் இறைத்துவிட்டு ஏமாந்தான். அதுபோல், நன்செய் நிலம் போன்ற இம் மனிதப்பிறப்பை எடுத்து, கலை ஞானமாகிய எருவிட்டு, சிவஞானமாகிய நெற்பயிரை, அன்பு என்ற நீரைப் பாய்ச்சி வளர்க்காமல், பிறவிப்பயனையே மறந்து தீவினையாகிய புல்லை வளர்த்து மாந்தர் மடிகின்றனர்.

> அழலுக்குள் வெண்ணெய் எனவே உருகிப்பொன் அம்பலத்தார்
> நிழலுக்குள் நின்று தவமுஞற் றாமல்நிட் டூரமின்னார்
> குழலுக் கிசைந்த வகைமாலை கொண்டுகுற் றேவல்செய்து
> விழலுக்கு முத்துலை யிட்டிறைத் தேன்என் விதிவசமே
>
> *- பட்டினத்தார்*

**சுனையைக் கலக்கி விளையாடும் சொருபக் குறத்தி:-**

வள்ளியம்மையார் மான்வயிற்றில் தோன்றி, குறிஞ்சி நிலமக்களாகிய வேடர் தலைவனாகிய நம்பிராஜனிடம் வளர்ந்தனள். குறிஞ்சி நிலமாகிய வள்ளி மலையிலே தன் பாங்கியருடன் வளர்ந்தனள். இயற்கையாகிய மலையில் வானளாவிய சந்தன மரங்களும், அதற்கு இடையே பெரிய பெரிய தேன் கூடுகளும், அதனை உடைத்துக் கொண்டு ஓடிவரும் அருவிகளும், தேனாறும் வானாறும் பாய, விளங்கிய மலர்ச்செடிகளும், அங்கே வண்டினங்களின் இனிய கீதங்களும், மயிலினங்களின் ஆடல்களும், குயிலினங்களின் பாடல்களும், மந்திகளின் விகடங்களும், களிறும் பிடியும் கூடும் காதலின்பமும், மந்தமாருதமும் இப்படி இன்ப நிலையாக அந்தக் குறிஞ்சி காட்சி தருகின்றது. அதன் இடையில் வள்ளியம்மை முகிலினங்களுக்கு இடையே காட்டி மறையும் மின்னலைப்போல் வனைதற்கரிய அழகுடன் சுனையில் விளையாடி மகிழ்கின்றனள். அந்த அழகை அருணகிரிநாதர் நமது மனக்கண்ணின்முன் கொணர்ந்து காட்டுகின்றனர். அதனை நினைக்க உள்ளமும் உணர்வுங் குளிர்கின்றன. ஊனும் உயிரும் உருகுகின்றன.

இனி, இதன் உட்பொருள்:-

வள்ளியென்பது ஆன்மா; குறிஞ்சி நிலம் என்பது சஹஸ்ராரப் பெருவெளி. குறிஞ்சி நிலத்தில் தலைவனும் தலைவியும் கூடுவர். சஹஸ்ராரப் பெருவெளியில் ஆன்மா சிவத்துடன் கூடும்.

> "ஆனந்த மேலைவெளியே நீயின்றி நானின்றி
> நாடியினும் வேறுதானின்றி வாழ்கின்ற தொருநாளே"

*அங்கே சிவத்தின் கருணையாகிய சிவகங்கை தேங்கும். அச்சுனையில் ஆன்மா முழுகி மகிழும். பவநோயின் வெப்பத்தை அகற்றும். அது, சூரியநாடி சந்திரநாடி இரண்டுக்கும் இடையில் உள்ளது.*

"வானிந்து கதிரிலாத நாடண்டி"

*என்று அடிகள் பழநிமலைத் திருப்புகழில் கூறுகின்றனர்.*

*இன்றும் வள்ளிமலையில் 'சூரியன் காணாத சுனை' என்று ஒன்று உள்ளது; அது மிக மிகத் தட்பமாக இருக்கும்.*

"ஆனந்த அருவி பாய"

*என்கின்றார் அடிகளார்.*

*அதில் முழுகிய ஆன்மா அமலநிலையடைந்து அமரத்துவம் பெறும்.*

**தினநற் சரித்ரமுள தேவர்:-**

*சரித்ரம் - ஒழுக்கம்*

*ஒழுக்கம் உயிரினும் உயர்ந்தது. ஒழுக்கமில்லாதவன் எத்தனை உயர்ந்தவனாயினும் அவன் கீழ்மகனேயாவான். கல்வியைக் காட்டிலும் ஒழுக்கம் உயர்ந்தது. ஒழுக்கமில்லாத கல்விமான் கசடனேயாவான்.*

ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். - *திருக்குறள்*

"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை"
- *முதுமொழிக் காஞ்சி*

*பொறாமையுடையவனிடம் செல்வம் நிலை பெறாது; அதுபோல் ஒழுக்கமில்லாதவனிடம் உயர்வு இராதெனு அறிக.*

அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு.

*என்று கூறுகின்றார் தெள்ளுதமிழ் வல்ல வள்ளுவனாரும்.*

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

*என்ற திருக்குறளையும் உன்னுக.*

கல்வியின்பயன் அறிவு; அறிவின்பயன் ஒழுக்கம்

*தேவர்- ஒளியுடையவர்கள். ஒளியென்பது அறிவினால் மிளிர்வது.*

*யார் தேவர்?*

"ஆமுயிர் கொல்லா மேலோர் அறிவினை யறிந்த நல்லோர்
தீமனம் அடக்க வல்லோர் இவர்களே தேவ ராவார்"

**தேவர் சிறைவெட்டி விட்ட பெருமாளே:-**

*தேவர்களாகிய உயர்ந்த ஆன்மாக்களின் பாசமாகிய தளையை ஞானபண்டிதராகிய வேலுடைய விமலனார் விலக்கியருளுவர்.*

*சிறைக் கூட்டம் இந்த உடம்பு. இருவினையே விலங்கு.*

"அறம்பாவ மென்னும் அருங்கயிற் றால்கட்டி" - *திருவாசகம்.*

"ஏழையினி ரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருணி யாயக்காரனும் - *திருவகுப்பு*

*ஆணவம் க்ன்மம் மாயை என்ற மும்மலங்களாகிய சூரபன்மன் சிங்கமுகன் தாரகன் என்ற மூன்று அசுர வேந்தர்கள், சமம், தமம், உபரதி, திதிட்சை முதலிய நற்குணங்களாகிய தேவர்களை அடக்கிச் சிறை செய்ய, பரமபதியாகிய முருகவேள் ஞானமாகிய வேலினால் மும்மலங்களின் வலிமையையடக்கி, நற்குணங்களாகிய அமரர்களின் சிறையை மீட்டுத் திருவருள் புரிந்தனர் என்ற நுட்பத்தையும் இங்கு உய்யும் ஊழுடையார் உணர்க.*

## கருத்துரை :—

*வள்ளிமணவாளரே! தேவர் சிறை மீட்ட தேவ தேவரே! மனைமக்கள் மீதுள்ள பற்றையறுத்து, அவகதி செல்லாமல் சிவகதி பெற அருள்புரிவீர்.*

## 25

அடியார்ம னஞ்சலிக்க எவராகி லும்பழிக்க
அபராதம் வந்துகெட்ட பிணிமூடி
அனைவோரும் வந்துசிச்சி யெனநால்வ ருஞ்சிரிக்க
அனலோட ழன்றுசெத்து விடுமாபோல்

கடையேன்ம லங்கள்முற்று மிருநோயு டன்பிடித்த
கலியோடி றந்துசுத்த வெளியாகிக்
களிகூர என்றனுக்கு மயிலேறி வந்துமுத்தி
கதியேற அன்புவைத்து னருள்தாராய்

சடைமீது கங்கைவைத்து விடையேறு மெந்தைசுத்த
தழல்மேனி யன்சிரித்தொர் புரமூணும்
தவிடாக வந்தெதிர்த்த மதனாக முஞ்சிதைத்த
தழல்பார்வை யன்றளித்த குருநாதா

மிடிதீர அண்டருக்கு மயிலேறி வஞ்சர்கொட்டம்
வெளியாக வந்துநிர்த்த மருள்வோனே
மினனூல்ம ருங்குல்பொற்பு முலைமாதி ளங்குறத்தி
மிகுமாலொ டன்புவைத்த பெருமாளே

## பதவுரை

*சடைமீது கங்கைவைத்து* – சடைமுடியின்மிசை கங்காநதியை வைத்தவரும், *விடை ஏறும்எந்தை* – தருமவிடையின்மீது ஆரோகணிக்கும் எனது பிதாவும், *சுத்த தழல் மேனியன்* – தூய நெருப்புவண்ணமாய திருமேனியுடையவரும், *ஓர் புரம் மூணும் தவிடாக சிரித்து* – ஒப்பற்ற முப்புரங்களும் தவிடுபொடியாகுமாறு சிரித்தவரும், *வந்து எதிர்த்த மதன் ஆகமும் சிதைத்த தழல் பார்வை* – கயிலைமலையில் வந்து எதிர்த்த மன்மதனுடைய உயிரையும் உடம்பையும் கெடுமாறு செய்த நெருப்புப் பார்வையுடையவருமாகிய சிவபெருமான், *அன்று அளித்த குருநாதா*– அந்நாள் உலகம் உய்யத் தந்தருளிய குருமூர்த்தியே! *அண்டருக்கு மிடிதீர* – தேவர்களுக்கு வறுமை தீரவும், *வஞ்சர் கொட்டம் வெளியாக*– அரக்கருடைய இறுமாப்பு தொலையவும், *வந்து நிர்த்தம் அருள்வோனே* – கருணையுடன் எழுந்தருளிவந்து நடனஞ் செய்து அருளியவரே! *மினல் நூல் மருங்குல்* – மின்னலைப் போலவும் நூலைப் போலவும் மெல்லிய இடையும், *பொற்புமுலை* – அழகிய தனங்களையுமுடைய, *மாது இளம் குறத்தி* – அழகும் இளமையும் பொருந்திய வள்ளியம்மையாரிடம், *மிகு மாலொடு அன்பு வைத்த* – மிகுந்த காதலுடன் அன்புவைத்த, *பெருமாளே* – பெருமையில் மிக்கவரே! *அடியார் மனம் சலிக்க* – அடியவர்களது திருவுள்ளம் சலிக்கும்படி, எவராகிலும் *பழிக்க*– யாராவது பழிப்பாராயின், *அபராதம் வந்து கெட்ட பிணிமூடி* – அந்தக் குற்றத்தினால் கொடிய நோய் வந்து மூடிக்கொள்ள,

அனைவோரும் வந்து சிச்சி என நால்வரும் சிரிக்க- உலகில் உள்ளவர்கள் வந்து கண்டு "சீ! சீ!" என்று நாலுபேர் நகைக்க, அனலோடு அழன்று - வெம்மையால் கொதிப்புற்று, செத்து விடுமாபோல் - இறந்து படுவதுபோல், கடையேன் மலங்கள் முற்றும் - அடியார் குழுவில் கடைப்பட்டவனாகிய அடியேனு டைய மும்மலங்கள் யாவும், இரு நோயுடன் - இறப்பு பிறப்பு என்ற இரண்டு நோய்களும், பிடித்த கலியோடு இறந்து- என்னைப் பற்றியுள்ள வறுமைநோயும் அழிந்து, சுத்த வெளியாகி - ஒன்றுமில்லாத வெட்ட வெளியை யடைந்து, களி கூர- இன்பம் மிகுதியடைய, என்றனுக்கு மயில்ஏறி வந்து- அடியேன் முன் மயிலின்கண் எழுந்தருளி வந்து, முத்தி கதிஏற- வீடு பேறு ஆகிய பரகதி சென்று அடைய, அன்புவைத்து அருள்வாயே - அடிமைமீது அன்பு வைத்து திருவருள்புரிவீர்.

## பொழிப்புரை

சடாமகுடத்தின்கண் கங்காநதியை வைத்தவரும், தரும விடையின்மீது வருகின்றவரும், எனது பரம பிதாவும், தூய நெருப்பார் மேனியரும், ஒப்பற்ற முப்புரத்தைத் தவிடு பொடியாகச் சிரித்து எரித்தவரும், திருக்கைலாய மலையில் வந்து எதிர்த்த மன்மதனுடைய உயிரும் உடம்புங் கெடுமாறு செய்த அனல் பார்வையுடையவருமாகிய சிவபெருமான் பெற்றருளிய குருநாதரே! தேவர்கள் வறுமை தீரவும், அரக்கரது அகந்தை மாறவும் உருவாக வந்து போர்க்களத்தில் திருநடனம் புரிந்தவரே! மின்னலையும் நூலையும் நிகர்த்த மென்மையான இடையும், அழகிய தனமும், அழகும் இளமையும் உடைய வள்ளிப் பிராட்டியினிடம் மிகுந்த காதலுடன் அன்பு வைத்த பெருமிதம் உடையவரே! அடியார்களது திருவுள்ளம் சலிக்குமாறு யாராவது பழித்தாராயின், அக்குற்றத்தினால் பழித்தவர்கள் கொடிய நோய்வாய்ப்பட்டு உலகிலுள்ளோர் "சீ! சீ!" என்று இகழ்ந்து பழிக்கவும், நாலு பேர் நகைக்கவும் வெம்மையால் கொதிப்புற்று அழிந்து படுவதுபோல், சிறியேனுடைய மும்மலங்கள் முற்றும், இறப்பு பிறப்பு நோயும், என்னைப் பிடித்த வறுமையும் அழிந்து, தூய வெளியையடைந்து இன்பம் மிகுந்து அடியேன் மகிழ, மயிலின்மீது எழுந்தருளி வந்து அடிமையேன் முத்தி நலம்பெற அன்பு வைத்துத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை

அடியார்ம னஞ்சலிக்க எவராகி லும்பழிக்க
அபராதம் வந்துகெட்ட பிணிமூடி-
அனைவோரும் வந்துசிச்சி யெனநால்வ ருஞ்சிரிக்க
அனலோட முன்றுசெத்து விடுமாபோல்;

புவியரசர் போற்றுங் கவியரசர்கள் பலர் நம் நாட்டில் சீருடனும் சிறப்புடனும் வாழ்ந்தார்கள். அவர்கள் அறங்களை வற்புறுத்தி உலகிற்கு ஓதுவார்கள். நல்ல உவமான உவமேயங் களுடன் கூறுவார்கள். அவ்வாறு கூறும் உவமானம் சுவை யுடையதாக இருக்கும்.

உவமேயத்தினால் அறிவுக்கு நலன் ஏற்படுவதுபோல் உவமானத்தினாலும் நலன் ஏற்படும். உவமான உவமேயம் என்ற இரண்டும் பயன்படக்கூடிய முறையில் பேசுந்திறன் திருவள்ளுவர், சேக்கிழார், காளிதாசர், கம்பர் முதலிய சிலரிடமே அமைந் திருந்தது.

ஒருவருடைய முகத்தையறிவிக்க வேண்டும். "சந்திரனைப் போன்ற முகம்" என்று கூறலாம். இதில் சந்திரன் - உவமானம். முகம் - உவமேயம்.

இந்த உவமானத்தினால் சந்திரன் குளிர்ந்தவன். குளிர்ந்த முகம் என்பது மட்டும் புலனாகிறது. இது சிறந்த உவமானமாகாது. சந்திரன் குளிர்ந்தவன் என்பது உலக மறிந்தது. அதனால், நம் அறிவு வளர்ச்சிக்கு இடமில்லை. "அபகாரம் புரிந்தோர்க்கு உபகாரம் புரிபவனுடைய உள்ளம் போன்ற முகம்" என்பதனை நோக்குக. உவமானத்தினால் ஒரு சிறந்த அறம் வலியுறுத்தப் பெறுகின்றது.

"நல்ல இனத்தைச் சேர்ந்தவனுக்கு எல்லாக் காரியங்களும் இனிது முடியும்" என்று கூறவந்த திருவள்ளுவதேவர், அதற்கு உவமை, மனந்தூயார்க்கு நன்மக்கட்பேறு பிறப்பதைக் குறிப் பிடுகின்றார். அதனால், நன்மனம் படைத்தவர்க்கு உத்தமமான மக்கள் தோன்றுவர் என்ற இனிய கருத்து புலனாகின்றது.

மனந்தூயார்க்கு எச்சம்நன் றாகும் இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

இரவு காலம் எய்தியது; எங்கும் இருள் சூழ்ந்தது. அந்த இருள் எத்தன்மையது என்று தெய்வச் சேக்கிழார் கூறுமாறு

காண்க. பொதுமகளிரது உள்ளம் போலவும், வஞ்சனையாளர் வினை போலவும், பஞ்சாக்கரம் ஓதாதவர் உள்ளம் போலவும் இருண்டது என்கின்றார்.

பஞ்சின் மெல்லடிப் பாவைய ருள்ளமும்
வஞ்ச மாக்கள்தம் வல்வினை யும்அரன்
அஞ்செ ழுத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான்.

அனுமனால் அசோக வனத்தில் அரக்கர் அழிந்ததைக் கூற வந்த கம்பர், பொய்சாட்சி கூறும் புல்லர்களுடைய குலம் விரைவில் அழிவதுபோல் அநுமனால் அரக்கர் மாண்டனர் என்கின்றார்.

"புலந்தெரி பொய்க்கரி புகலும் புன்கணார்
குலங்களி னவிந்தனர் குரங்கினா லென்றார்"

அருட்பெரும் புலவராகிய அருணகிரிநாதர் தனது மலங்கள் விரைவில் தொலைவதற்கு ஓர் உவமையைக் கூற வந்தார். பரிதியைக் கண்ட பனிபோல், மாருதம் அறைந்த பஞ்சுபோல் என்று கூறினாரில்லை.

"அடியவரது உள்ளந் துன்புறப் பழிகூறிய பாவிகள், கொடிய பிணியினால் வேதனையுற்று உடல் அழுகி கண்டவர்கள் "சீ! சீ!" என்று வெறுத்து நகைக்க, அனல்போல் உடலும் உயிருங் கொதிப்புற்று விரைவில் மாள்வதுபோல், அடியேன் மலங்கள் மாய வேண்டும்" என்று கூறும் அழகும் திறமும் உன்னுந்தொறும் உன்னுந்தொறும் உள்ளத்தை உருக்குகின்றன.

அடியவரைப் பழித்தல் தப்ப முடியாத பாவம் என்பதனை நமக்கு அறிவித்தருளுகின்றனர்.

இறைவனை நிந்தித்தவரும் ஒருகால் உய்வுபெறுவர்; அடியவரை நிந்தித்தவர் எக்காலும் உய்வுபெறமாட்டார். கதிரவன் வெயிலில் நெடுநேரம் நிற்கலாம். கதிரவன் அருள் பெற்ற நொய்மணலில் சிறிது நேரங்கூட நிற்கமுடியாது.

நெடுங்காலமாக சிவநிந்தனை புரிந்த சமணர்கள் அடிய வராகிய ஞானசம்பந்தரை நிந்தித்தவுடனே அத்தனைப் பேரும் அழிந்துவிட்டனர்.

ஐந்து கோடி இருபத்தைந்து லக்ஷத்து முப்பத்தையாயிரம்

ஆண்டுகளாக திருமாலை நிந்தித்த இரணியன், அடியவராகிய பிரகலாதரை நிந்தித்தவுடனே மாண் டொழிந்தான்.

ஆதலின், அடியவர் மனஞ்சலிக்குமாறு நிந்திப்பது பெரிய பாவம் என அறிக. அப்பாவத்தினால் மிகவும் கொடிய நோய்கள் வந்து சேரும். பலரும் பழிப்பர். இம்மையில் பழியும், மறுமையில் பாவமும் நேரும் என்க. எனவே, அடியவர் நிந்தனை இம்மை மறுமை என்ற இரண்டிடத்தும் தீது ஆகும்.

**கடையேன் மலங்கள்:-**

அடியவர் குழாத்தில் கடைப்பட்டவன் என்பது பொருள். "அன்பினாலுன தடிபுகழடிமை" என்றும்,, "இருபதம் வழிபடு குதலை யடியவன்" என்றும் அடிகளார் வேறு திருப்புகழ்களில் கூறியிருப்பதனால் அறிக. "வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன்" என்பார் வடலூர் வள்ளலாரும்.

மலங்கள் ஆணவம், கன்மம், மாயை. ஆணவமலம்- மூல மலம். கன்மமும் மாயையும் இடையில் வந்தவை; ஆகந்துக மலங்கள். ஆக மும்மலங்களும் தொலைய வேண்டும்.

**இரு நோய்:-**

பிறப்பு, இறப்பு என்ற இரண்டும் தீராத வியாதிகள். அஞ்சத் தக்க நோய்கள் இவை. "பிறப்பினோ டிறப்புமஞ்சேன்" என்ற திருவாசகத் திருவாக்கினால் அறிக.

இந்த நோய்க்கு மருத்துவர் முருகக்கடவுளேயாகும். "பவரோக வயித்தியநாதப் பெருமாளே" என்று திருத்தணித் திருப்புகழில் குறிப்பிடுகின்றனர்.

**பிடித்த கலி:-**

கலி- வறுமை.

வறுமையாகிய சிறுமை மிகவும் கொடியது. அதனால், ஔவையாரும் "கொடிது கொடிது வறுமை கொடிது" என்று முருகவேளிடம் மொழிந்தனர். "வறுமையான சிறுமை தப்பி" என்பது சிவஞான சித்தியார். "இன்மையென ஒருபாவி" என்பர் வள்ளுவர். "மிடியென் றொருபாவி" என்று வெறுத்துரைத்தது கந்தரநுபூதி. "சிறிது மிடியுமணுகாதே" என்கின்றார் பழநித் திருப்புகழில்.

**சுத்த வெளியாகி:-**

*சுத்தவெளி என்பது எல்லாம் அற்ற தனிநிலை யென்க. கருவி கரணங்களின் சேர்க்கை அங்கு இல்லை. "எல்லாமற என்னை யிழந்த நலம்" என்ற இடம் அது. "வெளிக்குள் வெளி கடந்து சும்மா இருக்கும் சுகம்" என்ற திருவாக்கையும் உன்னுக.*

"அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வா!முக மாறுடைத் தேசிகனே!"

*என்ற கந்தரலங்காரத் திருவாக்கின் அனுபவ ஆனந்த உட்பொருளை ஊன்றியுணர்க.*

*(கந்தரலங்கார உரையில் இதற்கு விரிவாக விளக்கம் தந்துளேன். அன்பர்கள் கந்தரலங்கார உரையைப் படித்து உணர்க.)*

**முத்திகதியேற அன்புவைத்து னருள்தாராய்:-**

*முத்தி- பந்தத்தினின்றும் விடுபடுதல். கதி-சிவகதி. பந்தத்தினின்றும் விடுபட்ட ஆன்மா சிவமாந்தன்மையை எய்தும். பசுத்தன்மை நீங்கிச் சிவத்தன்மை பெறுவதே சிவகதி என அறிக. அவ்வாறு "அடிமை சித்த மல மறுத்துச் சிவமாம் பெற்றிபெற தேவரீர் அன்புவைத்து அருள்புரிவீர்" என்று அடிகள் வேண்டுகின்றனர்.*

**சடைமீது கங்கை வைத்து:-**

*இமயவல்லி இறைவரது திருக்கண் புதைத்தபோது அகில உலகங்களும் இருண்டுவிட்டன. அதுகண்ட அம்மையார் அஞ்சினார். அதுகாலை, அம்மையின் கைவிரல்களில் இருந்து கங்கை தோன்றியது. அவ் வெள்ளப்பெருக்கு உலகங்களை யழிக்குமென்று கருதிய கருணைக் கடலாகிய கண்ணுதற்கடவுள், அக்கங்கையாற்றினைச் சடைமிசை யேற்று அருள்புரிந்தனர்.*

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தா லவன்சடையில் பாயுமது என்னேடீ
சலமுகத்தா லவன்சடையிற் பாய்ந்திலளேல் தரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ

*- திருவாசகம்*

**விடையேறு மெந்தை:-**

*உலகமெல்லாம் அழிந்த காலத்து அறம் மட்டும் அழியாது*

விடைவடிவாகி இறைவர்பால் சென்றது. ஈறில்லாத ஈசர், அத் தரும விடையின்மீது ஆரோகணித்தருளினார்.

முப்புரம் எரித்தபோது தேரின் அச்சு முறிந்த சமயம் திருமால் விடையாகச் சடையப்பரைத் தாங்கினார். அது மால் விடையெனப்படும்.

"தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ"

-திருவாசகம்

**சுத்த தழல் மேனியன்:-**

இறைவர் அடியவர் பொருட்டு அருளுருத் தாங்குவர். அது நம்முடைய உடம்புபோல் ஏழு தாதுக்களாலாய அசுத்த தேகமன்று. திருவருளே இறைவரது வடிவாம். தூய உடம்பு. நெருப்பு தூய்மையானது. தன்னையடைந்த பொருள்களை யெல்லாந் தூய்மை செய்யும். நாமறிந்த பொருள்களில் தூய்மை யானது நெருப்பு. அதனால், உவமையில்லாத இறைவருடைய திருமேனிக்கு நெருப்பை உவமையாகக் கூறுவது மரபு.

**சிரித்தோர் புரமூணும் தவிடாக:-**

எவராலும் அழிக்கமுடியாத ஆற்றல் படைத்த முப்புரத்தை இறைவர் அநாயாசமாக சிரித்து எரித்தனர். அதனால், அவருடைய பேராற்றலுடைமை வெளியாகின்றது.

**வந்தெதிர்த்த மதனாமுகஞ் சிதைத்த தழல்பார்வை:-**

உலகங்களிலேயுள்ள எத்திறத்தவர்களையும் வென்றவனும், மாலயனாதி வானவரையும் மயக்கியவனுமாகிய மன்மதனைப் பரமர் பார்வையால் சாம்பராக்கிவிட்டனர்.

நெற்றிக்கண்ணிலிருந்து வந்த சிறிய அனற்பொறி மதனனை எரித்தது. அதே நெற்றிக்கண்ணினின்றும் வந்த அனற்பொறியே முருகவேள். நிக்ரகம் அநுக்ரகம் இரண்டையும் இறைவருடைய நெற்றிக்கண் நிகழ்த்தியது.

பிறவியைக் கொடுப்பவன் கருவேள்
பிறவியைக் கெடுப்பவர் செவ்வேள்
மாயையைத் தருபவன் கருவேள்
மாயையை அகற்றுபவர் செவ்வேள்

ஊன மயமானவன் கருவேள்
ஞான மயமானவர் செவ்வேள்

இறைவர் கருவேளை நீக்கிச் செவ்வேளை ஆக்கினார்.

**மிடிதீர அண்டருக்கு:-**

தேவர்களது நகரை அழித்துச் சூரபன்மன் அவர்களைப் பலகாலுந் துன்புறுத்தினான். அதனால், வானவர் வறுமையுற்று மலைகளிலும், வனங்களிலும், சிறையிலும் இருந்து வாடி வருந்தினர். சூராதியவுணரை மாய்த்துக் குமரவேள் அமரருக்கு பொன்னுலகீந்து வாழ்வித்தருளினார்.

**வஞ்சர் கோட்டம் வெளியாக வந்து நிர்த்த மருள்வோனே:-**

சூரபன்மன் பலப்பல மாய வடிவங்களைக் கொண்டு அமரடினான். கந்தவேள் அத்தனை மாய வடிவங்களையும் மாயச் செய்து, தமது ஞான வடிவினைக் காட்டி, மிகப்பெரிய பரமேசுரத்திருமேனி கொண்டு மாலயனாதி வானவரும் விம்மித மடையத் திருநடனம் புரிந்தருளினார்.

"புண்டரிக ரண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கியெழ வெங்களங் கொண்டபோது
பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கினும்வ ளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூரக்
கொண்டநட னம்"
- திருப்புகழ்

**மினனூல் மருங்குல் பொற்பு முலைமாது:-**

வள்ளியம்மையார் ஞானவல்லி என அறிக. இடை- அறியாமை. ஞானம் ஓங்கியபோது அறியாமை தேய்ந்துவிடும். இரு தனங்களும் பர ஞானம் அபர ஞானம் என அறிக. அந்த ஞானத்தின்மீது ஞானபண்டிதன் காதல்கொள்கின்றான் என்பது கருத்து.

## கருத்துரை

சிவகுமாரரே! நடனமூர்த்தியே! வள்ளிமணவாளரே! அடியவரை நிந்தித்தவர் விரைவில் அழிவதுபோல், அடியேனுடைய மல கன்மங்கள் அழிந்து உய்ய அருள்புரிவீர்.

## 26

ஆசைகூர் பத்த னேன்மனோ பத்ம
மானபூ வைத்து நடுவேயன்
பானநூ லிட்டு நாவிலே சித்ர
மாகவே கட்டி யொருஞான

வாசம்வீ சிப்ர காசியா நிற்ப
மாசிலோர் புத்தி யளிபாட
மாத்ருகா புஷ்ப மாலைகோ லப்ர
வாளபா தத்தி லணிவேனோ

மூசுகா னத்து மீதுவாழ் முத்த
மூரல்வே டிச்சி தனபாரா
மூழ்குநீ பப்ர தாபமார் பத்த
மூரிவே ழத்தின் மயில்வாழ்வே

வீசுமீ னப்ப யோதிவாய் விட்டு
வேகவே தித்து வருமாசூர்
வீழமோ திப்ப ராரைநா கத்து
வீரவேல் தொட்ட பெருமாளே.

### பதவுரை

*மூசு கானத்து மீதுவாழ்* - வண்டுகள் மொய்க்கின்ற கானகத்தின்கண் வாழ்கின்றவரும், *முத்த மூரல்* - முத்துப்போன்ற பல்வரிசையுடையவரும், *வேடிச்சி* - வேடர் குலத்து உதித்தவரு மாகிய வள்ளியம்மையாரது, *தனபார மூழ்கு* - சிறந்த தனங்களில் முழுகுகின்ற, *நீப ப்ரதாப மார்ப அத்த* - கடப்பமலரும் வீரமும் பொருந்திய திருமார்பையுடைய தலைவரே! *மூரிவேழத்தின் மயில் வாழ்வே* - பெருமை மிக்க யானையினால் வளர்த்த மயில் போன்ற தெய்வயானையம்மையாரது வாழ்வாக விளங்குபவரே! *வீசு மீனபயோதி* - மீன்களை அலைகளால் வீசியெறிகின்ற கடல், *வாய்விட்டு வேக வேதித்து* - வாய்விட்டுக் கதறிக் கொதிப்புற்று நலியுமாறு செய்து, *வருமாசூர் வீழ மோதி* - சேனையுடன் வருகின்ற பெரிய சூராதியவுணர்கள் மாண்டுவிழத் தாக்கிப் போர் செய்து, *பராரை நாகத்து* - பருத்த அடியையுடைய மலையின்மீது, *வீரவேல் தொட்ட* - வீரம் பொருந்திய வேலாயுதத்தை விடுத்தருளிய, *பெருமாளே* - பெருமையின் மிக்கவரே! *ஆசைகூர் பத்தனேன்* -ஆசை மிகுந்த அடியேனுடைய, *மனோ பத்மம்*

ஆன பூ நடுவே வைத்து - மனமாகிய தாமரைப் பூவை (மாலையின்) நடுவில் குஞ்சம்போல் வைத்து, அன்பு ஆன நூல் இட்டு - அன்பு என்ற நூலைக் கொண்டு, நாவிலே சித்ரம் ஆகவே கட்டி - நாவினிடத்திலே அழகாகத் தொடுத்து, ஒரு ஞான வாசம் வீசி ப்ரகாசியா நிற்ப- ஒப்பற்ற ஞானமாகிய வாசனை வீசி ஒளிசெய்ய, மாசுஇல் ஒரு புத்தி அளிபாட - குற்றம் இல்லாத ஒருமைப்பட்ட அறிவு என்ற வண்டு ஒலி செய்ய, மாத்ருகா புஷ்பமாலை - மாத்ருகா மந்திரமாகிய மலர் மாலையை, கோல ப்ரவாள பாதத்தில் அணிவேனோ - அழகிய பவளம் போன்ற திருவடியில் அடியேன் சூட்டுவேனோ?

## பொழிப்புரை

வண்டுகள் மொய்த்து உலாவும் வனத்தில் வாழ்கின்ற வரும், முத்துப் போன்ற பல்வரிசையுடையவரும் ஆகிய வள்ளிப் பிராட்டியின் தனங்களில் முழுகுகின்ற கடப்ப மாலையும் வீரமும் பொருந்திய திருமார்பையுடைய தலைவரே! பெருமை மிக்க தெய்வயானையம்மையாரது கணவரே! மீன்கள் உலாவும் கடல் வாய்விட்டுக் கொதிக்கும்படி செய்து படையுடன் வருகின்ற சூராதியவுணர்கள் மாய்ந்துவிழப் போர்புரிந்து, பரும் அடியை யுடைய மலையின் மீது வீரவேலைத் தொடுத்த பெருமிதம் உடையவரே! ஆசை மிகுந்த பத்தனாகிய அடியேனுடைய மனமாகிய தாமரைப்பூவை நடுவே வைத்து, அன்பு என்ற நூலினால் நாவினிடத்தே அழகாகத் தொடுத்து, ஒப்பற்ற ஞானமாகிய வாசனை வீசி ஒளிசெய்து விளங்க, குற்றமில்லாத புத்தியாகிய வண்டு ஒலிசெய்ய, மாத்ருகா மந்திரமாகிய பூமாலையைத் தேவரீரது அழகிய பவளம் போன்ற திருவடியில் சூட்டுவேனோ?

## விரிவுரை

**ஆசைகூர் பத்தனேன்:-**

கூர்தல் - மிகுதல். இறைவனிடத்திலே ஆசைமிகுதல்; ஆசையை ஒழித்தவரே பெரியோராவார்.

> "ஆசையறு மின்கள் ஆசையறு மின்கள்
> ஈசனோ டாயினும் ஆசையறு மின்கள்"

என்பார் திருமூலர்.

ஆசைகூர்பத்தன் என்கின்றார் அடிகளார். ஆசையென்பது

*கொடியது. அது பிறவியைத் தருவது. ஆசையால் அழிந்தோர் பலர். ஆசையால் அழிகின்றவர் பலர். ஆசை அற்றவரே ஆன்றோ ராவார்.*

*ஆசை என்பது கொடிதுதான். ஆனால், அது தன் பொருட்டு என்ற போதுதான் கொடியதாகும். பிறர் பொருட்டு ஆசைப் படுவது தவறாகாது. ஏழைகளின் துன்பத்தைப் பார்த்து இரக்க முற்று "அந்தோ! இந்த உயிர்கள் எல்லாம் பசியாறி இன்பமுற மாட்டாவோ? இந்த நாட்டில் உள்ள பயிர்கள் செழித்து உயிர்கள் இனிது வாழவேண்டும்; எல்லாரும் அறநெறி நின்று சன்மார்க்க சீலர்களாக வேண்டும்" என்று இதுபோல் பிறர்பொருட்டு ஆசைப் படுவது. இது ஆசைதான், ஆனால், இந்த ஆசை பிழையாகாது. பிறவியைத் தராது.*

*இச்சை யென்றாலும் ஆசை யென்றாலும் ஒன்றுதான். தாயுமானார் இச்சைப்படுகின்றார். தன்பொருட்டன்று.*

"கொல்லா விரதங் குவலயம்எல் லாம்ஓங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் இச்சை பராபரமே"

*வள்ளலார் இச்சைப்படுகின்றார்:*

"சிற்சபை நடமும் பொற்சபை நடமுந்
தினந்தொறும் பாடிநின் றாடித்
தெற்சபை யுலகத் துயிர்க்கெலாம் இன்பஞ்
செய்வதென் இச்சையாம் எந்தாய்"

"இருநிலத் தோங்கிக் களிக்கவும் பிறருக்
கிடுக்கணுற் றாலவை தவிர்த்தே
திருமணிப் பொதுவில் அன்புடை யவராய்ச்
செய்யவும் இச்சைகாண் எந்தாய்"

கருணையே வடியாய் பிறர்களுக் கடுத்த
கடுந்துய ரச்சமா திகளைத்
தருணநின் னருளால் தவிர்த்தவர்க் கின்பந்
தரவும்வன் புலைகொலை யிரண்டும்
ஒருவிய நெறியில் உலகெலா நடக்க
உஞற்றவும் அம்பலந் தனிலே
மருவிய புகழை வழுத்தவும் நின்னை
வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்.

மண்ணுல கதிலே உயிர்கள்தாம் வருந்தும்
வருத்தத்தை ஒருசிறி தெனினும்
கண்ணுறப் பார்த்துஞ் செவியுறக் கேட்டும்
கணமுநான் சகித்திட மாட்டேன்
எண்ணுறும் எனக்கே நின்னருள் வலத்தால்
இசைத்தபோ திசைத்தபோ தெல்லாம்
நண்ணுமவ் வருத்தந் தவிர்க்கநல் வரந்தான்
நல்குதல் எனக்கிச்சை யெந்தாய்.

அருணகிரிநாதர் "ஆசைகூர்பத்தன்" என்று கூறியது இந்த ஆசைதான். தன்பொருட்டன்று; உலகமெல்லாம் முருகன் புகழ் ஓதவேண்டும், யாண்டும் அறநெறி பரவ வேண்டும் என்ற ஆசையேயாகும்.

"எனதுயானும் வேறாக எவரும்யாதும் யானாகும்
இதயபாவ னாதீதம் அருள்வாயே"

என்று விண்ணப்பித்து வேலவன்பால் அவ்வரம் பெற்ற பெரியவர் அன்றோ அவர்.

"வளமொடு செந்தமி ழுரைசெய அன்பரு
மகிழவ ரங்களும் அருள்வாயே"

"பலகாலு முனைத்தொழு வோர்கள்
மறவாமல் திருப்புகழ் கூறி
படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே"

என்று வரம் உலகின் பொருட்டு வேண்டுகின்றார்.

**மனோபத்மமான பூ வைத்து நடுவே:-**

அடிகளார் அறுமுகப் பரமனுடைய அடிமலருக்கு ஒரு மாலை தொடுத்துப் புனையக் கருதுகின்றார். பூ மாலை வாடுந்தன்மையுடையது. ஆதலின், வாடாத தன்மையும் மென்மையும் உடைய மந்திர மலர்மாலை சூட்டத் துணிந்தார்.

மலர்மாலைக்கு இடையே குஞ்சம் ஒன்று தொங்க வேண்டும். அதுதான் மாலையை அழகுபடுத்தும். அது பெரிய ஒரு பூங்கொத்தாக அமைந்திருக்கும்.

அடிகளார் தொடுக்கும் மந்திர மலர் மாலைக்கு இடையே **மனம்** என்ற தாமரைப் பூவைக் குஞ்சமாகக் கட்டித் தொங்கவிடுகின்றார்.

மனமே பந்தத்திற்கும் முத்திக்குங் காரணமாகும். தண்ணீரே மனிதனை வாழ்விக்கின்றது. தண்ணீரே மனிதனைக் கொல்கின்றது. மனதை ஆண்டவன் திருவடியில் சேர்த்துவிடுவதே துன்ப நீக்கத்திற்குச் சிறந்த சாதனமாகும். அதுவே எளிய வழியுமாகும். "அவனடியில் சாத்துமனம் நற்பூசனை" என்ற திரு வாக்கையும் உன்னுக.

காற்றுங் கறங்கும்போல் சதா இடையறாது ஓடி ஓடி உழல்வதுவே மனத்தின் இயல்பு. அதனால், எண்ணில்லாத இடர்கள் எய்துகின்றன. ஆதலின், அம் மனதை இறைவன் திருவடியில் சேர்த்துவிட்டால் இன்பம் பயக்கும்.

**அன்பான நூலிட்டு:-**

மந்திர மலர்களைத் தொடுப்பதற்கு நூல் வேண்டுமல்லவா? அன்பு என்ற நூலினால் அழகுற மந்திர மலர்களைத் தொடுக்க வேண்டும். அன்பு ஒன்றுடன் ஒன்றை இணைத்துவைக்கும் இயல்புடையது. இறைவனுடன் ஆன்மாவை ஒன்றுபடுத்துவதும் அன்பேயாகும். "சகாதேவன் கண்ணபிரானை அன்பு என்ற கயிற்றினால் உள்ளமாகிய மண்டபத்தில் உறுதியாகிய தூணில் கட்டினான்" என்ற வரலாற்றையும் சிந்திக்க.

**நாவிலே சித்ரமாகவே கட்டி:-**

அத் திருமாலையைக் கட்டுவதற்குரிய இடம் எது? அதற்குரிய சிறந்த இடம் நாவேயாகும். வேறு எந்த உயிர்களுக்கும் அமையாத சிறப்பு மனிதனுடைய நாவுக்கு அமைந்துள்ளது. நன்கு பேசுந்தகைமையுடன் கூடிய நாவை இறைவர் நமக்குத் தந்துளார். அந்த நாவிலே பரமனுடைய திருநாமங்களை அன்புடன் நவில வேண்டும்.

"கற்றுக் கொள்வன வாயுள நாவுள"

என்று அப்பரும்,

"நாமேல் நடவீர் நடவீர் இனியே"

என்று அநுபூதியில் அருணகிரியாரும் கூறுமாறு காண்க.

நாவினால் இறைவனுடைய நாமங்களை நவில்பவர் எல்லா நலன்களையும் பெறுவர். அல்லாதவர் அவமே யழிவர்.

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேஇரை தேடி அலமந்து
காக்கைக் கேஇரை யாகக் கழிவரே -அப்பரடிகள்

நாவுக்கு முதலிடந்தந்து மணிவாசகர் கூறுமாறுங் காண்க.

"கூறும் நாவே முதலாகக்
கூறுங் கரணம் எல்லாம்நீ"

ஒரு ஞான வாசம் வீசி:-

இம் மந்திரப் பூமாலையில் ஒப்பற்ற மெய்ஞ்ஞான மாகிய நறுமணங் கமழ்கின்றது. மற்ற மணம் சிலநேரமே கமழும். ஞான மணம் எப்போதும் இடையறாது கமழும்; மணம் கண்களுக்குத் தோன்றாது மென்மையாக வீசும் இயல்புடையது. ஞானம் அத்தன்மையது. ஞானம் மிகவும் நுண்மையானது. "கூர்த்த மெய்ஞ் ஞானம்" என்பது சிவபுராணம். ஞான வாசனை எவ்வுலகினும் பரிமளிக்கத் தக்கது.

மாசிலோர் புத்தி அளிபாட:-

ஞான மணங்கமழும் இம்மந்திரமலர் மாலையில் துளிக்கும் அருள் தேனைப் பருக புத்தி என்ற வண்டு வந்து மொய்த்து இனிய நாதத்துடன் ஒலிக்கின்றது. மலரிலேயுள்ள மதுவைப் பிரித்து எடுத்து அருந்தும் அறிவும் ஆற்றலும் வண்டுக்கேயுண்டு. வண்டினாலேயே இனிய தேன் கிடைக்கின்றது. புத்திக்கு வண்டு உவமையாயது. புத்தியே எல்லா நூல்களிலிருந்தும் உயர்ந்த தத்துவங்களாகிய தேனைப் பிடித்து உணரும். "புத்திமான் பலவான்" என்ற பழமொழியும் கருதத்தக்கது. புத்திமான் எங்கும் எச்சபையிலும் நடுநாயகமாக வீற்றிருப்பான். புத்திகாரகன் புத பகவான். ஏழுநாள்களின் தலைவர்களாகிய ஏழு கிரகங்களின் நடுவில் புதன் அமைந்திருப்பதை உன்னுக.

இறைவனும் புத்தியில் உறைகின்றான் என்று அருணகிரியார் முதல் பாடலில் கூறுகின்றனர். "கற்றிடுமடியவர் புத்தியில் உறைபவ"

இங்கே கூறிய புத்தி என்பது அந்தக்கரணங்களுள் ஒன்றான புத்தியன்று.

**மாத்ருகா புஷ்ப மாலை:-**

ஆறு ஆதாரங்களிலும் அகாராதி க்ஷகாராந்தமாக ஐம்பத்தொரு அட்சரங்கள் அடங்கியிருக்கின்றன. இந்த அட்சரங்களை மாத்ருகா மந்திரம் என்றும், மாலா மந்திரம் என்றும் கூறுவர். இந்த மாத்ருகா மந்திரங்களை மலர்களாகத் தொடுத்து மாலை புனைய வேண்டும் என்கின்றனர்.

இந்த மாத்ருகா மந்திரங்கள் ஐம்பத்தொன்றின் பரிணாமமே கந்தரநுபூதி என்க. ஐம்பத்தொரு பாடல்களால் அது அமைந்திருப்பதை ஓர்க. "செஞ்சொல் புனைமாலை சிறந்திடவே" என்று காப்புச் செய்யுளில் அடிகள் கூறுகின்றனர்.

**கோலப்ரவாளபாதத்தில் அணிவேனோ?:-**

கோலம் – அழகு. ப்ரவாளம் – பவளம். அழகிய பவளம்போல் சிவந்த திருவடிகளில் மேற்கூறிய மந்திர மலர் மாலையைச் சூட்ட வேண்டும்.

இப்பாடலை இறைவனை வழிபடுகின்றவர்கள் பூமாலை சூட்டும்போது உள்ளம் உருகி ஓதவேண்டும்.

**மூசு கானத்து மீதுவாழ்:-**

மூசுதல் – மொய்த்தல், அவாய்நிலையாக வண்டையுணர்த்துகின்றது. கானகத்தில் உள்ள மலர்களின் தேனையருந்த வண்டுகள் வந்து மொய்க்கின்றன. கானகம் என்பது தவத்தின் குழு; அங்கே துளிப்பது திருவருளாகிய தேன். அதனைப் பருக உயிர்களாகிய வண்டுகள் மொய்க்கின்றன என்பது குறிப்பு.

**முத்த மூரல்:-**

வள்ளியம்மையாரது பற்கள் முத்துக்களைக் கோத்ததுபோல் வரிசையாகவும் வெண்மையாகவும் அழகாகவும் விளங்குகின்றன. பெண்களுக்குப் பல்லழகும், அதனால் சொல்லழகும் சிறப்புறுகின்றன. "முத்தைத்தரு பத்தித் திருநகை" என்று முதல் பாசுரத்தில் குறிப்பிடுவது காண்க.

**வேடிச்சி :-**

வேடர்குலஞ் செய்த தவத்தினால் ஞானாம்பிகை யாகிய வள்ளிப்பிராட்டி, அவர்கள்பால் வளர்ந்தனர். மலையில் ஆதிகுடிகளாக நெடிது காலமாக வாழ்கின்ற தமிழ்க் குடிகள் வேடர்கள்.

அவர்கள் பெயர்கள் அத்தனையும் தூய தமிழால் அமைந் திருப்பவை மகிழ்ச்சிக்கு உரியவை.

நம்பி, கொடிச்சி, வள்ளி.

உடுப்பூரில் வாழ்ந்த வேடர் தலைவன் நாகன்; அவன் மனைவி தத்தை. அவர்கட்குப் பிறந்த புதல்வர் திண்ணன்; அமைச்சர்கள் நாணன், காடன்.

தமிழ்க் கடவுளும் குறிஞ்சிக் கிழவனுமாகிய முருகவேள் தமிழ்க்குடியிற் பிறந்த தமிழணங்காகிய வள்ளிநாயகியைத் தமிழ் முறைப்படி களவியலில் மணந்துகொண்டார். களவியலுக்கு இலக்கியமாக வள்ளியம்மையாரையும், கற்பியலுக்கு இலக்கியமாக தெய்வகுஞ்சரியம்மையாரையும் திருமணம் புரிந்து, உலகிற்கு இரு இயல்புகளையும் இறைவர் அறிவுறுத்தினார் என்க.

**தனபார மூழ்கு நீபப்ரதாப:-**

வள்ளிப்பிராட்டி, ஞானமடந்தை. பரஞானம் அபரஞானம் என்ற இரு ஞானங்களே இருதனங்கள் என்க. ஞானபண்டிதன் இருஞானங்களில் முழுகுகின்றான் என்று உணர்க.

**மூரிவேழத்தின் மயில்வாழ்வே:-**

மூரி – பெருமை. வேழத்தின் மயில் –ஐராவத யானையினால் வளர்க்கப்பட்ட தெய்வயானையம்மையார்.

தெய்வயானை யம்மையார் கிரியாசக்தி. உலகமெல்லாந் தொழில்படுவதற்காக முருகவேள் தெய்வயானையம்மையாருடன் எப்போதும் பிரியாது உறைகின்றார்.

"நவமாமணி வடமும் பூத்த
தனமாதெனும் இபமின் சேர்க்கை
நழுவாவகை பிரியங் காட்டு முருகோனே"

- *திருப்புகழ்*

**வீசுமீனப் பயோதி வாய்விட்டு வேக:-**

பெரிய அலைகளால் மீனங்களைக் கரையில் வீசுகின்ற கடல், அனல்பட்டு கொதிப்புறுமாறு வேலை வேலவர் விடுத்தருளினார்.

"வேலை வற்றி வறண்டு சுறீல் சுறீலென"

நூறு கோடி சூரியப்ரகாசமாக வேலாயுதம் கடலுக்கு அருகில் சென்றபோது கடல் ஓ வென்று வாய்விட்டுக் கதறியது.

பராரை நாகத்து வீரவேல் தொட்ட:-

*பரு அரை என்பது பராரை என்று புணர்ந்தது. பெரிய அடியையுடைய மலை; நாகம் – மலை.*

"இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து" - *திருமுருகாற்றுப்படை*

## கருத்துரை

*வள்ளி மணவாளரே! சூரன், கடல், மலைமீது வேல்விட்ட வீரமூர்த்தியே! மனமாகிய பூவை நடுவில் வைத்து, அன்பாகிய நூலினால், ஐம்பத்தொரு மாத்ருகா மந்திரங்களைப் பூவாகக் கொண்டு நாவினிடத்திலே தொடுத்து, ஞானவாசனை வீசவும், புத்தியாகிய வண்டு பாடவும், உமது திருவடியில் அம்மந்திர மலர்மாலையைச் சூட்ட அருள்புரிவீர்.*

## 27

இருநோய்ம லத்தைசிவ வொளியால்மி ரட்டியெனை
இனிதாவ ழைத்தெனது முடிமேலே
இணைதாள ளித்துனது மயில்மேலி ருத்தியொளி
ரியல்வேல ளித்துமகி ழிருவோரும்

ஒருவாகெ னக்கயிலை யிறையோன ளித்தருளு
மொளிர்வேத கற்பகந லிளையோனே
ஒளிர்மாம றைத்தொகுதி சுரர்பார்து தித்தருள
உபதேசி கப்பதமு மருள்வாயே

கருநோய றுத்தெனது மிடிதூள்ப டுத்திவிடு
கரிமாமு கக்கடவு ளடியார்கள்
கருதாவ கைக்குவர மருள்ஞான தொப்பைமகிழ்
கருணாக டப்பமல ரணிவோனே

திருமால ளித்தருளு மொருஞான பத்தினியை
திகழ்மார்பு றத்தழுவு மயில்வேலா
சிலைதூளெ ழுப்பிகவ டவுணோரை வெட்டிசுரர்
சிறைமீள விட்டபுகழ் பெருமாளே.

## பதவுரை

எனது கருநோய் அறுத்து - அடியேனுடைய கருவில் தங்கும் பிறவி நோயைக் களைந்து, மிடிதூள் படுத்திவிடு - அவாவாகிய வறுமையைத் தூளாக்கிய, கரிமாமுகக்கடவுள் - பெருமை நிறைந்த யானைமுகக் கடவுளும், அடியார்கள் கருதா வகைக்கு வரம் அருள் - அடியவர்கள் நினைக்கு முன்னரேயே வரந்தருபவரும், ஞான தொப்பை - அறிவின் பெருக்கையை வயிறாகக் கொண்டவரும் ஆகிய விநாயகப் பெருமான், மகிழ் - மகிழ்கின்ற, கருணா - கருணைக் கடவுளே! கடப்பமலர் அணிவோனே - கடப்பமலர் மாலையை அணிகின்றவரே! திருமால் அளித்து அருளும் - நாராயண மூர்த்தி தமது திருக்கண்ணில் தந்தருளிய, ஒரு ஞான பத்தினியை -ஒப்பற்ற திருஞான மங்கையாகிய வள்ளிப் பிராட்டியாரை, திகழ் மார்பு உறத்தழுவும் - சிறந்த திருமார்பில் பொருந்தத் தழுவிக் கொள்ளும், அயில் வேலா - கூர்மை பொருந்திய வேலாயுதத்தையுடையவரே! சிலை தூள் எழுப்பி - மலையைப் பொடி செய்து, கவடு அவுணோரை வெட்டி - கபடகுணம் உடைய அரக்கர்களை துணித்து, சுரர் சிறை மீள விட்ட - தேவர்கள் சிறையினின்று மீளுமாறு அருளிய, புகழ் பெருமாளே- புகழ்மிக்க பெருமையின் மிக்கவரே! இருநோய் - இறப்பு பிறப்பு என்ற இரண்டு நோய்களையும், மலத்தை - ஆணவ மலத்தையும், சிவவொளியால் மிரட்டி - சிவப்ரகாசத் தினால் விலக்கி, எனை இனிதா அழைத்து - அடியேனை இனிமையாக அழைத்து, எனது முடி மேலே இணைதாள் அளித்து - அடியேனுடைய சென்னியில் உமது இரண்டு திருவடிகளையும் சூட்டி, உனது மயில் மேல் இருத்தி - தேவரீருடைய மயில்வாகனத்தின் மீது அடியேனை இருக்குமாறு செய்து, ஒளிர் இயல் வேல் அளித்து - ஞான ஒளி இயல்பாக வீசும் வேலாயுதத்தைத் தந்து, இருவோரும் ஒருவாகு என- தேவரீரும் அடியேனும் ஒன்றுபட்டு ஒரு தன்மை என்று, ஒளிர் மாமறை தொகுதி - அறிவுவொளி வீசுகின்ற சிறந்த வேதங்களும், சுரர் - தேவர்களும், பார் துதித்து அருள - மண்ணுலகமும் துதித்து அருளுமாறு, கயிலை இறையோன் அளித்து அருளும் - கயிலாயபதி பெற்றருளிய, ஒளிர்வேத கற்பக நல் இளையோனே - ஒளி செய்கின்ற வேதம் புகழும் கற்பகமனைய நல்ல இளம்பூரணரே! உபதேசிகப் பதமும் அருள்வாயே - உபதேசித்து அதனால் நற்பதத்தை அருள் புரிவீர்.

## பொழிப்புரை

அடியேனுடைய கருவில் தங்கும் பிறவிப் பிணியை அறுத்து, அவாவென்ற வறுமையைப் பொடி செய்து அருளிய, பெருமையுடைய யானைமுகக் கடவுளும், அடியவர்கள் இதுவேண்டும் என்று நினைப்பதற்கு முன்னரேயே வேண்டிய வரத்தைத் தருபவரும், ஞானப்பெருக்கமாகிய திருவயிற்றை யுடையவருமாகிய விநாயக மூர்த்தி மகிழ்கின்ற கருணாமூர்த்தியே! கடப்பமலர் மாலையைத் தரிக்கின்றவரே! திருமால் பெற்ற ஞான மங்கையாகிய வள்ளியம்மையாரை அழகிய திருமார்பில் தழுவுகின்ற கூரிய வேலாயுதக் கடவுளே! கிரவுஞ்ச மலையைத் தூள் செய்து, கபடகுணம் படைத்த அரக்கர் களைத் துணித்து, தேவர் சிறை மீட்ட புகழ்மிக்க பெருமிதம் உடையவரே! இறப்பு பிறப்பு என்ற இருநோய்களையும் ஆணவ மலத்தையும் நீக்கி, அடியேனை இனிது அழைத்து, என் சென்னி மீது தேவரீரது இரண்டு திருவடித் தாமரைகளைச் சூட்டி, உமது மயில் வாகனத்தின்மீது இருத்தி, அறிவு ஒளி இயல்பாக வீசும் வேலாயுதத்தைத் தந்து, தேவரீரும் அடியேனும் ஒன்றுபட்டு ஒரு தன்மையதாக நின்ற திறத்தை, அறிவுச் சுடரையுடைய வேதங்களும் தேவர்களும் நரர்களும் துதித்தருள, கயிலை மேவும் கண்ணுதற் கடவுள் பெற்ற வேத வித்தகராகிய கற்பகம் போன்ற நல்ல இளம்பூரணரே! உபதேசித்துத் திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**இருநோய் :-**

இருநோய் – பிறப்பு இறப்பு என்ற இருவகை நோய்கள்; அன்றி, இரு என்ற சொல்லுக்கு பெரிய என்று பொருள் செய்து பெரிய நோயாகிய பிறவிநோய் எனினும் அமையும்.

பிறவியைப் பிணியென்று கூறுவது மரபு. "பவரோக வயித்தியநாதப் பெருமாளே" என்ற திருப்புகழடியாலும் உணர்க.

உடம்புக்குத் தொடர்ந்து வரும் நோய் பசி.
உள்ளத்திற்குத் தொடர்ந்து வரும் நோய் காமம்.
உயிர்க்குத் தொடர்ந்து வரும் நோய் பிறவி.

பிறவிப் பிணி உயிர்கட்கு என்றும் நீங்காது நிழல்போல் எய்துகின்றது. அப்பிணியை அகற்ற ஆன்றோர் அரும்பெருந் தவஞ் செய்தனர்.

**மலத்தை :-**

*மலம் மூன்று வகைப்படும். ஆணவம், கன்மம், மாயை என்பன.*

*"புண்ணிய பாவங்களைப் பயக்கும் விருப்பு வெறுப்பு களாய்ப் பொருந்துவது கன்மமலம்; மண்முதல் மாயா தத்துவம் முடிவாய் காணப்படுவது மாயாமலம்; சுட்டியறிவதாகிய விபரீத உணர்வை பயப்பது ஆணவமலம்; இம்மூன்று மலங்களும் மெய்ஞ்ஞானிக்கும் நீங்குதல் வேண்டும்.*

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமும்
மண்முதல் மாயைகாண் மாயையும்- கண்ணிய
அஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமும் இம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக் காகா விடு - *சிவஞானபோத உதாரண வெண்பா*

*மலநீக்கமே பிறவி நீக்கத்திற்குக் காரணமாகும்.*

*இவற்றுள், ஆணவமலம் மூலமலம் என்க. ஏனைய இரண்டும் இடையில் வந்த (ஆகந்துக) மலம் என்க.*

*கேவல நிலையில் அறியாமையை விளைத்து நிற்பது ஆணவ மலத்தின் தன்னியல்பு; சகலநிலையில் கருவிகளோடு கூடி விபரீத வுணர்வைச் செய்வது அவ்வாணவ மலத்தின் பொது வியல்பு.*

**சிவவொளியால் மிரட்டி:-**

*சிவப்பிரகாசத்தினால் ஆணவ இருளையும் பிறவிப் பிணியையும் நீக்குதல் வேண்டும் என்க. இடையறாத தியானத்தினால் ஆன்ம ஒளியுடன் சிவவொளி கலந்து பேரொளி யாக விளங்கும். கட்டையைக் கடைவதனால் கட்டையினின்றுங் கனல் தோன்றுவதுபோல், ஆன்மாவாகிய கட்டையுடன் பிரணவ மாகிய ஒன்றைக்கொண்டு தேய்க்கலுற்றபோது அத் தியானத்தில் தோன்றிய சிவஞான வொளியால் பந்தபாச முதலியவைகள் சாம்பலாவது திண்ணம்.*

"ஆத்மாநம் அரணிம் க்ருத்வா ப்ரணவம் சோத்தராரணிம்
த்யானநிர்மதநாப்யாஸாத் பாசம் தஹதிபண்டித:"
- *த்யானபிந்துாபநிஷத்*

**எனை இனிதா அழைத்து:-**

*முருகவேள் தன்னை நோக்கி "அன்பனே! இங்குவா" என்று அழைத்து அருள்புரியவேணும் என்று அடிகள் வேண்டுகின்றனர்.*

இவ்வண்ணமே கீழ்வரும் பாடலிலும் வேண்டுமாறு காண்க.

"நீவாவென நீயிங்க ழைத்து
பாராவர வாநந்த சித்தி
நேரேபர மாநந்த முத்தி தரவேணும்"

குழந்தைகள் உணவு செய்யாமல் வீதியில் வெயிலில் விளையாடுமானால் தாய் அக் குழந்தைகள் மீதுள்ள எல்லையற்ற கருணையால் வலிதில் அழைத்து, நிழலில் வைத்து நீராட்டி, ஆடை அணிகலங்களால் அழகுசெய்து நல்லுணவு தந்து இன்பஞ் செய்வதுபோல், உயிர்களாகிய நாம் பாவமாகிய வெயிலில் உலகபசுபாச தொந்தங்களாகிய விளையாட்டுக்களில் ஈடுபட்டிருக்கும்போது, தாயினும் சாலப் பரிவுடைய தயாசாகரமாகிய இறைவன் நம்மைப் பக்குவ காலத்தில் அழைத்து அருளமுதை யூட்டி அருள்புரிவான்.

எனது முடிமேலே இணைதாளளித்து:-

"பெருமானே! சிறியேனுடைய தலையின் மீது தேவரீருடைய சரணாரவிந்தங்களைச் சூட்டி யருள் செய்யவேணும்" என்று வேண்டுகின்றார்.

அடிகளுடைய வேண்டுகோளுக்கு இரங்கிக் கந்தவேள் கருணையுடன் அடிகள் சென்னிமேல் தமது சேவடியைச் சூட்டியருளினார். அகச்சான்றுகளாக அடியில் வரும் அமுத வாக்குகளைக் கண்டு தெளிக.

"இபமுகவ னுக்குகந்த இளையவம ருக்கடம்ப
எனதுதலை யிற்பதங்க ளருள்வோனே"

"சஞ்சரீகரி கரமுரல் தமனிய
கிண்கிணீமுக விதபத யுகமலர்
தந்தபேரருள் கனவிலு நனவிலு - மறவேனே"

"எனைமன முருக்கி யோக அநுபுதி யளித்த பாத
எழுதரிய பச்சை மேனி உமைபாலா - *திருப்புகழ்*

சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே -*அநுபூதி*

திருமுருகன் திருவடி தலையிற் படுமாயின் அங்குள்ள அயன் கையெழுத்து அழியும் என்க. சிவன் பரமபதி; சிவனுடைய ஏவலர் "அயன் அரி அரன்" என்ற மும்மூர்த்திகளும். சிவன் உத்தரவுப்படி அயன் ஆன்மாக்களின் தலையில் விதி விலக்கு களை எழுதுகின்றனன். இந்த நுணுக்கத்தை ஔவையார் மிக இனிமையாகக் கூறுமாறு காண்க.

"இடட்முடன் என்தலையில் இன்னபடி என்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ"

"அயன் எழுதிவிட்டான்" என்று கூறாமல் "சிவன் எழுதி விட்டான்" என்று கூறும் அழகிய நயத்தைக் காண்க.

அந்த அயன் கையெழுத்து முருகன் திருவடி பட்டவுடன் அழிந்து ஒழியும்.

"கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே"

மயில்மேலிருத்தி:-

"எம்பிரான் ஏறும் மயிலின் மீது தானும் ஏறியிருத்தல் பொருந்துமோ?" எனின், சிவமசந் தன்மை பெற்ற நம்பி யாரூரர் சிவபிரான் ஏறும் அயிராவணம் என்ற யானைமீது ஏறிச் சென்றதை யுன்னுக. சண்டேசர் இடப வாகனத்தின் மீது பவனி வருவதைக் காண்க.

இனி, மயிலின் மீது இருத்தல் என்பதன் உட்கருத்து, மயில் என்பது பிரணவம். ஓம் என்னும் தனி எழுத்தின் நாதத்துள் அடங்கியிருப்பது என்க.

ஒளிர் இயல் வேலளித்து:-

வேல் என்பது ஞானம். ஞானம் ஒளிமயமானது; இயல் பாகவே ஒளிசெய்வது. எனவே, அந்த ஒளிமயமான ஞானத்தைத் தருமாறு அடிகள் வேண்டுகின்றனர்.

ஞானமே பரகதிக்குச் சாதனம் ஆதலின், "ஞான மலது கதி கூடுமோ" என்பார் தாயுமானார்.

ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே

- திருமந்திரம்

**இருவோரும் ஒருவாகென:-**

*இறைவனும் ஆன்மாவும் ஒன்றுபடும் அத்துவித முத்தியை இச் சொற்றொடர் குறிக்கின்றது. இன்பமும் அறிவும் ஒருருவாகக் கொண்ட பதியுடன் ஆன்மா ஒன்றுபட்டு இன்பந் துய்க்கும்.*

"நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையருள் இடைமருதில்
ஏக நாயகா"
*-திருப்புகழ்*

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்
காணவுள் ளத்தைத் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே"

*என்ற சிவஞானபோதத்தில் பதினோராஞ் சூத்திரத்தில் கண்ட அத்துவிதமாகும். அது அபேத சம்பந்தமாகிய ஐக்கியமுமன்றி, பேதாபேத சம்பந்தமாகிய தாதான்மியமன்றி, பேத சம்பந்தமாகிய சையோகமுமன்றி, கலப்பும் உடனாதலும் வேறாதலுமாகிய மூன்றும் தன்னிடந் தோன்ற நிற்கும் அருமையுடையதாகும். ஆன்மபோதமுங் கண்ணொளியுந் தம்முள் கலந்து நிற்றல்போல் என்று உணர்க.*

"இருவோரும்
ஓரந்த மருவி ஞான மாவிஞ்சை முதுகி னேறி
லோகங்கள் வலம தாட அருள்தாராய்"
*-திருப்புகழ்*

**கயிலையிறையோன்:-**

*சிவபெருமான் அருள் திருமேனி தாங்கி எழுந்தருளிய திருமலை திருக்கயிலாயம். அது கோடி சூரிய ஒளியுடன் தூய வெண்மையுடன் விளங்குவது.*

பாச நீக்கித்தன் பாற்படு நல்லருள்
ஈசன் நல்கும் இயல்பென; எய்தினோர்
தேசு மாற்றிச் சிறந்ததன் மெய்யொளி
வீசு கின்றது வெள்ளியங் குன்றமே
*- கச்சியப்பசிவாச்சாரியார்*

**கருநோயறுத்து:-**

*விநாயகப் பெருமான் கருநோயை யறுக்க வல்லவர். வினையே பிறவிக்குக் காரணம். "வினைப்போகமே யொரு தேகம்" என்பார்*

*பட்டினத்தடிகள். அவ்வினையை வேருடன் களைய வல்லவர் விநாயகர். "விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்"*

**எனது மிடிதூள் படுத்திவிடு:-**

*அருணகிரிநாதருக்கு விநாயகர் செய்த அருட்டிறத்தை இது குறிப்பிடுகின்றது. இங்கே மிடி என்பது அவாவைக் குறிக்கும்.*

"செல்வ மென்பது சிந்தையி னிறைவே
அல்கா நல்குர வவாவெனப் படுமே" - *குமரகுருபரர்*

*அவாவே பிறவிக்குக் காரணமாதலின் அவாவற்றாலன்றிப் பிறவிநோய் தீராதென்று தெளிக. அவாவை யகற்றுவதே அறிவுடைமை.*

அவாவென்ப எல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து. - *திருக்குறள்*

**கரிமாமுகக் கடவுள்:-**

*விநாயகப் பெருமான் யானைமுகம் உடையவர். அதன் உட்பொருள்யாது? என ஐயுறுவார் கீழ்வருங் கருத்துக்களைக் கண்டு தெளிக.*

*விநாயகர் திருமுகம் யானைமுகம். அதில் ஒரு கொம்பு தோன்றும். கழுத்திற்குக் கீழ் தேவவடிவம். ஆண்யானை எனின் இரு கொம்புகள் இருத்தல்வேண்டும். பெண்யானை எனின் கொம்பே இருத்தல் கூடாது. ஒரு கொம்பிருத்தலால் ஆணுமன்று பெண்ணுமன்று என்பது போதரும். யானை முகமும் தேவசரீரமும் இருத்தலினால் உயர்திணையும் அன்று அஃறிணையுமன்று என்பது போதரும். எனவே, பரம்பொருள் ஆணும் பெண்ணும் உயர்திணையும் அஃறிணையும் அல்லாதவர் என்றும், எல்லாம் ஆனவர் என்றும் கருதுக. இதனைச் சிவஞான சுவாமிகள் கூறுமாறு காண்க.*

"மணிகொண்ட கோடொரு மருங்குண்மை யாற்பெண்மை
வடிவென்று மஃதின்மை யோர்
மருங்குண்மை யாலாண்மை வடிவென்று மீதுகீழ்
மாறிய திருக்காட்சி யும்
அணிகொண்ட வுயர்திணைய தென்றுமஃ றிணையென்றும்
யார்க்குங் கிளக்கவரி தாம்
ஐங்கரச் சிந்துரத் தின்கழற் செஞ்சரண
மஞ்சலித் துத்துதிப் பாம்"

அடியார்கள் கருதாவகைக்கு வரமருள்:-

*பரம காருண்யக் கடவுளாகிய கணேசப் பெருமான், அடியவர்கள் இதுவேண்டும் என்று நினைக்குமுன் அவர்கட்கு வேண்டுவதை வழங்குவார். "விநாயகனே வேட்கை தணி விப்பான்"*

ஞான தொப்பை:-

*விநாயகரது பெருவயிறு ஞானத்தின் பெருக்கத்தைக் குறிக்கின்றது. அகிலாண்டங்கள் யாவும் அப்பெருமானுடைய திருவுதரத்தில் அடங்கியுள்ளன.*

ஒருஞான பத்தினி:-

*ஒரு - ஒப்பற்ற. ஒப்பற்ற ஞானம் சிவஞானம் என்க. ஞானபத்தினி - வள்ளியம்மையாரைக் குறிக்கும் இடங்களில் ஞானம் என்ற அடை கொடுத்துச் சிறப்பித்துக் கூறும் அமுதவாக்குகள் இங்கு நினைவுகூரற்பாலன.*

"சுந்தர ஞான மென்குறமாது"
"வனமீது செறி
ஞானகுற மாதைதினை காவில்மண மேவுபுகழ் மயில்வீரா"

"ஏடார் குழற்சுருபி ஞானா தனத்திமிகு
மோராள் குறத்திதிரு மணவாளா"

*-திருப்புகழ்*

சிலைதூளெழுப்பி:-

*சிலை - கிரவுஞ்சமலை. தாரகனுக்குக் துணையாக நின்று மாயைகள் செய்த இம்மலையை முருகவேள் திருவேற்படையால் துகள்படுத்தினர்.*

## கருத்துரை

*விநாயகரது தம்பியே! வள்ளி மணவாளா! அமரர் சிறை மீட்ட அண்ணலே! பிறவியையும் மலத்தையும் நீக்கி, அடியேனை அழைத்துத் திருவடி தீக்கை புரிந்து ஞானத்தைத் தந்து பிரணவ நாதத்துள் இருத்தி அத்துவிதமுத்தி பெற உபதேசித்தருளுவீர்.*

## 28

எதிரொருவ ரிலையுலகி லெனஅலகு சிலுகுவிரு
திட்டுக்ரி யைக்கேயெ முந்துபாரின்
இடையுழல்வ சுழலுவன சமயவித சகலகலை
யெட்டெட்டு மெட்டாத மந்த்ரவாளால்

விதிவழியி னுயிர்கவர வருகொடிய யமபடரை
வெட்டித்து ணித்தாண்மை கொண்டுநீபம்
விளவினிள இலைதளவு குவளைகமழ் பவளநிற
வெட்சித்தி ருத்தாள்வ ணங்குவேனோ

திதிபுதல்வ ரொடுபொருது குருதிநதி முழுகியொளிர்
செக்கச்செ வத்தேறு செங்கைவேலா
சிகரகிரி தகரவிடு முருவமர கதகலப
சித்ரக்க கத்தேறு மெம்பிரானே

முதியபதி னொருவிடையர் முடுகுவன பரிககன
முட்டச்செ லுத்தாறி ரண்டுதேரர்
மொழியுமிரு அசுவினிக ளிருசதுவி தவசுவெனு
முப்பத்து முத்தேவர் தம்பிரானே.

### பதவுரை

*திதி புதல்வரொடு பொருது - திதியின் புதல்வர்களாகிய அரக்கர்களுடன் போர் செய்து, குருதி நதி முழுகி - உதிர ஆற்றினில் முழுகி, செக்க செவத்து - மிகவுஞ் சிவந்துள்ள, ஏறு - இடியைப் போன்ற, செங்கை வேலா - வேலாயுதத்தை ஏந்திய திருக்கரமுடையவரே! சிகர கிரி தகர விடும் - கொடுமுடியுடன் கூடிய மலையைப் பொடி படுமாறு செய்கின்றதும், உருவமரகத - மரகதம் போன்ற பச்சைவடிவமுடையதும், கலப - கலாபத்தை யுடையதும், சித்ர - அழகுடையதுமாகிய, ககத்து ஏறும் - மயிலின் மீது ஆரோகணிக்கும், எம்பிரானே - எமது தலைவரே! முதிய பதினொரு விடையர் - பழமையான உருத்திரர் பதினொருவர், முடுகுவன பரி - விரைவாகச் செல்லக்கூடிய குதிரைகளை, ககன முட்ட செலுத்து ஆறிரண்டு தேரர் - ஆகாயமுழுவதும் செலுத்து கின்ற சூரியர்கள் பன்னிருவர், மொழியும் இரு அசுவினிகள் - மருத்துவ நூல்களைச் சொன்ன அசுவினி தேவர்கள் இருவர், இரு சதுவித வசுஎனும் - இரு நான்கு வகையான வசுக்கள்*

எண்மர் என்று கூறப்பட்ட, முப்பத்து முத்தேவர் - முப்பத்து மூன்று தேவர்கள் போற்றும், தம்பிரானே - தலைவரே! எதிர் ஒருவர் உலகில் இலை என- எனக்குச் சமானமானவர் உலகில் ஒருவருமே இல்லை என்று கூறி, அலகு சிலுகு- பெரிய போருக்கு, விருது இட்டு- வெற்றிக் கொடி நாட்டி, க்ரியைக்கே எழுந்து பாரின் இடை உழல்வ சுழலுவன - வாதச்செயலுக்கே முனைந்து எழுந்து பூமியில் உழல்வனவும் - இங்குமங்குமாகத் திரிவனவுமாகி யலைகின்ற, சமயவித சகல கலை எட்டெட்டும் எட்டாத - சமய பேதங்களின் அறுபத்து நான்கு கலைகள் எல்லாவற்றாலும் அறிய முடியாததான, மந்த்ர வாளால் - சாந்தியான தனிஞான வாளால், விதி வழியின் - அயன் விதித்த விதிப்படி, உயிர்கவர வரு - உயிரைப்பற்ற வருகின்ற, கொடிய யமபடரை வெட்டித் துணித்து - பொல்லாத இயம தூதர்களை வெட்டிப்பிளந்து, ஆண்மை கொண்டு - தைரியத்தைக் கொண்டு, நீபம் - கடப்ப மலரும், விளவின் இளஇலை - விளாமரத்தின் இளமையான இலைகளும், தளவு குவளை கமழ் - இதழ்களுடன் கூடிய குவளை மலர்களும் மணக்கின்ற, பவளநிற - பவளம் போன்ற சிவந்த நிறமுடைய, வெட்சி திருத்தாள் வணங்குவேனோ - வெட்சி மாலையணிந்த திருவடிகளை அடியேன் தொழுது உய்வேனோ?

## பொழிப்புரை

திதியின் மைந்தர்களாகிய அசுரர்களுடன் போர்புரிந்து உதிர வெள்ளத்தில் குளித்து, மிகவுஞ் சிவந்த நிறத்துடன் ஒளிசெய்து, இடியைப் போன்று பகைவர்கட்கு ஊறு செய்வதாகிய வேற்படையை ஏந்திய திருக்கரத்தை யுடையவரே! கொடுமுடி யுடன் கூடிய மலைகள் பிளக்குமாறு பறந்து வருவதும், மரகத நிறமுடையதும், கலாபத்தையுடையதும், அழகியதுமாகிய மயிற் பறவை மீது எழுந்தருளிவரும் எமது தலைவரே! பழமையான உருத்திரர் பதினொருவர், ஆகாய முழுவதும் வேகமாகச் செல்லும் குதிரைகளைச் செலுத்தும் சூரியர்கள் பன்னிருவர், மருத்துவ நூல்களைச் சொன்ன அசுவினி தேவர்கள், வசுக்கள் எண்மர் என்று சொல்லப்படுகின்ற, முப்பத்து மூன்று தேவர்கள் வணங்குகின்ற தலைவரே! இந்த உலகில் எனக்கு நிகர் ஒருவருமே இல்லையென்று கூறிப் பெரிய சொற்போர் புரிந்து, கொடிநாட்டி, வாதச் செயலுக்கே முனைந்து சென்று பூமண்டலத்தில் உழன்று எங்குந் திரிந்து அலைகின்ற சமயவாதிகளின் அறுபத்தி நான்கு கலைகள் முழுவதற்கும் எட்டாத தனிமந்திர ஞான வாளினால்,

அயன் விதித்த விதிப்படி உயிரைப்பற்ற வருகின்ற இயம தூதுவரை வெட்டிப் பிளந்து, தைரியமுற்று, கடப்பமலர், விளா மரத்தின் தளிர், இதழ்களுடன் கூடிய குவளை மலர்கள் கமழ் கின்ற பவளம் போன்ற தேவரீருடைய வெட்சி மலர்புனைந்த வீரத் திருவடிகளை வணங்கி உய்யமாட்டேனோ?

## விரிவுரை

**எதிரொருவரிலை யுலகிலெனா:-**

புலவர்களில் பலர் ஞான நூல்களைக் கற்று மெய்யுணர்வு பெற்று, அமைதி பெறாத காரணத்தினால், "நாம் அதிகம் படித்திருக்கின்றோம்" என்று அகங்கரித்து, "நமக்கு நிகர் நாம் தான்; வேறு ஒருவரும் இல்லை" என்று எண்ணி, இறுமாந்திருப்பர்.

படித்ததன் பயன் படிந்திருத்தலேயாம். கற்றவர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல். அடக்கமே அமரருள் உய்க்கும்.

நூலறிவு, குலத்தின் உயர்வு, கருணை, பெரும்புகழ், செல்வம், கைம்மாறு கருதாது உள்ளதை வழங்கல், சிறப்பு, ஒழுக்கம், அரியதவம், நியமம், நெருங்கிய நட்பு, சமானமில்லாத வலிமை, உண்மை, தூய்மை, அழகு ஆகிய இத்தனை நலன்களும் அடக்கம் இன்மை யென்ற ஒரு தீயகுணத்தினால் அழியும் என்று உணர்க.

கற்றறிவு குலமேன்மை கருணைபெரும் புகழ்செல்வம்
 கைம்மா றெண்ணா
துற்றதுவும் கொடைசீர்மை ஒழுக்கமருந் தவநியமம்
 உறவின் கேண்மை
மற்றெதிரி லாத்திண்மை வாய்மைமிகுந் தூய்மைகுண
 வனப்பி யாவும்
பெற்றிடினும் அடக்கமிலாப் பெருமிதத்தால் இத்தனைக்கும்
 பிழையுண் டாமே.

*- பிரபோத சந்திரோதயம்*

**அலகு:-**

லகு- எளிமை, அலகு - எளிமையில்லாதது. அகரம் அன்மைப் பொருளைத் தெரிவிக்கின்றது. கனத்தது.

**சிலுகு:-**

போர். புலவர்கள் ஒருவரோடொருவர் கனத்த சொற்போர்

புரிந்து தமது ஆற்றலைப் பாழ்படுத்துவர். அதற்குக் காரணம் ஆன்மநேய ஒருமைப்பாடும் அமைதியும் இல்லாமையே என்று உணர்க.

சிலர் வாதத்திற்கென்றே நூல்களைப் படிப்பார்கள். சமய வாதிகள் தத்தம் சமயமே மேலானதென்று சண்டையிட்டு மண்டையுடைப்பார்கள்.

"கலகல கலெனக் கண்ட பேரொடு
சிலுகிடு சமயப் பங்க வாதிகள்
கதறிய வெகுசொற் பங்கமாகிய பொங்களாவும்
கலைகளுமொழிய"

"காதிமோதி வாதாடு நூல்கற் றிடுவோரும்

மாறிலாத மாகால னூர்புக் கலைவாரே"

"கலைகொடுப வுத்தர் காம கருமிகள்து ருக்கர் மாய
கபிலர்பக ரக்க ணாதர் உலகாயர்
கலகமிடு தர்க்கர் வாம பயிரவர்வி ருத்த ரோடு
கலகலென மிக்க நூல்க ளதனாலே
சிலுகியெதிர் குத்தி வாது செயவுமொரு வர்க்கு நீதி
தெரிவரிய சித்தி யான உபதேசந்
தெரிதரவி ளக்கி ஞான தரிசனம ளித்து வீறு
திருவடியெ னக்கு நேர்வ தொருநாளே"

"பல்லத்த மார்க்கர் வல்லர்க்கர் மூர்க்கர்
கல்விக்க லாத்த லையலாமோ"

"சினமுடன் தர்க்கித்துச் சிலுகிக்கொண்
டறுவருங் கைக்குத்திட் டொருவர்க்குந்
தெரிவருஞ் சத்யத்தைத் தெரிசித்துன் செயல்பாடி"

"சங்கைக்கத் தோடு சிலுகிடு சங்கிச்சட் கோல சமயிகள்
சங்கற்பித் தோதும் வெகுவித கலைஞானச்
சண்டைக்குட் கேள்வி யலமலம்"

என்று இவ்வாறு பலப்பல இடங்களில் சமயவாதிகளின் கலகத்தைக் கண்டித்து அடிகளார் உண்மையை உணர்ந்து சமாதானமுறுமாறு உபதேசிக்கின்றனர்.

விருதிட்டு:-

*வாதமிடுவதற்காக தமது அடையாளமிட்ட கொடியை யுயர்த்தித் திரிவார்.*

"விருதுகொடி மேள தாள தண்டிகை
வரிசையொடு லாவு மால கந்தைத விர்ந்திடாதோ"

*என்று அருணையடிகள் பிறிதொரு திருப்புகழிலே மனம் நொந்து கூறுமாறு காண்க.*

*இனி, சைவசமயம் எத்தன்மையது என்பதைச் சிறிது ஈண்டுச் சிந்தித்தல் வேண்டும்.*

*சமய நூல்கள் ஒன்றோடொன்று ஒவ்வாமல் கூறினால் உண்மைச் சமயந்தான் யாதோ என்று ஐயுறுவார்க்கு உரைக்குதும், எல்லாச் சமயப் பொருள்களும் எங்கே ஒருங்கே காணப்படு கின்றனவோ அது உண்மைச் சமயம் என்று உணர்க. இலை, தளிர், மலர், காய், கனி இப்படி ஒவ்வோர் உறுப்புக்களை மட்டும் ஏனைய சமயவாதிகள் கண்டு அதனை அதனை உயர்வு என்று எண்ணி வாதிடலாயினார்கள். இத்தனையும் ஓர் உருவிலே கண்டு, அத்தனையும் எமது மதத்திற்கு உறுப்புக்களேயாகும்; ஆகவே எல்லாம் எமக்கு உடன்பாடே என்று, பரந்த பெருநிலை நின்று எல்லாச் சமயத்தாரையும் அன்புடன் தழுவி ஆதரித்து அருள்புரிவது சைவ சமயம் என்று அறிக.*

*சைவ சமயத்தின் உயிர்நாடி "தாழ்வு" என்று உணர்க.*

"தாழ்வென்னுந் தன்மை யோடு
சைவமாஞ் சமயஞ் சாரும்
ஊழ்பெறல் அரிது"

*என்பது சித்தியார் வாக்கு.*

ஓதுசம யங்கள்பொருள் உணரு நூல்கள்
ஒன்றொடொன் றொவ்வாமை உளபலவும் இவற்றுள்
யாதுசம யம்பொருள்நூல் யாதிங் கென்னில்
இதுவாகும் அதுவல்ல தெனும்பிணக் கதின்றி
நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதியா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல்
ஆதலினால் இவையெல்லாம் அருமறையா கமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்

*- சிவஞானசித்தியார்*

சகலகலை யெட்டெட்டுமெட்டாத மந்த்ரவாள்:-

*சமயவாதிகள் கூறிய பலவகையான கலைகள் எல்லா வற்றினாலும் அறியமுடியாத அதி நுணுக்கமான அஜபா நலமாகிய தனி மந்திரம் ஞானவாளாக நின்று ஆன்மாவுக்கு உறுதி பயக்கும்.*

"கதறிய கலைகொடு சுட்டாத் தீர்பொருள்
பதறிய சமயிகள் எட்டாப் பேரொளி
கருவற இருவினை கெட்டாற் காண்வரு மென்றஏகம்"

மந்த்ரவாள்:-

*மந்திரவாள் என்பதை அருணகிரியார் முருகப்பெருமானிடம் பெற்றனர்.*

*தந்தைக்கு முன்னநந் தனிஞான வாளொன்று சாதித்த கந்த பிரான் அருணையடிகளுக்கு அத்திருவாளைத் தந்தருளினார். அந்த வாளினால் எம தூதரை வெட்டித் துணித்து வெற்றி பெறுவேன் என்று அடிகள் வேண்டுகின்றனர்.*

*கந்தரலங்காரத்தில் இயமனை நோக்கி வீரகர்ஜனை புரியுமாறுங் காண்க.*

தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியஎன் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாஅந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே

*இவ்வாறு, திருமூல நாயனாரும் கூறும் அமுதவாக்கை இங்கு உடன் படித்து அன்பர்கள் உவகையுறுக.*

நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்
சிவன்வரின் நானுடன் போவது திண்ணம்
பவம்வரும் வல்வினைப் பண்டே யறுத்தேன்
தவம்வருஞ் சிந்தைக்குத் தானெதி ராமே.

*அவிரோதஞானம் - விரோதமில்லாமல் எல்லாவற்றையும் தானாகப் பார்க்கும் ஒருமைப்பாடு என்று உணர்க.*

"எமபடரை மோது மோன உரையிலுப தேச வாளை
எனதுபகை தீர நீயு மருள்வாயே"

*என்று அடிகள் பிறிதொரு திருப்புகழில் ஞானவாள் தரும்*

ஞானபண்டிதனிடம் விண்ணப்பம் புரிகின்றனர்.

இத்தகைய திருப்புகழை நாடோறும் பாராயணம் புரிவோர்க்கு எமபயம் எய்தாது என்பது உறுதி.

**விதிவழியின் உயிர் கவர:-**

இன்னாருக்கு இன்னபடியென்று அவரவர் செய்த வினைக்குத் தக்கவாறு சிவபிரான் கட்டளையிட்டபடி பிரமதேவன் விதிக்கின்றான். சிவன் உத்தரவுப்படியேதான் பிரமன் எழுதுகின்றான் என்ற நுணுக்கத்தையறிந்த ஔவையார்,

> "இட்டமுடன் என்றலையில் இன்னபடி என்றெழுதி
> விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ"

என்று கூறுகின்றனர். அப்படி அயன் எழுதிய விதிப்படி, இயமன் பணிக்க, அவனுடைய தூதுவர் வந்து உயிரைப் பற்றுவர்.

> "................................நம
> னோட்டிவிடக் காய்ந்துவரி வேதனடை யாளமருள்
> சீட்டுவரக் காண்டுநலி காலனணு காநினரு ளன்புதாராய்"

> "வருகாலன்
> ஆதிவிதி யோடுபிற ழாதவகை தேடிஎன
> தாவிதனை யேகுறுகி வருபோது
> ஆதிமுரு காதிமுரு காதிமுரு காஎனவு
> மாதிமுரு காநினைவு தருவாயே"

**கொடிய யமபடர்:-**

இயம தூதுவர் அருளின்றிக் கோர வடிவத்துடன் வந்து உயிரைப் பற்றுவர். ஆதலின், "கொடிய" என்றனர். படர்- ஏவல் செய்வோர். துன்பத்தைச் செய்வோர்.

**நீபம்:-**

நீபம் - கடப்பமலர். இது முருகப்பெருமானுக்கு மிகவும் உகந்தமலர். இம் மலரையணிவதனால் "கடம்பன்" என்ற திருநாமம் அப் பரமபதிக்கு உண்டு.

> "பலபல பைம்பொன் பக்க மாரமு
> மடிமைசெ லுஞ்சொற் றமிழ்ப்பனீ ரொடு
> பரிமள மிஞ்சக் கடப்ப மாலையு மணிவோனே"

**விளவினிள இலை:-**

*வெற்றிவேற் பெருமானுக்கு இனியதாக இருப்பது விளா மரத்தின் தளிர். அது எளியதாக எங்குங் கிடைப்பது. அதனை அன்பர்கள் தூய்மையாகப் பறித்து அறுமுகப் பரமனை அருச்சித்து அருள் பெறுக.*

*அடியில் வரும் திருவாக்கினால் அதன் பெருமையை யறிக.*

"மொகுமொகென மதுபமுரல் குரவுவிள வினதுகுறு
முறியுமலர் வகுளதள முழுநீல தீவரமும்
முருகுகமழ் வதுமகில முதன்மைதரு வதும்விரத
முனிவர்கரு தரியதவ முயல்வார்த போபலமும்"

*- சீர்பாத வகுப்பு*

**வெட்சி:-**

*வெட்சி வீரர்கள் தரிக்கும் பூமாலை. முருகப்பெருமான் அணியும் மலர்களில் ஒன்று. செச்சை என்று ஒரு பேரும் இதற்கு உண்டு.*

"வெட்சித் தண்டை காலென்கிலை"

"சிவந்தசெச்சை
மாலையுஞ் சேவற் பதாகையும் தோகையும் வாகையுமே"

*- அலங்காரம்*

**திதிபுதல்வர்:-**

*காசிபருடைய மனைவியர் பதின்மூவர். அவருள் அதிதியின் மக்கள் தேவர்கள். திதியின் மக்கள் தைத்தியர்கள். சூராதிய வுணர்கள் அந்த மரபில் வந்தவர்களாதலின் "திதி புதல்வர்" என்றனர்.*

**சிகரகிரி தகரவிடும்:-**

*எம்பிரான் ஏறும் மயில் அளவிடற்கரிய பேராற்றல் படைத்தது. அது சிறகை வீசிப் பறக்கும்போது மலைகள் பொடி படுகின்றன. எட்டுக் குலமலைகளும் கட்டுவிட்டுக் குலுங்குகின்றன.*

சக்ரப்ர சண்டகிரி முட்டக்கி ழிந்துவெளி
பட்டுக்ர வுஞ்சசயி லந்
தகரப்பெ ருங்கனக சிகரச்சி லம்புமெழு
தனிவெற்பு மம்புவியு மெண்

திக்குத்த டங்குவடு மொக்கக்கு லுங்கவரு
சித்ரப்ப தம்பெயர வே
சேடன்முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூரர்
திடுக்கிட நடிக்குமயி லாம்" - *மயில்விருத்தம்*

குசைநெகி ழாவெற்றி வேலோன் அவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு அடியிடவெண்
திசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே

- *அலங்காரம்*

முதிய பதினொரு விடையர்...............முப்பத்து முத்தேவர்:-

*தேவர் முப்பத்து மூவர் எனப்படுவர். அதன் விபரத்தை அடிகளார் மிக விளக்கமாக இப் பாடலில் கூறுகின்றனர்.*

*உருத்திரர் 11, ஆதித்தர் 12, வசுக்கள் 8, அசுவினிகள் 2 ஆக 33.*

*இவர்கள் முப்பத்துமூவர் எனப்படுவர். இவர்கள் தனித் தனியே ஒவ்வொரு கோடி தேவர்கட்குத் தலைவர். எனவே, முப்பத்து முக்கோடி தேவர்கட்கும் முப்பத்துமூவர் தலைவர்.*

*தேவர், அதிதேவர் என்ற இருவகைப்பட்டவர்கட்கும் பெருந் தலைவர் முருகப்பெருமான் என்று அறிக.*

"தேவாதி தேவர் சேவை செயுமுக மலராறும்"
"தேவதேவ தேவாதி தேவப் பெருமாளே"
"மூவர் தேவாதிகள் தம்பிரானே" -*திருப்புகழ்*

## கருத்துரை

*மயிலேறும் பெருமாளே! தேவர்கள் தலைவரே! இயம பயமறத் தேவரீருடைய திருத்தாள்களை வணங்க அருள்புரிவீர்!*

## 29

சிவஞான புண்டரிக மலர்மாது டன்கலவி
சிவபோக மன்பருக அறியாமல்
செகமீது மூன்றுமல வடிவாயி ருந்துபொது
திகழ்மாதர் பின்செருமி யழிவேனோ

தவமாத வங்கள்பயில் அடியார்க ணங்களொடு
தயவாய்ம கிழ்ந்துதினம் விளையாடத்
தமியேன்ம லங்களிரு வினைநோயி டிந்தலற
ததிநாளும் வந்ததென்முன் வரவேணும்

உவகாரி யன்பர்பணி கலியாணி எந்தையிட
முறைநாய கங்கவுரி சிவகாமி
ஒளிரானை யின்கரமில் மகிழ்மாது ளங்கனியை
ஒருநாள்ப கிர்ந்தவுமை யருள்பாலா

அவமேபி றந்தஎனை இறவாம லன்பர்புகு
மமுதால யம்பதவி யருள்வோனே
அழகாந கம்பொலியு மயிலாகு றிஞ்சிமகிழ்
அயிலாபு கழ்ந்தவர்கள் பெருமாளே.

## பதவுரை

*உவகாரி* - உயிர்களுக்கு உபகாரஞ்செய்கின்றவரும், *அன்பர் பணி கலியாணி* - அன்பர்கள் பணிகின்ற நித்யகலியாணியாக விளங்குபவரும், *எந்தை இடம் உறை நாயகம்* - எமது பிதாவாகிய சிவபெருமானுடைய இடப் பாகத்தில் வாழுகின்ற தலைவியும், *கவுரி* - பொன்னிற முடையவரும், *சிவகாமி* - சிவத்தை விரும்புகின்றவரும், *ஒளிர் ஆனையின் கரமில்* - ஒளி செய்கின்ற விநாயகப் பெருமானுடைய திருக்கரத்தில், *மகிழ் மாதுளம் கனியை* - மகிழ்ச்சியைத் தருகின்ற மாதுளம் பழத்தை, *ஒருநாள் பகிர்ந்த உமை* - ஒருநாள் தந்தவருமாகிய உமாதேவியார், *அருள்பாலா* - பெற்றருளிய புதல்வரே! *அவமே பிறந்த எனை இறவாமல்* - வீணாகப்பிறந்த அடியேனை இறந்து வீண்போகா வண்ணம், *அன்பர் புகும்* - உமது அடியார்கள் அடைகின்ற, *அமுத ஆலயம் பதவி*- அழிவின்மைக்கு இருப்பிடமாகிய முத்தியை, *அருள்வோனே* - அருள்செய்தவரே! *அழகா* - அழகின்மிக்கவரே! *நகம்பொலியு மயிலா* - மலையில் வசிக்கின்ற மயிலை வாகனமாக உடையவரே! *குறிஞ்சி மகிழ் அயிலா* - குறிஞ்சிநிலத்தில் மகிழ்ந்து எழுந்தருளியுள்ள வேலாயுதரே! *புகழ்ந்தவர்கள் பெருமாளே*- புகழ்ந்து பாடுகின்றவர்கட்கு அருளும் பெருமையின் மிக்கவரே! *சிவஞான புண்டரிக மலர்மாதுடன்* - பதிஞானமாகிய தாமரைமலர் மீது விளங்குகின்ற முத்திமாதுடன், *கலவி* - கலந்து, *சிவபோக மன்பருக* - நிலை பெற்ற சிவத்தை அனுபவித்த பேரின்ப வெள்ளத்தைக் குடிக்க,

அறியாமல் - அறிந்துகொள்ளாமற் படிக்கு, செக மீது உழன்று - உலகிலே வீணாக உழல்பவனாகி, மல வடிவாய் இருந்து - ஆணவமலத்தின் வடிவமாக இருந்து, திகழ் பொதுமாதர் பின் செருமி - அழகிய பொதுமகளிர் பிறகே சென்று செருகி, அழிவேனோ - அடியேன் அழியலாமோ? தவ மாதவங்கள் பயில் - சாமானியதவமும் சிறப்புத்தவமும் புரிகின்ற, அடியார் கணங்களொடு - அடியவர் கூட்டங்களுடன், தயவாய் மகிழ்ந்து - அவர்களுடைய கருணையினால் மகிழ்ச்சியுற்று, தினம் விளையாட- நாள்தோறும் அவர்களுடன் கலந்து ஆடல்புரிய, தமியேன் - அதனால் அடியேனுடைய, மலங்கள் - மூன்று மலங்களும், இருவினை - இருவினைகளும், நோய்- பிறவி நோயும், இடிந்து அலற - பொடிபட்டு விலக, ததி நாளும் வந்தது - நல்லசமயம் வந்திருக்கின்றது; என் முன் வரவேணும் - அடியேன் முன் வந்து அருள் புரிவீர்.

## பொழிப்புரை

உயிர்களுக்கு உபகாரம் புரிகின்றவரும், அன்புடையவர் தொழுகின்ற நித்ய மங்களமுடையவரும், எனது தந்தையாராகிய சிவபிரானுடைய இடப்புறத்தில் வீற்றிருப்பவரும், பொன்னிறம் படைத்தவரும், சிவத்தை விரும்புகின்றவரும், ஒளிமிக்க விநாயகமூர்த்தியின் திருக்கரத்தில் ஒருநாள் மகிழ்ச்சியைத் தரும் மாதுளங் கனியைத் தந்தவருமாகிய உமையம்மையார் பெற்ற திருக்குமாரரே! பயனின்றிப் பிறந்த அடியேனை வீணே இறவாமல், அடியார்கள் அடைகின்ற அழிவற்ற சிவ பதவியை அருள்புரிந்தவரே! அழகிற் சிறந்தவரே! மலையில் விளங்குகின்ற மயிலை வாகனமாக உடையவரே! குறிஞ்சி நிலத்தில் மகிழ்ச்சியுடன் எழுந்தருளியிருக்கின்ற வேலாயுதரே! புகழ்ந்து துதிக்கின்ற அடியவரைக் காக்கின்ற பெருமிதம் உடையவரே! பதிஞானமாகிய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற முத்தி மாதுடன் சேர்ந்து, நிலைபெற்ற சிவத்தைக் கலந்து துய்க்கும் பேரின்ப வெள்ளத்தைப் பருகுவதற்கு அறியாமல், உலகிலே வீணே உழன்று ஆணவமலத்தின் வடிவமாக நின்று அழகிய பொதுமாதர்களது பின் சென்று செருகி அடியேன் அழியலாமோ? சாமானிய தவமும் சிறப்புத் தவமும் செய்கின்ற அடியவர் திருக்கூட்டத் துடன் அவர்கள் தயவைப் பெற்று மகிழ்ச்சியுடன் விளையாட வும், அதனால் அடியேனுடைய மும்மலங்களும் இரு வினைகளும் பிறவி நோயும் பொடிபட்டு நீங்கவும், நல்ல சமயம் வந்துள்ளது;

ஆதலினால் அடியேன் முன் வருவீர்.

## விரிவுரை

**சிவஞான புண்டரிக மலர்மாது:-**

சிவஞானமாகிய செந்தாமரையின்மீது வீற்றிருக்கின்றவள் முத்தித்திரு என அறிக. அத் திருவுடன் கலத்தலே முத்திப்பேறு ஆகும். அந்த முத்திமாதுடன் சேர்ந்து சிவாத்துவிதம் பெறுதல் வேண்டும்.

இதனைப் பட்டினத்தடிகள் கூறுமாறுங் காண்க.

"தாயுடன் சென்றுபின் தாதையை கூடிப்பின் தாயைமறந்
தேயும தேநிட்டை யென்றான் எழிற்கச்சி யேகம்பனே"

'ஞானமலது கதிகூடுமோ." என்பார் தாயுமான அடிகள். கலவி– கலத்தல். சிவஞானத்துடன் ஒற்றித்து நிற்றல்.

**சிவபோகம்:-**

போகம் – துய்த்தல். சிவத்தைத் துய்த்தல். சிவத்தினிடம் பெருக்கெடுத்துக் கரை புரண்டு பெருகி ஓடும் பேரின்ப வெள்ளம் என்க. அது தண்ணீரைப் போல ஓடுவதனால் "பருக" என்று கூறினார்.

"அகண்டா காரசிவ
போகம் எனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏக உருவாய்க் கிடக்குது"

**செகமீதுழன்று:-**

உலகிலே பிறந்தபின் இப் பிறப்பினால் இனிப் பிறப்பு எடாத வகையைத் தேடவேண்டும் என்று கருதி, "நானார்? என் உள்ளமார்? ஞானங்களார்? எனக்குத் தலைவன் யார்? அத்தலை வனுடைய தன்மை யாது?" என்பனவாதி சிந்தனைகளே இன்றி, உண்பதும், உறங்குவதும், உடுப்பதும், உலாவுவதுமாகியே திரிந்து உயிர்கள் வீண்போகின்றன

"எண்ணி லாத நெடுங்காலம்
எண்ணி லாத பலபிறவி
எடுத்தே இளைத்திங் கவைநீங்கி
இம்மா னிடத்தில் வந்துதித்து

மண்ணின் வாழ்க்கை மெய்யாக
மயங்கி யுழன்றா லடியேனுள்
மாறாப் பெருமை தரும்பாத
வனசத் துணையென் றடைவேனோ"

என்று சிதம்பர சுவாமிகள் கல்லுங் கரையுமாறு கனிந்து உருக்கமாக உரைக்கின்றனர்.

மலவடிவா மிருந்து:-

செம்பில் களிம்புபோல் ஆன்மாவுக்கு அநாதியே ஆணவ மலமாகிய அழுக்கு உண்டு. செம்பின் இயல்பான சிவந்த நிற ஒளியை மறைத்துக் களிம்பு தனது பச்சை நிறத்தின் வடிவாக்கி நிற்கும். அதுபோல் ஆன்மாவின் இயல்பாகிய ஞானப்பிரகாசத்தை மறைத்து ஆணவ மலம் தனது இருட்டன்மையைத் தந்து அறியாமையின் சொருப மாக்கிவிடும்.

இனி, ஆன்மா குருவின் திருவருளால் சிவத்தைச் சார்ந்த பொழுது தன்னியல்பு முழுவதும் சிவத்தில் மறைந்து சிவத்தின் சொருபமாகி விளங்கும். இரும்பு நெருப்பில் சிறிது நேரம் தங்கிவிடுமாயின், அதன் கருமை நிறம் மாறி செஞ்சோதிமயமாய்த் திகழ்வதுபோல் என்று அறிக.

"தீதும் பிடித்தவினை யேதும் பொடித்துவிழ
சீவன் சிவச்சொருப மெனதேறி"

"சிவச்சொரூப மாயோகி எனஆள்வாய்"
-*திருப்புகழ்*

"கருமருவு குகையனைய காயத்தின் நடுவுள்
களிம்புதோய் செம்பனைய யான்
காண்டக இருக்கநீ ஞானஅனல் மூட்டியே
கனிவுபெற உள்ளுருக் கிப்
பருவம தறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதிசெய் து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை என்சொல்லு கேன்"
- *தாயுமானார்*

ஆணவமலமே எல்லா இடர்களுக்கும் மூலகாரணம் என அறிந்து, அதன் வலிமையை ஒடுக்கிச் சிவசம்பந்தம் பெறப் பெரிதும் முயலுதல் வேண்டும்.

பொது திகழ்மாதர் பின்செருமி அழிவேனோ:-

தனக்கு என்று ஆன்றோர்களால் நியமிக்கப்பட்ட தரும பத்தினியைத் துறந்து, பாவக் குவியலாகவுள்ள பொது மாதர் மயல் கொண்டு, தனத்தையும் மனத்தையும் பறிகொடுத்து, சினத்தையுஞ் செருக்கையும் கொள்முதல் செய்து, இனத்தையும் கனத்தையுங் கைவிட்ட மாந்தர் பலர்.

விலைமகளிர் குழலாகிய காட்டிலே கண்ணென்ற வலையை வீசி, இளைஞருடைய நெஞ்சமாகிய பறவையைப் பிடித்து விடுவார்கள்.

"திண்ணியநெஞ் சப்பறவை சிக்கக் குழற்காட்டில்
கண்ணிவைப்பார் மாயங் கடக்குநாள் எந்நாளோ"

*-தாயுமானார்*

இன்னார் இனியார் என்ற பாகுபாடின்றி அனைவரையும் மருவும் பொதுமகளிர், அறிவில்லாத கீழ்மக்கள் அழுந்துகின்ற நரகம் ஆகும் என்பார் திருவள்ளுவர்.

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு.

ஒரு கணவன் மனைவியைப் பிரிந்து அயலூர் சென்று சில காலம் கழித்துத் தன் மாளிகை வந்தான். மனைவியும் அவளுடைய தோழியுந் தொழுதார்கள். மனைவியைக் கண்டு மகிழ்ந்த கணவன் தோழியை நோக்கி, "நான் பிரிந்திருந்தபோது நீவிர் யாது நினைந்தீர்" என்று வினாவினான்.

தோழி கூறுவாள்:- "அரசனான ஆதன் அவினி வாழ்க வாழ்க" என்று என் தலைவி கூறினாள்.

இதன் கருத்து:- பகைவரையுங் கள்வரையும் அரசன் அடக்குவனாதலின் அரசன் வாழ்ந்தால் பகைவரும் கள்வரும் வாழமாட்டார்கள். அதனால், வெளியே சென்றுள்ள கணவனுக்குப் பகைவராலும் கள்வராலும் இடர் விளையாது; கணவனுடைய நலங்கருதி அரசனை வாழ்த்தினாள். "வேந்தனும் ஓங்குக" என்ற தமிழ்மறையைக் கருதுக.

"பூத்தலைமட்டும் உடைய கரும்பும், பூத்தல் காய்த்தல் என்ற இரண்டையும் உடைய நெல்லும் விளையும் கழனிபோல் நின் மார்பு பொதுவாகக் கூடாது என்று நான் வேண்டினேன்" என்றாள்.

இதன் கருத்து:- கரும்பு பூக்குமேயன்றிக் காய்க்காது. அதுபோல் பொதுமாதர் பூப்புக்குரியரேயன்றிக் காய்த்தலாகிய மகப்பேற்றுக்கு உரியராகார். நெல் பூக்கவும் செய்யும்; காய்க்கவும் செய்யும்; அதுபோல் மனைவி பூப்புக்கும் மகப்பேற்றுக்கும் உரியவள். கரும்பு பொது மாதர்க்கு உவமை; நெல் மனைவிக்கு உவமை. வயல், கரும்பு நெல், என்ற இரண்டும் விளைய இடந் தருகின்றது. அதுபோல் ஆடவன் மார்பு பொதுமாது தரும பத்தினி என்ற இருவருந் தழுவ இடந்தரக்கூடாது.

இந்த அழகிய கருத்து அடங்கிய பாடலை, சங்க இலக்கியங்களுள் ஒன்றாகிய ஐங்குறுநூறு கூறுமாறு காண்க.

வாழி ஆதன் வாழி அவினி
பகைவர்புல் லார்க பார்ப்பார் ஒதுக.
எனவேட் டோளே யாயே; யாமே
பூத்த கரும்பின் காய்த்த நெல்லின்
கழனி யூரன் மார்பு
பழனமா கற்க எனவேட் டோமே.

தவ மாதவங்கள் பயில்:-

தவம், பொது, சிறப்பு என இருவகைப்படும். தனது ஆன்மா உய்யவேண்டும் என்று செய்வது பொதுத் தவம்; உலகம் உய்யவேண்டும் என்று செய்வது சிறப்புத்தவம். அன்றியும் காமியப்பயன் கருதிச் செய்வது பொதுத் தவம்; பயன் குறியாது செய்வது சிறப்புத்தவம்.

அர்ச்சுனன், துருவர் முதலியோர் பயன் கருதித் தவஞ் செய்தனர். அகத்தியர், வசிட்டர், காசிபர் முதலியோர் பயன் குறியாது உலகநலங் கருதித் தவஞ் செய்கின்றனர். எனவே, தவம் மாதவம் என இருவகைப்படும் என்க.

அடியார் கணங்கள்:-

கடல் கடப்பவனுக்கு மரக்கலம் எத்துணை இன்றி யமையாததோ, மாடிமீது ஏறுபவனுக்கு ஏணி எப்படியோ அப்படி முத்தியுலகஞ் சேர விரும்புவோருக்கு அடியார் திருக்கூட்டம் என உணர்க. அடியவர் உறவே எல்லா நலங்களுக்கும் மூல காரணமாகும். அடியார் உறவே வேண்டும் என்று அருணகிரி நாதர் பல இடங்களில் வேலவனை வேண்டுகின்றனர்.

"கூடு கொண்டுழல் வேனை யன்பொடு
ஞான நெஞ்சினர் பாலி ணங்கிடு
கூர்மை தந்தினி யாள வந்தருள் புரிவாயே"

"அடியார்வாழ்
சபையி னேற்றியின் ஞானா போதமு
மருளி யாட்கொளு மாறே தானது
தமிய னேற்குமு னேநீ மேவுவ தொருநாளே"

"உருகியு மாடிப் பாடியு மிருகழல் நாடிச் சூடியு
முணர்வினோ டூடிக் கூடியும் வழிபாடுற்
றுலகினொ ராசைப் பாடற நிலைபெறு ஞானத் தாலினி
உனதடி யாரைச் சேர்வது மொருநாளே"
"உரையையு மறிவையு முயிரையு முணர்வையு
முன்பாத கஞ்ச மலர்மீதே
உரவொடு புனைதர நினைதரு மடியரொ
டொன்றாக என்று பெறுவேனோ"

தயவாய் மகிழ்ந்து தினம் விளையாட:-

*அடியவரது கருணையைப் பெற்று நாடோறும் அந்த அடியார் திருக்கூட்டத்துடன் பாடியாடுவதே முத்தியின்பத் தினும் மேலான இன்பமாகும்.*

தமியேன்:-

*தமியேன் - துணையில்லாதவன். "தமியன் போனான்" (கம்ப ராமாயணம்)*

"தூவிக் குலமயில் வாகன னேதுணை யேதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக்கொடிபோல்
பாவித் தனிமனந் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே"
*- அலங்காரம்*

மலங்கள்:-

*ஆணவம், கன்மம், மாயை என்று மலம் மூவகைப்படும் என்க. ஆணவம் அநாதியே அரிசிக்குத் தவிடுபோல் உளதானது; கன்மமும் மாயையும் இடையில் சேர்ந்தவை; ஆகந்துக மலம் எனப்படும்.*

இருவினை:-

*நல்வினை தீவினை யெனப்படும் இரு வினைகளும் பிறவிக்கு*

ஏதுவென்க. நல்வினை பொன் விலங்குபோலும், தீவினை இருப்பு விலங்குபோலும் என்று அறிக.

**நோய்:-**

உயிருக்குத் தீராப் பிணியாக நின்று பெருந் துன்பத்தைத் தருவது பிறவி நோயாகும். பிறவிநோயைத் தீர்க்கும் பெரு மருத்துவர் முருகவேளேயாகும்.

"பதியான திருத்தணி மேவு
சிவலோக மெனப்பரி வேறு
பவரோக வயித்திய நாதப் பெருமாளே"

-திருப்புகழ்

**ததிநாளும் வந்தது:-**

ததி – சமயம்; நாள் – தினம். "நாளும் நேரமும் ஒத்து வந்தன; ஆதலின், இனியுங் காலந் தாழ்க்காமல் அடியேன் முன் வர வேணும்" என்று வேண்டுகின்றனர்.

**உவகாரி:-**

உயிர்களுக்கெல்லாம் தனுகரணபுவன போகங்களை நல்கி அம்மை உபகரிக்கின்றனள். முடிவில் சிவத்தைச் சாரவும் உபகரிக்கின்றவள் அத்தாயே என அறிக. அருளே சத்தியென வுணர்க; "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்ற மணிவாசகத்தை யுன்னுக.

"மெய்யருளாந் தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடி" என்பார் பட்டினத்துப் பிள்ளையார்.

**கலியாணி:-**

ஈறில்லாதவன் ஈசன் ஒருவனே யாதலின் ஈசனுடைய திருத்தேவியார் நித்திய மங்கள கல்யாணியாக விளங்குகின்றாள்.

**ஒளிரானையின் கரமில்.....ஒருநாள் பகிர்ந்தவுமை:-**

கரத்தில் என்ற பதம், அத்துச்சாரியை கெட்டுச் சந்தத்தை நோக்கி கரமில் என வந்தது. மகதி வீணையையுடைய நாரத முனிவர் தவத்திற் பெற்ற அரிய மாதுளங்கனியைச் சிவ பெருமானிடந் தந்து வணங்கினார். அதனைக் கணபதியும் கந்த வேளும் கண்ணுதற் கடவுளைக் கேட்டனர். "உலகை ஒரு நொடியில் வலம்வந்தவனுக்கே இக் கனி உரியது" என்று

விரிசடை விமலன் விளம்பியருளினார். அறுமுகப் பரமன் அகில உலகங்களையும் ஒரு நொடியில் வலம் வந்தனர். ஐந்து கரத்தண்ணல் தந்தையை வலம் வந்தனர். கணபதி கனி பெற்றார். பன்னிருகைப் பரமன் பரமசிவத்தால் "பழம் நீ" என்று பகரப் பெற்றார்.

"வாரண முகன்தனது தாதையை வலஞ்சுழல
வாகைமயில் கொண்டுலகு சூழ்நொடி வருங்குமரன்".

-திருவகுப்பு

## இவ்வரலாற்றின் நுண்பொருள்

ஒரு கனியை இருவரும் விரும்பினால் கனியைப் பகிர்ந்து தரலாகாதோ? அகில வுலகங்களையும் ஒருகணத்தில் ஆக்கியும் அளித்தும் நீக்கியும் ஆடல் புரிகின்ற எல்லாம் வல்ல இறைவர் மற்றொரு கனியை உண்டாக்கித் தரலாகாதோ? காரைக்கால் அம்மையாருக்கு ஒரு கனிக்கு இருகனிகளை வழங்கிய வள்ளல் அன்றோ அவர்! தம்பியே கனி பெறுக என்று தமையனாரும், தமையனே கனி பெறுக என்று தம்பியாரும் சமாதானமடைந்து ஒற்றுமையுறலாகாதோ? கேவலம் ஒரு கனி காரணம் அகில உலகங்களையும் ஒரு நொடியில் வலம்வருவது முயற்சிக்குத் தக்க ஊதியமாகுமா? சகல வல்லபமும் உடைய வல்லபை கணபதிக்கு உலகை வரும்வரும் வன்மையிலதா? சிவத்தை வலம் வருவதே உலகை வலம் வருவது என்ற தன்மை அறிவின் வடிவாய அறுமுகவேள் அறியாததா? இன்னோரன்ன பல ஐயங்கள் நிகழுமன்றோ? ஆதலின், இதன் நுண்பொருளை விளக்குதும். அன்பர்கள் கூர்ந்து உன்னியுணர்க.

சிவம் என்ற ஒன்றினுள் எல்லாவற்றையும் காணுந் தன்மை ஒன்று.

எல்லாவற்றினும் சிவத்தைக் காணுந்தன்மை மற்றொன்று.

இதனைத்தான் ஆனைமுகன் ஆறுமுகன் என்ற இரு வடிவங்களாக நின்று ஒரு பரம் பொருள் நமக்கு உணர்த்தியது.

அரும்பு– சரியை; மலர் – கிரியை; காய் – யோகம்; கனி – ஞானம். எனவே, சிவத்தின்கண் இருந்தது ஞானம் என அறிக. ஞானத்தில் விருப்பம் ஏற்படவேண்டும் என்பதைத் தெரிவிக்க, விநாயகரும் வேலவரும் அக்கனியை விரும்பியருளினார்கள். ஞானத்தைச் சிதைக்க முடியாதென்பதைத் தெளிவாக்குகின்றது அக்கனியை அரனார் சிதைத்துத் தராமை; சிவத்திற்கு அந்நியமாக

வேறு இன்மையைத் தெரிவிக்க விநாயகர் விமலனை வலம்வந்து ஞானமாகிய கனியைப் பெற்றனர். "எல்லாம் அவனே" என்பதைத் தெரிவிக்க வடிவேற்பரமன் உலகை வலம்வந்து தாமே ஞானக்கனி யாக நின்றனர். ஞானமே அவர், ஞானபண்டிதன்; ஞானந்தானுரு வாகிய நாயகன்; ஞானமாகிய கனியைத் தாங்கும் விநாயகர் ஞானாகரர்.

விநாயகர் வேறு முருகர் வேறு என்று மலையற்க. ஐங்கரனும் அறுமுகனும் ஒன்றென உணர்க. பாலும் சுவையும்போல் என்று அறிக. பால் விநாயகர்; பாலின் சுவை கந்தவேள். சுவையைப் பால் தாங்கி நிற்கின்றது. அதுபோல் ஞானக் கனியை விநாயகர் தாங்கி நிற்கின்றனர்.

பொன்னும் பணியும் போல் சிவமும் சத்தியும் தாதான் மியமானபடியால், கனியைத் தந்த சிவத்தின் செயலை உமையின் செயலாக ஈண்டுக் கூறப்பட்டது.

அவமே பிறந்த எனை இறவாமல் அன்பர்புகும்
அமுதாலயம் பதவி யருள்வோனே:-

அருணகிரிநாதர் அளவற்ற தவம்புரிந்தவராதலின் அறுமுகப் பரமனது அருளால் இறவாத இன்பத்தை எளிதிற் பெற்றனர்.

பிரபுடதேவனது கண்மலரை நல்க விண்மலர் கொணரு வான் வேண்டிக் கிளியுருவமுற்று, விண்ணுலகெய்தித், தண்மலர் கொணர்ந்து நல்கி, காவலன் கண்மலர் தந்து, கிளியுருவுடனேயே ஒளியுருவம் பெற்றனர்.

"கூகா வெனஎன் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா" -அநுபூதி

"ஏழையினி ரட்டைவினை யாயதொரு டற்சிறையி
ராமல்விடு வித்தருள்நி யாயக்காரனும்"
-வகுப்பு

அழகா:-

முருகு அழகு. முருகன் அழகுத்தெய்வம். "முழுது மழகிய குமரன்" என்பார் பிறிதொருபாடலில்.

"அறமு நிறமு மயிலு மயிலு
மழகு முடைய பெருமாளே"

*தமது அழகினால் மன்மதனை ஏளனஞ் செய்கின்றா ராதலின் குமாரன் எனப்பட்டனர்.*

*ஆயிரங்கோடி மன்மதர்களின் அழகுகள் யாவும் திரண்டு உருண்டு ஒன்றுபட்டு நின்றாலும் அவை முருகவேள் திருவடியின் நுனியில் உள்ள அணுத்துணை அழகுக்கு நிகராகா. குமரனை நேராகக் கண்ட சூரபன்மன் கூறுகின்றான்.*

ஆயிரங் கோடி காமர் அழகெலாந் திரண்டொன் றாகி
மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்
தூயநல் லெழிலுக் காற்றா தென்றிடி னினைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.

குறிஞ்சிமகிழ் அயிலா:-

*நிலத்தை ஐந்தெனப் பிரித்தனர் தொல்லோர்; குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை யென்ப; குறிஞ்சி நிலத் தெய்வம் குமரவேள்.*

"குறிஞ்சிக் கிழவனென் றோதுங் குவலயமே" *-அலங்காரம்*

"விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ"
*-திருமுருகாற்றுப்படை*

## கருத்துரை

*உமைபாலா! குறிஞ்சிக்கிழவ! மாதர் மயலை யொழித்து, அடியார் திருக்கூட்டத்துடன் கூடி இன்புற அருள்புரிவீர்.*

## 30

சூதினுண வாசைதனி லேசுழலு மீனதென
தூசுவழ கானவடி வதனாலே
சூதமுட னேருமென மாதர்நசை தேடுபொரு
ளாசைதமி லேசுழல வருகாலன்

ஆதிவிதி யோடுபிற ழாதவகை தேடியென
தாவிதனை யேகுறுகி வருபோது
ஆதிமுரு காதிமுரு காதிமுரு காயெனவு
மாதிமுரு காநினைவு தருவாயே

ஓதமுகி லாடுகிரி யேறுபட வாழசுரர்
ஓலமிட வேயயில்கொ டமராடி
ஒநமசி வாயகுரு பாதமதி லேபணியும்
யோகமயி லாவமலை மகிழ்பாலா

நாதரகு ராமஅரி மாயன்மரு காபுவன
நாடுமடி யார்கள்மன துறைவோனே
ஞானகுற வானைகண வாமுருக னேயமரர்
நாடுபெற வாழவருள் பெருமாளே.

## பதவுரை

ஓதமுகில் ஆடு கிரி யேறுபட - கடல்நீரை முகந்த மேகம் தவழ்கின்ற (கிரவுஞ்ச) மலை இடிபடவும், வாழ் அசுரர் ஓலம் இட - நெடுங்காலமாக வாழ்ந்த அரக்கர்கள் ஓ என்று கதறும் படியும், அயில்கொடு அமர்ஆடி - வேலாயுதத்தைத் திருக்கரத்தில் கொண்டு போர் செய்து வென்று, ஓம் நமசிவாய குரு - ஓம் நமசிவாய என்ற பஞ்சாக்கரப் பொருளாகிய பரமேசுரனுடைய, பாதம் அதிலே பணியும் - திருவடியிலே தொழுத, யோக மயிலா - யோகநிலையைக் கூட்டுவிக்கின்ற மயிலை வாகனமாக வுடையவரே! அமலை மகிழ்பாலா - உமாதேவியார் மகிழ்ந்து பெற்ற திருக்குமாரரே! நாத ரகுராம - உலகங்கட்குத் தலைவரும், ரகு குலத்தில் வந்த ராமரும், அரி - பாவத்தைப் போக்குபவரும், மாயன் - மாயையில் வல்லவருமாகிய நாராயணருடைய, மருகா - திருமருகரே! புவனம் நாடும் அடியார்கள் மனது உறைவோனே - உலகம் மதித்து எண்ணுகின்ற அடியவர்களுடைய உள்ளத்தில் உறைகின்றவரே! ஞான குற ஆனை கணவா - ஞானமே ஒரு வடிவாகக் குறவர் குலத்தில் வந்த பெண்யானை போன்ற வள்ளி யம்மையாரது கணவரே! முருகனே - முருகப்பெருமானே! அமரர் நாடு பெற வாழ அருள் - தேவர்கள் தங்கள் பொன்னாட்டைப் பெறவும் பெற்று அதில் நிலைபேறாக வாழவும் அருள்புரிந்த, பெருமாளே - பெருமைமிகுந்தவரே! சூதின் உணவு ஆசை தனிலே - சூதாக அமைக்கும் உணவின் மீது வைத்த ஆசை யினாலே, சுழலு மீனது என - இங்கும் அங்குமாக ஓயாது அலைகின்ற மீனைப்போலே, தூசு அழகு ஆன வடிவு அதனாலே - ஆடையினால் அழகு செய்து நல்ல உருவத்துடன் இருப்பத னால், சூதம் உடல் நேரும் என - அவர்கள் உடம்பு மாந்தளிரை நிகர்க்கும் என்று கூறி, மாதர் நசை - பெண்கள் மீது வைத்த

ஆசை இவைகளில் அடியேன் உழன்றுகொண்டு இருக்கும்போது, வருகாலன் - முடிவில் வரக்கூடிய காலன் என்பவன், ஆதி விதியோடு - ஆதியிலேயே விதித்த விதியின்படி, பிறழாதவகை தேடி - அதில் மாறுபடாத வண்ணம் என்னைத் தேடிக்கொண்டு வந்து, எனது ஆவிதனையே குறுகி வருபோது - அடியேனுடைய உயிரைப் பற்ற நெருங்கிவரும்போது, ஆதி முருகா! ஆதி முருகா! ஆதி முருகா எனவும் - ஆதி முருகா! என்று உமது திருநாமத்தைக் கூறித் துதிக்க, ஆதி முருகா நினைவு - முதற் பொருளாகிய முருகக் கடவுளே! நல்ல நினைவை, தருவாயே - அடியேனுக்குத் தந்தருள்வீர்.

## பொழிப்புரை

கடல்நீரை முகந்த மேகந் தவழ்கின்ற உயர்ந்த கிரவுஞ்ச மலையிடிபடவும், பலகாலமாக வாழ்ந்த அசுரர்கள் ஓலமிட்டு மடியவும், வேலாயுதத்தைக் கொண்டு போர் செய்து வென்று மீண்டுபோய் ஐந்தெழுத்தின் பொருளாக விளங்கும் சிவபெருமானை வணங்கிய யோக நிலையை நல்கும் மயில்வாகனரே! அம்பிகை மகிழும் அருட்புதல்வரே! உலகங்கட்குத் தலைவரும் ரகு குலத்தில் ராமராக வந்தவரும் பாவத்தைப் போக்குபவரும் மாயையில் வல்லவருமாகிய நாராயண மூர்த்தியின் திருமருகரே! உலகங்கள் புகழ்ந்து மதிக்கின்ற அடியார்களுடைய உள்ளத்தில் உறைபவரே! ஞானமே வடிவாகக் குறவர் குலத்தில் வந்த பிடி யானை போன்ற வடிவுடைய வள்ளியம்மையாரது மணவாளரே! முருகப் பெருமானே! தேவர்கள் தங்கள் பொன்னுலகம் பெற்று வாழுமாறு அருள்புரிந்த பெருமிதமுடையவரே! சூதாக வைக்கும் உணவின் மீது ஆசைகொண்டு ஓயாது உழல்கின்ற மீனைப்போலே! ஆடைகளால் அலங்கரித்து அழகு செய்வதனால் பெண்கள் உடம்பு மாந்தளிர் போன்றது என்று கூறி மாதராசையிலும் பொருளாசையிலும் உழன்று திரிகின்றபோது, முடிவில் வருகின்ற காலன் என்ற கூற்றுவனுடைய அமைச்சன், முதல் நாள் எழுதிய விதிப்படி மாறுபாடின்றி என்னைத் தேடி உயிரைப் பற்றுதற்காக வரும்போது ஆதி முருகா! ஆதி முருகா! ஆதி முருகா! என்று அடியேன் உமது திருநாமத்தைக் கூறுகின்ற தகவையும் நினைவையும் ஆதி முருகா! அடியேனுக்குத் தந்தருள்வீர்.

## விரிவுரை

**சூதினுண வாசைதனிலே சுழலு மீனதென :**

மனிதனுக்கு உணவு நியதி இன்றியமையாதது. வாழ்வதற்காக உண்ணவேணும்; உண்பதற்காக வாழக்கூடாது. பசிக்குச் சாப்பிட வேணும்; ருசிக்குச் சாப்பிடக் கூடாது. நாவுக்கு அடிமையாகக் கூடாது.

முன் உண்டது நன்றாகச் செமித்த பின்னரேயே அளவறிந்து உண்ணவேணும். அவ்வாறு உண்போர் நெடுங்காலம் வாழ் வார்கள்.

அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு. – *திருவள்ளுவர்*

காலத்தையும் இடத்தையும் உடல் நிலையையும் நன்கு பார்த்து உணவை ஆய்ந்து துவரப் பசித்தபின் உண்ண வேண்டும். அவ்வாறு உண்போன் நோய், அகால மரணம் முதலிய இடர்களுக்கு ஆளாக மாட்டான்.

அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. – *திருவள்ளுவர்*

உண்ணப் போகும்போது தூய்மையாக இருந்து ஆறுத லுடன், வேகமின்றி, வீண்பேச்சுப் பேசாமல், இடையிடையே தண்ணீர் பருகாமல், நன்கு மென்று அமைதியாகச் சாப்பிட வேண்டும். தண்ணீருக்கும் காற்றுக்கும் சிறிது இடம்வைத்து உண்ண வேண்டும். தலையணைக்குப் பஞ்சடைப்பதுபோல் வயிறு புடைக்க உண்ணக்கூடாது. ஓர் உணவுக்கும் மறு உணவுக்கும் இடையே அமுதமே யானாலும் அருந்தக் கூடாது. சிறிது குறைவாகவே உண்பான் இன்பமாக இருப்பதுபோல், அதிகமாக உண்பான் நோயினால் துன்புறுவான்.

இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய். – *திருவள்ளுவர்*

அன்ன விசாரம் அதுவே விசாரமாக இருக்கக்கூடாது. பசி யாறிய பின்னும் அடுத்த உணவைப் பற்றிச் சிந்திக்கக் கூடாது. பகலில் உண்ணும்போதே, "இடைவேளைக்கு என்ன செய்கின் றாய்? இரவுக்கு என்ன தயாரிக்கப் போகின்றாய்'' என்று கேட்கின்றார்கள். இது உணவு ஆசையை அறிவிக்கின்றது.

*திருவருள் சிந்தனையுடன் ஒருமையுடன் உணவு செய்ய வேண்டும்.*

*கிழக்கே நோக்கி யுண்பார்க்கு ஆயுள் வளரும்; மேல்பால் நோக்கி யுண்பார்க்குச் செல்வம் வளரும்; தென்பால் நோக்கி யுண்பார்க்குப் புகழ் வளரும்; வடபால் நோக்கி யுண்பார்க்கு நோய் வளரும்.*

கீழ்பால் நோக்கி யினிதுண்டார்க் காயுள் வளரும் கிளர்நிதியம்
தாழ்வின் றுயரும் குடதிசையே நோக்கி யருந்தில் தணப்பருஞ்சீர்
ஊழில் பெருகும் தென்திசையை நோக்கி யருந்தில் ஒருகாலும்
வாழி மாந்தர் வடதிசையை நோக்கி யருந்தல் மாண்பன்றே

*– கூர்மபுராணம்*

*உணவினாலேயே குணங்கள் மாறுபடுகின்றன. இலைக்கறி, அவரை, துவரை, அவல், பொறி முதலியன சத்துவ குணத்தை வளர்க்கும்; பூண்டு, வெங்காயம், முள்ளங்கி, சுரை முதலியன ராஜஸ குணத்தை வளர்க்கும்; பிண்ணாக்கு, பழங்கறி, எருமைத் தயிர், புலால் முதலியன தாமத குணத்தை வளர்க்கும்.*

*புல்லுண்ணுகின்ற ஆடு, மாடு, யானை முதலியன மந்தை மந்தையாக உலாவி, கலந்து வாழ்வதைக் காண்க. புலால் உணவு உண்ணும் புலி, சிங்கம், நாய் முதலியன ஒன்றைக் கண்டால் ஒன்று சீறியும், கடிக்கப் போயும் இகலுவதையுங் காண்க.*

*ஆதலால், ஒவ்வொருவரும் உணவு நியதியைக் கடைப்பிடிக்க வேண்டும்.*

*தண்ணீரில் பல உயிர்கள் வாழுகின்றன. சூதாக உணவை இரும்பு முள்ளில் கட்டித் தண்ணீரில் விட்டு அசைப்பார்கள். தண்ணீரில் வாழுகின்ற நண்டு, தவளை முதலியன உயிர்கள் அத் தூண்டிலில் விழுவதில்லை. ஏன்? அவைகளுக்கு உணவு நசை கிடையாது. உணவு விருப்பத்தால் பசி இருப்பினும் இல்லை யேனும் இடையறாது தண்ணீரில் எது கிடைக்குமோ என்று அலைந்த வண்ணமாக இருக்கும் மீன் மட்டும் அத் தூண்டிலில் விழுந்து துன்பப்படுகின்றது.*

*ஆகவே, மீனைப்போல் நாம் உணவு நசையுடன் திரியக் கூடாது.*

தூசு வழகான வடிவதனாலே :

*ஆண்களும் பெண்களும் தங்களை நல்ல ஆடைகளால்*

அலங்கரித்துக் கொள்வர். ஆடையும் மானத்தை மறைப்பதற்கும், உடல் நல்த்திற்குமாகவே இருக்க வேண்டுமேயன்றி, ஆடம்பரத் திற்கும் சுகக் கேடுக்குமாக அமையக் கூடாது. மிக விலை உயர்ந்த ஆடைகளைத் தோய்க்க முடியாது. உடுத்து உடுத்து மடித்து வைப்பர். வேர்வையால் வரும் நச்சுக் கிருமிகள் வளர்ந்து நோய் வளரும். நாளும் நாளும் தோய்த்து உடுக்கும் உடையால் நலம் பெருகும். ஆடம்பரமான ஆடைகளையெடுப்பதனால் பணம் விரையமாவதுடன் பிறர் மனமும் பழுதுபடும். பிறர் உள்ளத்தை ஈர்க்கும்படியாகவும் உடுக்கக் கூடாது. உடை ஓர் அமைதியை உண்டுபண்ண வேண்டும். முக்கியமாக தனவந்தர்கள் எளிய உடையை உடுத்திக் காட்ட வேண்டும். தனவந்தர்கள் உயர்ந்த உடையை உடுப்பதனால் அதைக் கண்டு ஏழைகளும் கடன்பட்டு உயர்ந்த உடையை வாங்கி உடுக்கின்றார்கள். ஆகவே, ஏழை எளியவர்கட்கு வழிகாட்டியாக தனவந்தர்கள் எளிய உடையை உடுக்க வேண்டும். பட்டைவிடப் பருத்தி உடையே உடல் நலத்திற்கு ஏற்றது.

சிலர் தீப்பிடித்தாலும் விரைவில் அழிக்க முடியாத முறையில், உதிரவோட்டம் நன்கு ஓடாதவாறு அழுத்தமாகவும் உடுத்து உடல் நலத்தைக் கெடுத்துக் கொள்ளுகின்றார்கள்.

**சூதமுட னேருமென மாதர்நசை :**

சூதம் - மாமரம்.

இங்கே இது மாந்தளிரைக் குறிக்கின்றது. "ஆலிடை துயின்றான்" என்புழி, ஆலிலை யென்று கொள்வதுபோல் என்றறிக.

பெண்களின் உடம்பு மாந்தளிரைப்போல் மென்மையாகவும் பளபளப்பாகவும் இருக்கின்றதென்று எண்ணியும் இயம்பியும், அம் மாதரையடைய முயன்றும் வாணாளை வறிதாக்கி மாந்தர் மடிகின்றனர். பொன்னாசையிலும் மண்ணாசையிலும் பெண் ணாசையே வன்மையானது. பெண்ணாசையால் பொன்னையும் பொருளையும் தேடுகின்றான். தேடிக் கோடிக்கணக்காக ஈந்து வறுமை யெய்திச் சிறுமைப்படுகின்றான். ஆனபடியால் அவ் வாசையையகற்றி நலம் பெறவேண்டும்.

**தேடு பொருளாசை தமிலே சுழல :**

மனிதன் உண்டு உறங்கிய நேரம்போக மிகுதிநேரம் முழுவதும்

பொருள் தேடுவதிலேயே கழிக்கின்றான். கடவுள் நாம் செய்த அளவற்ற புண்ணியத்தில் கொடுத்த இந்த அரிய உடம்பைக் கூடப் பொருளாசையால் கெடுத்துக் கொள்ளுகின்றான். வயிற்றுக்காகக் குறிப்பிட்ட நேரத்தில் மட்டும் உழைக்கின்றார்கள் ஏழைகள். தனவந்தர்கள் இரவு பகலாகச் சிந்தாகுலமுற்று அலைகின்றார்கள். உடல் நலம் பேணாது உழல்கின்றார்கள்.

வருகாலன் :

*காலன் - இயமனுடைய அமைச்சன்.*

*காலமறிந்து உயிர்களைப் பற்ற வருவதால் இப்பேர் பெற்றான். மிக்க பாவஞ் செய்தவர்களைப் பற்ற இயமனுடைய தூதர்கள் வருவார்கள். புண்ணியம் மிகுதியாகவும் பாவஞ் சிறிதாகவும் செய்த தக்காரைப் பற்றக் காலன் வருவான். மிகப் பெரும் புண்ணியஞ் செய்து ஒன்றிரண்டு பாவஞ் செய்தாரைப் பற்ற இயமன் என்ற தலைவனே வருவான்.*

*உடம்பு முகந்துகொண்ட வினைகளைத் துய்த்து முடிந்தவுடன் அவ்வுயிர்கள் கடமை மறந்து மடமையுடன் வாழ்ந்த மறச்செயலைக் கருதி, காலனும், அவனுடைய தூதர்களும் சினத்துடன் விழிகளில் தீப்பொறி சிதற பற்களைக் கடித்துப் பாசக் கயிறும் தண்டுந் தாங்கி கரிய வுருவத்துடன் வருவார்கள்.*

முதலவினை முடிவிலிரு பிறையெயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல வருகால தூதர் — *திருவகுப்பு*

ஆதிவிதியோடு பிறழாதவகை தேடி யெனதாவி தனையே
குறுகி வருபோது :

*ஆதியிலேயே பிறக்கும்போது இவன் இத்தனைக் காலந்தான் வாழ வேண்டும் என்று அயன் எழுதி விடுகிறான். அந்த விதிப்படிதான் அனைவரும் வாழ்வார். அதனை ஒருவரும் மாற்றியமைக்க முடியாது.*

முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லு நீர்மையார்

— *கந்த புராணம்*

அதிசயம் ஒருவரால் அமைக்க லாகுமோ
துதியறு பிறவியின் இன்பதுன் பந்தாம்
விதிவசம் என்பதை மேற்கொ ளாவிடின்
மதிவலி யால்விதி வெல்ல வல்லமோ

– *கம்ப ராமாயணம்*

எனவே, விதிவழி இயமனுடைய அமைச்சன் காலன் என்பான் நம் உயிரைப் பற்ற வருவான். அவ்வாறு வருகின்ற காலத்தில் என்ன செய்ய வேண்டும்?

ஆதிமுருகா.... எனவும் ஆதிமுருகா நினைவு தருவாயே :

"முருகா முருகா" என்ற இறைவனுடைய திருநாமத்தைக் கூறவேண்டும். "மொழிக்குத் துணை முருகா எனும் நாமங்கள்" என்கின்றார் கந்தரலங்காரத்தில். "பெரும் பெயர் முருக" என்கின்றார் நக்கீரர். ஆகவே, "முருகா முருகா" என்று கூறினால் உய்வுண்டு. உயிர் பிரியும்போது கருவி கரணங்கள் யாவும் ஒடுங்கி விடும். ஆதலால், நம்மால் இறைவன் திருநாமத்தைக் கூற முடியாது. அதனால், அவ்வாறு கூறும் ஆற்றலை ஆண்டவனே தர வேண்டும். "ஆதிமுருகா! ஆவி பிரியும்போது ஆதிமுருகா! ஆதிமுருகா! ஆதிமுருகா என்று அழைக்க எனக்கு நினைவைத் தரவேணும்."

ஓதமுகிலாடுகிரி..... யோக மயிலா :

கிரவுஞ்சமலையினாலும், தாரகன், சிங்கமுகன், சூரபன்மன் முதலிய அசுர வேந்தர்களாலும் அமரர்கள் அளவற்ற அல்லலுற்று அருள் கடலாகிய அரனாரிடம் முறையிட்டனர். சிவமூர்த்தி முருகவேளைத் தமது நெற்றிக் கண்ணினின்றுந் தோற்றுவித்தனர்.

அந்திவண்ணர் கந்தவேளைச் சூராதியவுணரை ஒடுக்குவதற் பொருட்டு விடை கொடுத்து அனுப்பினார். முருகவேள் வேற்படை தாங்கிச் சென்று, சூராதி அவுணர்களை அழித்து, அமரர்களைப் பொன்னுலகத்தில் குடியேற்றி, திருக்கைலாய மலை சென்று, பிதாவாகிய சிவபெருமானை வணங்கினார். இந்த அழகிய வரலாற்றை இந்த அடியில் அழகாக அடிகளார் கூறி யுள்ளார்.

மயில் விந்து தத்துவம், அது சிவயோகத்திற்குத் துணை புரிவதனால் "யோக மயிலா" என்று கூறியருளினார்.

நாடுமடியார்கள் மனதுறைவோனே :

*இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பான் எனினும் அடியார்கள் உள்ளத்தில் தயிரில் நெய்போல் விளங்கித் தோன்று கின்றான். ஆலயங்களிலேயுள்ள மூர்த்திகளிடத்தேயும் பூஜை புரியும் வேளையிலேயே சிறப்பாக விளங்கித் தோன்றுகின்றான். ஆகவே, அடியார்கள் உள்ளத்தில் எக்காலத்தும் இறைவன் உறைவதால் அடியார்கள் வழிபாடு மிகவும் சிறந்தது எனவுணர்க.*

மருவு மடியார்கள் மனதில் விளையாடு
மரகத மயூரப் பெருமாள்காண்.

## கருத்துரை

*அசுரகுலகாலரே! திருமால்மருகரே! வள்ளி மணவாளரே! உணவாசையினாலும் பெண்ணாசையினாலும் அடியேன் உழலாமல் உனது முருக நாமத்தை எப்போதும் நினைக்க அருள் புரிவீர்.*

## 31

மதிதனை யிலாத பாவி குருநெறி யிலாத கோபி
மனநிலை நிலாத பேயன் அவமாயை
வகையது விடாத பேடி தவநினை விலாத மோடி
வரும்வகை யிதேது காயம் எனநாடும்

விதியிலி பொலாத லோபி சபைதனில் வராத கோழை
வினையிகல் விடாத கூள னெனைநீயும்
மிகுபர மதான ஞான நெறிதனை விசார மாக
மிகுமுன துருப தான மருள்வாயே

எதிர்வரு முதார சூர னிருபிள வதாக வேலை
யியலொடு கடாவு தீர குமரேசா
இனியசொல் மறாத சீலர் கருவழி வராமல் நாளும்
இளமையது தானு மாக நினைவோனே

நதியுட னராவு பூணு பரமர்குரு நாத னான
நடைபெறு கடூர மான மயில்வீரா
நகைமுக விநோத ஞான குறமினுட னேகு லாவு
நவமணி யுலாவு மார்ப பெருமாளே.

## பதவுரை

எதிர்வரும் உதார சூரன் - போரில் எதிர்த்து வந்த சூரபன்மன், இருபிளவது ஆக - இரண்டு பிளவாக விழும்படி, வேலை இயலொடு கடாவு தீர - வேலாயுதத்தை ஒழுங்காக விடுத்தருளிய தீரரே! குமர ஈசா - குமாரக் கடவுளே! இனிய சொல் மறாத சீலர் - இன்சொல்லை மாறாது பேசுகின்ற உத்தமர்கள், கருவழி வராமல் - இன்னொரு கருவிற்சென்று பிறவாதபடி, நாளும் இளமையது தானும் ஆக - எப்போதும் இளமையுடனேயேயிருக்கும்படி, நினைவோனே - நினைத்து அருள்பவரே! நதியுடன் அராவு பூணும் - கங்காநதியுடன் பாம்பையணிகின்ற, பரமர் - சிவபெருமானுக்கு, குருநாதன் ஆன - குருமூர்த்தியாக விளங்கும், கடூரமான நடைபெறு - வேகமாக நடக்கவல்ல, மயில்வீரா - மயிலின் மீது எழுந்தருளிவரும் வீரரே! நகைமுக - எப்போதும் மலர்ந்த முகமாக இருப்பவரும், விநோத - மகிழ்ச்சியுடையவரும், ஞான - அறிவின் வடிவினரும் ஆகிய, குறமினுடனே குலாவு - வள்ளியம்மையாருடன் சேர்கின்ற, நவமணி உலாவு மார்ப - ஒன்பது மணிகள் தவழ்கின்ற திருமார்பையுடையவரே! பெருமாளே - பெருமையின் மிக்கவரே! மதிதனை யிலாத பாவி - அறிவற்ற பாவியும், குருநெறி யிலாத கோபி - குருநாதர் காட்டிய வழியிற் செல்லாத கோபகுணமுடையவனும், மன நிலை நிலாத பேயன் - மனத்தை ஒருவழியில் நிலைநிறுத்தாத பேய் போன்றவனும், அவமாயை வகையது விடாத பேடி - வீணான மாயையின் காரியங்களை விட்டு நீங்காத பேடி போன்றவனும், தவ நினைவு இலாத மோடி - தவத்திலே நினைவு இல்லாத பிணக்குடையவனும், காயம் வரும்வகை இது ஏது என நாடும் விதிஇலி - இந்த உடம்பு எவ்வாறு வந்தது என்ற காரணத்தை நாடும் நாட்டம் இல்லாதவனும், பொலாத லோபி - பொல்லாத உலோப குணமுள்ளவனும், சபைதனில் வராத கோழை - பெரியோர்கள் கூடியுள்ள சபையில் வராத கோழையும், வினை இகல் விடாத கூளன் - வினையின் மாறுபாட்டை விட்டு நீங்காத பயனற்றவனும் ஆகிய, எனை - அடியேனை, நீயும் - தேவரீர், மிகு பரமதான - மிகவுஞ் சிறந்ததான, ஞான நெறிதனை விசாரமாக மிகும் - அறிவு வழியை ஆராய்ச்சியை விளங்கும், உனது ரூபதானம் அருள்வாயே - தேவரீருடைய சொரூபக் கொடையை அருள்புரிவீர்.

## பொழிப்புரை

*போரில் எதிர்த்துவந்த மேன்மையான சூரபன்மனுடைய உடம்பு இருபிளவாகப் போகுமாறு வேலாயுதத்தை ஒழுங்காக விடுத்தருளிய தீரரே! குமாரக் கடவுளே! இனிமையான சொற்களுடன் கூடிய அடியார்களை மீண்டும் பிறவா நலம் அருளி, என்றும் அகலாத இளமையாக இருக்குமாறு அருள்பவரே! கங்கா நதியையும் பாம்பையும் அணிகின்ற சிவமூர்த்திக்குக் குருநாதராக விளங்கும் வேகமான நடையுள்ள மயில் வீரரே! மலர்ந்த முகமும், மகிழ்ச்சியும், ஞானமும் உடைய வள்ளியம்மையாரை மருவுகின்ற நவரத்தினமாலை விளங்கும் திருமார்பையுடையவரே பெருமிதமுடையவரே! அறிவற்ற பாவியும், குருநாதர் காட்டிய வழியில் நிற்காத கோபமுடையவனும், மனத்தை ஒருவழியில் நிறுத்தாத பேய் போன்றவனும், வீணான மாயா சம்பந்தமான காரியங்களை விடாத பேடி போன்றவனும், தவத்திலே கருத்தை வைக்காத பயனற்றவனும், இந்த உடம்பு எவ்வாறு வந்தது என்று கருதாதவனும், பொல்லாத லோபியும், பெரியோர்கள் உள்ள சபையிலே வராத கோழையும், வினையினால் வரும் மாறுபாட்டை விடாத வீணனும் ஆகிய அடியேனுக்கு மிகவும் சிறப்பான வழியில் ஞானவழியின் ஆராய்ச்சியுடன் கூடிய உமது சொரூபதானத்தை அருள்புரிவீர்.*

## விரிவுரை

**மதிதனை யிலாத பாவி :**

*மனிதன் அறிவு நலம் உடையவனாக இருத்தல் வேண்டும்.*

**அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர்.** — *திருக்குறள்*

*அறிவின் தொழில் மனதைப் புலன்வழிச் செல்ல விடாது. ஆனையை அங்குசத்தால் அடக்குவதுபோல் அடக்க வேண்டும்.*

**உரன்என்னும் தோட்டியால் ஓரைந்தும் காப்பான்**
**வரன்என்னும் வைப்புக்கோர் வித்து.**

**சென்ற விடத்தால் செலவிடா தீதொரீஇ**
**நன்றின்பால் உய்ப்ப தறிவு** — *திருக்குறள்*

*இனி, அறிவின் பயன், பிற உயிர்கள் படும் துன்பத்தைக் கண்டு*

உள்ளங் குழைந்து உருகி, அத்துன்பத்தை மாற்ற முற்படுதலேயாம் என உணர்க.

அறிவினால் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போல் போற்றாக் கடை. — *திருக்குறள்*

குருநெறி யிலாத கோபி :

குருவருள் இன்றி நடப்பவன் மாலுமியின்றிக் கடலில் கப்பலில் செல்லுவான்போல் விரைந்து கெடுவான். நூல்கள் கடல் நீர்க்குச் சமானம். விடாய் கொண்டோன் கடல்நீரைப் பருகுவானாயின் விடாய் கூடுமேயன்றிக் குறையாது. கடல் நீரை முகில் உண்டு உவரை மாற்றி நன்னீரைப் பொழியும். அந்த நீரைப் பருகுவோன் விடாய் தணியப்பெறுவான். அதுபோல் கல்வியாகிய கடல்நீரை ஆசிரியனாகிய மேகத்தின்மூலம் அறிய வேண்டும். அதனால் அறியாமையாகிய விடாய் தீரும்.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே. — *திருமந்திரம்*

சகலகலை யெட்டெட்டுமெட்டாத மந்த்ரவாள் :

ஆசாரியன் அருள்பெற்று, உள்ளத்தில் உள்ள ஐயந் திரிபு மயக்கங்களை நீக்கி அமைதியும் தெளிவும் பெற்று, காற்றில்லாத இடத்தில் விளக்கு அசைவற நிற்பதுபோல் நின்று நிலைபெற வேண்டும்.

இந்த உடல் கீழே விழுவது இன்றுதானோ? அல்லது நாளைக்கோ? இன்னும் அரை நாழிகையில் வீழ்ந்தாலும் வீழும். நிச்சயிக்க முடியாது. அவ்வாறு வீழ்ந்தழியுமுன் குருநாதரை அடுத்து, அவருக்கு அனுகூலனாகி நின்று, பாசம் களைய வேண்டுமென்பார் வள்ளலார்.

இன்றைக்கோ நாளைக்கோ இன்னுமரை நாழிகைக்கோ
என்றைக்கோ ஆவி யிழப்பென்று — சென்றிறைஞ்சி
ஆசா ரியனுக் கனுகூல சித்தனாய்
பாசா ரியைக்கழன்று பார்.

உயிர் சித்துப் பொருளேயாகும். அதனிடத்துச் சிவ ஞானம் உண்டு. ஆனால், அது தோன்றாது அரும்பில் மணம்போல் மறைந்திருக்கின்றது.

சூரியகாந்தக் கல்லில் நெருப்பு உண்டு. ஆனால், தோன்று வதில்லை. சூரியகாந்தக் கல்லைச் சூழ்ந்துள்ள பஞ்சைச் சுடுவ தில்லை. சுடுகின்ற ஆற்றல் சூரியகாந்தக் கல்லுக்கு இல்லை. ஆனால், சூரியன்முன் சூரியகாந்தக் கல்லை வைத்துவுடன் அதினின்று ஒரு நெருப்புத் தோன்றிப் பஞ்சை எரித்து விடுகின்றது.

அதுபோல், ஆன்மாவானவன் தன்னைப் பந்தித்துள்ள மலத்தைத் தன்னிடமுள்ள ஞானத்தினால் எரிக்கும் ஆற்றல் அற்று அல்லற்படுகின்றான். சூரியனைப்போன்ற குருநாதர் திருமுன் நிற்பானாயாமாகில், ஆசாரியனுடைய அருளாகிய வெயில் சீடன் மீது பட்டு, அவனிடமுள்ள திருஞானந் தோன்றுதலும், மலமாகிய பஞ்சு துகள்படும்.

சூரிய காந்தமும் சூழ்பஞ்சு போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுடமாட்டா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே. — திருமந்திரம்

சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனா மாசான்வந் தருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் — சிவஞானசித்தியார்

இக்கருத்தையே பத்திரகிரியடிகளும் இனிது கூறுகின்றனர்.

சூரிய காந்தியொளி சூழ்பஞ்சைச் சுட்டாற்போல்
ஆரியன் தோற்றத் தருள்பெறுவ தெக்காலம்

பக்குவமுடைய ஆன்மாக்களுக்கு ஆண்டவனே குருமூர்த்த மாக வருவான். மணிவாசகருக்கும், அருணகிரி நாதருக்கும் அவ்வாறு இறைவன் குருவடிவாக வந்து ஆண்டருளினன்.

கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
— திருவாசகம்

திருவடியும் தண்டையும் சிலம்பும் சிலம்பூடுருவப்
பொருவடிவேலும் கடம்பும் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடிவான வதனங்கள் ஆறும் மலர்க்கண்களும்
குருவடிவாய் வந்து என்உள்ளம் குளிரக் குதிகொண்டவே.
— கந்தரலங்காரம்

**மன நிலை நிலாத பேயன் :**

*மனதை ஒருவழியில் நிறுத்துவதே தலையாய முயற்சி. அம் முயற்சியில் வெற்றி காண்பதே தலையாய வெற்றி.*

*பேய்போல் மனம் காடுங் கரையும் அலைவதனால் பேயன் என்றார்.*

**அவமாயை வகையது விடாத பேடி :**

*அவம் - வீண். மாயை வகை - மாயையினால் விளையும் பொன், பொருள், போகம் முதலியவைகள்.*

*ஆணுமல்லாமல் பெண்ணுமல்லாமல் நிற்கும் பேடிபோல், இம்மைக்கும், மறுமைக்கும் ஆகாதவனாகிக் கெடுகின்றவன்.*

**வரும் வகையிதேது காயம் எனநாடும் விதியிலி :**

*இந்த உடம்பு சடம் ஆதலினால் தானே வராது. உயிர் சித்தாதலின் சடமாகிய உடம்புடன் தானே புணராது. இறைவன் தருவராயின் பாரபட்சமில்லாதவராதலின் எல்லாருக்கும் ஒரு படித்தாகவே அருளுபவர். கையில்லாத உடம்பு சிலருக்கும், காலில்லாத உடம்பு சிலருக்கும், கண்ணில்லாத உடம்பு சிலருக்கும், வாயில்லாத உடம்பு சிலருக்கும் இன்னும் பல வகையான குறைபாடுள்ள உடம்பு சிலருக்கும், அழகிய உடம்பு சிலருக்கும் வருவானேன்? இதற்குத் தக்க காரணம் யாது? இந்த உடம்புடன் புணர்ந்த நாம் இனி என்ன செய்யவேண்டும்? என்ன செய்தால் மீட்டிங்கு வாரா நெறி எய்துவோம்? இறைவனுக்கும் நமக்கும் என்ன தொடர்பு? இந்த உடம்பு பெற்றதன் பயன் யாது? என்பனவாதி நல்ல சிந்தனைகளைச் செய்து, தெளிவு பெற்று உய்தல் வேண்டும்.*

உடம்புவரும் வகையறியீர் உயிர்வகையை யறியீர்
    உடல்பருக்க உண்டுநிதம் உறங்குதற்கே யறிவீர்
மடம்புகுபேய் மனத்தாலே மயங்குகின்றீர் மனத்தை
    வசப்படுத்தீர் வசப்படுத்தும் வழிதுறைகற் றறியீர்
இடம்பெறுபொய் வாழ்க்கையிலே இன்பதுன்ப மடுத்தே
    எண்ணிஎண்ணி யிளைக்கின்றீர் ஏழையுல கீரே
நடம்புரியென் தனித்தந்தை வருகின்ற தருணம்
    நண்ணியது நண்ணுமினோ புண்ணியஞ்சார் வீரே.

*என்று இராமலிங்க அடிகளார் உலகினரை நோக்கி உபதேசிக்கின்றார்.*

பொலாத லோபி :

*மனிதனுடைய தீய குணங்களுக்கெல்லாம் சிகரம் போன்றது உலோப குணம். உலோக குணமுடையார் உலகிற்குப் பெரும் பாரமானவர்கள். அவர்களைச் சுமக்க நிலமகள் வருந்துகின்றாள். இவரை "வஞ்சக லோப மூடர்'' என்று கூறினார் பிறிதொரு திருப்புகழிலே.*

*உலகிலே எல்லாப் பொருள்களும் பயன்படுகின்றன. உலோபி மட்டும் பயன்படுவதில்லை.*

கல் – ஆலயமாகின்றது. கடவுள் வடிவமும் தாங்குகின்றது.

கழுதை – பொதி சுமக்கின்றது.

எருமைக்கடா – நிலத்தை உழுது உதவுகின்றது.

கட்டம் (மலம்) – பன்றிக்கு உணவாகின்றது.

எருது – பொதி சுமக்கும். வண்டிக்கும் ஆகும்.

பிணம் – மறையவர் முதலியோர்க்குப் பொருள்தரச் செய்யும்.

குட்டிச்சுவர் – மாடு தினவு தீர உறைஞ்சுவதற்கும், மறைவுக்குமாகும்.

துடைப்பம் – வீடு கூட்ட உதவும்.

உலோபி – ஒன்றும் உதவான்.

*ஆகவே, அவனுக்கு நிகர் அவனேதான்.*

கல்லா லயமாம் தேவருமாம்
கழுதை கசடர் பொதிசுமக்கும்
கடாவோ உழுது பயிரிடற்காம்
கட்டம் பன்றிக் கிரையாகும்
புல்லே றீசர் வாகனமாம்
பொதியுஞ் சுமக்கும் பிணமெனிலோ
பூசி முடித்து மறையவர்க்குப்
பொருளு மீந்து புகழெய்தும்
மல்லார் குட்டிச் சுவரெனிலோ
மாடு முறைஞ்சும் மறைவாகும்
மதியாத் துடைப்பந் தானெனிலோ
மாட கூடந் தனைவிளக்கும்
அல்லா துலுத்தர் தனக்கிணையாய்
யாரை யுரைப்பன் தலமீதில்
அவனைக் குறித்துக் கூறுமிடத்
தவனுக் கவனே யிணையாமே.

**சபைதனில் வராத கோழை :**

சூதும் வாதும் புரிவதனால் ஆன்றோர்கள் கூடியுள்ள சபையிலே செல்லாதவன்.

அன்றியும் தைரியமின்மையால் சபைக்குச் செல்ல அஞ்சுகின்றவன். சபைக்கோழை என்று பலரால் பரிகசிக்கப்படுகின்றவன்.

பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சும் அவன்கற்ற நூல்.

என்பார் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்.

**வினையிகல் விடாத கூளன்**

கூளம் - குப்பை. பயனற்றவன்.

வினைகளையும் மாறுபட்டவைகளையும் விடாமல் பற்றிக் கொண்டு பன்னாடைபோல் பயன்படாமல் திரிகின்றவன்.

**ரூபதானம் :** ரூபதானம் - சாரூப முத்தியைத் தருதல்.

இறைவனுடைய உருவத்தைப் பெற்று இறைவனுடைய அணுக்காகிச் சதா பேரானந்தப் பெருவாழ்வில் நிற்கும் முத்தி. சிவயோக நெறி நின்றார்க்கு அது சித்திக்கும்.

முத்தி நெறிகள் நான்கு எனப்படும்.

1. தாச மார்க்கம்
2. சற்புத்திர மார்க்கம்
3. சக மார்க்கம்
4. சன்மார்க்கம்

இவைகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும் கூறப்படும். இம்முறைகளையே திருமந்திரம் தெளிவுபடுத்துகின்றது. இம் மார்க்கங்களின் இலக்கணம்.

**தாச மார்க்கம்**

எளியனல் தீபம் இடமலர் கொய்தல்
அளிதின் றொழுகல் அதுதூர்த்தல் வாழ்தல்
பளிமணி பற்றல் பன்பஞ்சன மாதி
தளிதொழில் செய்வது தான்தாச மார்க்கமே

**சற்புத்ர மார்க்கம்**

பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்
ஆசுற்ற நற்றவம் வாய்மைஅழுக் கின்மை
நேசித்திட் டன்னமு நீசித்தி செய்தல்மற்
றாசற்ற சற்புத்திர மார்க்கம் ஆமே.

சக மார்க்கம்

*ஆதார சோதனை யானாடி சுத்திகள்*
*மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி*
*போதா லயத்துட் புலன்கர ணம்புந்தி*
*சாதா ரணங்கெட லாஞ்சக மார்க்கமே.*

சன் மார்க்கம்

*பசுபாசம் நீக்கிப் பதியுடன் கூட்டிக்*
*கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்*
*தொசியாத உண்மைச் சொரூபோ தயத்துற்*
*றசைவான தில்லாமை யானசன் மார்க்கமே.*

*இதை அரும்பு, மலர், காய், கனிக்கு ஒப்பிடுகின்றார் தாயுமானார்.*

விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே.

*காய் முற்றிக் கனியாவதுபோல், யோக சாதனையிற் சித்தி பெற்றார்க்கே ஞானத்தில் இச்சையுண்டாகும். விட்ட குறையால் சில பக்குவ ஆன்மாக்களுக்கு ஞானத்தின்கண் இச்சை யெழுமாயின், அவர்கள் முற்பிறப்பில் யோகானுட்டிப்பிற் சித்தி பெற்றவர்களேயாம்.*

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம்பே ரன்பான
தாகியரும் யோகமுன்னே சான்றோர் பராபரமே. – *தாயுமானார்*

*இந் நான்கு நிலையில் நின்றார் முறையே பெறுமுத்திகள் நான்கு. அவை சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்.*

*சாரூபம் பெற்றார், அங்கிருந்தே மேலும் தவம் செய்து சாயுச்சியம் பெறுவர்.*

இனியசொல் மறாத சீலர் :

*இன்சொல்லை உலகம் விரும்பும். வன்சொல்லை விரும்பாது. இனியவை கூறல் என்றே வள்ளுவர் ஓர் அதிகாரம் வகுத்திருக் கின்றார்.*

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும்.

*வாழ்நாள் முழுவதும் இனிமையாகப் பேசுவோர்க்குப் பாவந் தேயும். புண்ணியம் பெருகும். இம்மை, மறுமை என்ற இருமையிலும் இன்பம் பயக்கும்.*

இன்சொல்வி சாகாக்ரு பாகர செந்திலில் வாழ்வாகி யேயடி
யேன்றனை யீடேற வாழ்வருள் பெருமாளே.

கருவழி வராமல் நாளும் இளமையது தானுமாக நினைவோனே :

*முருகவேள் தன்னுடைய அடியார்களை மீண்டும் பிறவாத தன்மையையருளி, தன்னைப்போல் அவர்களையும் என்றுமகலாத இளமையுடன் தன்னுடைய கந்த வுலகத்திலே இன்புற்றிருக்க அருள்புரிவார்.*

ஞான குறமின் :

*ஞானமே ஒரு வடிவானவர் வள்ளியம்மையார். அதனால், ஞானபண்டிதனுடன் மேவும் பதத்தைப் பெற்றனர். அவர் ஞானாம்பிகை. இவர் ஞான பண்டிதன். வள்ளியம்மையாரைக் குறித்து இங்ஙனமே பல இடங்களில் அடிகள் குறிப்பிடுகின்றார்.*

"சுந்தர ஞான மென்குறமாது"
"ஞான குறமாது" — *திருப்புகழ்*

## கருத்துரை

*சூர சம்மார மூர்த்தியே! சிவகுருவே! வள்ளி மணவாளரே! அடியேனுக்கு உமது ரூபதாரமாகிய சாரூப முத்தியைத் தந்து அருள்புரிவீர்.*

## 32

முருகம யூரச் சேவக சரவண ஏனற் பூதரி
முகுளப டீரக் கோமள முலைமீதே
முழுகிய காதற் காமுக பதிபசு பாசத் தீர்வினை
முதியபு ராரிக் கோதிய குருவேயென்

றுருகியு மாடிப் பாடியு மிருகழல் நாடிச் சூடியு
முணர்வினொ டூடிக் கூடியும் வழிபாடுற்
றுலகினொ ராசைப் பாடற நிலைபெறு ஞானத் தாலினி
உனதடி யாரைச் சேர்வது மொருநாளே

மருகனெ னாமற் சூழ்கொலை கருதிய மாமப் பாதகன்
வரவிடு மாயப் பேய்முலை பருகாமேல்
வருமத யானைக் கோடவை திருகிவி ளாவில் காய்கனி
மதுகையில் வீழச் சாடிய சதமாபுட்

பொருதிரு கோரப் பாரிய மருதிடை போயப் போதொரு
சகடுதை யாமற் போர்செய்து விளையாடிப்
பொதுவியர் சேரிக் கேவளர் புயல்மரு காவஜ் ராயுத
புரமதில் மாபுத் தேளிர்கள் பெருமாளே.

## பதவுரை

*முருக - முருகக் கடவுளே! மயூர சேவக - மயில் மீது ஏறி வருகின்ற வீரரே! சரவண- சரவணப் பொய்கையில் தோன்றிய வரே! ஏனல் பூதரி - தினைப்புனத்தைக் காவல்செய்து மலையில் வாழ் கின்ற வள்ளியம்மையாரது, முகுளம் - அரும்பைப் போன்ற தும், படீரம் - சந்தனம் அணிந்துள்ளதும், கோமள - இளமை யானது மாகிய, முலை மீது முழுகிய காதல் காமுக - தனபாரங் களின் மிசை முழுகிய அன்பு மிக்க ஆர்வலரே! பதிபசு பாசத் தீர்வினை - பதி பசு பாசங்களின் உட்பொருள் முடிவினை, முதிய புராரிக்கு ஓதிய - பழம்பொருளாகிய சிவபெருமானுக்கு உப தேசித்த, குருவே - குருநாதரே! மருகன் எனாமல் - மருமகன் என்று கூடக் கருதாமல், சூழ்கொலை கருதிய - ஆராய்ந்து கொலை செய்யத் திட்டமிட்ட, மாம பாதகன் - மாமனும் பாதகனும் ஆகிய கம்சன், வர விடுமாய பேய் - ஆயர்பாடிக்கு வருமாறு விடுத்த மாயையில் வல்ல பேயாகிய பூதகியின், முலை பருகா - தனங்களைக் குடித்தும் (பாலுடன் உயிரையும் உண்டு) மேல்வரு மதயானை கோடு அவை திருகி - மேலும் மதங்கொண்டு கொல்ல வந்த யானையின் கொம்புகளைத் திருகியெடுத்தும், விளாவில் காய்கனி - மதுகையில் வீழ சாடி - (கன்றினால்) விளாமரத்தை மோதி அதிலுள்ள காய்கனிகள் விழுமாறு வலிமையுடன் செய்து அதை அழித்தும், அசதமா புள் பொருது - அந்தப் பெரிய சிறகுடன் கூடிய பறவையைப் போரிட்டுக் கொன்றும், இரு கோர பாரிய மருதுஇடைபோய் - அச்சத்தைத் தந்து நீளமாக வளர்ந்த இரண்டு மருத மரங்களின் நடுவில் சென்றும், அப்போது சகடு உதையா -அப்போது வண்டி வடிவமாக வந்த அரக்கனை உதைத் துக் கொன்றும், மல்போர் செய்து விளையாடி - கொல்லவந்த மல்லர்களுடன் மற்போர் செய்து அவர்களைக் கொன்றும்*

திருவிளை யாடல் புரிந்து, பொதுவியர் சேரிக்கேவளர் - ஆயமகளிருடன் கூடிய ஆயர்பாடியில் வளர்ந்த, புயல் மருகா - நீலமேகம் போன்ற கண்ணபிரானுடைய திருமருகரே! வஜ்ராயுதபுரம் அதில் - வஜ்ராயுதத்தையுடைய இந்திரனுடைய நகரத்தில், மா புத்தேளிர் கள் பெருமாளே - பெருமையுடைய தேவர்கள் போற்றும், பெருமையின் மிக்கவரே! என்று உருகியும் - என்று துதித்து உள்ளம் குழைந்து உருகியும், ஆடி பாடியும் - ஆனந்த மேலீட்டினால் ஆடியும் (அன்புடன்) பாடியும், இருகழல் நாடி சூடியும் - தேவரீருடைய இரண்டு திருவடிகளையும் மனத்தினால் நாடியும், சென்னியில் சூடியும், உணர்வினோடு ஊடி கூடியும் - மெய்யுணர்வினுடன் பிணங்கியும், மீட்டும் இணங்கிக் கலந்தும், வழிபாடு உற்று - வழிபாட்டில் பொருந்திநின்று, உலகினோர் ஆசைப்பாடு அற - உலகினோர் மீது வைத்துள்ள ஆசைப் பாட்டை அறவே ஒழித்து, நிலைபெறுஞானத்தால் - நிலைபெற்ற மெய்யுணர்வினால், இனி - இனியாவது, உனது அடியாரைச் சேர்வதும் - உம்முடைய திருத்தொண்டர்களுடன் கூடி மகிழும் பெரும்பேறு அடியேன் பெறுவதும், ஒரு நாளே - ஒரு நாள் கிடைக்குமோ?

## பொழிப்புரை

முருகப்பெருமானே! மயில்மீது ஆரோகணித்து வருகின்ற வீரரே! சரவணப் பொய்கையில் தோன்றியவரே! மலைச்சாரலில் தினைப்புனங் காவல் புரிந்த வள்ளியம்மையாருடைய, குவிந்தும் சந்தனமணிந்தும் இளமையாயுமுள்ள தனங்களைத் தழுகின்ற அன்புமிக்க ஆர்வலரே! பதி பசு பாசமென்னும் முப்பொருளுண் மையின் முடிவைப் பழமையாகிய பரமசிவமூர்த்திக்கு உபதேசித் தருளிய குருநாதரே! தங்கை மகன் என்று எண்ணாமல், (வஞ்சனை யாக) ஆராய்ந்து கொலை செய்ய எண்ணிய மாமனும் பாதகனுமாகிய கம்சன் விடுத்த, மாயையில் வல்ல பூதகியாகிய பேய் முலையுண்டு உயிரைக் குடித்தும், கொல்லும் பொருட்டு மதமேற்றி விடுத்த யானையின் கொம்புகளைப் பறித்தும், விளா மரத்தைக் காய்கனி உதிரக் கன்றினால் வலிமையுடன் அழித்தும், பெரிய இறகுடன் கூடிய பறவையைப் போர்செய்து அழித்தும், அச்சத்தைத் தந்து நீண்டு வளர்ந்த இரு மருத மரங்களின் இடையே தவழ்ந்து சென்றும், வண்டி வடிவாக வந்த அரக்கனை உதைத்துக் கொன்றும், மல்லர்களுடன் மல்யுத்தம் புரிந்தும், திருவிளை யாடல் புரிந்து ஆய்ச்சியர்களுடன் கூடிய ஆயர்பாடியில் வளர்ந்த

நீலமேக வண்ணராகிய கண்ணபிரானுடைய திருமருகரே! என்று துதி செய்து உள்ளம் குழைந்து உருகியும், ஆனந்த மிகுதியினால் ஆடியும் பாடியும், உம்முடைய இரண்டு திருவடிகளையும் சிந்தையால் நாடியும், சென்னியில் சூடியும், மெய்யுணர்வோடு பிணங்கியும், மீண்டுங் கலந்தும், வழிபாடு செய்து உலகினோர் மீதுள்ள ஆசாபாசங்கள் விலக, நிலைபெற்ற மெய்யறிவினால், இனிமேல் உம்முடைய அடியார்களுடன் கூடி மகிழ்கின்ற நாள் ஒன்று என்று வருமோ?

## விரிவுரை

முருக :

ஆறுமுகப் பெருமானுடைய திருநாமங்களுள் தலை சிறந்தது முருகா என்ற நாமம். முருகு என்ற இதனை நன்கு சிந்தியுங்கள். தமிழில் வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற மூன்று இனங்கள் உண்டு. தமிழ்க் கடவுளாகிய எம்பிரானுக்கு இந்த மூன்று இனங்களிலிருந்தும் மூன்று எழுத்துக்கள் கூடி முருகு என அமைந்தது. இனிமையான கடவுளாதலினால் மெல்லினம் முதலிலும், இடையினம் நடுவிலும், வல்லினம் கடையிலும் வந்தது.

இனி, அகரம் ஆக்குந் தொழிலையும், உகரம் அளிக்குந் தொழிலையும், மகரம் அழிக்குந் தொழிலையும் செய்யும்.

எனவே, இந்த ஓங்காரத்தின் பிரிவுகளாகிய இம் மூன்று எழுத்துக்களும் முத்தொழில்களையும் புரிகின்றன. இதில் உகரம் காத்தல் தொழிலைச் செய்கின்றது. இனி, முருகு என்ற சொல்லில் (ம்-உ, ர்-உ, க்-உ) என்ற மூன்று உகரங்கள் வருகின்றன. ஆன்மாக்களை மூவுலகங்களிலும், முக்காலங்களிலும், முப்போதும், மும்மையிலும் காப்பாற்றுகின்ற திருமந்திரம் முருகு என்று உணர்க. எனவே, முருகு முருகு என்று உருகுதல் வேண்டும். "பெரும் பெயர் முருக" என்று நக்கீரரும், "மொழிக்குத் துணை முருகா என்னும் நாமங்கள்" என்று அருணகிரிநாதரும் கூறும் அழகை இங்கு உன்னுக.

மயூரச் சேவக :

மயூரம் - மயில். சேவகன் - வீரன்.

ஆணவ மலமாகிய சூரபன்மன் மயிலுருவந் தாங்கி வந்தான். அவன் பண்டைப்பிறப்பில் மயிலுருவமாக இறைவனுக்குப் பணி

செய்யும் பொருட்டு எல்லையில்லாத தவம் புரிந்தானாதலின், அம்மயிலின் மீது முருகவேள் அமர்ந்து அருள் புரிந்தார். ஆணவத்தையடக்குவதே வீரம் ஆதலின், "மயூரச்சேவக'' என்று அடிகளார் கூறியருளினார்.

ஏனற் பூதரி.... முலைமீதே முழுகிய காதற் காமுக :

ஏனல் - தினைப்புனம். பூதரம் - மலை. மலை பூமியைத் தாங்குவதனால் இப்பேர் பெற்றது. மலையில் வாழ்வதனால் வள்ளியம்மையாரைப் 'பூதரி' என்றனர்.

வள்ளியம்மையாருடைய தனம் என்றது ஆன்மாக்களிடத்தில் விளங்கும் ஞானம் என்க. அந்த ஞானத்திலேதான் ஞான பண்டிதன் முழுகுகின்றான். காமனை எரித்த கனற்கண்ணி னின்றும் அருட்சோதிச்சுடராய் வந்த பெருமான் ஞானத்தை யன்றி வேறு பொருளை விரும்ப மாட்டான் என அறிக. இரு தனங்கள் என்பவை, பர ஞானம், அபர ஞானம் என்பவைகளாம். இவ்வாறு, பொருள் கொள்ள அறியாதார், அவல வுரை கொண்டு இருள் நிரயஞ் சென்று இடர்ப்படுவர்.

பதி பசு பாசத் தீர்வு :

"பதியினை போல்பசு பாசம் அநாதி'' என்ற திருமந்திரத் திருவாக்கின்படி பதி பசு பாசம் என்ற முப்பொருள்களும் என்றைக்கும் உள்ளவை. அவைகள் "அநாதி நித்தியம்'' என்று கூறப்படும்.

பதி - தானே அறிகின்ற பொருள்; பசு -அறிவிக்க அறிகின்ற பொருள்; பாசம் - அறிவித்தாலும் அறியாத பொருள்.

இந்த முப்பொருள் உண்மைகளை இனிது தெளிவாக உரைப்பது சைவசித்தாந்தம் ஒன்றேயாம். ஏனைய சமயங்கள் யாவும் இதற்கு அங்கங்களாகவே அமைந்துள்ளன. முருகவேள் தமது தந்தையாருடைய செவியில் பிரணவ மந்திரத்திற்கு உட்பொருளாக இந்த அரிய சித்தாந்த சைவத் திறத்தை உபதேசித் தருளினார் என உணர்க.

சிவபெருமான் கேட்க, முருகவேள் உபதேசித்தது சித்தாந்த சைவம் எனில், அதன் அருமையையும் பெருமையையும் அளவிட வல்லார் யாவர்? முடிந்த முடிபாக விளங்குவது "சித்தாந்தம்'' என்று அறிக. இதுவே சமயாதீதப் பழம் பொருளாய் வேத சிவாகமங்களின் உட்பொருளாய், பிறவிப் பிணியை அகற்ற

வல்லதாய் அறிவின் முடிமணியாய் விளங்குவது என்று அறிஞர் கள் அனைவரும் முடிவு செய்துள்ளார்கள் என உணர்க. இச் சித்தாந்த சைவம் ஏனைய சமயங்களைப்போல் அறிவுடைய சில மனிதர்களால் செய்யப்பட்டதன்று. செம்பொருளாம் சிவமே இதனை ஆன்மாக்களின் மல நீக்கத்தின் பொருட்டு அருளியது ஆகும்.

## சித்தாந்த சைவத்தின் சிறந்த பொருள்கள்

சற்காரியவாதங் கொண்டு, காட்சி, கருதல், ஆகமம் என்னும் மூவித அளவைகளால் கடவுள் ஒருவர் அநாதியே உண்டு. அக்கடவுள் சிவபரம் பொருள்.

அக்கடவுளுக்கு வேறாய் எண்ணில்லாத உயிர்கள் அநாதியே உண்டு.

இவ்வுயிர்களை அநாதியே கட்டுப்படுத்திய ஆணவ மலம் ஒன்று உண்டு. அது மூலமலம் சகசமலம் எனப்படும். அம்மலத்தின் காரணமாக உயிர்களுக்கு கன்ம மலம் உண்டு. மல சம்பந்தமுடைய உயிர்களுக்கு உறைவிடமாய் மாயாமலம் ஒன்றுண்டு. மலஞ் சடமாதலின் அதனைச் செலுத்துகின்ற ஆதி சத்தியாகிய திரோதான மலமும், அதனாலாய மாயா காரியங்களாகிய மாயேய மலமும் உண்டு. கன்ம மலமானது ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என முத்திறப்படும். கன்ம மல போகங்களைத் துய்க்கும் இடங்களாகிய சுவர்க்க நரக உலகங்கள் உண்டு. அங்ஙனந் துய்க்குங்கால் அடையத்தக்க சுரர் நரகர் அலகை முதலிய யோனி பேதங்களுண்டு. இங்ஙனம் இறந்தது பிறந்து வருவதால் மறு பிறப்புக்கள் உண்டு. சங்காரம் இளைப்பொழித்த லாகும். பிறவிப்பிணியை அகற்றும் வழிகளை அறிவிக்கும் விதி நூல்கள் வேத சிவாகமங்களாகும். அவைகளில் விதிக்கப்பட்ட வருணாச்சிரம பேதங்களுக்கீடாக ஒழுங்கால் செய்யப்படும் கன்மங்கள் நல்வினை தீவினைகள் என இருதிறப்படும். இவைகளும் திருஷ்ட கன்ம போக்கியம், திருஷ்டாதிருஷ்ட கன்ம போக்கியம், அதிருஷ்ட கன்ம போக்கியம் என மூவகைப்படும். அக் கன்ம பேதங்களால் போக பேதங்களுண்டு. கன்ம பலன்கள் அநுபவமாவது நிச்சயம். அப்பலன்களை இறைவனே உயிர் களுக்குக் கொடுப்பன். அங்ஙனமாயினும் சிவாகமங்களின் வழி ஒரு வினைக்கும் மற்றொரு வினையால் அழிவு உண்டு. அறங் களைச் செய்ய வேண்டும். அதுவும் பாத்திரம் அறிந்து செய்ய

வேண்டும். அறங்களுக்குள்ளே வேள்வி சிறந்தது. அதனினும் உயிர்க்கருணை மிகச் சிறந்தது. அதுவும் அருள் இல்லாத வழி அமையாது. ஆதலின், அருளே இன்றியமையாதது. அருள் இல்லாதவர் எத்தகையராயினும் பரகதியடையார். வினைகளுள் ஒருவன் செய்தது அவனைச் சார்ந்தார்க்குமாகும்.

முத்தியுலகம் தேவருலகங்களுக்கு மேலுள்ளது. அதனை அடைவதற்கு நித்தியாநித்திய வஸ்து விவேகம் முதற்சாதனம். வேறு சிறந்த சாதனங்களும் உண்டு. அவைகளைக் கடைப்பிடித்து மனமொழி மெய்களால் முதல்வனை வழிபட வேண்டும். அவ்வாறு வழிபட்டோர்க்கு இருவினையொப்பு உண்டாகி மலபரிபாகம் உண்டாகும். அதனால் சத்திநிபாதம் நிகழும். தீவிர முதலிய சத்திநிபாதமுடையோர்க்கு இறைவன் குருவுமாய் வந்து தீக்கை செய்து மல வன்மையை அகற்றிச் சிவானந்தத்தை யளிப்பான். அக்குருவின் உபதேசப்படி நின்று சிவானந்தா நுபவத்தில் திகழ்கின்ற சீவன் முத்தர்கள் வாசனாமல நீக்கத்திற்காக திரு ஐந்தெழுத்தையோதி, குருலிங்க சங்கம வழிபாடு செய்ய வேண்டியது அவசியம். இவ்வாறு, சீவன் முத்தராய்த் திகழ்ந்து பிரார்த்த கன்ம அனுபவ முடிவில் சிவத்துடன் இரண்டறக் கலந்து சிவாநுபவம் ஒன்றையே துய்த்துக் கொண்டிருப்பர். முத்தியிலும் உயிர்களுக்கு முப் பொருள்களும், இறைவன் உபகாரமும் உண்டு. முதல்வனின் அருள்சேர் முத்தியாகிய அடிசேர் முத்தியே சித்தாந்த முத்தியெனப்படும்.

**முதிய புராரி :**

முதுமை - பழமை. சிவபெருமான் பழமைக்கும் பழமையானவர். ஆதலின், முதிய புராரி என்றனர்.

புர அரி - புராரி.

முப்புரம் என்பது மும்மலங்களாகும். மும்மலங்களைச் சிவமூர்த்தி எரித்தனர். அதனால், புராரி என்ற திருநாமம் உண்டாயிற்று.

**உருகியுமாடிப் பாடியும் :**

இறைவன் உயிர்களுடன் ஒன்றாகி, உடனாகி, வேறாகி, இடையறாது அருள்புரிகின்ற கருணைத் திறத்தை உன்னி உள்ளம் உருகுதல் வேண்டும். மனக்கல்லை உருக்கி, அன்பு செய்தல் வேண்டும். அன்பின் மிகுதியால் ஆண்டவனுடைய அருட்குணங்

*களைப் பாடியும், அளவற்ற மகிழ்ச்சியினால் ஆடியும் வழிபடுதல் வேண்டும். இதுவே உய்யும்வழி இதனைக் கீழே வரும் திருவாசகத் தால் நன்கு உணர்க.*

ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில் தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே.

இருகழல் நாடிச்சூடியும் :

*இறைவனுடைய திருவடிகள், நான் எனது என்ற அகப்பற்று, புறப்பற்று அற்ற இடமேயாகும். திருவடிகளை நாடுதல் சூடுதல் என்றால் இருவகையான பற்றுக்களையும் விடுவதே என்று உணர்க. பற்றறுதலே பரமனடி சார்தலாகும்.*

யானெனதென் றற்ற இடமே திருவடியா. — *கந்தர்கலிவெண்பா*

உயர்வினோ டூடிக் கூடியும் :

*நாயகி நாயக முறையில் இது வருகின்றது. ஊடுவது கூடுவதற் கின்பம். ஊடுவது இன்பத்தை மிகுவிக்கும்.*

உணலினும் உண்ட தறலினிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது. — *திருக்குறள்*

*அந்த ஊடல் உணர்வுடன் அமைதல் வேண்டும். உணர் வில்லாமல் ஊடுதல் பிழை.*

*இறைவன் தனக்கு விரைந்து அருள் செய்யாமை பற்றி தோழமை உரிமையுடைய அடியார்கள் ஊடி (பிணங்கி) மீண்டும் கூடி (இணங்கி) மகிழ்வார்கள். சுந்தரர் இறைவனுடன் ஊடிப் பாடும் பாடல்களை அடியிற் காண்க.*

வைத்தனன் தனக்கே தலையுமென் நாவும்
நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக் குடிமை
உரைத்தக்கால் உவமனே யொக்கும்
பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பித்தரே யொத்தோர் நச்சில ராகில்
இவரலா தில்லையோ பிரனார்.

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி
ஆளா யிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே.

உலகினோராசைப்பாடற :

*உலகிலுள்ள மனைவி, மக்கள், உடன்பிறந்தார், தாய் தந்தையார், மாமன் மாமியர் முதலியோர் பிறவிகள்தோறும் வந்து சிலகாலம் துணைபோல் இருந்து மறைகின்றவர்கள். ஆகவே, அவர்கள் மீது ஆசை வைத்தல் கூடாது. அது முத்தி நெறிக்குத் தடையாகும். ஆசையற்றாரே பிறவியறுவர்.*

பிறவியற நினைகுவனெ னாசைப் பாடைத் தவிரேனே.

வளைபட்ட கைமாதொடு மக்களெனுந்
தளைபட்டு அழியத் தகுமோ தகுமோ.

*என்ற திருவாக்குகளை ஓதியுணர்ந்து, ஆசாபாசத்தை அறவே விடுத்து அமைதியடைதல் வேண்டும்.*

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்.
வேண்டிய எல்லாம் ஒருங்கு.

– *திருக்குறள்*

நிலைபெறு ஞானத்தாலினி உனதடியாரைச் சேர்வதும் ஒருநாளே :

*ஞானம் ஒன்றே என்றும் நிலைபெற்று நிற்கும்.ஏனைய எல்லாம் நிலைபேறு இல்லாதவை.*

*அடியாரைச் சார்தலே சிறந்த பேறு ஆகும். இருவினை யொப்பு மலபரிபாகம் எய்தி, சத்திநிபாதம் விளைந்து அநுபவ ஞான அநுபூதி பெற்ற சிவஞானிகள், மீட்டும் வாசனாமலம் தாக்காதிருக்கும்பொருட்டு, அடியார் உறவை நாடி, அடியாருடன் கூடி இன்புறுவார்கள்.*

*அடியார்கள் யார்? என்றும், அடியார்களது இலக்கணம் யாது? என்றும் ஐயம் நிகழும். இடையறாது இறைவனை நினைந்து உருகி, திருவருள் மயமாக நிற்பவர்கள் அடியார்கள். அவர்கள் தமது உரை, அறிவு, உயிர், உணர்வு என்ற நான்கையும் இறைவனுடைய திருவடியில் புனைவார்கள். இந்த நான்கில் உரையைப் புனைபவர் சரியையாளர். அறிவைப் புனைபவர் கிரியையாளர். உயிரைப் புனைபவர் யோகிகள். உணர்வைப் புனைபவர்*

ஞானிகள். எனவே, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு படிகளில் நின்று தொண்டு புரிவார்கள்.

> உரையையு மறிவையு முயிரையு முணர்வையும்
> உன்பாத கஞ்ச மலர்மீதே
> உரவொடு புனைதர நினைதரு மடியரொ
> டொன்றாக என்று பெறுவேனோ
>
> – *திருப்புகழ்*

அடியார்களைச் சார்வதினும் மேலான பேறு மூவுலகங்களிலு மில்லை. அடியவர் உறவே சாலவுஞ் சிறந்ததாகும். சீவன் முத்தர்க்கும் அடியார் வழிபாடு இன்றியமையாதது என்று சிவஞான போதம் பன்னிரண்டாஞ் சூத்திரங் கிளத்துவதால் தெளிக.

> சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர்குழாம்
> சாரில் கதியின்றி வேறில்லை காண்தண்டு தாவடிபோய்
> தேரில் கரியில் பரியில் திரிபவர் செல்வமெல்லாம்
> நீரில் பொறியென்று அறியாத பாவி நெடுநெஞ்சமே.
>
> – *கந்தரலங்காரம்*

மருகனெனாமற் சூழ்கொலை கருதிய மாமப்பாதகன் :

திருமாலின் ஒன்பதாவது அவதாரமாகிய கண்ண பிரானுடைய தாய் தேவகி. அவள் கம்சனுடைய தங்கை. எனவே, கண்ணனுடைய அம்மான் கம்சன். அப்பாதகன் அறநெறி விடுத்து மறநெறி யடுத்துத் தீமை பல புரிந்து வந்தான்.

மாயப் பேய் முலை பருகா :

கம்சன் தன்னைக் கொல்லும் பொருட்டு எங்கேயோ ஒருவன் பிறந்திருக்கின்றான் என்று, மாயையாகிய குழவி சொல்லக் கேட்டு அஞ்சினான். அக்குழந்தை யாண்டுளது என்று அறியானாய் உலகிலுள்ள குழவிகளையெல்லாங் கொல்லுமாறு 'பூதனை' என்ற அரக்கியை அனுப்பினான். அவள் தேவமாதுபோல் வடிவு கொண்டு கண்டார் மயங்கிக் காதல் கொள்ள நடந்து, பால் கொடுப்பதுபோல் பாவனை செய்து குழந்தைகளைக் கொன்று குவித்துக் கொண்டு கண்ணபிரான் வளர்கின்ற ஆயர்பாடிக்கு வந்தாள்.

கண்டவர் மனம்பருகு காவிபுரை கண்ணாள்
வண்டுபடு தாமரைம லர்க்கையின் விளங்கப்
புண்டரிக மாதுவரல் போலஅருள் மாரிக்
கொண்டல்விளை யாடல்புரி கோயிலி னடைந்தாள்.

குண்டலமி லங்கவொர்கு றங்கினிதி ருத்தி
வெண்டளவ ரும்பனைய மென்னகைவி ளைத்து
மண்டுபுனல் வேலிதிகழ் மண்ணுமுயர் விண்ணும்
உண்டவனை வெய்யமுலை யூட்டினள்அ ணைத்தே.

யசோதையின் திருமாளிகையின்முன், இளங்கொண்டல் மேகம்போல் அழகின் கொழுந்தாக ஆடல்புரியும் கண்ண பிரானைக் கண்டாள். கல்லுங் கரையும் அக்குழந்தையைக் கண்டு அவள் மனங் கரையவில்லை. இருகரங்களால் எடுத்தாள். மடியில் இருத்தி, நஞ்சுடன் கூடிய தனது முலையை மண்ணும் விண்ணும் உண்ட வாசுதேவனுக்கு உண்ணக் கொடுத்தாள். நீலமேகம் போன்ற பாலகிருஷ்ணர் அவளுடைய பால், உணர்வு, உயிர் எல்லாவற்றையும் ஒருங்கே உண்டனர். மலைபோலே கீழே வீழ்ந்து மாண்டனள். அம்மாயப் பேயாகிய பூதனை மாண்டும், அவள் மீது அஞ்சாது, குழந்தையாகிய கோபால மூர்த்தி விளையாடி யருளினர்.

வரு மதயானைக் கோடவை திருகி :

கம்சன் கண்ணனை மதுரைக்கு அழைத்து, அவரைக் கொல்லும் பொருட்டு, தனது பட்டத்து யானையாகிய 'குவலயா பீடம்' என்ற யானைக்கு மதம் ஏற்றி வாயிலில் வைத்திருந்தான்.

கஜேந்திரம் என்ற யானையைக் காத்தருளிய கண்ணபிரான் அந்த யானையுடன் பொருது, அதன் தந்தத்தை ஒடித்து வெற்றி பெற்றனர்.

விளாவில் காய்கனி மதுகையில் வீழச் சாடி :

கண்ணபிரானைக் கொல்லும் பொருட்டு இரண்டு அரக்கர் களைக் கம்சன் ஏவினான். ஓர் அரக்கன் கண்ணன் மேய்க்கின்ற பசுவின் கன்றுகளுடன் தானும் ஒரு கன்றாக வடிவெடுத்து, சமயம் பார்த்துத் தன் கொம்பினால் குத்திக் கொல்லுவதற்கு ஆயத்தமாக இருந்தான். மற்றோர் அரக்கன், கண்ணபிரான் கன்று மேய்த்து வெயிலுக்கு ஒதுங்குஞ் சோலையில் ஒரு விளாமரமாக நின்றான். அதன் நிழலில் வந்து ஒதுங்கியவுடன் வேருடன் சாய்ந்து

கொல்லக் கருதியிருந்தான்.

இந்த இருவருடைய மாயச் சூழ்ச்சியையும் ஆயர்குலக் கொழுந்தாகிய அண்ணல் உணர்ந்தனர். ஆயர் சிறார்களுடன் கன்றுகளை மேய்த்து அவ்விளாமரத்தின் நிழலில் வெயிலுக்கு ஒதுங்கினர். "அடே கோபாலர்களே! இந்த விளா மரத்தில் நிரம்பவும் பழங்கள் பழுத்து நிறைந்திருக்கின்றன. இங்கே இவை களை அடித்து உதிர்க்கக் கல்லும் இல்லை" என்று கூறி, கன்றின் உருவமாக மாறிவந்துள்ள அரக்கனை எடுத்து விளாமரத்தின் மீது சாடினர். விளாமரமாக நின்ற அரக்கனும், கன்றாக வந்த அரக்கனும் ஒருங்கே மாண்டொழிந்தார்கள். இந்த அற்புதத்தைக் கண்ட ஆயச் சிறுவர்கள் தூய மாதவனை வாயார வாழ்த்தி வணங்கினார்கள்.

இந்தச் செய்தியை, சிவரகசியம் என்ற பெருநூல் படிக்குந் தொறும் தித்திக்குந் தமிழில் பேசுகின்றது. அப் பாடல் அடியில் வருகின்றது.

கன்றெடுத்து விளவெறிந்து காலெடுத்த மழைக்குடைந்த
காலி காக்கக்
குன்றெடுத்த மால்விடையின் கொடியெடுத்து வடிவெடுத்துக்
கூறொ ணாத
மன்றெடுத்த சேவடியின் மலரெடுத்துச் சாத்தியன்பின்
வழிபட் டோர்கள்
இன்றெடுத்த உடற்பிறவி இனிஎடா வண்ணமெண்ணம்
எய்து வாரே.

சதமாபுட் பொருது :

கம்சன் கண்ணபிரானைக் கொல்லும்பொருட்டு ஓர் இரக்க மில்லாத அரக்கனை ஏவினான். அவன் ஆடு மேய்த்து வருங் கண்ணன் எதிரில் பெரிய பறவை வடிவாக வாயில் அனற் பொறிகள் பறக்க எதிர்ந்தான். கண்ணபிரான் அஞ்சாது சென்று அப்பறவையின் அலகுகளை இரு கரங்களாலும் பற்றிப் பிளந்து எறிந்தனர்.

இருகோரப் பாரிய மருதிடை போய் :

குபேரனுடைய புதல்வர்களாகிய 'நளகூபரன்', 'மணிக்ரீவன்' என்ற இருவர்களும், அரம்பையர்களுடன் களிப்பு மிகுதியால் காதலுடன் ஆடை நீத்து நீரில் விளையாடினார்கள். அவ்வழி வந்த

நாரதமுனிவர், "இது அறிவுடையோர்க்கு அடாது. நீங்கள் மரங்களாகக் கடவீர்கள்" என்று சபித்தார். அவர்கள் அஞ்சி அஞ்சலி செய்து பொறுத்தருளுமாறு வேண்டினார்கள்.

"ஆயர்பாடியிலே, நந்தகோபன் மாளிகையில் மருத மரங்களாகத் தோன்றி வளர்ந்து, தேவயாண்டு நூறுவரை நிற்பீர்கள். பூபாரந் தீர்க்க கோபாலகிருஷ்ணராகத் திருமால் அவதரிப்பார். அவருடைய பாத கமலந் தீண்ட உமது சாபந் தீரும்" என்று வரந்தந்து நீங்கினார். அவர்கள் அவ்வாறே நந்த கோபாலன் வீட்டிலே மருதமரங்களாக முளைத்துக் கிளைத்து நின்றார்கள்.

கண்ணபிரானுக்கு யசோதை, பாலும் தயிரும் வெண்ணெயும் ஊட்டினாள். அவர் அதனையுண்டு அமையாது, ஒளிந்து போய்ப் பானையில் உள்ள பால், தயிர், வெண்ணெயை வாரி வாரி யுண்டும், அடுத்த மனைகளில் உள்ளதனைக் களவு செய்து உண்டும், உரியில் உள்ளதனை உரல்மீது ஏறிப் பானைகளை உடைத்து உண்டும் உவந்தனர். அதுகண்ட யசோதை சீற்றமுற்று தாம்புக்கயிறு ஒன்றெடுத்து உரலிலே கட்டும் பொருட்டு, ஓடித் தேடிப்பிடித்து வாசுதேவர் இடையில் சுற்றினாள். இரண்டு விரற்கிடை குறைந்தது. பெரிய அக்கயிற்றுக்கு அடங்காத மகனுடைய இடையைக் கண்டு அவள் தியங்கினாள். வேறு பல கயிறுகளை யெடுத்து ஒன்றுடன் ஒன்றை முடிந்து சுற்றினாள். எத்துணைக் கயிறுகளை முடிந்தும் இரண்டு விரற்கிடை குறைவாகவேயிருந்தது. "அந்தோ! இது என்ன அதிசயம்? இத்தனைக் கயிறுகளாலும் இவனைக் கட்ட முடியவில்லையே" என்று வருந்தினாள். தாயாருடைய வருத்தத்தை யகற்றி மகிழ்விக்கவும் மருதமரங்களாக நின்ற கந்தருவர்களின் சாபத்தை மாற்றவும் திருவுள்ளங்கொண்டு இடையைச் சுருக்கினர். பந்த பாசக் கட்டையவிழ்க்கின்ற அவரை யசோதரை உரலுடன் கட்டி விட்டுச் சென்றாள். அவர் உரலுடன் சிறிது நேரம் அழுது, மெல்லத் தவழ்ந்து, வாயிலில் நின்ற மருதமரங்களுக்கு இடையே சென்றனர்.

தழைதவழ்ந்த பூந்தாதவிழ் தாழிருங் கூந்தல்
குழைதவழ்ந்த கண் தேவகி பச்சிளம் குழவி
இழைதவழ்ந்த பேரொளிக்கதிர் மின்னென இமைப்ப
மழைதவழ்ந்தென மருதிடை தவழ்ந்தனன் மன்னோ

உரல் அச்சிறிய சந்தில் வரத் தடைபட்டதனால், தமது

செம்பவளத் திருவடித் தாமரையால் அம்மருத மரங்களை உதைத்தருளினார். இடி இடித்ததுபோல் அம்மரங்கள் இரண்டும் வேருடன் வீழ்ந்தன. நளகூபரன் மணிக்ரீவன் என்ற குபேர புதல்வர்கள் தொல்லுருவமாகிய நல்லுருவம் பெற்றுத் தாமோதரனைப் போற்றி செய்து, தங்கள் பதவியையடைந் தார்கள்.

**சகடுதையா :**

யசோதை தன் குலக்கொழுந்தாகிய கோபால கிருஷ்ணனை வாயில் முற்றத்தில் கண்வளரச் செய்து, அந்தப்புரத்தில் குடும்ப அலுவலில் ஈடுபட்டிருந்தாள். கம்சனால் அனுப்பப்பட்ட ஓர் அரக்கன் அருகில் இருந்த வண்டியில் மறைந்து அச் சகடத்தைக் கண்ணபிரான் மீது உருட்டினான். கண் துயின்று கொண்டிருந்த கமலக் கண்ணர், சட்டென்று கண்விழித்துச் சகடத்தைச் சிறிது திருவடியால் உதைத்தருளினார். அரக்கன் அழிந்தான்.

**மற்போர் செய்து விளையாடி :**

கண்ணபிரான் பலராமருடன் கோகுலத்தில் நந்தகோபன் வீட்டில் இனிது வளர்கின்றபோது, கம்சன் அவர்களை அக்ரூரரை ஏவியழைத்தான்.

கார்வண்ண மூர்த்தியும் சங்கவண்ண மூர்த்தியும் கம்சனைக் காணும்பொருட்டு, மதுரையம்பதியை அடைந்தார்கள். அரண் மனை வாயிலில் அவர்களைத் தடுத்துக் கொல்லும் பொருட்டு, மிகப்பெரிய மல்லர்களாகிய சாணூரன், முட்டிகன் என்ற இருவரை கம்சன் நியமித்திருந்தான். மலைகள் இரண்டு எதிர்ப்பது போல் இருவர்களும் இருபாலகர்களை எதிர்த்தார்கள்.

சாணூரன் கண்ணபிரானுடனும், முட்டிகன் பலராமருடன் பொருதார்கள். இவர்கள் இருவர்களையும் மல்யுத்தத்தில் கூறிய முறைப்படி வலசாரி இடசாரியாகத் திரிந்தும் சுழன்றும் போராடி முடிவில் கண்ணபிரானும் பலராமரும் அம்மல்லர்களைக் கொன்றார்கள்.

## கருத்துரை

திருமால் மருகரே! தேவர்கள் போற்றும் பெருமாளே! வள்ளி மணவாளரே! சிவகுருவே! உள்ளம் உருகி தேவரீருடைய அடியார்களுடன் சேர்ந்து உய்ய அருள் புரிவீர்.

## 33

விழையுமனி தரையுமுநி வரையுமவ ருயிர்துணிய
வெட்டிப் பிளந்துளம் பிட்டுப் பறிந்திடுஞ் செங்கண்வேலும்
விரையளக முகிலுமிள நகையும்ருக மதகனவி
சித்ரத் தனங்களுந் தித்தித் ததொண்டையும் புண்டரீகச்

சுழிமடுவு மிடையுமழ கியமகளிர் தருகலவி
சுட்டித் திரிந்திஙன் தட்டுப் படுங்கொடும் பங்கவாழ்வுந்
தொலைவில்பிற வியுமகல வொருமவுன பரமசுக
சுத்தப் பெரும்பதஞ் சித்திக் கஅன்புடன் சிந்தியாதோ

எழுதரிய அறுமுகமு மணிநுதலும் வயிரமிடை
யிட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக் கலன்களுந் துங்கநீள்பன்
னிருகருணை விழிமலரு மிலகுபதி னிருகுழையும்
ரத்நக் குதம்பையும் பத்மக் கரங்களுஞ் செம்பொனூலும்

மொழிபுகழு முடைமணியு மரைவடமு மடியிணையு
முத்தச் சதங்கையுஞ் சித்ரச் சிகண்டியுஞ் செங்கைவேலும்
முழுதுமழ கியகுமர கிரிகுமரி யுடனுருகு
முக்கட் சிவன்பெறுஞ் சற்புத்ர வும்பர்தந் தம்பிரானே.

### பதவுரை

எழுத அரிய அறுமுகமும் - ஓவியவல்லுநரால் எழுத இயலாத ஆறுமுகங்களும், அணிநுதலும் - அழகிய நெற்றியும், வயிரம் இடையிட்டு சமைந்த செம்சுட்டி கலன்களும் - வயிரமணியை நடுவில் அமைத்துச் செய்த செவ்வையான சுட்டி முதலிய அணிகலன்களும், துங்கநீள் பன்னிரு கருணை விழிமலரும் - தூய்மையும் கருணையும் நிறைந்த நீண்ட பன்னிரு கண்மலர் களும், இலகு பதினிரு குழையும் - விளங்குகின்ற பன்னிரண்டு குழைகளும், ரத்ந குதம்பையும் - இரத்த மணியாலாகிய குதம்பை என்ற காதணியும், பத்ம கரங்களும் - தாமரை போன்ற திருக்கரங் களும், செம்பொன் நூலும் - சிவந்த பொன்னாலாகிய முப்புரி நூலும், மொழிபுகழும் உடை மணியும் - சொற்களால் புனைந்து புகழ்கின்ற உடைமணியும், அரைவடமும் - திருவரையில் கட்டுகின்ற நாணும், அடி இணையும் - இரண்டு திருவடிகளும், முத்த சதங்கையும் - முத்துக்கள் பதித்த சதங்கைகளும், சித்ர சிகண்டியும் - அழகிய மயிலும், செம் கை வேலும் - சிவந்த

திருக்கரத்தில் இலகும் வேலாயுதமும், முழுதும் அழகிய குமர - ஆகிய அனைத்தும் அழகாகத் திகழும் குமாரக் கடவுளே! கிரிகுமரி உடன் உருகு - மலையரையன் மகளாகிய உமையம்மை யாருடன் உள்ளம் உருகி மகிழ்கின்ற, முக்கண்சிவன் பெறும் சற்புத்ர - மூன்று கண்களையுடைய முழுமுதற் கடவுள் பெற்ற உயர்ந்த புதல்வரே! உம்பர் தம் தம்பிரானே - தேவர்கள் போற்றும் தனிப்பெருந் தலைவரே! விழையு மனிதரையும் - விரும்புகின்ற மனிதர் களையும், முநிவரையும் - துறந்த முநிவர்களையும், அவர் உயிர் துணிய - அவர்கள் உயிரையும் விடுவதற்குத் துணியும்படி (மோகத்தை மூட்டி) வெட்டிப் பிளந்து உள் அம்பு இட்டு - உள்ளத்தை வெட்டிப் பிளந்து (விரக வேதனையாகிய) அம்பை உள்ளே செலுத்தி அழிக்கின்ற, செம்கண் வேலும் - சிவந்த கண்களாகிய வேலும், விரை அளக முகிலும் - வாசனை புனைந்த கூந்தலாகிய மேகமும், இள நகையும் - புன்சிரிப்பும், ம்ருகமத கன விசித்ர தனங்களும் - கஸ்தூரி யணிந்த அழகிய பெரிய தனங்களும், தித்தித்த தொண்டையும் - இனிமையான இதழாகிய கொவ்வைக் கனியும், புண்டரிக சுழி மடுவும் - தாமரை போன்று சுழிந்திருக்கின்ற உந்தியாகிய மடுவும், இடையும் - இடுப்பும், அழகிய மகளிர் தரு கலவி - அழகிய பொது மாதர் தருகின்ற கலவி இன்பத்தை, சுட்டி திரிந்து இங்ஙன் தட்டுப்படும் கொடும் பங்க வாழ்வும் - மதித்து அவ் வின்பத்தைப் பெறும் பொருட்டு ஒழியாது திரிந்து இவ்வுலகில் தடைபட்டழியும் கொடிய குற்றமுடைய வாழ்வும், தொலைவு இல் பிறவியும் அகல - தொலையாது வருகின்ற பிறவித் துயரும் நீங்குமாறு, ஒரு மவுன - ஒப்பற்ற மனதால் வருகின்ற, பரமசுக சுத்த பெரும்பத சித்திக்க - பெரிய இன்பமாகிய தூய பெரும்பதவி அடியேனுக்கு வாய்க்குமாறு, அன்புடன் சிந்தியாதோ - தேவரீருடைய திருவருள் நிறைந்த உள்ளம் அன்புடன் சிந்திக்க மாட்டாதோ?

## பொழிப்புரை

(ஓவிய வல்லுநர்களால்) எழுத வொண்ணாத ஆறு திருமுகங் களும், அழகிய நெற்றியும், நடுவில் வயிரமணி பதித்துச் செய்த செவ்வையான சுட்டி முதலிய அணிகலன்களும், தூய்மையும் கருணையும் நிறைந்த நீண்ட பன்னிரண்டு மலர் போன்ற கண்களும், அழகிய பன்னிரு குண்டலங்களும், இரத்தின மணியால் செய்த குதம்பையென்ற காதணியும், தாமரை மலர்

போன்ற திருக்கரங்களும், சிவந்த பொன்னாலாகிய முப்புரி நூலும், சொற்களால் புனைந்து புகழ்கின்ற உடைமணியும், திருவரையில் கட்டுகின்ற நாணும், இரண்டு திருவடிகளும், அத் திருவடியில் விளங்குகின்ற முத்துக்கள் பதித்த சதங்கையும், விசித்ரமான மயிலும், சிவந்த திருக்கரத்தில் ஏந்திய வேலாயுதமும் ஆகிய எல்லாம் அழகிய குமாரக் கடவுளே! மலைமகளாகிய மரகத வல்லியுடன் உள்ளம் உருகுகின்ற முக்கண்ணுடைய முழுமுதற் கடவுள் பெற்ற சிறந்த புதல்வரே! தேவர்கள் போற்றும் தனிப்பெருந் தலைவரே! விரும்புகின்ற மனிதரையும் முநிவர்களை யும் தமது உயிர் விடத் துணியும்படி மோகத்தை மூட்டி, அவர்கள் உள்ளத்தைப் பிளந்து விரக தாபமாகிய அம்பை விடுத்து அழிக்கின்ற சிவந்த கண்களாகிய வேலும், வாசனை பொருந்திய கூந்தலாகிய மேகமும், புன்னகையும், கஸ்தூரி யணிந்து பருத்து அழகாகத் திகழும் தனங்களும், தித்திக்கின்ற இதழாகிய கொவ்வைக் கனியும், தாமரை போன்று சுழித்திருக்கின்ற உந்தியாகிய மடுவும், இடையும் என்ற உறுப்புக்கள் யாவும் அழகுடன் பொலிகின்ற பொதுமகளிர் தருகின்ற கலவி யின்பத்தைப் பெரிதாக மதித்து அதனைப் பெறும் பொருட்டு ஓயாது திரிந்து இவ்வுலகில் தடைபட்டு அழிகின்ற கொடிய பழுதுடன் கூடிய வாழ்வும், தொலைவில்லாது வருகின்ற பிறவி நோயும் அகன்று உய்ய, ஒப்பற்ற மவுனத்தால் வரும் பெரிய சுகமாகிய தூய சிவபதம் அடியேனுக்கு வாய்க்குமாறு தேவரீ ருடைய திருவுள்ளம் சிந்திக்காதோ?

## விரிவுரை

**விழையு மனிதரையும் முநிவரையு மவருயிர் துணிய :**

பொதுமகளிர் மீது ஆசையால், மனிதரும், முற்றத் துறந்த முநிவருங்கூட, மோகத் தீயினால் வெதும்பி, தமது உயிரையும் விடுவதற்குத் துணிந்து நிற்பர். அத்துணையளவுக்கு அவருடைய வுள்ளத்தில் ஆசைக் கனலை அம்மகளிர் மூட்டி விடுவர். திலோத்தமை மூட்டிய ஆசைக் கனலால் ஊசலாடிய சுந்தோப சுந்தர்கள் மாண்டதுவே போதுமான சான்று.

**செங்கண் வேலும் :**

அப் பரத்தையர் கண்கள், வேல் போலே தம்மை விரும்பி யோரைச் சேதிக்கும் இயல்புடையன.

**புண்டரீகச் சுழிமடுவும் :**

மடு - ஆழ்ந்த நீர்நிலை. அதில் வீழ்ந்தார் மாய்ந்தொழிவர். விலைமகளிர் உந்தி அம் மடுவுக்கு நிகர் என்று இங்கே குறிப்பிடு கின்றனர். சுழியுடைய நீர்நிலையில் இறங்கினவர் அச் சுழியில் அகப்பட்டு அழிவர். அதுபோலே விலைமகளிர் வலைப் பட்டோரும் அழிவர்.

உந்தியென் கின்றமடு விழுவேனை

– *திருப்புகழ்*

**கொடும் பங்க வாழ்வும் :**

பங்கம் - பழுது.

இந்த மோக வாழ்வு கொடியது. பழுதுடையது. மின்னலைப் போல் தோன்றி மறைவது. அசுத்தமானது. நோய் செய்வது. துன்பத்தைத் தருவது. கொலை முதலிய கொடுமைகளுக்கு உறைவிடமானது.

"பாழ்வாழ் வெனுமிப் படுமாயை"

"மின்னே நிகர்வாழ்வை"

என்று கந்தர நுபூதியில் அடிகளார் கூறுகின்றார்.

இறைவனுடைய திருவடிப் பேறு என்ற தூய வாழ்வு என்றும் இன்பம் பயப்பது. தெவிட்டாதது. பரிசுத்தமானது. சாந்தி முதலிய நலன்களுடன் கூடியது. ஆகவே, தீய வாழ்வைத் துறந்து தூய வாழ்வைப் பெறவேண்டுவது இன்றியமையாத கடப்பாடாகும்.

**தொலைவில் பிறவி :**

கடவுள் என்று உண்டோ அன்றே உயிர்களாகிய நாமும் உண்டு. "என்று நீ அன்று நான்" என்கின்றார் தாயுமானார். ஆனால், கடவுள் பிறப்பிறப்பில்லாதவர். நாம் பிறப்பதும் இறப்பதுமாகிய சுழியில் அகப்பட்டுத் தவிக்கின்றோம். எண்ணில் காலமாக எண்ணில்லாத பிறப்பெடுத்து எண்ணில்லாத வினை புரிந்து எய்த்து இளைத்துவிட்டோம்.

இப்பிறவித் துன்பத்தைத் தொலைக்கவல்ல பிரான் முருக வேளேயாகும். "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்றமையால் அவர் பிறவித் துயர் களையும் பெருந்தகையாவார். பிறவி யெடுக்கும் பிற தெய்வங்கள். நம் பிறவியை மாற்ற மாட்டா. ஒரு கடன்காரன் இன்னொரு கடன்காரனுடைய கவலையை

*மாற்றமுடியாததுபோல் என்று உணர்க.*

**ஒரு மவுன பரமசுக சுத்தப் பெரும்பதம்:-**

*மேலான இன்பம் மெளனத்தினால் விளைகின்றது. அதுவே அருணகிரிநாதர் பெற்றது. ஞானத்தின் சிகரம் மோனம். "மோனமென்பது ஞான வரம்பு" என்கின்றார் ஔவையார். மௌனம் என்பது மனத்தொடர்பு இல்லாதது எனப்படும்.வாய் பேசாமலிருப்பது மௌனம் அன்று.*

*மோனநிலையுற்றார் அதற்குமேல் பெறும் பெரும்பேறு ஒன்றுமின்று; நிறைகுடம் நீர்கொள்ளாததுபோல் என்று அறிக.*

**நிறைகுடந்தான் நீர்கொளுமோ நிச்சயமா மோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார் - பிறையணிந்த
மிக்கயி லாயமலை வித்தகனே வேதியனே
செக்கரணி மேனியனே செப்பு**

*-தாயுமானார்*

**"மௌனத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந் தேன்இறந் தேவிட்ட திவ்வுடம்பே**

*- அலங்காரம்*

**எழுதரிய அறுமுகமும்:-**

*முருகப்பெருமானுடைய திருமுகமும் திருமேனியும் இத் தன்மைத்தென்று எவராலும் எழுதமுடியாதது.*

**"அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே"**

*-அப்பரடிகள்*

**அணிநுதலும்:-**

*இளம்பூரணனுடைய நெற்றி திருநீற்றுப் பொலிவுடன் மிகவும் அழகாக விளங்கும்.*

**வயிரமிடைச் சமைந்த செஞ்சுட்டிக் கலன்களும்:-**

*சுட்டி என்பது நெற்றி நடுவில் தொங்குகின்ற ஆபரணம். அதன் நடுவே வயிரமணி பதித்து மிகவும் ஒளிமயமாகத் திகழ்கின்றது.*

**துங்கநீள் பன்னிரு கருணை விழிமலரும்:-**

இறைவனுடைய திருக்கண்கள் கருணை நிறைந்து வழிந்து பெருகி வெள்ளம்போல் ஓட விளங்குவது.

"மறுவறு கடலென மருவுபன் னிருவிழி
வழிந்த அருளே பொழிந்த தொருபால்" *கொலுவகுப்பு*

**இலகுபதி னிருகுழையும்:-**

முருகவேளுடைய பன்னிரு செவிகளிலும் மகர மீன் வடிவில் அமைந்து பன்னிரு குழைகள் திகழ்ந்து அழகு புரியும்.

**ரத்னக் குதம்பையும்:-**

குதம்பை-செவியில் தொங்குகின்ற ஆபரணம். குழந்தை வேலன் ஆதலின் அவர் செவிகளில் காதணிகள் தொங்கி அசைகின்றன.

**செம்பொனூலும்:-**

திருமார்பில் செம்பொன்னாலாகிய முப்புரிநூல் அசைந்து ஒளிரும்.

"உறுவரை யருவியை நிகர்தரு முரமிசை
உடன்கொள் புரிநூல் கிடந்த தொருபால்" *- கொலுவகுப்பு*

**மொழிபுகழு முடைமணியும்:-**

முருகவேள் என்றும் இளையவர் ஆதலின் அவருடைய திருவரையில் கிண்கிணி மணிகள் இனிது ஒலிக்கும். அவ்வொலி பதினாலு உலகங்களும் கேட்டது.

மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திருவரையிற்
கிண்கிணி யோசை பதினா லுலகமுங் கேட்டதுவே.

**முழுதும் அழகிய குமர:-**

முருகு - அழகு. முருகன் - அழகன். அழகுக்கு ஓர் உறைவிடமான தெய்வம் முருகக் கடவுள். அவருடைய திருமேனி அழகுக்கு ஒரு கருவூலம்.

அப் பரமபதியின் திருவுருவை நேரே கண்ட சூரன்பன்மன் கூறுகின்றான். "ஆயிரங்கோடி மன்மதர்களுடைய அழகுகள் ஒருங்கு கூடினாலும் முருகவேளுடைய திருவடியின் அழகுக்கு

*இணை வராது."*

ஆயிரம் கோடி காமர் அழகெலாந் திரண்டொன் றாகி
மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்
தூயநல் லெழிலுக் காற்றா தென்றிடில் இளைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்

*-கந்தபுராணம்*

முகத்திலே அழகு மிகுந்தவள் இலக்குமி;
கண்களிலே அழகு மிகுந்தவர் திருமால்;
சொல்லிலே அழகு மிகுந்தவள் கலைமகள்;
சொற்பொருளிலே அழகு மிகுந்தவர் சிவபெருமான்;
கையிலே அழகு மிகுந்தவர் பிரம தேவர்;
தோளிலே அழகு மிகுந்தவள் இந்திராணி;
ஆயுதத்திலே அழகு மிகுந்தவன் இந்திரன்;
வடிவிலே அழகு மிக்கவன் சூரியன்;

*இத்தனைப் பேரும் ஒவ்வொரு பகுதிகளில் மட்டும் அழகுடையவர்கள். எந்தை கந்தவேள் எல்லாப் பகுதிகளிலும் திரண்டு உருண்ட அழகுடையவராதலால், மேலே கூறிய அத்தனைப் பேரும், முருகவேள் சந்நிதியில் வந்து, தத்தமக்கே உரியதான அழகினை ஒருங்கே முருகவேளிடங் கண்டு களிக்கின்றார்கள்.*

கமலமட மங்கைவத னத்தழகு காண்பள்;அக்
கரியமுகில் வண்ண னுஞ்செங்
கண்ணழகு காண்பன்;வளர் கலைவாணி சொல்லழகு
காண்பள்;முக் கட்டாதை யும்
விமலமுறு சொற்பொருளின் அழகுகாண் பன்;விதி
வியன்கரத் தழகு காண்பன்;
வீறுதோள் அழகிந்தி ராணிகாண்பள்; உம்பர்
வேந்துவேல் அழகு காண்பன்;
நிமலமன அடியரடி யழகுகாண் பர்;கவுரி
நின்றுபின் னழகு காண்பாள்;
நின்னொத்த ஆதித்தன் வடிவழகு காண்பன்;ஒரு
நீயுமவ ருடன்குழு மியே
அமலமென் னகையழகு காணலாம் சமயமீ
தம்புலீ யாட வாவே
அம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுடன்
அம்புலீ யாட வாவே

*- கம்பை முருகன் பிள்ளைத்தமிழ்*

*அழகை விரும்புவோர் முருகவேளை உபாசித்தால் உண்மையான, இயற்கையான அழகைப் பெறுவர்.*

*இப் பாடலில் முன்னே அழிகின்ற அழிவைச் செய்கின்ற மகளிர் அழகை எடுத்துக் கூறி, பின்னே, அழியாத, அழியாமையைத் தருகின்ற முருகனழகை எடுத்துக் கூறி நம்மனோர் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் அருணகிரிநாதர் பதிக்கின்றார்.*

## கருத்துரை

*அழகிய குமாரக் கடவுளே! சிவபுதல்வரே! மகளிரது வாழ்வும் பிறவியுந் தொலைய அடியேனுக்கு மவுன சுகானந்தப் பெருவாழ்வைத் தந்தருள்வீர்.*

## 34

எழுபிறவி நீர்நிலத்தி லிருவினைகள் வேர்பிடித்து
இடர்முளைக ளேமுளைத்து வளர்மாயை
எனுமுலவை யேபணைத்து விரககுழை யேகுழைத்து
இருளிலைக ளேதழைத்து மிகநீளும்

இழவுநனை யேபிடித்து மரணபழ மேபழுத்து
இடியுமுடல் மாமரத்தி னருநீழல்
இசையில்விழ ஆதபத்தி லழியுமுன மேயெனக்கு
இனியதொரு போதகத்தை அருள்வாயே

வழுவுநெறி பேசுதக்க னிசையுமக சாலையுற்ற
மதியிரவி தேவர்வஜ்ர படையாளி
மலர்கமல யோனிசக்ர வளைமருவு பாணிவிக்ர
மறையஎதிர் வீரவுக்ரர் புதல்வோனே

அழகியக லாபகற்றை விகடமயி லேறியெட்டு
அசலமிசை வாகையிட்டு வரும்வேலா
அடலசுரர் சேனைகெட்டு முறியமிக மோதிவெட்டி
அமரர்சிறை மீளவிட்ட பெருமாளே.

## பதவுரை

*வழுவு நெறிபேசு - வேதாகமங்களினின்றும் விலகிய குற்றமாகிய கொள்கையைக்கூறிய, தக்கன் இசையு மகசாலைஉற்ற - தக்கன் அமைத்த வேள்விச் சாலையுட் சென்று இருந்த, மதி -*

சந்திரன், இரவி - சூரியன், தேவர் - வானவர்கள், வஜ்ர படையாளி - வஜ்ராயுதத்தையுடைய இந்திரன், கமல மலர் யோனி - தாமரை மலரில் பிறந்த பிரமன், சக்ரவளை மருவு பாணி - சக்கரமும் சங்கமும் தரித்த கரங்களையுடைய திருமால் ஆகிய இவர்களுடைய, விக்ர மறைய எதிர் - வீரமானது கெட்டு ஒழிய எதிர்த்து தண்டித்த, வீரவுக்ரர் புதல்வோனே - வீரபத்திர ராகவந்த சிவபெருமானுடைய திருக்குமாரரே! அழகிய கலாப கற்றை - அழகான தோகைக் கற்றையுடன் கூடிய, விகட மயில் ஏறி - அழகிய மயில்வாகனத்தின்மீது ஆரோகணித்து, எட்டு அசலமிசை - எட்டு குலமலைகள் மீது, வாகை இட்டுவரும் வேலா - வெற்றிச் சின்னத்தை நாட்டிவரும் வேலாயுதக் கடவுளே! அடல் அசுரர் சேனைகெட்டு முறிய - வலிமை மிக்க அரக்கர் களது சேனைகள் அழிந்துபட, மிகமோதி வெட்டி - மிகவும் தாக்கித் துணித்து, அமரர் சிறை மீளவிட்ட - தேவர்கள் சிறை யினின்று மீளுமாறு அருள்செய்த, பெருமாளே - பெருமையின் மிக்கவரே! எழுபிறவி நீர் நிலத்தில் - எழுவகைப்பிறவிகளாகிய ஈரமுள்ள மண்ணில், இருவினைகள் வேர் பிடித்து, நல்வினை தீவினைகளாகிய வேர் ஊன்றப் பெற்று, இடர் முளைகளே முளைத்து - துன்பமாகிய முளைகள் முளைத்து, வளர்மாயை எனும் உலவையே பணைத்து - மேலும்மேலும் வளர்வதாகிய மாயை என்ற கொம்புகள் நன்கு பருத்து, விரக குழையே குழைத்து - காமமாகிய தளிர்விட்டு, இருள் இலைகளே தழைத்து - அறியாமையாகிய இலைகள் செறிந்து நன்கு தழைத்து, மிக நீளும் இழவு நனையே பிடித்து - மிகவும் நீண்டு இருக்குங் கேடு என்ற அரும்பு பிடித்து, மரணபழமே பழுத்து - சாவு என்ற பழம் பழுத்து, இடியும் உடல் மாமரத்தின் அருநீழல் இசையில் விழ - இடிந்துபடுகின்ற உடலாகிய மாமரத்தினுடைய அருமையான நிழலானது புகழ் இன்றி மறைய, ஆதபத்தில் அழியு முனம் - தீப்பட்டு அடியேன் அழிவதற்கு முன்னர், எனக்கு இனியது ஒரு போதகத்தை - அடியேனுக்கு ஒப்பற்ற இனியதாகிய உபதேசத்தை, அருள்வாயே - அருளிச்செய்வீர்.

## பொழிப்புரை

சிவநெறியினின்றும் வழுவி குற்றமே பேசிய தக்கன் அமைத்த வேள்விச் சாலையிற் சென்று, சிவநிந்தை புரிந்த தக்கனுடன் சேர்ந்து இருந்த சந்திரன், சூரியன், தேவர்கள், வஜ்ராயுதத்தைத் தாங்கிய இந்திரன், தாமரை மலரிற் பிறந்த பிரமதேவன்,

சக்கரத்தையும் சங்கையும் ஏந்திய திருமால் முதலியவர்களைத் தண்டித்து அவர்களது வீரத்தை அழித்த வீரபத்திரராக வந்த சிவபெருமானுடைய திருக்குமாரரே! அழகு மிக்க தோகையின் கற்றையுடன் கூடிய அழகிய மயிலின்மீது ஊர்ந்து, எட்டுத் திக்கிலுமுள்ள குலமலைகளின்மீது வெற்றிச்சின்னத்தை நாட்டி வந்த வேலாயுதப் பெருமானே! வலிமை மிக்க அரக்கர்களது சேனைகள் அழிந்து ஒழிய, மிகவும் தாக்கிப் பிளந்து விண்ணவர் சிறைமீட்டு அருளிய பெருமித மிக்கவரே! எழுவகைப் பிறப்பாகிய ஈரமுள்ள பூமியில், இருவினைகளாகிய வேர் ஊன்றப்பட்டு, துன்பமாகிய முளைகள் முளைத்து, வளர்வதாகிய மாயை என்னும் கொம்புகள் பருத்து, காமமாகிய தளிர்விட்டு, அறியாமை யாகிய இருள் என்ற இலைகள் தழைத்து, மிகவும் நீண்ட கேடு என்ற அரும்பு தோன்றி, மரணம் என்ற பழம் பழுப்பதாகிய இந்த உடம்பு என்ற மாமரத்தினிழல் புகழ் இன்றி அழியும். அவ்வாறு அழிந்தவுடன் நெருப்புக்கு இரையாகி அழியுமுன் அடியேனுக்கு ஒப்பற்ற இனிய உபதேசத்தை அருளி ஆட்கொள்வீர்.

## விரிவுரை

**எழுபிறவி நீர் நிலத்தில்:-**

பிறப்பு என்பது எழுவகைப்படும். அவையாவன:-

புல், செடி, கொடி, மரம், மலை முதலிய இவைகள் தாவரம் எனப்படும். இவைகட்கு ஒரே அறிவு; பரிச அறிவு மட்டும் என்க.

நந்து, சங்கு, சிப்பி முதலிய உயிர்கள் ஊர்வன எனப்படும். அவைகட்கு பரிசமும் சுவையும் அறியும் இரண்டு அறிவுகள் உண்டு.

செல்லு, எறும்பு முதலிய உயிர்கட்குப் பரிசம், சுவை, மோப்பம் என்ற மூன்று அறிவுகள் உண்டு.

நண்டு, தும்பி முதலிய உயிர்கட்குப் பரிசம், சுவை, மோப்பம், காணல் ஆகிய நான்கு அறிவுகள் உண்டு. விலங்குகளுக்கும் மனிதர்களிற் சிலருக்கும் மேற்கூறிய நான்கு அறிவுகளுடன் கேட்டல் என்ற ஐந்தாவது அறிவு உண்டு.

மக்களுக்கு ஐந்து அறிவுடன் நல்லவை தீயவை பகுத்தறியும் மனம் என்ற ஆறாவது அறிவு உண்டு.

*தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் சூத்திரம் கூறு மாறு காண்க:*

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.
புல்லு மரனும் ஓரறி வினவே
நந்து முரலும் ஈரறி வினவே
சிதலும் எறும்பும் மூவறி வினவே
நண்டுந் தும்பியும் நான்கறி வினவே
மாவு மாக்களும் ஐயறி வினவே
மக்கள் தாமே ஆறறி வினரே.

*இவ்வகையான உயிர்கள், தாவரம், ஊர்வன, நீர் வாழ்வன, பறப்பன, விலங்கு, மனிதர், தேவர் என்று எழுவகைப்பட்டு நிற்கும்.*

*இந்த எழுவகைப் பிறப்பும் உடம்பாகிய ஒருமரம் முளைப்பதற்கு நிலமாகின்றது.*

**இருவினைகள் வேர் பிடித்து:-**

*உடம்பாகிய மரம் எழுவகைப் பிறப்பு என்ற மண்ணில் தோன்றுகின்றது என்று முன்னே கண்டோம். இனி, ஒரு மரம் தோன்றுவதற்கு வேர் இன்றியமையாதது. வேரின்றி மரம் இல்லை. இந்த உடம்புக்கு வேராக நின்று இதைத் தோற்ற வைத்தது நல்வினை தீவினை என்ற இருவினைகளே என்று உணர்க. வினைப்போகமே யொருதேகங் கண்டாய்; வினைதான் ஒழிந்தால் தினைப்போதளவு நில்லாது" என்பர் பட்டினத்துப் பிள்ளையார்.*

*"அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி" என்று மணிவாசகனாரும், "இரு வினையின் இடர்கலியொடாடி" என்று அருணகிரிநாதர் பிறிதொரு திருப்புகழிலும் கூறியிருக்குமாறு காண்க. இருவினைகளாகிய வேர் அற்றாலொழிய இந்த உடம்பு நீங்காது.*

இடர் முளைகளே முளைத்து:-

வேர் பிடித்தபின் முளை தோன்றும். இவ்வுடம்பிற்குத் துன்பமே முளையாக உருவகஞ் செய்யப்பட்டது.

கருவுற்ற நாள் தொட்டுக் காலபாசத்தால் கட்டுண்டு உயிர் பிரியும்வரை துன்பமே.

உயிர் கருவிலே அணுவடிவாகச் சென்றவுடன் தாய் உதரத்தில் உள்ள நஞ்சு அணுக்களால் துன்பம் நேரும். அதுவுமன்றித் தாய் வயிற்றில் சோற்றுப்பை. பிச்சுப்பை, நீர்ப்பை முதலிய பைகளுடன் கருப்பை ஒரு புறம். அதற்குள் கருவடைந்த உயிர்க்கு இப்படி அப்படி திரும்பவும் முடியாது. மிக நெருக்கம். உதராக்கினி கொளுத்தும். கொல்லன் உலைக்களத்தில் இருப்பது போல் அக் குழவிக்கு அதனால் பெருந் துன்பம். மலஜல நாற்றம் ஒருபுறம்; காற்று இன்றி மிகவும் புழுங்கும்; கருவில் உள்ள குழவிக்கு ஒளியுமின்றி ஒரே இருள்சூழ்ந்து வருத்தம் ஏற்படும். ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு துன்பம் ஏற்படும். இப்படிப் பத்து மாதம் நிறைந்து பிறக்கும்போது ஒருவனை மலையிலிருந்து உருட்டியது போலும், ஆலையிலிட்ட கரும்பு போலும் உருண்டு நொந்து தலைகீழாகப் பிறந்து சொல்லொணாத துன்பத்தை யடைகின்றது.

பிறந்த பின்னும் துன்பம் முடிந்தபாடில்லை. நோய்களாலும் பேய்களாலும், பசியினாலும், குளிர் பனி வெயில்களாலும் குழவி துன்புறுகின்றது.

சிறிது வளர்ந்தபின் வேண்டாத பொருள்கள் எல்லாம் வேண்டும் என்ற அவாவினாலும், பயத்தினாலும் வேதனையுறு கின்றது. கல்வி பயில்கின்றபோதும் துன்புறுகின்றது.

பிறகு காமத்தினாலும், மனைவி மக்களினாலும், பொருள் ஈட்டுவதனாலும், ஈட்டிய பொருளை வைத்துக் காப்பாற்றுவ தனாலும், பகைவர்களாலும், விஷப் பூச்சிகளாலும், பசிதாகத்தி னாலும், பிறகு முதுமையினாலும், முதுமையில் வந்து வருத்தும் பல்வேறு வகையான பிணிகளாலும், மரண வேதனையாலும் இந்த உயிர் எல்லையில்லாத துன்பமுறுகின்றது.

பலதுன்ப முழன்று கலங்கிய
சிறியன் புலையன் கொலையன்புரி
பவமின்று கழிந்திட வந்தருள் புரிவாயே. - திருப்புகழ்

*இவ்வாறு உற்றுப் பார்க்கும்போது நமது வாழ்நாள் முழுவதும் துன்பந்தான். இன்பமேயில்லை. இன்ப ஊற்று இறைவன் திருவடியில் ஊறுகின்றது. திருவடிக் கமலங்களைத் தியானித் தாலொழிய துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் எய்தா? திருவடிப் பேற்றைப் பெற்றவர் "இன்பமே எந்நாளும் துன்ப மில்லை" என்று கூறி மகிழ்வர்.*

*நமக்கு வரும் துன்பங்களைப் பற்றி, நமது பரமகுருநாதராகிய மணிவாசகப் பெருந்தகையார் கூறுமாறு காண்க.*

"மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்
தீனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களில் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்தவக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகல் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
..........................................................................
கூர்த்த நயனக் கொள்ளையில் பிழைத்தும்
பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடல் பிழைத்தும்
செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்"

வளர்மாயை எனுமுலவையே பணைத்து:-

*மாயை தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்குங் காரணமாக நிற்பது.*

இடர்களுக்கெல்லாம் காரணம் மாயையே. உயிரை மயக்கி நிற்பது. இன்பத்தைத் துன்பமாகவும், துன்பத்தை இன்பமாகவும் மாறியறியச் செய்யும்.

மாயையை வெல்வது அரிது. "மகமாயை களைந்திட வல்லபிரான்" முருகவேளேயாகும். "மாயைக்குச் சூழொணாதது" என்பர் திரிசிராப்பள்ளித் திருப்புகழில்.

"அகமா டைமடந் தையர்என் றயரும்
சகமா யையுள் நின்றுதயங் குவதே"

"மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவே டணைஎன் றுமுடிந் திடுமோ" - கந்தரநுபூதி

மாயையில் நின்று வருந்துவதே உயிர்களின் தன்மையாக இருக்கின்றது. அதனைத் திருவருளும் குருவருளுந் துணை செய்ய, ஞானவாளினால் சேதித்தல் வேண்டும்.

உலவை - மரக் கொம்பு. செடி முளைத்தபின் சிறு சிறு கொம்புகளாகப் பிரிந்து வளரும். இந்த மரத்திற்கு மாயையாகிய கொம்புகள் கிளைக்கின்றன.

விரககுழையே குழைத்து:-

விரகம் - ஆசை.

இந்த உடம்பு என்ற மரத்தில் ஆசை என்ற தளிர்கள் கோடிக்கணக்காக உண்டாகின்றன. தளிர்கள் தோன்றி முதிர்வதும் உதிர்வதுமாகவே இருக்கும். அதுபோல், ஆசைகள் பல உண்டாகுவதும், அவைகள் நிறைவேறாமல் அழிவதுமாக இருக்கின்றன.

வாழ்வில் எண்ணில்லாத ஆசைகள்; எத்துணை போகம் எய்தினும் திருப்தியுறாது மேலும் மேலும், பொருள்கள் வேண்டும் வேண்டும் என்ற அவா எழுகின்றது.

"ஆசைச் சுழற்கடலில் ஆழாமல் ஐயாநின்
நேசப் புணைத்தாள் நிறுத்தினால் ஆகாதோ"

ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவுமன
தலையுங் காலம்
மோசம்வரு மிதனாலே கற்றதுங்கேட் டதுந்தூர்ந்து
முத்திக் கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற் கொடுமைபற்றி

நிற்பர் அந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசையின்றேல்
தெய்வ முண்டோ. - *தாயுமானார்*

**இருளிலைகளே தழைத்து:-**

இருள் என்பது அறியாமை என்று உணர்க. ஆசையினால் யுண்டாகும். ஆசை யென்ற சூறாவளி வந்தபோது அறிவு என்ற வான்பொருள் சிதறுண்டு செல்லுகின்றது.

தன் மகன் மீது அளவற்ற ஆசை வைத்திருந்தான் தயரதன். அதனால் ஸ்ரீராமருடைய ஆற்றலையும் அவருடைய அவதார நோக்கத்தையும் அறியாது கெட்டான். ஸ்ரீராமர் கானகம் புறப்பட்டபோது, அவருடைய அளவற்ற ஆற்றலை யுணராது, உயிர்விடுத்தான். மிதிலையில் மன்னர்கள் யாராலும் எடுக்க முடியாத பெரிய வில்லை எடுத்து ஒடித்த தன்மையைக் கேட்டும், சூரியகுலத்தை இருபத்தொரு தலைமுறை கருவறுத்த பரசுராமனை ஒரு நொடிப்பொழுதில் வென்ற திறத்தைக் கண்டும், அவருடைய ஆற்றலை அறிந்தானில்லை. ஏன்? ஆசையே காரணம்.

ஆசை கொடிது, கொடிது. எல்லாப் பொருள்களிடத்தும் அன்பு இருக்கவேண்டும். அன்பு ஒளிமயமாகும். ஆசை இருள் மயமாகும்.

ஒரு புதல்வனிடத்திலே தந்தையைக் காட்டிலும் தாய்க்கு அதிகபாசம். இதுதான் உலக இயல்பு. ஸ்ரீராமர் கானகஞ் சென்றபோது பெற்று வளர்த்த தாய் கோசலை மாண்டாள் இல்லை. தந்தை தயரதன் மாண்டான். ராமனிடத்தில் கோசலைக்கு அன்பு இருந்தது. மகனுடைய ஆற்றலை அறிந்திருந்தாள். இவன் உலகத்தின் பொது உடைமை என்ற தெளிவு கோசலைக்கு இருந்தது. தயரதனுக்கு மகனிடத்திலே ஆசை அதிகம். அதனால், அறியாமை மேலிட்டது. மகனைத் தனக்கே உரிமையாக எண்ணி மாண்டான்.

ஆதலினால், ஆசையினால் அறியாமை யுண்டாகும். ஆசை தளிர்; அறியாமை இலை. தளிர் இலையாக மாறுவதுபோல், ஆசை அறியாமையாக மாறுகின்றது என்று அறிக. அடிகளார் கூறிய இந்த அழகிய சொற்றொடர் மிகவும் சிந்தனைக்குரியது.

**மிகநீளும் இழவு நனையே பிடித்து:-**

இழவு - கேடு; நனை - அரும்பு.

ஆசையினால் அறியாமையும், அறியாமையால் பெருங்கேடும் உயிர்களுக்கு ஒன்றன்பின் ஒன்றாக விளைகின்றன. கேடுகளுக் கெல்லாம் மூலகாரணம் அறியாமை என்பதை மறவற்க. "கேடுவரு முன்னே மதிகெட்டுவரும் பின்னே" என்ற முதுமொழியையும் ஓர்க. அறியாமையாகிய அரும்பு அரும்புகின்றது.

விறகு பிளப்பான் ஒருவன் ஒரு மரத்தைப் பகுதி பிளந்து, பிளந்த பகுதியில் ஓர் ஆப்பினை வைத்துவிட்டு, "நாளை வந்து மற்ற பகுதியைப் பிளப்போம்" என்று சென்றான். ஒரு குரங்கு அம்மரத்தின்பால் வந்து, பிளந்த பிளப்பில் தன் காலை நுழைத்துக் கொண்டு, பெருஞ்செயல் செய்வதாகக் கருதி, அந்த ஆப்பை அரும் பாடுபட்டு அசைத்துப் பிடுங்கி எடுத்தது. கால் அகப் பட்டுக் கொண்டு சொல்லொணாத் துயரமுற்றது. இந்தக் கேடு அக்குரங்குக்கு அறியாமையால் வந்தது.

"கவர்பிளந்த மரத்தொளையில் கால்நுழைத்துக் கொண்டே
ஆப்பதனை அசைத்துவிட்ட குரங்கு"

என்பது பட்டினத்தடிகள் திருவாக்கு.

**மரணபழமே பழுத்து:-**

கேடுகளின் சிகரம் மரணம். மரணமாகிய பழம் பழுத்துவிடு கின்றது. இந்த அரிய உடல் அவமே உதிர்கின்றது. அதனை நினைத்து அறிவுடையவர்கள் மரணபழம் பழுக்குமுன் இறைவனை நினைந்து அன்பு செய்து சிவாநுபவம் பெறவேண்டும். "ஐவிளக்கு மூப்பு மரணாதிகளை நினைத்தால் அடிவயிற்றை முருக்காதோ" என்று வடலூர் வள்ளலார் கூறுகின்றார்.

**இடியுமுடல் மாமரம்:-**

இந்த உடம்பை ஒருமரமாக அடிகளார் உருவகம் புரி கின்றனர். மரங்களுக்குள்ளே உயர்ந்தது மாமரம். பலா பூவாமல் பழுப்பது. ஆலின் பழம் அத்துணைச் சிறந்ததன்று. மாமரத்தின் கீழே அம்பிகை இறைவனை வழிபட்டனர். அந்தத் திருத்தலம் காஞ்சி. சூரபன்மனும் மாமரமாய் நின்றனன்.

இந்த உடம்பாகிய மரத்திற்கு வேர் இருவினை என்ற அருமைப்பாட்டை நன்கு சிந்தியுங்கள். வினையாலேயே உடம்பு நிற்கின்றது. வினையாகிய வேரற்றுப்போனால் உடம்பாகிய மரம்

வீழ்ந்துவிடும். "வினைதான் ஒழிந்தால் தினைப்போதளவும் நில்லாது" என்பார் பட்டினத்துப் பெருந்தகையார்.

எனவே, பிறவி யறுவதற்குக் காரணம் இருவினை யொப்பு என்க.

"இருவினை யிடைந்து போக" - *திருப்புகழ்*

**ஆதபத்திலழியு முனமே எனக்கு இசையுமொரு போதகத்தை யருள்வாயே:-**

இந்த உடம்பு தீப்பட்டு அழியுமுன் இறைவனுடைய திருவருளைப் பெறவேண்டும். இந்த உடம்பு ஓர் ஏணி போன்றது. ஏணியைக் கொண்டு மாடிமீது ஏறுவதுபோல் இந்த உடம்பு உள்ளபோதே உடம்புக்குள் உறையும் உத்தமனை நாடிப் பரகதி பெறவேண்டும்.

ஆதலின், அருணகிரிநாதர், "இறைவனே! இவ்வுடம்பு அழியுமுன் அடியேனுக்கு உபதேசித்து அருள்புரிவீர்" என்று விண்ணப்பம் புரிகின்றார்.

அருணகிரியார் அறுமுகக் குருநாதனிடம் உபதேசம் பெற்றவர். இதனை அடியில் வரும் பாடல்களால் அறிக.

"தேனென்று பாகென் றுவமிக் கொணாமொழித் தெய்வவள்ளிக்
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு"

"மருவி நாயெனை அடிமை யாமெனை
மகிழ்மெய் ஞானமு மருள்வோனே"

"தலைநா ளிற்பத மேத்தி யன்புற
உபதே சப்பொரு ளூட்டி மந்திர
தவஞா னக்கட லாட்டி யென்றனை யருளாலுன்"

"அக்கணமே மாய துர்க்குணம்வே றாக
அப்படையே ஞான உபதேசம்
அக்கறவாய் பேசு சற்குருநா தாவுன்
அற்புதசீர் பாத மறவேனே"

**வழுவுநெறி பேசு தக்கன்:-**

தக்கன் நெடிதுகாலம் தவம்புரிந்து சிவபெருமானிடம் எண்ணிலாத வரம்பெற்றவன். வரபலத்தால் இறுமாந்து,

சிவபெருமானைப் புறக்கணித்து ஒரு வேள்விபுரியத் தொடங்கினான். ததீசி முனிவரும், நான்மறைகளும், "சிவமே பரம்" என்று இடித்துக் கூறியும் கேட்டானில்லை. அம்பிகைவேண்ட, இறைவர் திருமேனியிலிருந்து வீரபத்திரர் தோன்றி, மகச்சாலை சென்று, சிவநிந்தை புரிந்த தக்கனுடன் சேர்ந்திருந்த எல்லாத் தேவர்களையும் தண்டித்தனர். சிவத்தை வணங்காத தக்கன் தலையிழந்து நிலையிழந்தான். அவன் தந்தை அயனும் முன்னாள் தலையிழந்தான். தந்தை வழி மைந்தனும் தலையிழந்தான். சந்திரன் உடல் தேய்ந்தான். சூரியன் பல்லிழந்தான். இந்திரன், அயன், மால் முதலிய யாவரும் தண்டிக்கப்பட்டார்கள். கந்தபுராணம், கூர்மபுராணம் ஆகிய பெரு நூல்களில் இதன் விரிவான செய்தியைப் படித்துணர்க.

## கருத்துரை

தக்கனை அழித்த சிவகுமாரரே! மயில் வாகனரே! தேவர் சிறைமீட்ட தேவதேவரே! இவ்வுடம்பு அழியுமுன் அடியேனுக்கு உபதேசித்து அருள்புரிவீர்.

## 35

நீருநில மண்டாத தாமரைப டர்ந்தோடி வடிவான
நீளமக லஞ்சோதி
நேசமல ரும்பூவை மாதின்மண மும்போல லுடன்மேவிச்
நேர்மருவி யுண்காத

சூரியனு டன்சோம னீழலிவை யண்டாத யவையூடே
சோதிமரு வும்பூமி
தோகைமயி லின்பாக னாமெனம கிழ்ந்தாட மருள்வாயே
சோதிஅயி லுந்தாரு

வாரியகி லங்கூச ஆயிரப ணஞ்சேடன் முடுபோல
வாய்விடவொ டெண்பாலு
வார்மணியு திர்ந்தோட வேகவினி றைந்தாட கொடியோனே
மாமயில்வி டுஞ்சேவல்

ஆரியன வன்தாதை தேடியின மும்பாடு
மாடலரு ணஞ்சோதி யருள்பாலா
ஆனைமுக வன்தேடி யோடியெய ணங்காத
லாசைமரு வுஞ்சோதி பெருமாளே.

## பதவுரை

*வாரி அகிலம் கூச - கடல்கள் எல்லாம் அஞ்சவும், ஆயிர பணம் சேடன் வாய்விட ஓட - ஆயிரம் பணாமகுடங்களை யுடைய ஆதிசேடன் வாயைப் பிளந்து ஓடவும், எண்பாலும் உடுபோல வார்மணி உதிர்ந்து ஓட- அவனுடைய பணாம குடத்தில் உள்ள நீண்ட நாகரத்தினங்கள் எட்டுத் திசைகளிலும் நட்சத்திரங்களைப்போல் சிந்திச் சிதறவும், (ஏ.அசை) கவின் நிறைந்து ஆட- அழகு நிறைந்த நடனஞ் செய்யும்படி, மாமயில் விடும்- பெருமை மிக்க மயிலை ஏவுகின்ற, சேவல் கொடி யோனே- சேவலங் கொடியையுடையவரே! ஆரியன்- பிரம தேவர், அவன் தாதை- அவருடைய பிதாவாகிய திருமால், தேடி இனமும் பாடும் - அடிமுடிகளைத் தேடி இன்னமும் துதித்துப் பணிகின்ற, ஆடல் அருணம் சோதி அருள்பாலா - ஆடலை யுடைய சிவந்த சோதி வடிவாக விளங்கும் சிவபெருமான் அருளிய குமாரரே! ஆனைமுகவன் தேடி ஓடியே - ஆனை முகத்தையுடைய தாரகாசுரன் போர்க்களத்தில் தேடியும் ஓடியும், அணங்கு ஆதல்- வருத்தத்தையடைந்து முடிவு பெறுதலை, ஆசை மருவும் சோதி - விரும்புகின்ற சோதிமயமான, பெருமாளே- பெருமையின் மிக்கவரே! நீரும் நிலம் அண்டாத - மண்ணும் தண்ணீரும் கலவாத, தாமரை படர்ந்து ஓடி- தாமரைக்கொடி படர்ந்து செல்ல, நீளம் அகலம் சோதி வடிவு ஆன- நீளமும் அகலமும் உடைய ஒளிவடிவாக விளங்கும், நேச மலரும் பூவை- அன்பு விரிகின்ற இதயமலரை, மாது இன் மணமும்போல நேர்மருவி- அழகும் இனிய வாசனையும் போல கலந்து, உண் காதலுடன் மேவி- உள்ளத்தை உண்ணுகின்ற காதலோடு அடைந்து, சூரியனுடன் சோமன் நீழல் இவை அண்டாத -சூரியனுடைய வெயில் சந்திரனுடைய சீதகிரணம் என்ற இந்த இரண்டும் பொருந்தாததும், சோதிமருவும்- ஞானஒளியுடன் விளங்குவதுமாகிய, பூமி அவையூடே- சஹஸ்ராரம் ஆகிய பேரம்பலமாகிய அத்தலத்திலே, தோகைமயிலின் பாகனாம் என மகிழ்ந்து ஆட- தோகையையுடைய மயில்போன்ற உமையை ஒரு பாகத்தில் கொண்ட நடராஜ மூர்த்தியைப்போல் இன்புற்று*

நிருத்தம் புரிய, சோதி அயிலும் தாரும் அருள்வாயே- ஒளிமிக்க வேலையும் உமது மார்பில் தரித்த திரு மாலையையும் தந்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

கடல்கள் முழுவதும் அஞ்சவும், ஆயிரந் தலைகளையுடைய ஆதிசேடன் வாயைப் பிளந்து ஓடவும், அவனுடைய பணாமகுடத்தில் உள்ள நாகமணிகள் நட்சத்திரங்களைப்போல் உதிர்ந்து எட்டுத் திசைகளில் ஓடவும், பெருமையுடைய மயிலை அழகு நிறைந்து ஆடும்படி விடுகின்ற சேவற்கொடியினரே! நான்முகக் கடவுளும் அவருடைய பிதாவாகிய நாராயணரும் இன்னமும் தேடித் துதிக்கின்ற, ஆடலரசாகிய சிவந்த சோதியின் திருக்குமாரரே! ஆனைமுகமுடைய தாரகாசுரன் போரில் தேடியும் ஓடியும் வருந்தி மாள்வதை விரும்பிச் செய்த சோதிமயமான பெருமிதத்தையுடையவரே! மண்ணும் தண்ணீரும் பொருந்தாத தாமரைக்கொடி படர்ந்துசென்று நீளமும் அகலமும் உடையதாய் ஒளிவடிவாய் அன்பு விரியும் இதயமலரை அழகும் இனிய மணமும்போல அதனுடன் கலந்து உள்ளத்தைக் கவர்கின்ற காதலுடன் அடைந்து, சூரிய சந்திரர்களுடைய வெயிலும் நிலவும் சேராத ஒளியுடன் கூடி விளங்குகின்ற சஹஸ்ராரம் என்ற பேரம்பலத்தினிடையே உமையொரு பாகராகிய நடராஜ மூர்த்தியைப்போல் நடனஞ் செய்து இன்புறுமாறு அடியேனுக்கு வேலையும் மலர் மாலையையும் தந்து அருள்புரிவீர்.

## விரிவுரை

**நீருநிலமண்டாத தாமரை:-**

தாமரை மண்ணில் தண்ணீரின் தொடர்புடன் முளைப்பது, இங்கே தண்ணீரும் மண்ணும் சம்பந்தப்படாத தாமரைக்கொடி என்பது மூலாதாரத்தில் இருந்து முளைத்தெழுகின்ற சுழு முனையைக் குறிக்கின்றது. அது தாமரைக்கொடிபோல் வளைந்து வளைந்து மேல் நோக்கிச் செல்கின்றது.

**நீளமகலஞ் சோதி வடிவான நேசமலரும்பூ:-**

பூ- இதயமலர். இதயபுண்டரிகமலர். அப் புண்டரிக மலர் மீது ஒரு மின்னொளி வடிவாக இடையறாது ஒரு பரம்பொருள் திருநடனம்புரிந்து கொண்டிருக்கின்றது.

**மாதின் மணமும் போல நேர்மருவி உண் காதலுடன் மேவி:-**

*மாது- அழகு. அழகும் இனிய மணமும்போல் அப்பரம் பொருளைச் சார்ந்து அருட்காதலுடன் அதனுடன் இரண்டறக் கலந்து நிற்கவேண்டும்.*

*"அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே" என்ற சிவஞானபோத எட்டாவது சூத்திரத்தின்படி அதனுடன் அனன்யம் பெற்றுத் திருவடியில் ஆன்மா அடங்கி நிற்கும். அவ்வாறு, நின்ற ஆன்மா பாச நீக்கம் பெற்றுப் பரமானந்த மெய்திப் பாவனாதீத நிலையில் நிற்கும்.*

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே

*- சிவஞானபோதம் 9-ஆம் சூத்திரம்*

**சூரியனுடன் சோம னீழலிவையண்டாத சோதிமருவும் பூமி அவையூடே:-**

*அவை- சபை. அது சஹஸ்ராரமாகிய பேரம்பலம்.*

*இதயாகாயம் - சிற்றம்பலம்*

*சஹஸ்ராரம் - பேரம்பலம்*

*சஹஸ்ராரம் என்பதைத் திருக்கோயில்களில் ஆயிரக்கால் மண்டபம் உணர்த்துகின்றது.*

*சஹஸ்ராரமாகிய மேலைப்பெருவெளியில் சூரிய சந்திரர் களுடைய வெயிலும் நிலவும் இல்லை. ஆனால், அங்கு இடையறாத ஒரு பேரொளி விளங்கிக் கொண்டிருக்கும்.*

*இடையறாத சிவயோக சாதனை செய்து சஹஸ்ரார சித்தி பெற்றவர்களே அதனை அறிவார்கள்.*

*"வானிந்து கதிரிலாத நாடண்டி" என்று பழநித் திருப்புகழில் இதே கருத்தை அடிகளார் கூறியிருக்கின்றார்.*

**தோகைமயிலின் பாகனாமென மகிழ்ந்தாட:-**

*தோகைமயில்- தோகைமயில் போன்ற உமையம்மையார். உவமையாகு பெயர்*

*இனி, மயிலாக இருந்து சிவபெருமானைப் பூசித்தவர் என்றும்*

பொருள்படும். அம்பிகை மயிலுருவுடன் வழிபட்ட திருத்தலம் மயிலாப்பூர்.

உமையம்மையாரை ஒருபாகத்தில் கொண்ட நடராஜ மூர்த்தியைப்போல் அடியேனும் நடனம்புரிந்து இன்புற வேண்டும் என்று வேண்டுகின்றார். ஆடுவது மகிழ்ச்சியினால் விளையும் மெய்ப்பாடு. துன்பநீக்கமும் இன்ப ஆக்கமும் பெற்ற ஆன்மா இன்ப நடம் புரியும்.

**சோதி அயிலும் தாரும் அருள்வாயே:-**

அயில்– கூர்மை. அது பண்பாகு பெயராக வேலாயுதத்தைக் குறிக்கின்றது. வேலை எனக்கு அருள்புரியும் என்பதன் உட்பொருள், வேல் பரிபூரண ஞானமாதலின் ஞானத்தையருள்புரியும் என்பதாகும். காதல்கொண்ட தலைவி காதலனுடைய மலர்மாலையை விரும்புவாள். இங்கே அருட்காதல் கொண்ட பக்குவம் உள்ள ஆன்மா முருகவேளுடைய மலர்மாலையை விரும்புகின்றது.

“மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே”

- திருப்புகழ்

**வாரியகிலங்கூச :-**

மயில் ஆடுகின்றபோது ஏழு சமுத்திரங்களும் அஞ்சின.

அகிலம்– எல்லாம். சமுத்திரங்கள் யாவும் அஞ்சின.

* குசைநெகி ழாவெற்றி வேலோன் அவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு அடியிடஎண்
திசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே

என்ற கந்தரலங்காரப் பாடலினால் மயிலின் பெருமையையறிக.

**ஆயிரபணஞ்சேடன் வாய்விட ஓட:-**

ஆயிரம் பணாமகுடங்களையுடைய ஆதிசேடன் மயிலின் நடனத்தைக் கண்டு அஞ்சித் தனது வாய்களைப் பிளக்கவும்,

---

* (இப்பாடலுக்கு நான் எழுதிய கந்தரலங்கார உரையைப் படித்து இன்புறுக.)

பயந்து ஓடவும் செய்தான். விடவும் ஓடவும் என விரிக்க. உம்மைத் தொகையாக நின்றது.

**எண்பாலும் வார்மணி உதிர்ந்தோடவே:-**

ஆதிசேடனுடைய பணாமகுடங்களில் உள்ள நீண்ட நாகரத்தின மணிகள் உதிர்ந்து எட்டுத் திக்குகளிலும் சிந்தி ஓடின. மணிகள் உதிர்கின்ற அளவில் அஞ்சிச் சேடன் ஓடினான் என்று குறிப்பிடுகின்றார்.

**கவின் நிறைந்த மாமயில் விடும் சேவற் கொடியோனே:-**

மயிலை ஆடவிடுகின்ற சேவலனே! என்று பொருள் கொள்க. மயில் என்ற இடத்தில் இரண்டாம் வேற்றுமை தொக்கி நிற்கின்றது. எனவே "மயில் விடும்" என்பதற்கு "மயிலை விடும்" என்று பொருள் செய்யப்பெற்றது.

உலகம் இன்புறும்பொருட்டு நாத தத்துவத்தினின்றும் சுத்தமாயையைக் கலக்கி அதினின்றும் ஏனைய தத்துவத்தை இறைவன் உண்டாக்குகின்றான்.

இந்த உட்பொருளை விளக்கவே முருகவேள் மயிலை நடனஞ் செய்ய விடுகின்றார் என்று அடிகளார் குறிப்பிடுகின்றார்.

**சேவல் கொடியோனே:-**

சேவல் - நாததத்துவம், மயில் விந்துதத்துவம், நாத தத்துவத்தை யுடையவன் முருகன்.

சிவதத்துவம் ஐந்து என உணர்க.

நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுவரம், சுத்த வித்தை.

1) நாதம் :- இது ஞானமயமானது. இதினின்றும் விந்து பிறக்கின்றது.

2) விந்து :- இது கிரியை மயமானது. இதினின்றும் சாதாக்கியம் பிறக்கின்றது.

சதா ஐக்கியம் சாதாக்கியம்.

3) சாதாக்கியம் :- இது ஞானமும் கிரியையும் சமமாகவுடையது.

அதாவது நாதவிந்து தத்துவங்கள் சமமாகக் கூடி நிற்பது.

முதலில் ஞானம்; பிறகு கிரியை; பிறகு இரண்டும் கலந்தது.

இதினின்றும் ஈசுவர தத்துவம் பிறந்தது.

4) ஈசுவரம்:- இது ஞானம் குறைந்து கிரியை அதிகமானது.

இதினின்றும் சுத்த வித்தை என்ற தத்துவம் பிறந்தது.

5) சுத்த வித்தை:- இது ஞானம் மிகுந்து கிரியை குறைந்து நிற்பது.

மயில் ஆடுவதனாலும் சேவல் கூவுவதனாலும் சிவ தத்துவங்கள் விளக்கமுற்று அதனால் வித்யா தத்துவங்களும், ஆன்ம தத்துவங்களும் தொழிற்படுகின்றன என வுணர்க.

**ஆரியனவன் தாதை தேடினமும்பாடு மாடலருணஞ் சோதி யருள்பாலா:-**

மாலும் அயனுங் காணாத சோதிவடிவாய் நின்ற சிவ மூர்த்தியின் திருக்குமாரர் முருகவேள்.

பிரமன்- ராஜச குணம்.

திருமால் - தாமத குணம்

இந்த இரு குணங்களாலும் இறைவனையடைய முடியாது.

**ஆடலருணஞ்சோதி:-**

அருணம் -சிவப்பு.

இறைவர் சிவந்த ஜோதிவடிவானவர். அது கருணை நிறைந்த ஜோதி என்க.

"அருட்ஜோதி" அருள்மயமானது

"சுயஞ்சோதி" தானே விளங்குவது

"பரஞ்சோதி" பெரிய பொருளாக விளங்குவது

"சிவஜோதி" மங்கலத்தைச் செய்வது

"ஞான ஜோதி" அறிவின் வடிவாகியது.

"ஏம ஜோதி" இன்பத்தை வழங்குவது

"வாமஜோதி" அழகியது

"நடன ஜோதி" எப்போதும் அசைந்துகொண்டிருப்பது

இவ்வாறு பற்பல நாமங்களையுங் கொண்டது ஜோதி என்க.

**ஆனைமுகவன் தேடி ஓடியே அணங்காதல்:-**

ஆனை முகவன்- தாரகாசுரன்.

24

அவன் போர் எங்கே என்று தேடி வருபவன். தேவர்கட்குப் பெருந்துயர் செய்தவன்; மாயையில் வல்லவன்.

அணங்கு - வருத்தம்.

அவன் வருத்தத்தை யடைதலை அடியவர்களாகிய அமரர் பொருட்டு ஆறுமுகப் பெருமான் புரிந்தனர்.

## கருத்துரை

மயிலையுடையவரே! சேவற் கொடியினரே! சிவ குமாரரே! தாரகாரியே! இதய கமலத்தையுற்றுச் சிவயோக நெறியில் சஹஸ்ரார சித்தி பெற ஞானத்தை யருள்புரிவீர்.

## 36

வேடர்செ ழுந்தினை காத்திதண் மீதிலி ருந்தபி ராட்டிவி
லோசன அம்புக ளாற்செயல் தடுமாறி
மேனித ளர்ந்துரு காப்பரி தாபமு டன்புன மேற்றிரு
வேளைபு குந்தப ராக்ரம மதுபாடி

நாடறி யும்படி கூப்பிடு நாவலர் தங்களை யார்ப்பதி
னாலுல கங்களு மேத்திய இருதாளில்
நாறுக டம்பணி யாப்பரி வோடுபு ரந்தப ராக்ரம
நாடஅ ருந்தவம் வாய்ப்பது மொருநாளே

ஆடக மந்தர நீர்க்கசை யாமலு ரம்பெற நாட்டியொ
ராயிர வெம்பகு வாய்ப்பணி கயிறாக
ஆழிக டைந்தமு தாக்கிய நேகர்பெ ரும்பசி தீர்த்தரு
ளாயனு மன்றெயில் தீப்பட அதிபார

வாடைநெ டுங்கிரி கோட்டிய வீரனு மெம்பர மாற்றிய
வாழ்வென வஞ்சக ராக்ஷதர் குலமாள
வாசவன் வன்சிறை மீட்டவ னூரும டங்கலு மீட்டவன்
வானுல குங்குடி யேற்றிய பெருமாளே.

## பதவுரை

ஆடக மந்தரம்- பொன்மயமான மந்தர மலையை, நீர்க்கு அசையாமல்- திருப்பாற்கடலில் அசையாதபடி, உரம்பெற

நாட்டி– வலிமை பொருந்தும்படி நிறுவி, ஒரு ஆயிர வெம்பகுவாய் பண கயிறு ஆக– ஓராயிரம் வெப்பமான வாய்களையுடைய வாசுகியை தாம்புக் கயிறாகப் பிடித்து, ஆழிகடைந்து - பாற் கடலைக் கடைந்து, அமுது ஆக்கி -- அமுதத்தை உண்டாக்கி, அநேகர் பெரும் பசி தீர்த்து அருள் - இந்திரனாதி இமைய வர்களது மிகுந்தபசியை நீக்கி அருள்புரிந்த, ஆயனும்- ஆயர் குலத்தில் அவதரித்த திருமாலும், அன்று எயில் தீப்பட - அந்த நாளில் முப்புராதிகளின் மதில் எரிந்து அழியும்படி, அதிபார வாடை நெடுங்கிரி கோட்டிய - மிகுந்த கனமுள்ள நீண்ட வடமேருகிரியை வில்லாக வளைத்த, வீரனும்- உருத்திர மூர்த்தியும், எம்பரம் ஆற்றிய வாழ்வு என - “அமரரைக் காக்கும் எமது சுமையைத் தணித்த வாழ்வே” என்று துதிக்க, வஞ்சக ராக்ஷதர் குலம் மாள - வஞ்சனையைச் செய்யும் அசுரர்களுடைய குலம் மாளச் செய்து, வாசவன் - தேவேந்திரனுடைய, வன் சிறை மீட்டு- வலிமையான சிறையை நீக்கி, அவன் ஊரும் அடங்கலும் மீட்டு- அவனுடைய அமராவதி நகரத்தையும் ஏனை எல்லாப் பொருள்களையும் மீட்டுத் தந்து, அவன் வான் உலகுங் குடி ஏற்றிய- அவனுடைய உலகமாகிய விண்ணுலகத்தில் என்றும் நின்று நிலவுமாறு குடியாக வைத்து அருள்புரிந்த, பெருமாளே- பெருமையின் மிக்கவரே! வேடர் செழும்தினை காத்து- வேடர்களுடைய செழுமை வாய்ந்த தினைப்புனத்தைக் காவல் செய்து, இதண் மீதில் இருந்த பிராட்டி - பரண்மீதில் இருந்த வள்ளி பிராட்டியாருடைய, விலோசன அம்புகளால் செயல் தடுமாறி - கண்களாகிய கணைகளினால் செயல் தடுமாறியது போல் நடித்து, மேனி தளர்ந்து உருகா- உடல் தளர்ந்து உள்ளம் உருகி நின்று, பரிதாபமுடன் - இரக்கத்தோடு கிழவடிவு கொண்டு, புனமேல் - தினைப்புனத்திற்கு, திருவேளை புகுந்த பராக்ரமம் அதுபாடி- சிறந்த சமயத்திற் சென்ற வல்லபத்தைப் புகழ்ந்துபாடி, நாடு அறியும்படி கூப்பிடு நாவலர் தங்களை - உலகம் அறிய அழைக்கின்ற புலவர்களை, பதினாலு உலகங்களும் ஏத்திய - பதினாலு உலகங்களும் துதிக்கின்ற, நாறு கடம்பு அணியா- மணங்கமழ்கின்ற கடப்பமாலையைத் தரித்துக்கொண்டுள்ள, இருதாளில்- இரண்டு திருவடிகளில், பரிவோடு புரந்த நாட அருந்தவம் வாய்ப்பதும் - நாடி நிற்க அருமையான தவப்பயனால் அடியேனுக்கு அருள் கூடுவதும், ஒருநாளே -ஒருநாளும் உளதாகுமோ?

## பொழிப்புரை

பொன்னிறமுடைய மந்தரமலையைத் திருப்பாற்கடலில் அசையாமல் உறுதியாக நிற்கும்படி நிறுவி, வெப்பமான ஆயிரம் வாய்களுடன் கூடிய வாசுகி என்ற நாகராஜனைத் தாம்புக் கயிறாகப் பிணித்து, பாற்கடலைக் கடைந்து, அமுதத்தை யெடுத்து, இந்திரனாதி இமையவர் பசியகல வழங்கியருளியவரும், ஆயர் குலத்தில் அவதரித்தவருமாகிய திருமாலும், முப்புர அரக்கர்களின் மதில்கள் எரியும்படி, மிகவுங் கனமுள்ள வடமேருகிரியை வில்லாகப் பிடித்து வளைத்த உருத்திரமூர்த்தியும், "தேவர்களைக் காக்கும் எமது சுமையைத் தணித்த வாழ்முதலே" என்று துதிக்கவும், வஞ்சனையைச் செய்யும் அவுணர்களுடைய குலத்தை மாய்த்தும், இந்திரனுடைய சிறையை மீட்டு அவனுடைய அமராவதி நகரையும் காமதேனு, கற்பகமரம், சிந்தாமணி, அரம்பையர் முதலிய எல்லாவற்றையும் சிறை மீட்டுத் தந்து, அவனுடைய பொன்னுலகத்தில் குடிபுகச் செய்து அருள்புரிந்த பெருமிதம் உடையவரே! வேடர்களுடைய வளமையான தினைப்புனத்தைக் காவல் புரிந்து, பரண் மீது இருந்த வள்ளி நாயகியினது கண்களாகிய கணைகள் பட்டு மயங்கிய வரைப்போல் நடித்து, தளர்ந்த உடம்புடன் சென்று உள்ளம் உருகி இரக்கமுடன் புனத்தின்கண் தக்க சமயம் பார்த்து அடைந்த கருணைத் திறத்தைப் புகழ்ந்து பாடி, உலகம் உணர அழைக்கின்ற புலவர்களை அரிய பதினாலு உலகங்களும் போற்ற நறுமணங்கமழும் கடப்பமலர்மாலை புனைந்த திருவடிகளில் அன்புடன் ஆட்கொண்ட திருவருளை என்றும் அடியேன் நாடி நலம் பெற அருந்தவம் கிடைக்கும் நாள் ஒன்றும் உளதாகுமோ?

## விரிவுரை

**வேடர் செழுந்தினை காத்திதண் மீதிலிருந்த பிராட்டி:-**

வள்ளி நாயகி தினைப்புனத்தில் பரண்மீது இருந்து தினைப்பயிரை இனிது காவல்புரிந்ததன் உட்பொருள் கீழ்வருமாறு:-

நெஞ்சமாகிய வயலிலே, ஆணவமாகிய காட்டை வெட்டி, அகங்காரமாகிய கல்லைப் பிளந்து, கடினமாகிய மேட்டை எடுத்து, உண்மையாகிய உழவைச் செய்து, மௌனம் என்ற வித்தை விதைத்து, அன்பு என்ற தண்ணீரைப் பாய்ச்சி,

சாந்தமாகிய வேலியிட்டு, ஞானமாகிய பயிரை வளர்த்து, அதில் தோன்றிய முத்தி என்ற கதிரைக் கொய்யவந்த, காமக்ரோதமாதி பறவைகளை, வைராக்கியமாகிய பரண்மீது இருந்து, ஆன்மா வாகிய வள்ளி, பக்தியென்ற கவணிலே, இறைவனது திருநாமங் களாகிய கற்களை வைத்து எறிந்து, இனிது காவல் புரிந்தனள் என்று உணர்க.

"காராரும் ஆணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் கார மென்னும்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்தி மேன்மேல்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராக வே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காத வண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டம்" - *தாயுமானார்*

திருவேளை புகுந்த பராக்ரமம் அதுபாடி:-

பலகாலும் மாதவஞ் செய்த சுந்தரவல்லியை மான் வயிற்றில் பிறந்து குறவர் குடியில் வளருமாறு கந்தவேள் கட்டளையிட்ட ருளினார். அந்த அன்னை அவ்வண்ணம் பிறந்து, வளர்ந்து தினைகாவல் புரிந்திருந்தனர். காமனை யெரித்த கனற்கண்ணிலே யிருந்து வெளிப்பட்ட ஞானபண்டிதனார் வள்ளியம்மையின் தவப்பண்புக்கு உள்ளம் உவந்து, மனம் உருகி, பக்குவத்தை யறிந்து சென்று அருள்புரிந்தனர்.

இருவினை யொப்பு, மலபரிபாகம் எய்தி சத்தினிபாதம் அடைந்த வேளையில் இறைவன் வெளிப்படுவான்.

"உணக்கி லாததோர் வித்து மேல்விளை யாமல் என்வினை
யொத்தபின்
கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே"
என்பார் மாணிக்கவாசகர்.

வடிவேற் பெருமான் வள்ளி நாயகிக்கு அருள்புரிந்தது அவருடைய பரமகருணையின் முதிர்ச்சி யென்க. அதனால், அக்கருணையையும், வள்ளியம்மைக்கு அருள்புரியச் சென்ற அடிமலரையும் மிகவும் பாராட்டி மெய்ஞ்ஞானிகள் புகழ்ந்து பாடுகின்றனர்.

"மஞ்சுதவழ் சார லஞ்சயில வேடர்
மங்கைதனை நாடி வனமீது
வந்தசர ணார விந்தமது பாட
வண்டமிழ்வி நோத மருள்வாயே"
*- திருப்புகழ்*

"மேவிய புனத்திதணி லோவிய மெனத்திகழு
மேதகு குறத்திதிரு வேளைக்காரனே" *- வகுப்பு*

நாடறியும்படி கூப்பிடு நாவலர்:-

*மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக்க முடியாத முருகனுடைய பெருமையையும், கருணையின் எளிமையையும் உலகம் அறிந்து உய்யும்படி முழக்கமாக மொழிந்து, உலக மாந்தரைக் கந்தவேள் கருணையைப் பெறுமாறு அறைகூவி அருட்புலவர்கள் அழைப்பார்கள். தாம் பெற்ற இன்பம் தரணிபெற வேண்டும் என்ற கருணையால் என்று அறிக.*

"இவையொழிய வும்பலிப்ப தகலவிடு முங்கள்வித்தை
யினையினி விடும்பெருத்த பாருளீர்
மயிலையு மவன்றிருக்கை அயிலையு மவன்கடைக்க
ணியலையு நினைந்திருக்க வாருமே" *-வகுப்பு*

*நாவிலே வன்மையுடையவர் நாவலர். நறுந்தமிழை யோதி உணரும் நாவலருடைய நாவில் முருகவேளின் திருவடி உறையும்,*

"பலகலை படித்தோது பாவாணர் நாவிலுறை
இருசர ணவித்தார வேலாயு தா" *- திருப்புகழ்*

பதினாலுலகங்களுமேத்திய இருதாள்:-

*திருவேலிறைவன் திருவடிப் பெருமை அளவிடற் கரியது. தேவரும் மூவரும் அறிகிலர்.*

"சுருதி மறைக ளிருநாலு திசையி லதிபர் முனிவோர்கள்
துகளி லிருடி எழுபேர்கள் சுடர்மூவர்
சொலவின் முடிவின் முகியாத பகுதி புருடர் நவநாதர்
தொலைவி னுடுவி னுலகோர்கள் மறையோர்கள்
அரிய சமய மொருகோடி அமரர் சரணர் சதகோடி
அரியு மயனு மொருகோடி யிவர்கூடி
அறிய அறிய அறியாத அடிகள்"

"ஆல முண்ட கோன கண்ட
லோக முண்ட மால்வி ரிஞ்சன்
ஆர ணங்க ளாக மங்கள் புகழ்தாளும்"
- *திருப்புகழ்*

பரிவோடு புரந்தபராக்ரமம்:-

*பலகலை படித்து ஓதும் சீலமுள்ள செந்தமிழ்ப் புலவர்களைச் செவ்வேட் பரமன் தனது செந்தாமரைத் தாளில் வைத்துக் காத்தருளுகின்றான். நக்கீரர், சிகண்டி முனிவர், சிதம்பர சுவாமிகள், குமரகுருபரர், பொய்யா மொழிப் புலவர், பாம்பனடிகள் முதலிய அருட்புலவர் களை ஆண்டருளிய கருணையை அகில லோகங்களும் அறியும்.*

நாட அருந்தவம் வாய்ப்பது மொருநாளே:-

*பாவலரைப் புரந்த பரங்கருணைத் தடங்கடலாகிய பன்னிருகைப் பரமனது பாத தாமரையை நாடுவதற்குப் பல பிறவிகளில் செய்த நிஷ்காம்மிய தவம் வேண்டும். ''தவமும் தவமுடையார்க் காகும்'' என்பார் பொதுமறையாசிரியர்.*

*"முருகவேளின் திருவடியைப் பணிவதற்கு நான் என்ன தவஞ்செய்தேனோ?'' என்று அடிகள் அநுபூதியில் கூறுமாறுங் காண்க.*

"காளைக் குமரே சனெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா?"

*ஒருநாளே– ஒருநாளும் உண்டாகுமோ? என்று வினாவு கின்றார். ஏகாரம் வினாப் பொருளில் வந்தது.*

*சிவமே பரம்பொருள் என்று பணியும் பேறு பெற்றதனால் அப் பெறலரும் பேற்றைக் குறித்து மாதவச் சிவஞான சுவாமிகள் வியந்து கூறும் தேனினும் இனிய செழும்பாடலைக் காண்க.*

ஆனே றுயர்த்தருளி அன்றினார் ஊரெரித்த
கோனே எனக்குக்குல தெய்வ மாம்பெற்றால்
யானே தவமுடையேன், யானே தவமுடையேன்
யானே தவமுடையேன் எல்லா வுலகினுமே.

ஆடகமந்தர........................ஆயனும்:-

இந்த இரண்டு அடிகளில் திருமால் திருப்பாற்கடலைக் கடைந்து பண்ணவர் பசியகற்றிய பராக்கிரமத்தை உரைக்கின்றனர்.

பொன்மேருமலை மத்தாக, வாசுகி தாம்பாக, சந்திரன் தறியாக, திருமால் கூர்மமாகித் தாங்க அமரர் ஆழிகடைந்தனர்.

திருமால் தேவர்களுக்கு நரை, திரை, மூப்பு, மரணம், பசி முதலிய இடர்கள் எய்தா வண்ணம் அமுதத்தை வழங்கியருளினார்.

"மாதிரமு மந்தரமு நீருநில னுங்கனக
மால்வரை யுடன்சுழல வாசுகிவி டம்பொழிய
மகரசலி லங்கடைந் திந்த்ராதி யர்க்கமுது
பகிர்தரு முகுந்தன்மன் பஞ்சாயு தக்கடவுள்" - *திருவகுப்பு*

சிவார்ச்சனை செய்பவர்களில் முதன்மை பெற்ற திருமால் அந்த அமுதத்தைச் சிவபக்தர்களுக்கே அளித்தனர் என்று அறிக.

"திசையிற் பொற்கிரி யாடவும் வாசுகி
புனைவித் துத்தலை நாளமு தார்சுவை
சிவபத் தர்க்கிது வாமென வேபகிர் அரிராமர்"
- *திருப்புகழ்*

அன்றெயில் தீப்பட...... கிரிகோட்டிய வீரனும்:-

முப்புராதியர் கொடுமைக்கு ஆற்றாது அமரர் அரனாரிடம் முறையிட்டனர். திரிபுர சம்மாரத்தின் பொருட்டுத் தேவர் ஒரு தேரையும் அமைத்துத் தந்தனர்.

பூமி தேர்த் தட்டாக, கீழேயுள்ள ஏழு தலங்களும் மேலேயுள்ள ஏழு உலகங்களும் தேரின் கீழுமேலுமுள்ள பகுதிகளாக, வாளகிரி அச்சாக, சந்திர சூரியர் சக்கரங்களாக, முப்பத்து முக்கோடி தேவர்களும் தேர்ப் பதுமைகளாக, ஏழு மேகங்களும் தேர்ச் சீலைகளாக, எண்திசைக் காவலர்கள் எட்டுக் குத்துக்கால்களாக, மேருமலை வில்லாக, சேடன் நாணாக, திருமால் கணையாக, அக்கணைக்கு அழற்கடவுள் வாயாக, வாயு குதையாக, சாரதிகேள்வன்

சாரதியாக, நான்மறைகள் புரவிகளாக, இவ்வாறு எல்லாம் அத்தேரின் ஒவ்வோர் உறுப்புக்களாக அமைந்தன. "நம்முடைய துணையினாலேதான் சிவபிரான் திரிபுர சம்மாரஞ் செய்கின்றனர்" என்று இமையவர்கள் எண்ணினார் கள். அந்த எண்ணத்தை அறிந்த இறைவர் "நமக்கு ஒரு துணையும் வேண்டுமோ" என்று திருவுளத்தில் சிந்தித்துச் சிறிது சிரித்தருளி னார். அதில் தோன்றிய ஒரு சிறிய தீப்பொறியால் திரிபுரம் சாம்பலாகியது,

"மாநாக நாண்வ லுப்பு றத்து வக்கியொர்
மாமேரு பூதரத் தநுப்பி டித்தொரு
மாலாய வாளி யைத்தொ டுத்த ரக்கரில் ஒருமூவர்
மாளாது பாத கப்பு ரத்ர யத்தவர்
தூளாக வேமுதல்சி ரித்த வித்தகர்" -*திருப்புகழ்*

எம்பரமாற்றிய வாழ்வெனா:-

காத்தற் றொழிலையுடைய திருமாலும், சங்காரத் தொழி லுடைய சிவமூர்த்தியும், தேவர்களைக் காத்தலையும், அசுரசங் காரமும் முருகவேள் புரிந்ததனால், அவர்களுக்குப் பாரங் குறைந்தது. அதனால், "எமது சுமையைக் குறைத்த குமரவேளே" என்று துதித்தனர்.

ஆற்றுதல்- குறைத்தல். மாற்றிய எனினும் அமையும். பரம்- பாரம். குறுகல் விகாரம் பெற்றது.

"காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா"

என்ற இடத்திலும் இவ்வாறு வருவதை யறிக.

அரிக்கும் அரனுக்கும் உள்ள சுமையைக் குறைத்த குமரவேள் நமது வினைப் பாரத்தையும் குறைத்தருளுவார்.

## கருத்துரை

திருமாலும் சிவனும் புகழத் தேவர் சிறை மீட்ட திரு வேலிறையே! பாவலரையாட்கொண்ட உமது பாதத்தைப் போற்ற அருள்புரிவீர்.

## 37

நெடிய வடகுவ டடியவு மெழுகிரி
நெறுநெ றெனநெரி யவுமுது பணிபதி
நிபிட முடிகிழி யவுநில மதிரவும் விளையாடும்

நிகரில் கலபியும் ரவியுமிழ் துவசமும்
நினது கருணையு முறைதரு பெருமையும்
நிறமு மிளமையும் வளமையு மிருசர ணமும்நீப

முடியு மபிநவ வனசரர் கொடியிடை
தளர வளர்வன ம்ருகமத பரிமள
முகுள புளகித தனகிரி தழுவிய திரடோளும்

மொகுமொ கெனமது கரமுரல் குரவணி
முருக னறுமுக னெனவரு வனபெயர்
முழுது மியல்கொடு பழுதற மொழிவது மொருநாளே

கொடிய படுகொலை நிசிசர ருரமொடு
குமுகு மெனவிசை யுடனிசை பெறமிகு
குருதி நதிவித சதியொடு குதிகொள விதியோடக்

குமுறு கடல்குடல் கிழிபட வடுமர
மொளுமொ ளெனஅடி யொடலறி விழவுயர்
குருகு பெயரிய வரைதொளை படவிடு சுடர்வேலா

இடியு முனைமலி குலிசமு மிலகிடு
கவள தவளவி கடதட கனகட
இபமு மிரணிய தரணியு முடையதொர் தனியானைக்

கிறைவ குருபர சரவண வெகுமுக
ககன புனிதையும் வனிதைய ரறுவரும்
எமது மகவென வுமைதரு மிமையவர் பெருமாளே

### பதவுரை

*கொடிய படுகொலை*- கொடுமையாகப் படுகொலை புரிபவர்களாகிய, *நிசிசரர் உரமொடு*- அரக்கர்களுடைய மார்பில், *குமுகுமு என இசை பெற* - குமுகுமு என்ற ஒலியுடன் தாக்கவும், *மிகு குருதி நதி*- அதிகமான உதிர வெள்ளம், *சதியொடு குதிகொள* - தாள ஒத்துடன் குபுகுபு என்று பெருகி விழவும்,

விதி ஓட- அசுரர்களுடைய தலையில் எழுதிய விதியானது விலகி ஓடவும், குமுறு கடல் குடல் கிழிபட - ஒலிக்கும்படியான சமுத்திரத்தின் நடு இடம் பிளவுபடவும், வடுமரம் மொளு மொளு என அடியொடு அலறி விழ- பிஞ்சுகளுடன் கூடிய மாமர மானது மொளுமொளு என்று அடியுடன் ஒலித்து வீழவும், குருகுபெயரிய உயர்வரை தொளைபட விடு- கிரவுஞ்சம் என்ற பறவையின் பேரைத் தாங்கிய உயர்ந்த மலை தொளை பட்டழியவும் விடுத்தருளிய, சுடர் வேலா- ஒளி மிக்க வேற்படை யையுடையவரே! இடியு முனைமலி குலிசமும் - இடியின் கூர்மை யைக் காட்டிலும் மிகவுங் கூர்மையாக விளங்கும் வஜ்ராயுதத்தை யும், இலகிடு கவள - இனிய வாயளவுணவும், தவள - வெண்மை யும், விகடதட- மிகவும் விசாலமான முகப் பரப்பும், கனகட - மிகுந்த மதநீர்ப் பெருக்குமுடைய, இபமும் - ஐராவதம் என்ற யானையையும், இரணிய தரணியும் - பொன்மயமான உலகத்தை யும், உடையது ஓர்- உடைமையாகக் கொண்ட ஒப்பற்ற, தனி யானைக்கு இறைவ- சிறந்த தெய்வயானை யம்மையாருக்குத் தலைவரே! குருபர- மேலான குருநாதரே! சரவண- சரவணப் பொய்கையில் அவதரித்தவரே! வெகுமுக ககன புனிதையும் - பல முகங்களையுடைய ஆகாய கங்கையும், வனிதையர் அறுவரும் - கார்த்திகைப் பெண்கள் ஆறுபேரும், எமது மகவு என - எங்கள் குழந்தையென்று உரிமையுடன் கொண்டாடும்படி, உமைதரும் - உமையம்மையார் பெற்றருளிய, இமையவர் பெருமாளே - தேவர்கள் போற்றும் பெருமையில் மிக்கவரே! நெடிய வட குவடு இடியவும் - நீண்ட மேருமலை பொடிபட்டு இடியவும், எழுகிரி நெறு நெறு என நெரியவும்- ஏழுமலைகள் நெறு நெறு என்று நெரிந்து விழவும்; முதுபணி பதி - பழமையான அரவு அரசனாகிய ஆதிசேடனுடைய, நிபிட முடி கிழியவும்- நெருக்கமாகிய தலைகள் கிழியவும், நிலம் அதிரவும்- பூமி குலுங்கவும், விளையாடும்- விளையாடுகின்ற நிகர் இல் கலபியும் -ஒப்பில்லாத மயிலையும், ரவி உமிழ் துவசமும் - சூரியனை தனது கூக்குரலினால் அழைத்து உமிழ்கின்ற கோழிக் கொடியையும், நினது கருணையும் - தேவரீருடைய கருணையின் தன்மையையும், முறைதரு பெருமையும் - முறைமையைத் தருகின்ற பெருமையையும், நிறமும்- உயர்ந்த பவள நிறத்தையும், இளமையும் - என்றும் அகலாத இளமைத் தன்மையையும், இரு சரணமும் - இரண்டு திருவடிகளையும், நிப முடியும் - கடப்ப மலர்மாலை புனைந்த திருமுடியையும், அபி நவ- புதுமையான,

வனசரர் கொடி- வேடர்களது குல மகளாகிய வள்ளியம்மை யாரது, இடை தளர வளர் வன - இடையானது தளரும்படி வளர்கின்றனவும், ம்ருகமத பரிமள- கஸ்தூரி கமழ்கின்றனவும், முகுள புளகித தனகிரி தழுவிய திரள் தோளும்- குவிந்து பூரித்துள்ள தனபாரங்களாகிய மலைகளைத் தழுவுகின்ற-திரண்ட தோள்களையும், மொகுமொகு என மதுகர முரல் குரவு அணி- மொகுமொகு என்ற ஒலியுடன் வண்டுகள் பாடி நெருங்கும் குராமலர் மாலையையணிந்த, முருகன்- முருகப்பெருமான், அறுமுகன்- ஆறுமுகக் கடவுள், எனவருபெயர் முழுதும்- என்று வரும் நாமங்கள் எல்லாவற்றையும், இயல்கொடு - இயல் தமிழைக் கொண்டு, பழுது அற மொழிவதும் ஒருநாளே- குற்றமறப் பாடி வழிபடுவதும் ஒருநாள் உளதோ?

## பொழிப்புரை

கொடுமையான பெருங்கொலைகள் புரிகின்ற அரக்கர் களுடைய மார்பில் "குமுகுமு" என்ற ஒலியுடன் மோதவும், மிகுந்த உதிரவெள்ளம் தாளவொத்துடன் பெருகவும், பிரமன் எழுதிய விதி விலகியோடவும், ஒலிக்கின்ற கடலின் நடுப்பகுதி பிளந்திடவும், பிஞ்சுகளுடன் கூடிய மாமரமானது "மொளு மொளு" என்று அடியுடன் அலறி முறிந்து விழவும், கிரவுஞ்சப் பறவையின் வடிவுடன் உயர்ந்து நின்ற மலை தொளை படும்படியும் விடுத்தருளிய ஒளிமிக்க வேலாயுதத்தை யுடையவரே! இடியேற்றைப்போல் முனையுடன் கூடிய வஜ்ராயுதத்தையும், இனிய வாயளவு கொண்ட வுணவும் வெண்மையும் மிகவும் விசாலமான முகமும், பெரிய மத நீரும் உடைய ஐராவதத்தையும், பொன்னுலகத்தையும் உடைய ஒப்பற்ற தெய்வயானை யம்மையாருக்குத் தலைவரே! சிறந்த குருநாதரே! சரவணபவ! பல முகங்களை யுடைய ஆகாயகங்கா தேவியும், ஆறு கார்த்திகை மாதர்களும் "எங்கள் புதல்வர், எங்கள்புதல்வர்" என்று கொண் டாடுமாறு, உமாதேவியார் பெற்ற, தேவர்கள் போற்றும் பெருமிதம் உடையவரே! நீண்ட வடமேருமலை இடிந்து பொடிபடவும், ஏழு குலமலைகள் "நெறு நெறு" என்று நெரிந்து இடியவும், பழமை யான நாகமன்னனாகிய ஆதிசேடனது நெருக்கமான தலைகள் கிழியவும், பூமி குலுங்கவும், நடனம் புரிந்து விளையாடுகின்ற ஒப்பற்ற தோகையுடன் கூடிய மயிலையும், தனது கூக்குரலால் கதிரவனை உமிழ்கின்ற கோழிக் கொடியையும், தேவரீரது கருணையையும், முறைமையுடன் கூடிய பெருமையையும், பவள

நிறத்தையும், என்று மகலாத இளமையையும், வளப்பத்தையும், இரண்டு திருவடிகளையும், கடப்ப மலர் மாலை புனைந்த திருமுடியையும், புதுமை மிக்க வள்ளியம்மையாரது இடை தளரும்படி வளர்ந்து கஸ்தூரியின் மணங்கமழக் குவிந்து பூரித் துள்ள தனபாரங்களைத் தழுவுகின்ற திரண்ட தோள்களையும், "மொகு மொகு" என்று வண்டுகள் ஒலிக்கின்ற குராமலரை யணிகின்ற முருகன், ஆறுமுகன், என்பனவாதி திருநாமங்கள் எல்லாவற்றையும், இயற்றமிழைக் கொண்டு குற்றமறப் பாடித் துதிக்கின்ற நாள் என்று எப்போது கிட்டுமோ?

## விரிவுரை

**நெடிய வடகுவடிடியவும்... விளையாடும் நிகரில் கலபி:-**

அயிலேந்தும் பெருமானுடைய மயிலின் பெருமையை இத்திருப்புகழின் முதலடியில் இனிது அடிகளார் அறைகின்றனர்.

வடகுவடு- மேருமலை. அது வடதிசையில் இருப்பதனால் வடமேருமலை எனப்படும். அது பூமிக்கு நடுவிடத்தில் விளங்கு வது. மலைகள் எல்லாவற்றுக்குந் தலையாயது. நிடதமலைக்கு வடக்கே ஒன்பதினாயிரம் யோசனைக்கு அப்பால் உள்ளது; முப்பத்திரண்டு ஆயிரம் யோசனைப் பரப்பும் ஆயிரம் சிகரங்களையும் உடையது. பூமிக்கு அச்சாக நிற்பது. திரிபுர தகன காலத்தில் சிவமூர்த்திக்கு வில்லாக விளங்கியது. பொன்னிறம் உடையது.

மயில் நடனஞ் செய்கின்றபோது, அதன் வன்மையைத் தாங்கமாட்டாது மேற்கூறிய மலை இடிந்து பொடிபடுகின்றது.

**எழுகிரி நெறுநெறென நெரியவும்:-**

குலமலைகள் எட்டு என்றும், ஏழு என்றும் வழங்கப்பெறும்.

கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம்.

இந்த மலைகளில் கைலையை நீக்கி ஏழுமலைகள் எனவாம். இம் மலைகள் ஏழும் நெறுநெறு என்று நெரிந்தன. அத்துணைப் பேராற்றலுடன் மயில் நடிக்கும்.

**முதுபணிபதி நிபிட முடி கிழியவும்:-**

முதுமை- பழமை; பணிபதி- ஆதிசேடன்; நிபிடம்- நெருக்கம்.

சேடன்– அரவு இனங்களுக்கு அரசன்; ஆயிரம் பணாம குடங்களையுடையவன், சிறந்த கல்வியறிவும், அறப்பண்பும் பூண்டவன். அவனுடைய நெருக்கமான தலைகள் கிழியும்படி மயில் நடனம் புரியும்.

மயிலின் நடனத்தின் பெருமையை அடியில் வரும் திருவிருத்தத்தாலும் உணர்க

"சக்ரப் ரசண்டகிரி முட்டக் கிழிந்தவெளி
பட்டுக் ரவுஞ்சசயி லம்
தகரப் பெருங்கனக சிகரச் சிலம்புமெழு
தனிவெற்பு மம்புவியு மெண்
திக்குத் தடங்குவடு மொக்கக் குலுங்கவரு
சித்ரப்ப தம்பெயர வே
சேடன்முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூரர்
திடுக்கிட நடிக்குமயி லாம்"

ரவியுமிழ் துவசமும்:-

நாடோறும் வைகறையில் கோழி "கொக்கறுகோ" என்று கூவிக் கதிரவனை வரவேற்கின்றது. உலகமெல்லாம் உவக்க வரும் உத்தமனை உயிர்களின் பிரதிநிதியாக சேவல் வரவேற்கின்றது. பிரணவத்தை ஒலி வடிவாக அது கூவுகின்றது. ஒளியைக் கண்டு உவக்கும் உத்தமமான குணம் படைத்தது. கோழி. யாருக்கும் ஒரு கேடும் செய்யாமல் உபகரிப்பது. நெருப்பு மயம்போல் சிவந்த நிறத்துடன் விளங்குவது.

நாளும் உலகம் உவக்கவரும் ஞாயிற்றின் வரவை முன் கூட்டியே நமக்கு உவகையுடன் உணர்த்தும் சேவலின் புகழை நாம் இனிது எடுத்துத் துதிக்கவேண்டும்.

வந்திப்பேன் அநுதினமும் வாழ்த்திடுவேன் உனதுதிரு
வடியை நாளும்
சிந்திப்பேன் முப்பொழுதுஞ் சேவிப்பேன் செஞ்சூட்டுச்
சேவ லேகேள்
வந்திப்பேன் எனதுவலி பாரென்றும் ஆணவமாம்
பகைவிண் டோடக்
கொந்திற்றேன் பொழிசாரல் தணிகைவரை யான்வரநீ
கூவு வாயே.

-தணிகைச்சந்நிதிமுறை

நினது கருணையும்:-

இறைவனது கருணை அளவிடற்கரியது. அது கடலினும் பல கோடி மடங்கு விசாலமானது.

"கருணை மேருவே ஈறில் கருணை வாரியே தூய
கருணை மேகமே தேவர் பெருமாளே"

இறைவனது திருமுகமலரின் கருணைத்தேன் பெரு வெள்ளம் போல் இடையறாது பெருகி வழிந்து கொண்டேயிருக்கும்.

"மருவறு கடலென மருவுப ணிருவிழி
வழிந்த அருளே பொழிந்த தொருபால்"

"மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி"

"கருணைகூர் முகங்க ளாறும்"

"உனது முககருணை மலரோ ராறும்"

"கருணைபொழி கமலமுக மாறும்"

என்பனவாதி அமுத வசனங்களால் அறிக.

ஆதலின், இறைவனது அளப்பற்ற கருணையை நாம் என்றும் மறவாது போற்றிப் புகழ்தல் வேண்டும்.

இளமையும்:-

முருகப் பெருமான் என்றுமகலாத இளமையுடையவர். தன்னையடைந்த அடியவரையும் இளமையாக இருக்குமாறு அருள்புரிவர்.

"இனியசொல் மறாத சீலர் கருவழி வராமல் நாளும்
இளமைய துதானு மாக நினைவோனே"

கொடியிடை தளர வளர்வன:-

வள்ளியம்மையார் இச்சா சத்தி யென்க. உயிர்கட்கெல்லாம் இன்னருள் புரியும்பொருட்டு இளம்பூரணன் இச்சக்தியை யுடையவனாக விளங்குகின்றான். வள்ளியம்மையாருடைய இரு தனங்கள் பரஞானம், அபர ஞானம் என்ற இரு ஞானங்களே யாகும். அந்த இரு ஞானங்கள் வளர்வதனால் அறியாமையாகிய (அஞ்ஞானம்) இடைதளர்ந்து மெலிந்து விடுகின்றது.

முருகனறுமுகன் எனவருவனபெயர் முழுதும் இயல்கொடு பழுதற மொழிவதும் ஒருநாளே:-

குமாரக் கடவுளுடைய திருநாமங்களுள் மிகச் சிறந்தது முருகன் என்பதேயாகும். "மொழிக்குத் துணை முருகா என்னு நாமங்கள்" என்று அடிகளார் அலங்காரத்தில் கூறியருளுகின்றனர்.

முருகன் என்ற சொல்லில் முருகு என்பது பகுதி. அன் என்பது ஒருமை விகுதி. ''முருகு'' என்பதில் மூன்று உகரங்கள் இருக்கின்றன. ம்–உ, ர்–உ, க்–உ,

அ- படைத்தற்றொழிலைச் செய்யும்
உ- காத்தற் றொழிலைச் செய்யும்
ம- அழித்தற் றொழிலைச் செய்யும்.

சென்ற காலம், நிகழ்காலம், வருங்காலம் என்ற முக்காலங்களிலும், சுவர்க்க, மத்திய, பாதலம் என்ற மூன்று உலகங்களிலும் உயிர்களைக் காத்து, இம்மை, மறுமை, வீடு என்ற மும்மையும அருள வல்லவர் அப் பரமபதியே என்ற பெரு உண்மையை விளக்க மூன்று உகரங்களுடன் கூடி முருகு என்ற திருநாமத்தினால் அவரை உண்மை ஞானிகள் உரைத்தருளி னார்கள்.

ஐந்து முகங்களுடன் வீற்றிருந்த சிவபெருமான் அமராதி யடியவர்கட்காகத் தனது தொல்லைத் திருமுகம் ஆறும் கொண்டருளி, அந்த ஆறுமுகங்களினின்றும் தோன்றிய ஆறு அருட்சுடர்களே ஆறுமுகங் கொண்டன ஆதலின், எல்லையில் லாத கருணையுடன் கூடிய மூர்த்தி ஆறுமுகமூர்த்தி என உணர்க.

மண்ண ளந்திடு மாயனும் வனசமே லவனும்
எண்ண ரும்பகல் தேடியுங் காண்கிலா திருந்த
பண்ண வன்நுதல் விழியிடைப் பரஞ்சுடர் உருவாய்
எண்ணி லாதபே ரருளினால் மதலையா யுதித்தான்.

ஆன்மாக்களை ஆட்கொள்ள வல்லது ஆறுமுக மன்றி வேறுமுகமில்லை யென்று தெளிந்த மதியுடையோர் தேர்க.

அந்த அருள்மயமாக விளங்கும் ஆறுமுகங்களையும் உன்னி உன்னி உள்ளம் உருகவேண்டும்.

"அறுமுக மெனநெக் கென்பெ லாமுரு கன்புறாதோ?"

என்று அடிகளார் மதுரைத் திருப்புகழில் கூறியருளினார்.

ஆன்மகோடிகட்கு ஆறுதலை தருவது அப் பரமபதியின் ஆறுதலையே யென்க.

ஆதிசத்தி, பராசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, இச்சாசத்தி, குடிலா சத்தி என்ற சத்திகளே ஆறுமுகம் என்று அறிக.

"ஆதியொடு மந்த மாகியந லங்கள்
ஆறுமுக மென்று தெரியேனே"

-திருப்புகழ்

இனி அ. உ. ம. நாதம். விந்து, கலை. என்ற ஆறும் ஆறுமுகம் என்றும்,

மந்திரம், பதம், வன்னம், புவனம், கலை, தத்துவம் என்ற ஆறு அத்துவாக்களே ஆறுமுகம் என்றும்,

சருவஞ்ஞிதை, திருப்தி, அநாதிபோதம், அலுப்த சத்தி, அநந்த சத்தி, சுவதந்திரத்வம் என்று ஆறு அருட்குணங்களே ஆறுமுகம் என்றும்,

"ஏவர்தம் பாலு மின்றி எல்லைதீர் அமலற் குள்ள
மூவிரு குணனும் சேய்க்கு முகங்களாய் வந்த"

-கந்தபுராணம்

ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம், என்ற ஆறும், ஆறுமுகம் என்றும் அறிக.

இந்த ஆறுமுகங்களினின்றும் அறுவகை ஒளிகள் வீசுகின்றன. அவையாவன:

1. ஞானப்ரகாசம்
2. ஞானானந்தப்ரகாசம்
3. சர்வஞான வியாபகப்ரகாசம்
4. சுத்த ஞான சாக்ஷிப்ரகாசம்
5. சர்வபரிசுத்தபிரம ஞானானந்தப்ரகாசம்
6. அநாதி நித்ய பிரமஞானானந்தசிவப்ரகாசம்

அன்றியும், உல்லாசம், நிராகுலம், யோகம், இதம், சல்லாபம், விநோதம் என்ற ஆறுமே பெருமானுடைய ஆறுமுகம் என்றும் உணர்க.

"உல்லா சநிரா குலயோ கவிதச்
சல்லா பவிநோ தனுநீ யலையோ"

-அநுபூதி

வாக்கிலே மூன்று அழுக்குகள் உண்டு. பொய், புறங்கூறல், தீச்சொல் என்பவை. இந்த அழுக்குகளை யகற்றும் தண்ணீர் இறைவனுடைய திருநாமங்களேயாகும்.

"நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்" - அப்பர்

முருகவேளுடைய திருநாமங்களை அன்புடன் ஓதுபவர்க்கு இம்மையில் கொடிய வறுமைநோய் எய்தாது. முடிவில் வீடுபேறும் எய்தும்.

முடியாப் பிறவிக் கடலிற் புகார்முழு துங்கெடுக்கு
மிடியாற் படியில் விதனப் படார்வெற்றி வேற்பெருமாள்
அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு நாமம் புகல்பவரே

என்ற கந்தரலங்காரத் திருப்பாடலை உன்னுந்தொறும் எந்தக் கருங்கல் மனந்தான் உருகாது?

இறைவனுடைய திருநாமங்களைக் குற்றமறக் கூற வேண்டும். எழுத்துப்பிழை, சொற்பிழைகளுடன் கூறக்கூடாது. பற்பல எண்ணங்களுடனும், பற்பல தீச்செயல்களைச் செய்து கொண்டும் கூறக்கூடாது. 'அயில்வேலன் கவியை யன்பால் எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர்' என்ற அலங்காரத்தின்படி இறைவனுடைய திருநாமங்களை, அன்புடன், உள்ளங்குழைந்து ஒருமைப்பட்ட மனத்துடன் ஓத வேண்டும். அங்ஙனம் ஓதியவர்க்கு முழுப்பலன் உடனே கைகூடும் என்பது உறுதி.

குருகுபெயரியவரை :-

குருகு- பறவை. கிரவுஞ்சம் என்ற பறவையின் வடிவம் போன்ற மலை.

தாரகாசுரனுக்கு நண்பனான ஓர் அரக்கன்; அவன் பெரிய மாயாவி; வஞ்சனையும் தந்திரமும் மந்திரமும் செய்ய வல்லவன்.

மக்கள் பலர் சென்று மீளும் ஒருவழியில் மலைவடிவாக நிற்பான். வருகின்ற மக்களுக்கு அம் மலையில் பல வழிகளைக் காட்டுவான். அவ்வழியே அம் மக்கள் சென்றால், பின்னர் சென்ற வழி அடைபட்டுவிடும். மீள வழியின்றி இடியும் மின்னலும் தோன்ற இடர்ப்பட்டு மீளுதலின்றி மாளுவர். இங்ஙனம் பல்லாயிரம் முனிவர்களையும் மக்களையும் மாய்த்து வந்தான்.

மகத்துவமிக்க அகத்திய முனிவர் தென்னாடு நோக்கி

வரும்போது, வழக்கம்போல் மலையுருவங் கொண்டு எதிர்த்து நின்றனன். அம்மலையுள் பல வழிகள் காணப்பட்டன. அவ்வழியுள் அகத்திய முனிவர் சென்றனர். நாற்புறமும் வழிமறைந்து, காட்டுத்தீ, சூறாவளி, இடி, மழை முதலியன தோன்றின. அசுரமாயை என்பதை ஞான நோக்காலறிந்த குறுமுனிவர் தமது திருக்கரத்திலிருந்த யோகதண்டத்தினால் இடித்துப் பல குகைகளை யுண்டாக்கி, வெளியே வந்து, "நீ இப்படியே மலை வடிவாக இருந்து, குமாரக் கடவுள் வடிவேலால் அழியக் கடவாய்" என்று சபித்தனர்.

மலையுருவாகவே கிடந்த அவ்வசுரன் தாரகனுக்குத் துணையாக நின்று போரில் பலப்பல மாயங்களைச் செய்தான். முடிவில், வீரவாகுதேவரையும், லக்ஷத்தெண் பான் வீரர்களையும் பூதசேனாதிபதிகளையும் தனக்குள் புகுமாறு செய்து மயக்கினான். வெற்றிவேற் பெருமானுடன் போர் புரிந்து, வேலாயுதத்தினால் பிளக்கப்பட்டு அழிந் தனன்.

**வெகுமுக ககனபுனிதையும் வனிதையரறுவரும்**
**எமது மகவென உமைதரும்:-**

சிவபிரானுடைய நுதல்விழியினின்றும் எம்பிரான் அருட் பெருஞ்சோதியாகத் தோன்றி, கங்காநதியில் தவழ்ந்து சென்று சரவணப் பொய்கையில் திருவுருவங் கொண்ட ருளினார். கார்த்திகைப் பெண்கள் அறுவரும் பாலூட்டி னார்கள்.

சிறிது நேரம் தவழ்ந்த காரணத்தினால் கங்கையின் புதல்வர் என்றும், பாலூட்டிய காரணத்தினால் கார்த்திகை மைந்த ரென்றும், உலகம் தழைக்க உமையம்மையார் தமது புதல்வராகிய முருகப் பெருமானை அளித்தருளினார். அது அவரது கருணைத் திறம் ஆகும்.

## கருத்துரை

வடிவேற் கடவுளே! தெய்வ குஞ்சரி மணவாளரே! பார்வதி பாலரே! மயிலையும் சேவலையும், அடி முடிகளையும், ஏனைய திருவுருவங்களையும் குற்றமறப் பாடி உய்வதற்கு அருள்புரிவீர்.

## 38

பகிர நினைவொரு தினையள விலுமிலி
கருணை யிலியுன தருணையொ டுதணியல்
பழநி மலைகுரு மலைபணி மலைபல மலைபாடிப்

பரவு மிடறிலி படிறுகொ டிடறுசொல்
பழகி யழகிலி குலமிலி நலமிலி
பதிமை யிலிபவு ஷதுமிலி மகிமையி லிகுலாலன்

திகிரி வருமொரு செலவினி லெழுபது
செலவு வருமன பவுரிகொ டலமரு
திருக னுருகுத லழுகுதல் தொழுகுதல் நினையாத

திமிர னியல்பிலி யருளிலி பொருளிலி
திருடன் மதியிலி கதியிலி விதியிலி
செயலி லுணர்விலி சிவபத மடைவது மொருநாளே

மகர சலநிதி முறையிட நிசிசரன்
மகுட மொருபது மிருபது திரள்புய
வரையு மறவொரு கணைதெரி புயல்குரு ந்ருபதூதன்

மடுவில் மதகரி முதலென வுதவிய
வரத னிருதிறல் மருதொடு பொருதவன்
மதலை குதலையின் மறைமொழி யிகழிர ணியனாகம்

உகிரி னுதிகொடு வகிருமொ ரடலரி
திகிரி தரமர கதகிரி யெரியுமிழ்
உரக சுடிகையில் நடநவி லரிதிரு மருகோனே

உருகு மடியவ ரிருவினை யிருள்பொரு
முதய தினகர இமகரன் வலம்வரும்
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே.

### பதவுரை

*மகர சலநிதி முறையிட* - மகர மீன்கள் வாழுகின்ற சமுத்திரம் ஓ என்று கதறும்படியும், *நிசிசரன்* - இரவில் சஞ்சரிப்பவனாகிய இராவணனுடைய, *மகுடம் ஒருபதும்*- பத்துத் தலைகளும், *இருபது திரள்புய வரையும் அற* - மலைபோல் திரண்ட இருபது தோள்களும் அற்று விழவும், *ஒரு கணைதெரி*

புயல் - ஒப்பற்ற கணையை விடுத்த நீலமேகம் போன்றவரும், குருந்ருபதூதன் - குருகுலத் தலைவராகிய தருமநந்தனருடைய தூதுவரும், மடுவில் மதகரி முதல் என உதவிய வரதன் - மடுவினிடத்தே (முதலை பற்றிக்கொள்ள) கஜேந்திரம் என்ற யானை ஆதிமூலம் என்று அழைத்த உடன் உபகரித்த வரதராஜரும், இரு திறல் மருதொடு பொருதவன்- வலிமை மிக்க இரண்டு மருதமரங்களைத் திருவடியால் உதைத்தவரும், மதலை - குழந்தையாகிய பிரகலாதர், குதலையின் மறைமொழி இகழ்- இளமையான வாக்கினால் கூறிய வேதமொழியை இகழ்ந்த, இரணியன் ஆகம்- இரணியனுடைய உடம்பை, உகிரின் நுதி கொடு வகிரும் - நகத்தின் நுனியைக் கொண்டு பிளந்த, ஒரு அடல் அரி- ஒப்பற்ற வலிமைபொருந்திய நரசிங்கமாக வந்தவரும், திகிரிதர - சக்ராயுதத்தைத் தாங்கியவரும், மரகதகிரி - மரகதமலை போல் விளங்குபவரும், எரி உமிழ் உரக சுடிகையில் நடம் நவில் அரி - நெருப்பைக் கொப்பளிக்கின்ற காளிங்கன் என்ற பாம்பின் படத்தின் மீது நடனம் புரிந்தவரும் ஆகிய திருமாலின், திரு மருகோனே - மேன்மை மிக்க மருகரே! உருகும் அடியவர் - உள்ளம் உருகும் அடியார்களுடைய, இருவினை இருள் பொரும் - நல்வினை தீவினைகளாகிய இருவினைகளை நீக்குகின்ற, உதய தினகர - இளஞ்சூரியரே! இமகரன் வலம் வரும் உலகமுழுது - பனியை நீக்கும் கதிரவன் வலம் வருகின்ற உலகமுழுவதும், ஒரு நொடியினில் வலம் வரும் - ஒருநெடிப்பொழுதுக்குள் வலம் வந்த, பெருமாளே- பெருமையின் மிக்கவரே! பகிர நினைவு ஒரு தினை அளவிலும் இலி - வறியவர்க்குப் பங்கிட்டுத் தரும் எண்ணம் ஒரு தினையரிசி யளவேனும் இல்லாதவன்; கருணை இலி - கருணையில்லாதவன்; உனது அருணை யோடு- தேவரீர் எழுந்தருளியுள்ள திருவண்ணாமலை யுடன், தணியல் - திருத்தணிகை, பழநிமலை - பழநிமலை, குருமலை-- சுவாமிமலை, பணிமலை- திருச்செங்கோடு முதலிய, பல மலைபாடி - பற்பல மலைகளையும் பாடி, பரவும் மிடறு இலி- துதிக்கின்ற கழுத்து இல்லாதவன்; படிறுகொடு இடறுசொல் பழகி- பொய்யைக் கண்டு தடுமாறுகின்ற சொற்களைப் பழகுகின்றவன்; அழகு இலி - அழகு இல்லாதவன்; குலம் இலி - நற்குலத்தில் பிறவாதவன்; நலம் இலி - நன்மையில்லாதவன்; பதிமை இலி- முதன்மை இல்லாதவன்; பவுஷதும் இலி - பெருமையும் இல்லாதவன்; மகிமை இலி - மகிமையில்லாதவன்; குலாலன் திகிரி வரும் ஒரு செலவினில்- குயவனுடைய சக்கரமானது ஒரு முறை

சுற்றுவதற்குள், எழுபது செலவு வரும்- எழுபது முறை சுற்றுகின்ற, மனபவுரி கொடு அலமரும் திருகன் - மனத்தின் சுழற்சியைக் கொண்டு கலங்குகின்ற மாறுபாட்டையுடையவன்; உருகுதல்- உள்ளம் உருகுதலையும், அழுகுதல்- காதலினால் கண்ணீர் வடித்தலையும், தொழுகுதல் - கும்பிடுதலையும், நினையாத திமிரன் - நினைக்காத ஆணவ இருளையுடையவன், இயல்பு இலி- நல்ல இயல்பு இல்லாதவன்; அருள் இலி- திருவருள் துணையற்றவன்; பொருள் இலி- இம்மைக்கு உரிய பொருட் செல்வம் இல்லாதவன்; திருடன் - கரவு பூண்டவன்; மதி இலி- அறிவு இல்லாதவன்; கதி இலி- திக்கற்றவன்; விதி இலி - ஒழுங்கு இல்லாதவன்; செயலில் உணர்வு இலி- செய்கின்ற காரியங்களில் உணர்ச்சியில்லாதவன்; (இத்தகைய அடியேன்) சிவபதம் அடைவதும் ஒரு நாளே - சிவபதவி அடைகின்ற நாள் ஒன்று உண்டாகுமோ?

## பொழிப்புரை

மகர மீன்களுக்கு உறைவிடமாகிய கடல் கதறும்படியும், இராவணனுடைய பத்துத் தலைகளும் மலைபோல் திரண்ட இருபது தோள்களும் அற்று விழும்படியும் ஒப்பற்ற கணையை விடுத்த நீலமேகம் போன்றவரும், குருகுல மன்னராகிய யுதிஷ்டிரருடைய தூதுவரும், மடுவிலே முதலை கவர்தலும், மதயானை ஆதிமூலம் என்று அழைத்தவுடன் உதவி புரிந்த வரதராஜரும், வலிமையுடைய இரண்டு மருத மரங்களைத் திருவடியால் உதைத்து அருள் செய்தவரும், குழந்தையாகிய பிரகலாதர் மழலை மொழியால் கூறிய வேதவசனத்தை யிகழ்ந்த இரணிய னுடைய உடம்பை நுனி நகத்தினால் பிளந்த ஒப்பற்ற வலிமை பொருந்திய நரசிங்கரும், சக்ராயுதத்தைத் தாங்கியவரும், மரகதமலைபோல் விளங்குபவரும், நெருப்பை உமிழ்கின்ற காளிங்கன் என்ற பாம்பின் படத்தின்மீது நடனம் புரிந்தவரும் ஆகிய திருமாலின் திருமருகரே! உள்ளம் உருகும் அடியார்களது இருவினைகளாகிய இருளை நீக்கும் இளங்கதிரே! பனிப்பகைவனாகிய கதிரவன் வலம்வரும் உலகம் எல்லாவற்றையும் ஒரு நொடிப்பொழுதுக்குள் வலம்வந்த பெருமிதம் உடையவரே! ஏழைகட்கு இடுகின்ற எண்ணம் தினையளவும் இல்லாதவன்; கருணையில்லாதவன்; தேவரீர் எழுந்தருளியுள்ள திருவண்ணாமலை, திருத்தணிகை, பழநிமலை, சுவாமிமலை, திருச்செங்கோடு முதலிய பல மலைகளையும் பாடித்

துதிக்குங் கழுத்து இல்லாதவன்; பொய்பேசித் தடுமாறுகின்ற சொற்களைப் பேசிப் பழகுகின்றவன்; அழகு இல்லாதவன்; நற்குலத்தில் பிறவாதவன்; நன்மையில்லாதவன்; முதன்மை யில்லாதவன்; பெருமை கெட்டவன்; மகிமையில்லாதவன்; குயவனுடைய சக்கரம் ஒருமுறை சுற்றுவதற்குள் எழுபது சுற்று வரக்கூடிய மனத்தின் சுழற்சியினால் கலங்குகின்ற மாறுபாட்டை யுடையவன்; உருகுதல், ஆனந்தக் கண்ணீர் சொரிதல், கும்பிடுதல் முதலிய நன்மைகளை நினைக்காத ஆணவ இருள் மூடப் பெற்றவன்; நல்ல குணம் இல்லாதவன்; திருவருள் துணை யற்றவன்; பொருட் செல்வமும் இல்லாதவன்; கரவு பூண்டவன்; அறிவில்லாதவன்; திக்கற்றவன்; ஒழுங்கில்லாதவன்; காரியங்களில் உணர்ச்சியில்லாதவன்; இத்தகைய அடியேன் சிவபதம் அடை கின்ற நாள் ஒன்று உளதாகுமோ?

## விரிவுரை

பகிர நினைவொரு தினையளவிலு மிலி:-

"தர்மம் சர" என்று வேதத்தின் தொடக்கத்திலும், அறஞ் செய விரும்பு என்று ஆத்திசூடியின் தொடக்கத்திலும் தருமமானது வற்புறுத்தி உபதேசிக்கப்பட்டது. உயிர்க்கு உறுதுணையாக என்றும் நின்று உதவுவது அறம் ஒன்றே யாகும். 'பொன்றுங்கால் பொன்றாத்துணை' யென்பார் திருவள்ளுவனார்.

வறியவர்க்கு வழங்குவது மிகமிகச் சிறந்த புண்ணியம். வறியவர் வயிற்றில் விழுந்த ஓர் அரிசி மறுபிறப்பில் ஒரு பொற்காசாக வந்து உதவும்.

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி -திருக்குறள்

எப்போதும் தரும சிந்தையுடன் இருத்தல் வேண்டும். இயல்பு உள்ளவர்கள் நிரம்பவும் அறஞ்செய வேண்டும்.

கோச்செங்கட் சோழன், சுந்தரமாற பாண்டியன், சேரர் கோ முதலிய மன்னர்கள் இன்று இல்லை. அவர்கள் இருந்த அரண்மனை, அவர்கள் அணிந்திருந்த ஆபரணங்கள் முதலியன ஒன்றேனும் இல்லை. ஆனால், அவர்கள் செய்த அறச்செயல் களாகிய திருக்கோயில்கள் இன்றும் நின்று நிலவுகின்றன. அழியாமல் நிற்பது அறம் ஒன்றேயாகும்.

உலக முழுவதும் ஒடுங்கியபோது அறம் ஒன்றே ஒடுங்காது விடை வடிவாக நின்று இறைவனைத் தாங்கியது. உலகங்களை யெல்லாம் தாங்கும் இறைவனையுந் தாங்கும் ஆற்றல் அறத்திற்கு உண்டு.

இறைவனுக்கு அறவன் என்ற திருநாமமும் உண்டு. காரைக் காலம்மையார் இறைவனை "அறவா" என்று விளிக்கின்றார்கள். "அறவாழி அந்தணன்" என்றார் திருவள்ளுவதேவர். அறக் கடலாகிய ஆண்டவனை அடைவதற்கு வழி அறமேயாகும்.

இயல்பு இல்லாதவர்கள் ஒல்லும் வகையால் இம்மியள வேனும் அறஞ்செய்தல் வேண்டும்.

"அவர், ஒருவர் பணத்திற்கும் ஆசைப்படமாட்டார்; அவர் பணத்தையும் ஒருவருக்குத் தரமாட்டார்" என்று சிலரைச் சுட்டி உலகம் உரைக்கும். அப்படிப்பட்டவர்கள் இருப்பதை விட மறைவது நல்லது; ஏன்? கல்லும் ஆலயமாகின்றது, கட்டம் வயலுக்கு உரமாகின்றது. இடிந்த சுவரும் மறைவுக்கு ஆகின்றது. புல்லும் கூட்டுவதற்கு ஆகின்றது. நாய் வேட்டைக்கு உதவுகின்றது. கழுதை பொதி சுமந்து உபகரிக்கின்றது. எட்டியும் மருந்துக்கு ஆகின்றது. துரும்பும் பல்குத்த ஆகின்றது. மனிதனாகப் பிறந்து ஒருவருக்கும் உதவாமல் இருப்பானாயின் அவன் இருப்பதனால் என்ன பயன்? "ஈயா மனிதரை ஏன் படைத்தாய் கச்சி யேகம்பனே" என்று வினாவுகின்றார் பட்டினத்துப் பிள்ளையார்.

ஆதலினால், மிகமிகக் குறைந்த அளவிலாவது ஒவ்வொருவரும் வறியார்க்கு உதவுதல் வேண்டும். உதவுவதற்கு ஆற்றல் இல்லையேல் உதவவேண்டும் என்ற நினைவாவது இருக்க வேண்டும். அந்த நினைவும் பனையளவு இல்லையேனும் தினை யளவேனும் இருத்தல்வேண்டும்.

தினை சிறிய தானியம். ஆதலினாலேயே "பகிர நினைவொரு தினையளவிலுமிலி" என்று அடிகளார் கல்லுங் கரையுமாறு உபதேசிக்கின்றார்.

"தினைத்துணை நன்றி செயினும்"
"தினைப் போதளவும்"

என்று ஆங்காங்குத் தினை அளவாக வைத்துப் பேசப்படுகின்றது.

"நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்கள்"
"குன்றிப் பிளவளவு தினையளவு பங்கிட்டு"

என்று அடிகளார் சிறிதாவது தருமஞ்செய்யுமாறு வற்புறுத்தி உபதேசிக்கின்றனர்.

**கருணையிலி:-**

இறைவனுடைய கருணையை நாடுகின்ற ஒவ்வொருவரும் தாங்கள் கருணையுள்ளவர்களாக இருத்தல்வேண்டும். இனத்தைக் கொண்டு இனத்தைப் பெற வேண்டும். கருணையுள்ள இடத்தி லேயே கருணை நிரம்பும். பிறவுயிர்கள் படுகின்ற துன்பத்தைக் கண்டு மனம் பொறாது இரக்கங் கொண்டு, அத் துன்பினை அகற்ற முற்படுதலே கருணையின் செயல் என்க.

**குலமிலி :-**

குணம் குலத்தின் பண்பில் அமைந்துள்ளது. நற்குலத்திலே பிறந்தவன் நற்குணம் உடையவனாய் இருத்தல் கண்கூடு. யாதாமொருவன் தீக்குணமுடையவனாகக் காணப்படின் அவன் பிறப்பிலே ஐயப்பட வேண்டும் என்கின்றார் வள்ளுவனார்.

நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்

பசு, குதிரை முதலிய விலங்குகளிடையும் பரம்பரைக் குணம் காணப்படுகின்றது.

"குலத்தளவே யாகுங் குணம்"

என்ற ஔவையார் திருவாக்கும் இதனை வலியுறுத்துகின்றது. மாம்பழம் முதலிய பழ வகைகளிலும் உயர்வுடையவை காணப்படுகின்றன.

இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள

என்ற பொதுமறையும் சிந்தனைக்கு உரியது.

**நலமிலி :-**

நன்றாக உண்பதும் உறங்குவதும் நலம் ஆகாது. பறவைகளும் விலங்குகளும் உண்டு உறங்கி உலாவுகின்றன. மனிதனும் அவைகள் போல உண்டு உறங்கி வாழ்வானாயின் மனிதனுக்கும் அவைகளுக்கும் வேற்றுமை யாது? கடவுள் உணர்ச்சி ஒன்றுதான் மனிதனை உயர்த்துகின்றது.

கடவுள் உணர்ச்சி எதன் பொருட்டு? நமது வாழ்க்கைக் குங் கடவுளுக்கும் என்ன தொடர்பு? என்ற வினாக்கள் எழுகின்றன.

மனித வாழ்க்கைக்கு அரசியல்முறை இன்றியமை யாதது. களவு செய்வாரையும், பிறன்மனை விழைவாரை யும், கொலை புரிவாரையும், பிறர் பொருளை விரும்புவாரையும், அரசாங்கத் தார் தண்டித்து நீதியை நிலைநிறுத்துவார்கள். அரசாங்கத்தார் அறியாமல் பல தீமைகள் நிகழ்த்தப்படுகின்றன. அல்லது அறிந்தும் தயவு தாட்சணியத்தினால் தண்டிக்காமலும் விட்டு விடலாம். அரசாங்கத்தார் விடுவாராயினும் குற்றம் புரிவாரைத் தெய்வ நீதி விடாது ஒறுக்கும். "நாம் குற்றம் புரியின் அரசாங்கத்தார் தண்டிப்பர்" என்று தீமை புரிவார் அஞ்சித் தீமையினின்றும் விலகுகின்றனர். அதுபோல், "இறைவன் யாண்டும் நீக்கமற நிறைந் திருக்கின்றான்; அவன் நம்மைப் பார்த்துக் கொண்டிருக்கின்றான்; அவன் நமது சொற்களைக் கேட்டுக் கொண்டிருக்கின்றான். அவனுக்கு எங்கணுங் கண்கள் உள. எங்கணும் செவிகள் உள. உள்ளும் புறமும் கீழும் மேலும் உயிருக்கு உயிராய் எள்ளுக்குள் எண்ணெய்போல் நிறைந்திருக்கின்றான். நாம் செய்யும் குற்றங்களையறிந்து அவன் ஒறுப்பான். நாம் எண்ணுகின்ற எண்ணங்களையெல்லாம் அவன் அறிகின்றான். நாம் சொல்லு கின்ற சொற்களையெல்லாம் அவன் கேட்டுக் கொண்டிருக் கின்றான்; நாம் செய்கின்ற செயல்களையெல்லாம் அறிகின்றான். ஆதலின், எண்ணத்தினாலும், சொற்களினாலும், செயல்களி னாலும் நாம் தீயவை புரியக்கூடாது. அவன் சர்வபூத சாட்சியாக இருக்கின்றான்" என்ற நல்லுணர்ச்சி தெய்வவுணர்ச்சி யுடையார்க்கே யுண்டாகும். தெய்வவுணர்ச்சி யுடையாரும் பிழை புரிகின்றாரே? எனின் அவர்கள் உள்ளத்தில் கடவுள் உணர்ச்சி வேர்கொள்ளாது நீர்க்குள் பாசிபோல் நிற்பதே காரணம் என்க.

ஆகவே, பரம்பொருளை உன்னியும், உரைத்தும் போற்றுவதே நலம் என்று தெளிக. நலமுடையார் என்பவர் கடவுள் உணர்ச்சி மிக்கவரே யாகும் என்பது உறுதி. கடவுள் உணர்ச்சியில்லாதவர் கள், எத்துணைப் பெரிய செல்வந்தர்களாயினும் நாள்தோறும் ஒன்பது வேளை பாலும் பழமும் சோறும் உண்டு பட்டு உடுப்பார் களாயினும் நலம் இல்லாதவர்களே யாவார்கள்.

"கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேன்" -திருவாசகம்

"ஆதியு முடிவு மில்லா அற்புதத் தனிக்கூத் தாடும்
நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடு நலத்தின் மிக்கார்"
- பெரியபுராணம்

குலாலன் திகிரி வருமொரு செலவினில் எழுபது செலவு வருமன:-

குயவனாருடைய மண்பானை வனையுஞ் சக்கரம் வேகமாகச் சுழலும். அதைவிட எழுபது மடங்கு வேகமாக மனஞ் சுழலும்.

"குயவனாருடைய சக்கரம் ஒருமுறை சுற்றுவதற்குள் ஆயிரங் கோடி முறை என் மனம் சுற்றுகின்றது" என்று கந்தரந்தாதியில் கூறுகின்றனர்.

திரிகையி லாயிர வெல்லாழி மண்விண் டருசிரபாத்
திரிகைய்பி லாயிர வாநந்த நாடகி சேரிமகோத்
திரிகையி லாயிர மிக்குமைந் தாசெந்தி லாயொருகால்
திரிகையி லாயிரக் கோடிசுற் றோடுந் திருத்துளமே

-கந்தரந்தாதி

வேகமாகக் காடுங் கரையுஞ் சென்று திரியும் மனத்தின் ஓட்டத்தை நிறுத்துவதே முயற்சிகளுக்குள் தலையாய முயற்சி. மனமடங்கிய இடத்திலே பூரண சுகம் உண்டாகின்றது.

சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே - தாயுமானார்

உருகுதல்.-

உள்ளம் உருகி இறைவனை உன்னுதல் வேண்டும். அதுவே இறைவன் திருவருளைப் பெறுவதற்கு எளிய வழியாகும்.

"உருகுமடியார் இருவினைத் தொகையறுக்குமவன்"

- வகுப்பு

"உருகுமடியவர் இருவினை யிருள்பொரும்"

- திருப்புகழ்

"முருகன் குமரன் குகன்என் றுமொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்" - அநுபூதி

இருதிறல் மருதொடு பொருதவன்:-

நளகூபரன், மணிக்ரீவன் என்பவர்கள் குபேரனுடைய புதல்வர்கள். இவர்கள் மதுவுண்டு மதிமயங்கி, நீரில் நிர்வாணமாக விளையாடிக்கொண்டிருந்தார்கள். அவ்வழி வந்த நாரதர், சினந்து, "நீவிர் மரங்களாகக் கடவது" என்று சபித்தனர். அவர்கள் அஞ்சி அவர் அடிமலர்மீது வீழ்ந்து மன்னித்தருள வேண்டும் என்று வேண்டினார்கள். அவர் அருள் சுரந்து, "ஆயர்பாடியிலே

*நந்தகோபன் வீட்டில் மருத மரங்களாக முளைப்பீர்கள். கண்ண பிரான் திருவடி தீண்டுதலால் சாபமும் பாபமும் விலகும்" என்று கூறினார்.*

*அவ்விருவரும் அவ்வண்ணமே நந்தகோபன் திருமாளிகை வாசலில் மருத மரங்களாக முளைத்து நின்றார்கள். நெடுநாள் கழிந்தபின், யசோதை கண்ணபிரானை உரலிலே கட்டினாள். பகவான் வாசலில் உள்ள மருதமரங்களின் இடையில் நுழைந்து சென்றார். உரல் அதற்குள் நுழையாமையால் அம்மரங்கள் இரண் டினையும் திருவடியால் உதைத்தருளினார். உடனே, மரங்கள் வேருடன் சாய்ந்தன. கந்தருவர்கள் இருவரும் நன்மையுற்றுக் கண்ணனைப் புகழ்ந்து தங்கள் பதம் புகுந்தார்கள்.*

**உலக முழுதொரு நொடியினில் வலம்வரும்:-**

*தந்தையார் கரத்திருந்த கனி காரணமாக உலகங்களை யெல்லாம் ஒரு நொடிப்பொழுதுக்குள் மயில்மிசை அயில்வேற் கடவுள் வலம் வந்தார் என்பது வரலாறு.*

*அருட்பெருஞ்ஜோதி யாண்டவராகிய ஆறுமுகக் கடவுள், பிரணவமாகிய மயில்மிசை எழுந்தருளியபோது, அவருடைய அருட்பிரகாசம் யாண்டும் ஒளிர்கின்றது. அந்த உண்மையை யுணர்த்துவதே இவ்வரலாறு என வுணர்க.*

**"திகிரிகிரி நெரியவளை கடல்கதற**
**எழுபுவியை ஒருநொடியில் வலமாக ஓடுவதும்"** *-வகுப்பு*

## கருத்துரை

*திருமால் மருகரே! எங்கும் நிறைந்த இளம்பூரணரே! அடியேன் சிவபதம் அடைய அருள்புரிவீர்.*

## 39

**உரைதரு பரசம யங்க ளோதுவ**
**துருவென அருவென வொன்றி லாததொ**
**ரொளியென வெளியென வும்ப ராமென இம்பராநின்**

**றுலகுகள் நிலைபெறு தம்ப மாமென**
**வுரைசெய அதுபொருள் கண்டு மோனமொ**
**டுணர்வுற வுணர்வொடி ருந்த நாளும ழிந்திடாதே**

பரகதி பெறுவதொ ழிந்தி டார்வன
பரிசன தெரிசன கந்த வோசைகள்
பலநல விதமுள துன்ப மாகிம யங்கிடாதே

பரிபுர பதமுள வஞ்ச மாதர்கள்
பலபல விதமுள துன்ப சாகர
படுகுழி யிடைவிழு பஞ்ச பாதக னென்றுதீர்வேன்

அரகர சிவசுத கந்த னேநின
தபயம பயமென நின்று வானவ
ரலறிட வொழிகினி யஞ்சி டாதென அஞ்சல்கூறி

அடல்தரு நிருதர நந்த வாகினி
யமபுர மடையஅ டர்ந்து போர்புரி
அசுரன தகலமி டந்து போகவ கிர்ந்தவேகம்

விரிகடல் துகளெழ வென்ற வேலவ
மரகத கலபசி கண்டி வாகன
விரகுள சரவண முந்தை நான்மறை யந்தமோதும்

விரைதரு மலரிலி ருந்த வேதனும்
விடவர வமளிது யின்ற மாயனும்
விமலைகொள் சடையர னும்ப ராவிய தம்பிரானே

## பதவுரை

அரகர சிவசுத - பாவங்களைப் போக்கவல்ல சிவபெருமானுடைய திருக்குமாரரே! கந்தனே- கந்தப்பெருமானே! நினது அபயம் அபயம் என - தேவரீரிடம் அடைக்கலம் அடைக்கலம் என்று கூறி வானவர் நின்று அலறிட - தேவர்கள் திருமுன் நின்று வாய்விட்டு ஓலமிட, இனி அஞ்சிடாது ஒழிக என அஞ்சல் கூறி- 'நீவிர் இனி அஞ்சுந்தன்மையை விடுக' என்று அருளுரையளித்து, அடல்தரு நிருதர் - வலிமை மிகுந்த அரக்கர்களுடைய, அநந்த வாகினி - முடிவில்லாத சேனைகள், யமபுரம் அடைய - மாண்டு இயமனுடைய ஊருக்குப் போகுமாறு, அடர்ந்து- கொன்று, போர்புரி அசுரனது- போர்புரிந்த சூரபன்மனது, அகலம் இடந்து போக வகிர்ந்த - மார்பு இருபிளவாகுமாறு பிளந்தும், வேகம்- அலைகள் வேகமாக வீசும், விரிகடல் துகள் எழ - விரிந்த கடலானது வற்றித் தூசு எழவும், வென்ற வேலவ- வெற்றி பெற்ற வேலாயுதத்தை யுடையவரே! மரகத கலப சிகண்டி வாகன- பச்சைக்கலாபத்துடன் கூடிய மயில் வாகனரே! விரகு உள

சரவண - சமர்த்துள்ள சரவண பவரே! முந்தை நான்மறை அந்தம் ஓதும் - பழமையான நான்கு வேதங்களின் முடிவை மொழிகின்ற, விரைதரு மலரில் இருந்த வேதனும் - நறுமணங் கமழ்கின்ற தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமதேவனும், விட அரவு அமளி துயின்ற மாயனும் - நஞ்சுடன் கூடிய ஆதிசேடன் மீது கண்வளர்கின்ற திருமாலும், விமலை கொள் சடை அரனும் - உமாதேவியாரையுடைய சடைமுடிப் பரமராகிய சிவமூர்த்தியும், பராவிய - துதிக்கின்ற, தம்பிரானே- தனிப்பெருந்தலைவரே! உரை தரு பரசமயங்கள் ஓதுவது - நன்கு பேசப்படுகின்ற வேற்றுச் சமயங்கள் கூறுவதாவது; உரு என - பரம்பொருள் உருவம் என்றும்; அரு என- அருவம் என்றும், ஒன்றிலாதது ஒரு ஒளி என -ஒன்றும் இல்லாத ஒப்பற்ற ஒளிமயமானது என்றும், வெளி என - வெட்ட வெளியாக இருப்பது என்றும், உம்பராம் என - அப்பாலைக் கப்பாலானது என்றும், இம்பராம் - இவ்விடத்தில் உள்ளது என்றும், நின்று உலகுகள் நிலைபெறு தம்பம் ஆம் என - என்றும் மாறுபடாது நின்று உலகங்கள் நிலைபெறுவதற்குத் தூண்போன்றது ஆகும் என்றும், உரை செய - இவ்வாறு பலப்பலவாகக் கூற, அது பொருள் கண்டு- அதன் பொருள்களை நுணுக்கமாகக் கண்டு உணர்ந்து, மோனமொடு- உணர்வொடு இருந்த நாளும் அழிந்திடாதே - அநுபவஞானத்துடன் ஒருமைப் பட்டு இருந்த நாளும் வீணாகக் கூடாது; பரகதி பெறுவது ஒழிந்திட- முத்திவீட்டைப் பெறுந் தன்மை விலகும்படி, ஆர்வன - மிகுந்திருப்பனவாகி, பரிசன- தொடுவது, தரிசன- காண்பது, கந்த- பரிமளம், ஓசைகள் - இனிய பாடல் ஒலிகள், பல நலவிதம் உள - இப்படி அநேக விதமாக இருக்கின்றன; துன்பம் ஆகி மயங்கிடாதே - மேற் கூறியவைகளால் துன்பமுற்று மயங்காதவ னாகி, பரிபுரபதம் உள வஞ்சமாதர்கள்- பரிபுரம் என்ற ஆபரணத்தையணிகின்ற கால்களுடன் கூடிய வஞ்சனை மிக்க பொதுமகளிரது, பல பல விதம் உள - பலவாறு உள்ள, துன்ப சாகர படுகுழி இடை விழு- துன்பக்கடலாகிய பெரிய பள்ளத்தில் விழுகின்ற, பஞ்சபாதகன் - பஞ்சபாதகனாகிய அடியேன், என்று தீர்வேன்- எந்தநாள் விடுதலை யடைவேன்? -

## பொழிப்புரை

"பாவங்களைப் போக்கவல்ல சிவபிரானுடைய திருக் குமாரரே! கந்தக் கடவுளே! அபயம் அபயம்" என்று தேவர்கள் திருமுன்னின்று ஓலமிட, "இனி நீங்கள் அஞ்சன்மின்; கவலையை

விடுமின்'' என்று அருளுரை பகர்ந்து, வலிமைமிக்க அரக்கர்களுடைய முடிவில்லாத சேனைகள் மாண்டு நமன் உலகம் போகும்படி புரிந்து, போர் செய்த சூரபன்மனுடைய மார்பைப் பிளந்து, வேகமாக அலை மோதும் விரிந்த கடல்வற்றித் துகள்பட, வெற்றியடைந்த வேற்படையை யுடையவரே! பச்சை நிறமான தோகையுடன் கூடிய மயில்வாகனரே? சாதுர்யமுள்ள சரவணரே! பழமையான நான்கு வேதங்களின் முடிவை மொழியும் பரிமள மிகுந்த தாமரை மலரில் வாழும் நான்முகக் கடவுளும், விடம் பொருந்திய அரவணையில் அறிதுயில் புரியும் நாராயணக் கடவுளும், பார்வதியுடன் கூடிய சடைமுடிப் பரமனும் துதிக்கின்ற தனிப்பெருந் தலைவரே! பேசப்படுகின்ற வேற்றுச் சமயங்கள் கூறுவதாவது; பரம்பொருள் உருவம் என்றும், அருவம் என்றும், ஒன்றும் இல்லாத ஒப்பற்ற ஒளிமயமானது என்றும், பரவெளியானது என்றும், அப்பாலானது என்றும், இப்பாலானது என்றும், மாறுபடாது நின்று உலகங்கள் நிலைபெறுவதற்குத் தூண் போன்றது என்றும் உரை செய்கின்றன; அப் பொருள்களின் உண்மையை நுனித்துக் கண்டு, மௌனத்தோடு மெய்யுணர்வு தோன்ற அநுபவ ஞானத்துடன் இருந்த காலம் வீணாகாதபடி, முத்தி வீட்டைப் பெறுந்தகைமை விலகும்படி மிகுவனவாகி, தீண்டுதல், காண்டல், பரிமளம், இனிய பாடல்கள் முதலிய பலவிதமாகத் தோன்றும் துன்பத்தினை இன்பமென்று மயங்காது, பரிபுரமணியும் பாதங்களையுடைய கணிகை மாதரது பற்பல விதமான துன்பக் கடலாகிய பெரும் பள்ளத்தில் விழுகின்ற பஞ்சபாதகனாகிய அடியேன் என்று ஈடேறுவேன்?

## விரிவுரை

**உரைதரு பரசமயங்கள்............. உரைசெய:-**

சமயங்கள் தத்தம் கொள்கைகளே உண்மையென்று உரைக்கின்றன. ஆதலின் "உரைதரு" என்று கூறப்பட்டது.

சமயங்கள் ஒன்றோடொன்று பிணங்குவனவாகும். அச்சமய நெறிகளும் பலவாகும். ஒன்று பரம்பொருள் உருவம் என்று உரைக்கின்றது; மற்றொரு சமயம் கடவுள் அருவம் என்று உரைக்கின்றது. ஒன்று உண்டு என்றும், ஒன்று இல்லை என்றும், ஒன்று ஒளிமயம் என்றும், ஒன்று வெளிமயம் என்றும், ஒன்று அங்கு என்றும், ஒன்று இங்கு என்றும், இப்படிப் பலப்பலவாறு

சமயங்கள் சாற்றுகின்றன.

இவைகள் அத்தனையும் ஒருங்கே காணுகின்ற சமயம் சித்தாந்த சைவமாகும். சைவம் ஒன்றுதான் கடவுளுக்கு உருவம் அருவம் உருவருவம் ஒன்று பல ஒளி வெளி இன்னோரன்ன பிற எல்லாம் ஒருங்கேயுள, என்று இயம்புகின்றது. அன்றியும் சைவம் என்றும் ஒரே இயல்பாக அமைந்தது. ஏனைய சமயங்களையெல்லாம் தனக்கு அங்கங்களாகக் கொண்டு, அவைகளின் நெறிகளையெல்லாம் தனக்குச் சோபானங்படி) களாகக் கொண்டு, வேதாகமங்களின் பயனாகி, இராஜாங்கத்தில் அமர்ந்து கொலுவீற்றிருப்பது என்று உணர்க. இந்த இனிய கருத்தை, முறையே கல்வியறிவும் அநுபவ அறிவும் நிரம்பிய அநுபூதிச் செல்வராகிய தாயுமானப் பெருந்தகையார் கூறியருளும் இரு பாடல்களால் தெளிக.

இயல்பென்றுந் திரியாமல் இயம மாதி
எண்குணமுங் காட்டியன்பால் இன்ப மாகி
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க மௌன மோலி
அயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தில்
அமர்ந்ததுவை திகசைவம் அழகி தந்தோ

அந்தோஈ ததிசயமிச் சமயம் போல்இன்
றறிஞரெல்லாம் நடுஅறிய அணிமா ஆதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கும் மற்றும் மற்றும்
இந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கும்
இதுவன்றித் தாயகம்வே றில்லை இல்லை
சந்தான கற்பகம்போல் அருளைக் காட்டத்
தக்கநெறி இந்நெறியே தான்சன் மார்க்கம்.

சமயநெறிகளின் உட்பொருளை உன்னி; அவைகளின் சாரத்தை உற்றுணர்ந்து, தெளிந்து, அமைந்து, பேசா அநுபூதியுடன் நிற்றல் வேண்டும். அத்தருணத்தில் உண்டாகும் அகக்காட்சியில் இறைவனைக் காணலாம்.

"உருவெனவும் அருவெனவும் உளதெனவும் இலதெனவும்
உழலுவன பரசமய கலையார வாரமற

உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை யுணருமவ ரநுபூதி யானதுவும்"

-சீர்பாதவகுப்பு

கடவுள் தன்மையை நன்கு உணர்தல் வேண்டும். அங்ஙனம் உணர்ந்தவர் தன்னை உணர்ந்தவராவர். ஆதலின், பதியின் தன்மையைப் பரம ஞானியாகிய தாயுமானார் கூறும் அருமையை அறிக.

"ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
ஒளியாகி வெளியாகி உருவு மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
நாசமுடன் உற்பத்தி நண்ணா தாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
எந்தையே எம்மானே என்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கடிதினில்வந் தருள்கூருங் கருணை விண்ணே

இறைவனை நினைப்பற நினைந்து மெய்யுணர்வு பெற்று அநுபவ அநுபூதியுடன் விளங்கியபின் அதனை விட்டு விலகாமல் அந்நிலையிலேயே நிலைபெற்று நிற்றல் வேண்டும். இந்தக் கருத்தை வலியுறுத்துவது "உணர்வொடிருந்த நாளுமழிந்திடாதே" என்பது என்று உணர்க.

"அது பொருள் கண்டு" என்ற திருவாக்கினால் சமயங்கள் கூறும் கூற்றுக்களின் நுட்பதிட்பங்களை நுனித்துணர்தல் வேண்டும் என்பது போதருகின்றது.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

- திருவள்ளுவர்

பரகதி பெறுவ தொழிந்திட:-

மாதர் மயல் கொண்டோர்க்கு முத்திநலங் கைகூடா தென்க. அயலூர் செல்லுங் கருத்துடன் புறப்பட்ட ஒருவனுக்கு பாம்பு குறுக்கிடக்கூடாது. அவ்வாறு குறுக்கிடுமாயின் ஆபத்து. கரும்பாம்பு மேலுங் கொடியது. மாதர்களது கருமயிர்ப் பின்னல் கரும்பாம்பு போல் இருக்கும். அது குறுக்கிட்டால் முத்தி வீட்டை நோக்கிப் புறப்பட்டார்க்குச் சகுனத் தடையென்று உணர்க.

பரிசன தரிசன:-

*மாதர்களைக் காண்பதனாலும் தீண்டுவதனாலும் மனம் மயக்குமுற்று மதியையிழப்பர். முத்தி நலம் விரும்புவோர் மாதர் மயக்கறுதல் வேண்டும். அடியில்வரும் அரிய கவியை நன்கு படித்துணர்க.*

பெண்மை வியவார் பெயரும் எடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார் - பண்ணொடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார்.

படுகுழியிடைவிழு பஞ்சபாதகன் என்று தீர்வேன்:-

*மாதர் மயக்கத்தால் வரும் துன்பம் ஒரு பெரிய கடலுக்கு நிகராகும். அதில் விழுந்து அழுந்தியோர் உய்வுபெறார்.*

மாதர்யம னாமவர்த மைவிழியே வன்பாசம்
பீதிதரு மல்குல் பெருநரகம் - ஓதவதில்
வீழ்ந்தோர்க்கும் ஏற விரகில்லை போரூரைத்
தாழ்ந்தோர்க்கும் இல்லை தவறு. *- சிதம்பரசுவாமிகள்*

அரகர சிவசுத:-

*ஹரன் - பாவத்தைப் போக்குபவன். அரன் நாமம் எங்கும் முழங்கவேண்டும். அவ்வாறு எங்கெங்கும் அரன் நாமம் சூழ்ந்தால் வையகந் துயர் தீரும், " அரன் நாமமே சூழ்க வையகமுந் துயர்தீர்கவே" என்பர் திருஞானசம்பந்தர்.*

"அரகரசி வாய வென்று தினமுநினை யாமல் நின்று
அறுதினமு நாண மின்றி யழிவேனோ"

அரகர என்ன அரிதொன் றில்லை
அரகர என்ன அறிகிலர் மாந்தர்
அரகர என்ன அமரரும் ஆவர்
அரகர என்ன அறும்பிறப் பன்றே *-திருமந்திரம்*

*சிவன்- நன்மையைச் செய்பவன்.*

சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் அடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்
சிவசிவ வாகும் திருவரு ளாமே. *- திருமந்திரம்*

*செவ்வேட்பரமன் சிவகுமாரன் என்பது, விளக்கினின்றும்*

ஒளிதோன்றுவது போல் என்க. "மணியிடைக் கதிர்வரு திறம் போல்" (கந்தபுராணம்). சிவபெருமானுடைய 'திருக்குமாரர் என்பதனால் முருகவேளை வழிபடுவோர் பாவங்களினின்றும் நீங்கி நன்மையடைவார். இந்திராதி இமையவர் இளம்பூரண னாகிய முருகவேளிடம் முறையிடலும், அறுமுகச் சிவனார் "அஞ்சேல்' என்று அருள் உரைஅருளி, சூராதியவுணரை வென்று அமரர்க்கு அமராவதியை யருள்புரிந்தனர்.

அசுரனதகலமிடந்து:-

சூரபன்மன் - ஆணவமலம்; சிங்கமுகன் - கன்மமலம்; தாரகன்- மாயாமலம்; கிரவுஞ்சமலை - வினைத்தொகுதி, கடல் - ஆசை. அசுரர்கள் - காமாதி தீக்குணங்கள். வேல்- ஞானம். ஞானத்தினால் மும்மலங்களும் வலியடங்கும். சூரபன்மன் கடலில் ஒளிந்தான் என்பதன் கருத்து, ஆணவமலம் ஆசையாகிய கடலில் அழுந்தியிருக்கின்றது என்பது.

வேதனும்.... மாயனும்... அரனும் பராவிய:-

முருகப் பெருமான் முத்தொழில்களுக்கும் முதல்வர். அயனுக்கு ஆக்கலையும், அரிக்கு அளித்தலையும், அரனுக்கு அழித்தலையும் தொழிலாக நல்கி, அவர்கட்கு அவ்வப்போது நேரும் அச்சத்தை யகற்றி அருளுவர்.

படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
 புரக்கக் கஞ்சைமன் பணியாகப்
பணித்துத் தம்பயந் தவிர்த்துச் சந்ததம்
 பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா

-திருப்புகழ்

இங்கே அரன் என்றது மூவரில் ஒருவராகிய உருத்திரர் என்க. அவர் குணருத்திரர் எனப்படுவர். மூவரும் அறியா முழுமுதலாகிய சிவபிரானையும் உருத்திரனையும் ஒன்றெனக் கருதி ஒரு சிலர் இடர்ப்படுவர்.

சிவனொ டொக்குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனொ டொப்பார்இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்ததன்று பொன்னொளி மின்னும்
தவனச் சடைமுடித் தாமரை யானே.

- திருமந்திரம்

## கருத்துரை

*சூரசங்காரக் கடவுளே! மூவர் முதல்வரே! அடியேன் மாதர் மயக்கமற்றுச் சிவானுபவச் செல்வத்துடன் விளங்க அருள்புரிவீர்.*

## 40

குகையில்நவ நாதருஞ் சிறந்த
முகைவனச சாதனுந் தயங்கு
குணமுமசு ரேசருந் தரங்க முரல்வேதக்

குரகதபு ராரியும் ப்ரசண்ட
மரகதமு ராரியுஞ் செயங்கொள்
குலிசகைவ லாரியுங் கொடுங்க ணறநூலும்

அகலிய புராணமும் ப்ரபஞ்ச
சகலகலை நூல்களும் பரந்த
அருமறைய நேகமுங் குவிந்தும் அறியாத

அறிவுமறி யாமையுங் கடந்த
அறிவுதிரு மேனியென் றுணர்ந்துன்
அருணசர ணாரவிந் தமென்று அடைவேனோ

பகைகொள்துரி யோதனன் பிறந்து
படைபொருத பாரதந் தெரிந்து
பரியதொரு கோடுகொண் டுசண்ட வரைமீதே

பழுதறவி யாசனன் றியம்ப
எழுதியவி நாயகன் சிவந்த
பவளமத யானைபின் புவந்த முருகோனே

மிகுதமர சாகரங் கலங்க
எழுசிகர பூதரங் குலுங்க
விபரிதநி சாசரன் தியங்க அமராடி

விபுதர்குல வேழமங் கைதுங்க
பரிமளப டீரகும் பவிம்ப
ம்ருகமதப யோதரம் புணர்ந்த பெருமானே.

## பதவுரை

*பகைகொள் துரியோதனன் பிறந்து - பிறவியிலே*

பகைகொண்ட துரியோதனன் (மண்ணிற்குச் சுமையாகப்) பிறந்து, படைபொருத- ஆயுதங்களுடன் போர்புரிந்த வரலாறாகிய, பாரதம் தெரிந்து - பாரதம் என்ற காவியத்தை யோகக் காட்சி யால் உணர்ந்து, பழுது அற - உலகிலே உள்ள குற்றங்கள் நீங்கும் பொருட்டு, வியாசன் அன்று இயம்ப - வேதவியாசர் அந்நாளில் கூறுதலும், அண்ட வரைமீதே- பெரிய மேருமலையின் மீது, பரியது ஒரு கோடு கொண்டு எழுதிய - பாரமான ஒப்பற்ற கொம்பினைக் கொண்டு நன்கு எழுதியருளிய, விநாயகன்- தனக்குமேல் தலைவனில்லாதவரும், சிவந்த பவள - சிவந்த பவளம் போன்ற நிறமுடையவரும், மதயானை - மதங்களைப் பொழியும் யானை முகமுடையவருமாகிய பிள்ளையாரின், பின்பு வந்த முருகோனே- தம்பியாராக அவதரித்த முருகக்கடவுளே! மிகு தமர சாகரங் கலங்க- மிகுந்த ஒலியுடன் கூடிய சமுத்திரங் கலங்கவும், எழுசிகர பூதரம் குலுங்க- கொடுமுடிகளையுடைய ஏழு குலமலைகள் குலுங்கவும், விபரித நிசாசரன் தியங்க - மாறுபட்ட புத்தியையுடைய சூரபன்மன் மயங்கவும், அமர் ஆடி - போர் செய்து, விபுதர் குல வேழமங்கை - தேவகுலத்திலே வந்து தோன்றிய தெய்வயானை யம்மையாருடைய, துங்க பரிமள படீர-தூய மணம் வீசும் சந்தனத்தை யணிந்து, கும்ப விம்ப - குடம்போன்ற வடிவுடன், ம்ருகமத- கஸ்தூரி தரித்து விளங்கும், பயோதரம் புணர்ந்த - தனபாரங்களை மருவிய, பெருமாளே- பெருமையிற் சிறந்தவரே! குகையில் நவ நாதரும் - குகைகளில் இருந்து தவமியற்றும் ஒன்பது நாதர்களும், சிறந்த முகை வனசசாதனும் - உயர்ந்த மலராகிய தாமரையிற் பிறந்த பிரம தேவனும், தயங்கு குணமும்- தெளிந்துள்ள முக்குணங்களும், அசுர ஈசரும்- அசுரர் தலைவர்களும், தரங்க முரல் வேத குரகத புராரியும் - கடல் அலைபோல் முழங்குகின்ற வேதங்களைப் புரவியாகக் கொண்டு முப்புரத்தை எரித்த உருத்திர மூர்த்தியும், ப்ரசண்ட மரகத முராரியும் - வலிமை மிக்க பச்சை நிறமுடைய திருமாலும், செயம் கொள் குலிசகை வலாரியும்- வெற்றியைக் கொள்ளும் வச்சிரப்படையைக் கையில் ஏந்திய இந்திரனும், கொடும் கண் அறநூலும் - மிக்க அறிவு மயமாகிய அறநூல்களும், அகலிய புராணமும் - பரந்துள்ள புராணங்களும், ப்ரபஞ்ச சகல கலை நூல்களும் - விரிந்துள்ள எல்லா வகையான கலைகளும், பரந்த அரு மறை அநேகமும் - எங்கும் பரவியுள்ள அரிய அநேக வேதங்களும், குவிந்தும் அறியாத - இவைகள் யாவும் ஒருங்கு திரண்டு அறிய முயன்றும் அறியப்படாத, அறிவும் -

அறிவையும், அறியாமையும் கடந்த - அறியாமையையும் கடந்து அப்பாலைக்கு அப்பாலாயுள்ள, அறிவு திருமேனி என்று உணர்ந்து - அறிவே ஒரு திருமேனியாக அமைந்துளது என்பதை அனுபவத்தினால் உணர்ந்து, உன் அருண சரண அரவிந்தம் - தேவரீருடைய சிவந்த திருவடித் தாமரையை, என்று அடைவேனோ- எந்த நாள் சார்ந்து இன்புறுவேனோ?

## பொழிப்புரை

பிறவியிலேயே (பாண்டவர்கள்மீது) பகைகொண்ட துரியோதனன், புவிக்குச் சுமையாகப் பிறந்து, ஆயுதங்களுடனும் சேனைகளுடனும் போர் புரிந்த, பாரத வரலாற்றை யோகக் காட்சியால் உணர்ந்து, உலகில் உள்ள குற்றங்கள் நீங்கும் பொருட்டு, வேதவியாசர் காவியமாகப் பாடியபோது, அதனை உயர்ந்த மேருமலையின்மீது, சிறந்த ஒப்பற்ற கொம்பைக் கொண்டு எழுதியருளியவரும், சிவந்த பவளம்போன்ற நிறமுடையவரும், மும்மதங்கள் பொழியும் யானை முகமுடையவருமாகிய விநாயகப் பெருமானுக்கு இளைய தம்பியாகத் திரு அவதாரஞ் செய்த முருகக் கடவுளே! மிகுந்த ஓசையுடன் கூடிய கடல் கலங்கவும்; கொடுமுடிகளையுடைய ஏழு குலமலைகளும் குலுங்கவும்; மாறுபட்ட அறிவையுடைய சூரபன்மன் மயங்கவும், போர் செய்து, தேவகுலத்திலே வந்து தோன்றிய தெய்வ யானை யம்மையாருடைய, தூய மணம்வீசும் சந்தனமும் கஸ்தூரியும் அணிந்து குடம்போன்ற வடிவுடைய தனங்களைத் தழுவிய பெருமிதம் உடையவரே! குகையில் இருந்து இடையறாது தவம்புரியும் ஒன்பது நாதர்களும், சிறந்த மலராகிய தாமரையில் தோன்றிய பிரமதேவனும், தெளிந்த முக்குணங்களும், அசுரர் தலைவர்களும், கடல்அலைபோல் முழங்குகின்ற வேதங்களைக் குதிரையாகக் கொண்டு முப்புரங்களை எரித்த உருத்திரமூர்த்தியும், வலிமைமிக்க ப்ச்சைநிறமுடைய திருமாலும், வெற்றி கொள் ளும் குலிசாயுதத்தைக் கையிற் பிடித்த இந்திரனும், மிக்க அறிவு மயமாய அறநூல்களும், விசாலமாகவுள்ள புராணங்களும், விரிவாகவுள்ள எல்லாக் கலைகளும், எங்கும் பரவியுள்ள வேதங்களும், ஆகிய இவைகள் ஒருங்குகூடி முயன்றும் அறிவதற்கு அரிதாகிய அறிவையும் அறியாமையையும் கடந்து, அப்பாலுள்ள அறிவே ஒரு திருமேனி என்பதனை அநுபவத்தினால் உணர்ந்து, தேவரீருடைய சிறந்த சிவந்த தாமரைபோன்ற திருவடிகளை

அடியேன் எந்தநாள் அடைந்து இன்புறுவேனோ?

## விரிவுரை

குகையில் நவநாதரும்:-

நவநாதர்– ஒன்பது நாதர்கள்.

இவர்கள் நாதத்தை யறிந்தவர்கள். அறிந்து அதன் மேல் நிலையைப் பெற்றவர்கள். முப்பத்தாறாவது தத்துவம் நாத தத்துவம்.

"ஆறா றையுநீத் ததன்மேல் நிலையைப்
பேறா அடியேன் பெறுமா றுளதோ?" - அநுபூதி

"நாதமுடிமே லிருக்கும் வெண்ணிலாவே - அங்கு
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே"
- திருவருட்பா

இவர்கள் பெரிய சித்தர்களுமாவார்கள். மிகப் பெரிய கருமங்களை எளிதிற் புரிபவர்கள். காயத்தை யழியாது கற்பங்கள் பல நிறுத்தி, தவத்தையே தனமாகக் கொண்ட தனி ஞானத் தலைவர்கள்.

இவர்களின் பெயர்கள்:

சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர்.

இவர்கள் சிவயோகத்தின் நுணுக்கந் தெரிந்த தவயோக சீலர்கள்; இவர்கள் மிகவுஞ் சிறந்தவர்களாதலின், முதற்கண் இவர்களை அடிகள் இங்குக் கூறுகின்றனர்.

அன்றியும், நாதர் என்ற பேர்பெற்றவர்கள் இருவர் உளர்; ஒருவர் திருமூலநாதர். ஒருவர் அருணகிரிநாதர்; இந்த இருவர்களும் நாதத்தை யறிந்தவர்கள்.

சிறந்த முகை வனச சாதனும்:-

வனசம் – தாமரை. வனம் – தண்ணீர்; ஐம் – பிறத்தல். தண்ணீரில் பிறத்தலால் தாமரை இப்பேர் பெற்றது. தாமரையில் பிறந்தவன் பிரமதேவன். சாமானிய தாமரையன்று; திருமாலுடைய நாபியினின்றும் வந்த தாமரை யாதலின் "சிறந்த

முகை வனசன்" என்றனர். பிரமதேவன் சிருட்டித் தலைவன் ஆதலின் மண்ணுடன் தொடர்புடைய தாமரையைக் கோயிலாகக் கொண்டனன்.

**தயங்கு குணமும்:-**

தயங்குதல்- தெளிதல். கலங்கிய குணங்களும் உண்டு. இங்கே நன்கு தெளிந்துள்ள குணங்களையே கூறுகின்றனர். இவைகள் சத்துவம், ராஜஸம், தாமஸம்; இம்மூன்றும் ஆன்மாக்களுக்கு உள்ளவை; இவைகள் விலகவேண்டியவை.

இறைவனுடைய குணங்கள் அருட்குணங்கள். அவை களையுடைய இறைவன் குணநிதி, குணகடல் எனப்படுவான். 'குணமிலான்' என்று இறைவனைக் கூறுமிடங்களில் மேற்போந்த முக்குணமில்லாதவன் என்று எண்ணுதல் கூடாது. ஒருகுணமு மில்லையானால் அது பொருளாக இருக்க முடியாது. இறை வனுடைய அருட்குணங்கள் எட்டு. அவை; தன்வயத்தனாதல்; தூயவுடம்பினனாதல்; இயற்கையுணர்வினனாதல்; முற்று முணர்தல்; இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல்; பேரருளுடைமை; முடிவிலாற்றலுடைமை; வரம்பிலின்ப முடைமை.

**அசுரேசரும்:-**

அசுரர் தலைவர்கள். இவர்களில் பலர் நற்குணமுடையராய், உறுதியுடையராய், மாதவஞ் செய்வதில் வல்லாராய் விளங்கினார்கள். ஆகவே, இந்த வரிசையில் இவர்களும் இடம் பெற்றார்கள்.

**தரங்க முரல் வேதக் குரகத புராரியும்:-**

புர அரி- புராரி. முப்புரங்களை எரித்தவர். இவர் மூவரில் ஒருவராகிய உருத்திர மூர்த்தியென அறிக. **பரசிவம் என்று மயங்கற்க.**

தரங்கம் - அலை. முரலுதல்- ஒலித்தல்.

கடல் அலைபோல் இனிது ஒலிக்கும் வேதம்

திரிபுர சம்மார காலத்தில் உருத்திர மூர்த்திக்குத் வேதங்கள் குதிரைகளாக அமைக்கப்பட்டன.

**மரகத முராரியும்:-**

பச்சை நிறமுடைய திருமால்.

முரன் என்ற அவுணனை வதைத்தபடியால் (முர அரி) முராரி என்று பேர் பெற்றனர்.

**ஜெயங்கொள் குலிசகை வலாரியும்:-**

குலிசம்- வச்ராயுதம். இது மிக்க விறலுடையது. ததீசி முனிவருடைய எலும்பினால் செய்யப்பட்டது. பல அசுரர்களை வென்றது.

வலன் என்ற அரக்கனைக் கொன்றதனால் இந்திரன் வலாரி என்று பேர் பெற்றனன்.

**கொடுங்கண் அறநூலும்:-**

கண் - அறிவு. கொடு என்ற சொல் மிகுதியைத் தெரிவிக்கின்றது. மிகுந்த அறிவு மயமான அற நூல்கள்.

அறம் - அறுக்கப்பட்டது. இது இது எப்படி ஒழுக வேண்டும் என்று வரையறை செய்வது.

மனுவறம் முதலியவைகள் என அறிக.

**அகலிய புராணமும்:-**

தருமங்களை விரிவாகக் கூறுவது புராணங்கள். வேதத்தில் நுணுக்கமாகக் கூறிய அறங்களை விரித்துக் கூறுவது புராணம் என்க. ஒரு நுண்ணிய பொருளைப் பெரிதாகக் காட்டும் பூதக்கண்ணாடி போன்றது.

இவை பதினெட்டு;

இலிங்கம், காந்தம், கூர்மம், சைவம், பிரம்மாண்டம், பௌடிகம், மச்சியம், மார்க்கண்டேயம், வராகம், வாமனம், காருடம், நாரதீயம், பாகவதம், வைணவம், பதுமம், பிரமம், ஆக்நேயம், பிரமகைவர்த்தம்.

**ப்ரபஞ்ச சகலகலை நூல்களும்:-**

பஞ்சம்- விரிவு. ப்ர என்ற உபசர்க்கம் மிகுதியைத் தெரிவிக்கின்றது. மிகவும் விரிந்தபடியால் உலகத்திற்குப் ப்ரபஞ்சம் என்ற பேருண்டு. சகல கலை என்பது விரிந்துள்ள அறுபத்து நான்கு கலைகள்; அவையாவன;

அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதிசாத்திரம், சோதிடசாத்திரம், தருமசாத்திரம்,

யோக சாத்திரம், மந்திர சாத்திரம், சகுன சாத்திரம், சிற்ப சாத்திரம், வைத்திய சாத்திரம், உருவ சாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுர பாடனம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திரபரீட்சை, கனகபரீட்சை, இரதபரீட்சை, கசபரீட்சை, அசுவபரீட்சை, இரத்தினபரீட்சை, பூமி பரீட்சை, சங்கிராம விலக்கணம், மல்யுத்தம், ஆகருடணம், உச்சாடணம், வித்துவேடணம், மதன சாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலவாதம், கவுத்துகவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப் பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப் பிரவேசம், அதிரிசயம், இந்திரசாலம், மகேந்திரசாலம், அக்னித்தம்பம், சலத்தம்பம், வாயுத் தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப் பிரயோகம்.

**அருமறை யநேகமும்:-**

மறை- வேதம் உண்மையை வெளிப்படையாக உரையாமை யால் மறையெனப்பட்டது. பல உண்மைகள் இலைமறைகாய் போல இதில் மறைந்துள்ளன. மறை இறைவாக்கு. "சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்" என்ற சேக்கிழார் பெருமான் திருவாக்கினாலும், "பேசுவதும் திருவாயால் மறை போலுங் காணேடீ" என்ற மணிவாசகர் மணிமொழியாலும் அறிக.

மறைகள் ஆயிரக்கணக்காக விரிந்திருந்தது. "மறையாயிரங் களும்" என்கின்றார் அருணகிரியார். "ஆயிரம் ஆரணம்" என்கின்றார் அப்பர்.

அவைகளைச் சுருக்கி நான்காக அமைத்தனர் வியாத முனிவர்.

**குவிந்தும் அறியாத அறிவும் அறியாமையுங் கடந்த அறிவு திருமேனி:-**

மேற்கூறிய மும்மூர்த்திகளும் வேதம் முதலிய நூல்களும் ஒன்றுகூடி முயன்றும் அறியமாட்டாத அறிவு ஒன்றுளது. அந்த அறிவையும் கடந்து அப்பால் சென்றால் அங்கே ஓர் அறியா மையுளது. அதனையுங் கடந்த இடத்தில் விளங்கும் அறிவே இறைவனுக்குத் திருமேனியாக விளங்குகின்றது.

"அறிவொன் றறநின் றறிவா ரறிவில்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ" -அநுபூதி

கலையறிவுகட்கும் அப்பாலுள்ள நுண்ணறிவுக்கும் அப்பாற்பட்ட மூல இருளுக்கும் அப்பாற்பட்டுள்ள அறிவு இது. அது இத்தன்மைத்தென்று எவரால் இயம்புதல் முடியும்?

"அவ்வா றறிவா ரறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே"

என்கின்றார் அருணகிரிநாதர்.

மிகப் பெரிய அநுபவத்தால் அறிகின்றது. அதனை நம் போன்றார் எழுதவோ கூறவோ நினைக்கவோ முடியாது என உணர்க.

பலகாலுஞ் செய்த மாதவப்பயனால் அவனருளே கண்ணாகக் கொண்டு காண்கின்றபோது அந்த அறிவு, அறிவுக்கறிவாக புலப்படும். அதனை யறிவதுவே மேலான இன்பம்.

"அறிவை யறிபவ ரறியும் இன்பம் -திருப்புகழ்

அதனை இறைவனிடமே வேண்டிப் பெறுதல் வேண்டும்.

"அறிவுளறியும் அறிவூற அருள்வாயே" -திருப்புகழ்

இறைவனுடைய திருமேனி நமது உடம்பு போன்றதென்று மயங்கித் திரிபவர் பலர்; வாய்க்கு வந்தவாறு பிதற்றுபவர் பலர். நமது உடம்பு, எலும்பு, நரம்பு, உதிரம் முதலிய ஏழு தாதுக்களால் ஆயது. இறைவனுடைய உருவம் இத்தன்மையதன்று. அது அறிவுமயமானது. அந்த அறிவும் நமக்குள்ள உலக அறிவு, கலையறிவு, வேறுள்ள ஆராய்ச்சி யறிவுகளன்று.

அந்த அறிவின் இலக்கணத்தைத் தான் இந்தத் திருப்புகழில் பதின்மூன்று வரிகளால் மிக விரிவாக அடிகளார் எடுத்து நமக்கு அறிவித்தருளினார்.

ஆ! ஆ! இதனை நினைக்குந்தோறும் நெஞ்சம் விம்முகின்றது. உள்ளங் குழைகின்றது. இறைவனுடைய தன்மையை இங்ஙனம் இனிது எடுத்து நமக்கு உணர்த்தும் இப்பாடல் மிகவும் போற்றுதற்குரியது.

சிங்கமுகன் கூறுகின்றான்.

ஞானந் தானுரு வாகிய நாயக னியல்பை
யானு நீயுமா யிசைத்து மென்றால்அஃ தெளிதோ
மோனந் தீர்கிலா முனிவருந் தேற்றிலர் முழுதுந்
தானுங் காண்கிலன் இன்னமுந் தன்பெருந் தலைமை.

முருகவேளை வழிபடுவது எற்றுக்கு? எனின், அறிவு திருமேனியாகக் கொண்ட பரம்பொருளை வழிபடுவதனால் அறிவு நலத்தை நாம் பெற்று உய்யலாம் என உணர்க.

"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"

என்ற பொய்யாமொழிப்படி அறிவு எல்லா நலன்களையும் எளிதில் தரும். அறிவு நிரம்பப் பெற்றவன் அஞ்சாமையையும் அமைதியையும் பெறுவன். பின்னே வருவதை முன்னேயறிவான். ஆகவே, அறிவு நமக்கு இன்றியமையாத சிறந்த செல்வம்.

அறிவு திருமேனியாகவுடைய அறுமுகப் பெருமான் அடி மலரைச் சிந்தித்து வாழ்த்தி வந்திப்போர், அறிவு நலத்தையும், அதனால் ஏனைய நலங்களையும் எளிதிற் பெற்று இன்புறுவார் என்பது உறுதி.

பகைகொள் துரியோதனன்:-

துரியோதனன் பிறப்பிலேயே பாண்டவர்கள்மீது பகை கொண்டனன். காரணம் கலியம்சமாகப் பிறந்தானாதலின்.

அழுக்காறும் வஞ்சனையும் பொய்மையும் கொண்டு, தீயவர் களோடு நட்புக் கொண்டு, தூயவர்களுக்கு எந்நாளும் தீமையே புரிந்து உலகிற்குக் கேடு புரிந்தான்.

பாரதந் தெரிந்து:-

வியாசமுனிவர் இமயமலையிலே மூன்று ஆண்டுகள் யோகஞ் செய்து ஒருமைப்பட்ட சிந்தையினால் உண்டாகிய உணர்வு விழியினால் பாரத வரலாற்றை உள்ளவாறு தெரிந்தார். அதனைப் பின்னர் அவர் கவிகளாகப் பாடவுன்னினார்.

பழுதற வியாசனன் றியம்ப:-

பாரதத்திற்கும் அறம் என்று ஒரு பேருண்டு. அதன்கண் பேசப்படாத அறங்களே இல்லை. எல்லா அறங்களையும் பாரதம் வகுத்தும் தொகுத்தும் கூறும். அதனால்தான் அதனை வியாசர்

பாடி விநாயகரைக் கொண்டு மேருமலையில் எழுதுவித்தார்.

சாமானியமான தாயாதிகள் கலகமான ஒரு கதையாக அது இருக்குமாயின் விநாயகர் அதை எழுதமாட்டார். வேறு நூல்களில் காணப்படாத சில அரிய பெரிய நுணுக்கமான நீதிநெறிகள் இதன்கண் இருப்பதனால் இதனைப் படித்துப் பாருளோர் உய்வு பெறவேண்டுமென்ற கருத்தே வியாசர் மேற்கொண்டார் என்பதை நாம் அறியும் பொருட்டு "பழுதற" என்ற சொல்லை இங்கு அடிகளார் பெய்தனர்.

**பரியதொரு கோடு கொண்டு சண்ட வரைமீதே எழுதிய விநாயகன்:-**

வியாசர் பாரதத்தைப் பாடத் தொடங்கும்போது அதனை எழுத வல்லவர் ஐந்துகரப் பண்டிதராகிய விநாயகர் ஒருவரே எனக் கருதினார். விநாயகரை வேண்டி வழிபட்டார். பிள்ளையார் அவருக்குமுன் தோன்றியருளினார்.

"அப்பனே! அடியேன் பாடும் பாரதத்தை மேருமலை யில் எழுதியருளவேண்டும்"

"அன்பனே! நூதனமாகப் பாடப் போகின்றாய். தாமதமாகப் பாடுதல் கூடாது; நான் எழுதும் வேகத்திற்குத் தக்கபடி கூற வேண்டும்"

"அண்ணலே! அவ்வண்ணமே யாகட்டும். ஆனால், அடியேன் பாடும் கவிகளின் பொருளை யறிந்து எழுத வேண்டும்"

விநாயகர் அதற்கு உடன்பட்டு எழுதத் தொடங்கினார். தமது திருக்கரத்திலுள்ள ஞானமாகிய கொம்பினால் எழுதுகின்றார். இடையிடை மிகக் கடின பதங்கள் அமைந்த கவிகளைப் பாடி அதன் பொருளை விநாயகர் சிறிது சிந்திக்கும் நேரத்தில் பல ஆயிரங் கவிகளை மனதிற் பாடிக் கொண்டு, அவர் எழுதுகின்ற விரைவுக்குத் தக்கபடி வியாசர் கூறினார்.

இவ்வாறு, வியாசர் கூற விநாயகர் மேருமலையில் அப்பெருங் காவியத்தை எழுதியருளினார். இதனைப் பிற திருப்புகழ்களிலும் ஆசிரியர் குறிப்பிட்டிருக்கின்றார்.

"ஒரு கொம்பினாலே
எழுதென மொழியப் பண்டு பாரதம்
வடகன சிகரச் செம்பொன் மேருவில்
எழுதிய பவளக் குன்று"

"பாரதத்தை மேரு வெளீ வெளீதிகழ்
கோடொடித்த நாளில் வரை வரைபவர்
பானிறக்க ணேசர் குவா குவாகனர் இளையோனே"

.........அமராடி விபுதர் குல வேழமங்கை.........பயோதரம் புணர்ந்த பெருமாளே:-

*முருகப் பெருமான் தேவசேனாபதியாகி, சூராதியவுணருடன் போர் புரிந்து அவர்களை வென்று, இந்திரனுக்குப் புதல்வியாக வந்த தெய்வயானை யம்மையாரை மணந்தருளினார்.*

*தெய்வயானை யென்பது கிரியாசக்தி; அது சமதமாதி குணங்களின் பொருட்டு, மும்மலங்களாகிய அசுரர்களை அழித்ததற்கு அடையாளமாகி நிற்பது.*

## கருத்துரை

*விநாயகப்பெருமான் தம்பியே! தேவயானையின் கணவரே! அறிவும் அறியாமையுங் கடந்த அறிவு திருமேனியாகவுடைய உமது ஞானக்கழலைச் சார்ந்து இன்புற அருள்புரிவீர்.*

## 41

காதி மோதி வாதாடு நூல்கற் றிடுவோருங்
காசு தேடி யீயாமல் வாழப் பெறுவோரும்

மாது பாகர் வாழ்வேயெ னாநெக் குருகாரும்
மாறி லாத மாகால னூர்புக் கலைவாரே

நாத ரூப மாநாத ராகத் துறைவோனே
நாக லோக மீரேழு பாருக் குரியோனே

தீதி லாத வேல்வீர சேவற் கொடியோனே
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே

## பதவுரை

*நாதரூப - மந்திர ஒலிவடிவாக விளங்குபவரே! மா நாதர் ஆகத்து உறைவோனே - சிறந்த தலைவராகிய சிவபெருமானுடைய திருவுள்ளத்தில் உறைபவரே! நாகலோகம் ஈரேழு பாருக்கு உரியோனே - நாகருலக முதல் பதினான்கு உலகங்களை*

உடைமையாகக் கொண்ட முதல்வரே! தீது இலாத வேல் வீர - குற்றமில்லாத ஞானமாகிய வேலை ஏந்திய வீரமூர்த்தியே! சேவல் கொடியோனே - சேவலைக் கொடியாக உடையவரே! தேவ தேவ தேவ அதி தேவ பெருமாளே - தேவர்களுக்கும் தேவ தேவர்களுக்கும் தனிப்பெருந் தலைவராக விளங்கும் பெருமையிற் சிறந்தவரே! காதி மோதி வாது ஆடு நூல் கற்றிடுவோரும் - கோபித்து ஒருவரை ஒருவர் தாக்கி வாதிடுகின்ற நூல்களைக் கற்று அடங்காதவர்களும், காசுதேடி - பொருள்களை ஈட்டி, ஈயாமல் வாழ பெறுவோரும் - வறியவர்கட்கு வழங்காமல் தாமே வாழ்ந்து மகிழ்கின்றவர்களும், மாதுபாகர் வாழ்வே எனா நெக்கு உருகாரும் - உமையொரு பாகராகிய சிவபெருமானுடைய குமாரரே என்று கூறியும் நினைந்தும் என்பு நெக்குவிட்டு உருகி அன்புசெய்யாதவர்களும், மாறிலாத மாகாலன் ஊர்புக்கு அலைவாரே - மாறுபாடு இல்லாத பெரிய இயமனுடைய நகரஞ் சென்று பற்பல நிரயங்களில் அலைவார்கள்.

## பொழிப்புரை

மந்திர ஒலியுருவமானவரே! தனிப்பெருந் தலைவராகிய சிவமூர்த்தியின் திருவுள்ளத்தில் உறைபவரே! நாகருலக முதலிய பதினான்கு உலகங்களையும் உடைமையாகக் கொண்ட முழுமுதலே! குற்றமில்லாத ஞானமாகிய வேலாயுதத்தை ஏந்தியவரே! இந்திராதி தேவர்கட்கும், பிரமாதி தேவர் தலைவர்கட்கும் தனிப்பெருந் தலைவராக விளங்கும் பெருமிதம் உடையவரே! ஒருவரையொருவர் எதிர்த்துச் சினந்து தாக்கி வாதாடுவதற்குரிய கலைகளைக் கற்றுச் செருக்குற்றவர்களும், பொருள்களை ஈட்டி வறியவர்கட்கு வழங்காமல் தாமே வாழ்ந்து மயங்குகின்றவர்களும், உமாதேவியை ஒரு பாகத்திற் கொண்ட சிவபெருமானுடைய திருக்குமாரரே என்று துதித்தும் தியானித்தும் என்பு நெக்குவிட்டு உருக அன்பு செய்யாதவர்களும், மாறுதல் இல்லாத இயமனுடைய ஊர் சென்று பல நரகங்களில் வீழ்ந்து அலைந்து அல்லல் படுவார்கள்.

## விரிவுரை

**காதி மோதி வாதாடு நூல் கற்றிடுவோரும்-**

அறிவு நூல்களை ஓதியுணர்ந்து, அடங்கி, அறநெறி நின்று, இறையன்பு செய்து நிறைவுறல் வேண்டும். கல்வியின் பயன்

கடவுளை வழிபடுதல்.

"கடவுளை ஏன் வழிபடவேண்டும்? கடவுள் இருந்தால் அவர் ஒருபுறம் இருக்கட்டுமே? அவரை வழிபடுவானேன்? கடவுள் உணர்ச்சி எதற்காக?" என்று கடாவுவோர் பலர்.

இவ்வினாக்களை மனதில் வைத்து நிதானமாக நினைத்துக் கூறுவோம். உணர்க.

இறை என்ற சொல் இறு என்ற பகுதியடியாக வந்தது. இறைவன் என்பதற்கு எங்கும் தங்கியிருப்பவன் என்பது பொருள். எங்கும் எல்லா வுயிர்களிடத்திலும் நீக்கமற நிறைந்து நிற்பவன் இறைவன். எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும். எல்லா வுயிர்களும் இறைவனுடைய திருக்கோயில்கள் என்ற எண்ணம் உண்மையாக உள்ளத்தில் ஊன்றி நிற்குமாயின் எல்லாவுயிர் களையும் இறைவனாகவே எண்ணி அவ்வுயிர்கட்கு இன்பஞ் செய்யும் இனிய பண்பு ஒருவனுக்கு உண்டாகும். ஓர் உயிரைக் கொல்லவோ, இடர்ப்படுத்தவோ மனம் வராது. எல்லா வுயிர்களையும் இறைவன் சந்நிதியாக எண்ணுவோர் அவ்வுயிர்களிடம் தூய அன்பு செய்து உய்வு பெறுவர். பிற உயிர்கட்கு நன்மை செய்வதைக் காட்டிலும் சிறந்த தவம் இல்லை.

> உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
> அற்றே தவத்திற்(கு) உரு.

என்பார் திருவள்ளுவர்.

கடவுள் உணர்ச்சி ஒன்றுதான் இந்தப் பண்பாட்டைத் தரும். கடவுள் உணர்ச்சியில்லாதவர் எதனையும் செய்யத் தலைப் படுவர். புண்ணிய பாவங்களையும் உண்டு என்று உடன்படாது, நினைத்தவற்றை எல்லாம் பேசி, நினைத்தவற்றையெல்லாம் செய்து நிரயமுறுவர்.

ஆகவே, கடவுள் அன்பு மனித வாழ்க்கைக்கு இன்றியமை யாதது என்பதனைக் கடைப்பிடிக்க, மனித வாழ்க்கைக்கு மூச்சுக் காற்று எத்துணை அவசியமோ அத்துணை அவசியம் கடவுளன்பு எனத் தெளிக.

கடவுள் நம் உள்ளத்தில் உறைகின்றார் என்று மறவாது நினைப்பவர், மனத்தினாலும் தீமை செய்யமாட்டார். கடவுள் எல்லாவற்றையுங் கேட்டுக்கொண்டிருக்கின்றார் என்று எண்ணுவோமானால் உண்மைக்கு மாறாக உரைக்க முடியுமோ?

ஆகவே, இறைவனை ஒரு கணமேனும் மறவாது உன்னி உய்வு பெறவேண்டும். கடவுள் உணர்ச்சி மனிதனைத் தூய்மை யாக்குகின்றது. வாய்மை நெறியில் வளப்படுத்துகின்றது. ஆகவே, அறிவு நூல்களைக் கற்க வேண்டும். அவ்வறிவு நூல்களைக் கற்றாரே கற்றாராவார். அல்லாதார் கற்றாரெனினும் கல்லாரே யாவார். "கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியே" என்றும், "கற்றிடுமடியவர் புத்தியில் உறைபவ" என்றும் வரும் அமுத வசனங்களால் அறிக.

கற்றதன்பயன் வாலறிவன் நற்றாள் தொழுதலே என்று வள்ளுவனார் வகுத்துரைத்த வாய்மையாலும் அறிக.

> **கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்**
> **நற்றாள் தொழாஅ ரெனின்.**

"கற்பவை கற்க" என்று வள்ளுவர் கூறியபடியால் கற்கத் தக்க நூல்களையே கற்கவேண்டும். கற்கத்தக்க நூல்கள் எவை? அவை ஞானநூல்களாகும்.

> **"அறிவுநூல் கலாமூடர்"**

என்கின்றார் அருணகிரிநாதர்.

தமிழ் நூல்களில் இரண்டு பிரிவுகள் உள. ஒன்று தோத்திர நூல்கள்; மற்றொன்று சாத்திர நூல்கள். தோத்திரங்கள் பன்னிரு திருமுறைகள். சாத்திரங்கள் பதினான்கு சித்தாந்த சிவநூல்கள். அருணகிரிநாதர் தாயுமானார் முதலிய ஆன்றோர்கள் அருளிய நூல்கள் அவைகளின் வழிவந்தவைகள். எனவே, இத்தகைய முத்திநெறிக்குரிய சத்திய நூல்களையே கற்றல்வேண்டும். கற்று கற்றவண்ணம் நிற்றல் வேண்டும்.

இங்ஙனமின்றி வெறும் இலக்கண இலக்கியங்களாகிய கருவி நூல்களை மட்டுங் கற்று, அதனால் வந்த பொது அறிவி னால் "நம்மினும் உயர்ந்தார் எவர்?" என்று தருக்குற்று, பல புலவர் நிமிர்ந்து நிற்பர். அவர்கள் உள்ளத்தில் குழைவு இராது. சிந்தையில் தணிவும், செய்கையில் பணிவும் இரா. இத்தகையோர் ஒருவரை யொருவர் காணும்போது தாம்தாம் கற்ற வித்தைகளைக் கொட்டிக் கலகமிடுவர்.

முன்கூறியபடி, அறிவுநூல்களைக் கற்றவர் ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது பாலுந் தேனுங் கலந்ததுபோல் மகிழ்ந்து அளவளாவுவர்.

"நற்றா மரைக்கயத்து நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்"

பிறவித் துன்பத்தை நினைந்து உள்ளம் குழைந்து உருகி "ஈசனே! எண்ணில்லாத பிறவி எடுத்து எடுத்து இளைத்து விட்டேனே! இனி, இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ? யாது வருமோ? இனி, எளியேனைப் பிறவா வண்ணம் ஏன்று கொள்" என்று உள்ளத்தால் உரைத்து, வெள்ளம்போல் விழிநீர் பெருக நின்று நெய்யிலேயிட்ட அப்பத்தில் தண்ணீர்ப் பசையற்றவுடன் அந்த அப்பம் அமைதியுறுவதுபோல் சாந்தி யுடன் நிற்பர்.

இத்தகைய பெருந்தன்மையும் நன்மையும் அறியாத பலர், மரப்பெட்டியில் உள்ள நூல்களை மாமிசப் பெட்டியில் ஏற்றி, அகந்தை மேற்கொண்டு, மனிதப் பண்பு ஒரு சிறிதுமின்றி, ஒருவரை யொருவர் எதிர்த்து அதிர்ந்து பேசிப் பற்கள் உதிர்ந்து, கண்கள் பிதிர்ந்து, பேதுறுவர். இம்மையிலே இகழும் மறுமையிலே நரகமும் அடைவார்.

இவர்களுடைய நிலையைக் கண்டு இரக்கமுற்ற பரம குருநாதராகிய எமது அருணகிரிநாதர், "அந்தோ தமிழ் நூல்களைக் கற்றும் உணர்வுபெறாத இவர் மதியிருந்தவாறு என்னே?" என்று ஏங்கி இந்த அழகிய உபதேசத்தை உரைத்தருளினார்.

"காதி மோதி வாதாடு நூல் கற்றிடுவோர்
மாறிலாத மாகாலனூர்புக் கலைவார்"

காசுதேடி ஈயாமல் வாழப் பெறுவோரும்:-

பொருள் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதது. பொருளின்றி இனிது வாழ முடியாது. துறந்தார்க்கும் துவ்வாத வர்க்கும் இறந்தார்க்குந் துணையாக நிற்கின்ற இல்லறத்தான் பொருளை ஈட்டவேண்டியது கடமைதான். ஆனால், அறவழியில் ஈட்டியதுதான் பொருள். மறவழியில் ஈட்டிய பொருள் பொருளன்று. அது தீவினையின் குவியல். அப்பொருளைத் துய்ப்பார்க்கும் தூய்மைகெடும். "தீவினை விட்டு ஈட்டல் பொருள்" என்ற ஔவையார் அமுத வாக்கை உன்னுக. 'எப்படி யாவது யார் தலையில் கைவைத்தாவது பலரை நசுக்கியாவது பொருள் வந்தால் போதும்; வாழ்வின் குறிக்கோள் பொருளை யீட்டுவதுதான்' என்று இருக்கக்கூடாது. இது மடமை. தீயவழியில் ஈட்டுவார் இம்மையில் இகழும் மறுமையில் நரகமும் அடைந்து

அல்லற்படுவார். ஆகவே, உண்மை நெறி நின்று, பிறர் மனம் நோவாமல் அறவழியில் பொருளை யீட்டுக.

அவ்வாறு, அறத்தின்வழி ஈட்டிய பொருளை அரனார் தந்தது என்று மறவாமல் கருத்தில் இருத்தல் வேண்டும். அப்பொருளை அடியார்கட்கும் வறியார்கட்கும் இறை திருப்பணிகட்கும் வழங்குதல் வேண்டும். குறைந்தபட்சம் வருவாயில் கால் கூறு வழங்குதல் கடமை. அங்ஙனம் அறஞ் செய்தோர் ஆன்ற புகழும், அழிவற்ற புண்ணியமும் அடைவர்; அவருக்குக் கடமையைச் செய்தோம் என்ற சாந்தியும் உண்டாகும்.

அல்வழியில் பொருளையீட்டி நல்வழியில் செலவிடாத உலோபிகள், பொருள்காத்த பூதம்போல் காத்து, பொருள் என்றவுடன் "ஆ" என்று வாயைப் பிளந்து, உண்ணாதும் உடாதும் கொடாதும் பயனற்றுக்கிடப்பர். கன்னெஞ்சராகிய வன்னெஞ் சராம் அவர்களைப் பூமி தாங்குதற்குக் கூசும். அவர்களை ஏன் படைத்தாய்? என்று கூறி இறைவனை நோக்கி வினாவுகின்றனர் பட்டினத்தார்.

நாயாய்ப் பிறக்கினும் நல்வேட்டை யாடி நயம்புரியும்
தாயார் வயிற்றில் நரராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்
காயா மரமும் வறளாங் குளமும்கல் லாவுமென்ன
ஈயா மனிதரை ஏன்படைத் தாய்கச்சி ஏகம்பனே.

அறஞ் செய்யாது அல்வழியில் ஈட்டிய பொருள் திருட்டுக்கும் புரட்டுக்கும் சூதுக்கும் வாதுக்குமாகச் சென்று அதனால் உள்ளம் வருந்திய அவர்கள் கடுந்துயரமுற்று மாய்ந்து ஒழிவார். இறுதியில் நரகமும் அடைவார்.

வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை மெய்யன்பினால்
பாடிக் கசிந்துள்ள போதே கொடாதவர் பாதகத்தால்
தேடிப் புதைத்துத் திருட்டிற் கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே. -அலங்காரம்

"கைத்துண்டாம் போதே கரவாது அறஞ்செய்மின்" -நாலடியார்

"கரவாது
இடுவாய் வடிவே லிறைதாள் நினைவாய்" - கந்தரநுபூதி

மாதுபாகர் வாழ்வே எனா நெக்குருகார்:-

நமது மனம் கல்லினும் வலியதாக அமைந்திருக்கின்றது. அப்படியிருத்தல் கூடாது. கல்லின்மீது தாமரை மலராது. அது

ஈரமும் சேறுமுள்ள இடத்தில் மலரும். மனம் உருகி இளகியபோது அங்கு இறைவனுடைய திருவடியாகிய தாமரை மலரும்.

"திணியா னமனோ சிலைமீ துனதாள்
அணியார் அரவிந் தம்அரும் புமதோ" - *கந்தரநுபூதி*

இறைவனுடைய பெருமையையும் அவனுடைய கருணையின் எளிமையையும், ஆன்மாவாகிய தனது சிறுமையையும், தான் அவனை மறந்த போதும், தாயினும் சாலப்பரிவுடைய அத்தயாபரன் மறவாது தனக்கு அருள்புரியும் தன்மையையும், அப்பரம கருணைக் கடவுளைப் போற்றாது சாலநாள் கழித்த புன்மையையும் போற்றுவதனால் வரும் நன்மையையும் உன்னி உன்னி உருகுதல் வேண்டும்.

அங்ஙனம் உருகாதார் இறைவன் அளவற்ற கருணையினால் நமக்குச் செய்த, செய்கின்ற கருணைத் திறத்தை நினைக்கவு மாட்டாமையால், நன்றியறிவில்லாதவர் ஆவார். நன்றிமறத்தல் உய்வு இல்லாத கொடிய தீவினை என்பதை நமது அறநூல்கள் அறுதியிட்டு உறுதி கூறுகின்றன.

பேசுவதற்குத் தகுந்த இந்த வாயும், கண்களும், கரசரணங் களும், பிற புறஉறுப்புக்களும், அகக்கருவிகளும் அமைந்த இந்த அருமையான உடம்பையும், தண்ணீரும், நெருப்பும் காற்றும் கனலும் வெளியும் அமைந்த இந்த உலகத்தையும், இனிய கனிகளையும் கிழங்குகளையும் தன தானியங்களையும் நமக்குத் தந்தவர் யாவர்? கருணைக் கடலாக இறைவனே யன்றோ? நம்மால் ஒரு சிறுபுல்லை யேனும் உண்டுபண்ண முடியுமா? உற்று உணர்மின்.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்த சென்னியும் தந்த தலைவன்"

என்ற தமிழ்மறை அமிர்தம்போல் நமக்கு அறிவுறுத்துகின்றதே. ஆ! ஆ! எம்பிரானுடைய திருவருளின் திறந்தான் என்னே. நாம் கருவுற்ற உடனேயே நாம் அருந்த இரண்டு பால் குடங்களை அமைத்து வைக்கின்றான். மதி கதிர் என்ற இருபெரிய விளக்குகளை அமைத்துத் தந்துள்ளான். சகல வளங்களுக்கும் ஆதாரமாகிய மலைகளையும் வற்றாத கடலையும் நமக்கு ஆக்கி அளித்தவன் அவனே யன்றோ? கடலைக் கரையின்றி நிற்க வைத்ததும் அவ்விறைவனுடைய அருளாணையன்றோ? கருவில் உயிர்கள் இருக்கின்றபோது அவைகட்கு உணவு செல்லுமாறு

அமைத்த அருளை எண்ணினால் எந்தக் கருங்கல் மனந்தான் உருகாது. அவ்வாறு உருகவில்லையானால் ஆறறிவுபடைத்த மனிதனென்று எண்ணவுங் கூடுமோ? பிறர் செய்த அற்ப உதவிகளையே நெஞ்சார நினைத்து வாயாரப் பாராட்டவில்லையானால் மீளா நரகம் வருமாயின்; பலகோடி உதவிகளைப் புரிந்துவரும் பரம்பொருளின் பரம கருணையை நினைத்து உருகாதார் நரகில் வீழ்ந்து வேதனையுறுவர் என்பதில் எட்டுணையேனும் ஐயமின்று.

> "மாதுபாகர் வாழ்வே எனாநெக் குருகாரும்
> மாறிலாத மாகால னூர்புக் கலைவார்"

நாதரூப:-

நாதம்- மந்திரத்தை உச்சரிக்கும்போது உண்டாகும் ஒலி, "ஓசை யொலியெலாம் ஆனாய் நீயே" என்ற அப்பர் திருவாக்கின் படி இறைவன் ஒலியுருவாக விளங்குகின்றான்.

மாநாதர் ஆகத் துறைவோனே:-

நாதன்- தலைவன்; மாநாதன் - தனிப்பெருந்தலைவன்.

சிவபெருமானுடைய திருமேனியில் எல்லா அண்ட கோடிகளும், மாலயனாதி வானவர்களும், சராசரங்களும் அடங்கியிருக்கின்றன. முருகவேள் சிவபெருமானுடைய இதயத்தில் ஒளிமயமாக விளங்குகின்றனர். அவ்வொளிதான் அமரர் பொருட்டு, நெற்றிக்கண் வழியாக வெளிப்பட்டு, அறுமுகமும் பன்னிருகரங்களும், பதினெட்டு விழிகளுமாக சரவணப் பொய்கையில் கருணைவடிவாகத் தோன்றி யருளியது. அவ்வாறு தோன்றியருளினாலும் சிவமூர்த்தியின் திருவுள்ளத்தில் முருகவேள் உறைந்த வண்ணமாக இருப்பர். இதனால் சிவன் வேறு முருகன் வேறு என்று எண்ணுவதற்கு இடமின்று.

> மண்ண ளந்திடு மாயனும் வனசமே லவனும்
> எண்ண ரும்பகல் தேடியுங் காண்கிலா திருந்த
> பண்ண வன்நுதல் விழியிடைப் பரஞ்சுட ருருவாய்
> உண்ணி றைந்தபே ரருளினால் மதலையா யுதித்தான். - *கந்தபுராணம்*

சூரபன்மன் வேறு ஒரு குற்றமுஞ் செய்தானல்லன். முருகனைப் சிவபிரான் என்று அறியாதும், சிங்கமுகன் முதலியோர் அறிவுறுத்தியும் தெளிவு பெறாதும், எண்ணில் காலந் தவஞ் செய்து பெற்ற பெருவரங்களையும் இழந்து குலத்துடன்

அழிந்தான். எனவே, சிவன் வேறு குகன் வேறு என்று எண்ணாது சிவமூர்த்தியின் உள்ளக் குகைக்குள் வீற்றிருக்கின்ற ஒளிவடிவு முருகன் எனவுணர்க.

**தீதிலாத வேல் வீர:-**

வேல் என்பது ஞானம்; ஞானம் நன்மையையே செய்யும்; தீமையைச் செய்யாது. அறிவுள்ளவன் ஒன்றுக்கும் அஞ்ச மாட்டான். "நமனை யஞ்சோம்" என்பது ஞானிகளுடைய வீரவசனம். ஞானத்தையுடையவன் மலை போன்ற துன்பங்கள் வரினும் காற்றினால் கலங்காமல் நிற்கின்ற கல்மலைபோல் கலங்காமல் நிற்பான். முருகனை வணங்குகின்ற மெய்யடியார் கட்கு ஞானமும் ஞானத்தால் விளையும் வீரமும் உண்டாகும் என்க.

**சேவற் கொடியோனே:-**

ஒளியைக் கண்டு மகிழ்வது சேவல்; அது உலகிற்கெல் லாம் ஒளியைத் தரும் பெருவிளக்காகிய கதிரவனைக் கண்டு களிகூர்ந்து சிறகடித்துக் "கோ கோ" என்று கூவும். செவ்வேட் பரமன் எங்கு சென்றாலும் சேவற்கொடியுடன் செல்லுவார். அது நாத தத்துவம். நாத தத்துவத்தினால் மாயையின் வலி குறையும்.

**தேவ தேவ தேவாதிதேவ:-**

முருகவேள் மூவர் தேவாதிகட்கும் முழுமுதலாய் விளங்குப வர்.

"படைத்தளித் தழிக்குந் த்ரிமூர்த்திகள் தம்பிரானே"

"இதழ்பொதிய விழ்ந்த தாமரையின்
மணவறைபு குந்த நான்முகனும்
எரிதிரைய லம்பு பாலுததி நஞ்சராமேல்
இருவிழிது யின்ற நாரணனும்
உமைமருவு சந்த்ர சேகரனும்
இமையவர்வ ணங்கு வாசவனும் நின்றுதாழும்
முதல்வ"
- திருப்புகழ்

## கருத்துரை

எல்லா வுலகங்கட்கும் தலைவரே! வேலை ஏந்திய விமலரே! மூவர் தேவாதிகள் போற்றும் முழு முதலே! வாதமிடக் கற்பவரும்,

அறஞ் செய்யாத செல்வரும், அன்பு செய்யாத அவலரும் நரகில் வீழ்ந்து வருந்துவார்கள்.

## 42

அகல நீளம் யாதாலு மொருவ ராலு மாராய
அரிய மோன மேகோயி லெனமேவி
அசைய வேக்ரி யாபீட மிசைபு காம காஞான
அறிவி னாத ராமோத மலர்தூவிச்

சகல வேத னாதீத சகல வாச காதீத
சகல மாக்ரி யாதீத சிவரூப
சகல சாத காதீத சகல வாச னாதீத
தனுவை நாடி மாபூசை புரிவேனோ

விகட தார சூதான நிகள பாத போதூள
விரக ராக போதார சுரர்கால
விபுத மாலி காநீல முகப டாக மாயூர
விமல வ்யாப காசீல கவிநோத

ககன கூட பாடீர தவள சோபி தாளான
கவன பூத ராரூட சதகோடி
களப காம வீர்வீசு கரமு கார வேல்வீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே

## பதவுரை

விகட தார - வேடிக்கையைத் தரித்த, சூது ஆன - வஞ்சனையாகிய, நிகளபாத போதூள - பந்தத்தில் பதிதலைப் போகுமாறு தூள்படுத்துபவரே! விரகராகபோது ஆர் அசுரர் கால - காம நோயுடன் கூடிய மோகத்திலேயே பொழுதுபோக்கு பவர்களாகிய அசுரர்களை அழித்தவரே! விபுத மாலிகா - தேவதருவின் மலர் மாலையைத் தரித்தவரே! நீலமுக படஅக மாயூர - நீல நிறமுடையதும் முகபடத்தையுடையதுமாகிய மயிலை வாகனமாகவுடையவரே! விமல - மலமில்லாதவரே! வியாபகா - எங்கும் நிறைந்தவரே! சீலக விநோத - நல்லொழுக்கத் தில் பொழுது போக்குபவரே! ககன கூட - விண்ணுலகில் வாழ்வதும், பாடீரம் - சந்தனப் பொட்டு அணிந்ததும், தவள சோபித - வெண்மை நிறத்துடன் அழகியதும், ஆள் ஆன -

அடிமைபோல் ஏவல் செய்வதும், கவன - வேகமாகச் செல்வது மாகிய, பூதர ஆரூட - மலை போன்ற ஐராவத யானைமீது ஏறிவரும், சதகோடி - வஜ்ராயுதபாணியாகிய இந்திரன்; களப காமவீர் - கலந்து அன்பு செய்கின்ற வீரரே! கரம் வீசு முக - ஒளிவீசுகின்ற திருமுகத்தை யுடையவரே! ஆர வேல் வீர - பூமாலையை யுடைய வேலாயுதத்தை யேந்திய வீரமூர்த்தியே கருணை மேருவே - கருணையில் மேரு மலைபோல் உயர்ந்தவரே! தேவர் பெருமாளே - தேவர்கள் போற்றும் பெருமையின் மிக்கவரே! அகலம் நீளம் யாதாலும் ஒருவராலும் ஆராய அரிய, இவ்வளவு அகலம் இவ்வளவு நீளம் என்று யாராலும் அளந்து ஆராய்ந்து அறிய முடியாததாகிய, மோனமே கோயில் எனமேவி அசைய - மௌனமாகிய திருக்கோயிலை யடைந்து இருந்து, க்ரியா பீட மிசை புகா - கிரியையாகிய பீடத்தின்மீது அமர்ந்து, மகா ஞான அறிவின் ஆதர ஆமோத மலர்தூவி - பெரிய மெய்யுணர்வாகிய ஞான மலரை அன்புடனும் மிகுந்த மகிழ்ச்சியுடனும் அர்ச்சித்து சகல வேதன அதீத- எல்லா அறிவுகட்கும் அப்பாற்பட்டதும், சகல வாசக அதீத - எல்லாச் சொற்களுக்கும் அப்பாற்பட்டதும், சகல மாக்ரியா அதீத - எல்லா வகையான பெரிய கிரியைகளையுங் கடந்ததும், சிவரூப சகல சாதக அதீத - நன்மை வடிவான எல்லாப் பிராமணங் (அளவை) கட்கும் அப்பாற்பட்டதும், சகல வாசன அதீத- எல்லா மணங் கட்கும் மேலானதும் ஆகிய, தனுவை நாடி -புருவ நடுவில் விற்பிறைபோல் விளங்கும் குறியைக் குறியாது குறித்து நின்று, மா பூசை புரிவேனோ - பெரிய வழிபாட்டை அடியேன் புரிய மாட்டேனோ? (புரிதல் வேண்டும்).

## பொழிப்புரை

வேடிக்கையுடன் கூடிய வஞ்சனையால் பந்திக்குந் தன்மை யாகிய மலமாயா கன்மங்களைத் தூளாக்குபவரே! காமவேட்கை யுடன் கூடிய மோகத்தில் பொழுது போக்கும் அசுரர்களை அழிப்பவரே! தெய்வ மலர்மாலை தரித்தவரே! முகபடத்துடன் கூடிய நீல மயிலை வாகனமாக வுடையவரே! மலமில்லாதவரே! எங்கும் நிறைந்தவரே! நல்லொழுக்கத்தில் பொழுது போக்குபவரே! விண்ணுலகத்தில் வாழ்வதும் சந்தன திலகம் அணிவதும் அழகிய வெண்மை நிறமுடையதும் அடிமைபோல் பணி செய்வதும் வேகமாகச் செல்வதும் மலை போன்றதுமாகிய ஐராவத யானை மீது ஏறிவரும் வஜ்ராயுதபாணியாகிய இந்திரன் கலந்து அன்பு

செய்கின்ற வீரரே! ஒளிவீசுகின்ற முகத்தினரே! மாலைபூண்ட வேலை தரித்த வீரமூர்த்தியே! கருணையில் மேரு மலைபோல் உயர்ந்தவரே! தேவர் போற்றும் பெருமிதமுடையவரே! இத்துணை அகலம் இத்துணை நீளம் என்று யாராலும் அளந்தும் ஆராய்ந்தும் அறியமுடியாத 'மௌனம்' என்ற திருக்கோயிலையடைந்து இருந்து கிரியையாகிய ஆதனத்தின் மீது அமர்ந்து, பெரிய மெய்யுணர்வாகிய ஞான மலரை அன்புடனும் மிக்க மகிழ்ச்சியுடனும் அர்ச்சித்து, எல்லாவித அறிவையும் கடந்ததும், எல்லா விதச் சொற்களையுங் கடந்ததும், எல்லா விதத் தொழிலையுங் கடந்ததும், நன்மை வடிவாகிய எல்லா விதப் பயிற்சிகளையுங் கடந்ததும், எல்லாவித மணங்களையுங் கடந்ததுமாய், புருவ நடுவில் வில் வடிவம்போல் உள்ள குறியைக் குறியாது குறித்து நின்று சிறந்த ஞான பூசை செய்து உய்ய அருள்புரிவீர்.

## விரிவுரை

**அகல நீளம் யாதாலும் ஒருவராலும் ஆராய அரியமோனமே கோயில் :-**

அறிவு வடிவாக விளங்கும் இறைவனை மோனம் என்ற கோயிலில் கண்டு வழிபடவேண்டும். ஞானத்தின் எல்லை யாகத் திகழ்வது மோனம் என வுணர்க. "மோன மென்பது ஞான வரம்பு" என்று உபதேசிக்கின்றார் ஔவையார்.

மன சம்பந்தம் அற்ற இடத்திற்கு மௌனம் என்று பேர். வாய் பேசாததற்கு மௌனம் என்று கூறுவது ஓர் அளவுக்குப் பொருந்தும். அதற்கு வாய்மௌனம் எனப்படும். கை கால் அசைக்காமல் வாய் பேசாமல் இருப்பதற்குக் காஷ்ட மௌனம் என்று பேர். மனமே அற்ற நிலைக்குத் தான் பூரண மௌனம் என்று பேர். அங்கேதான் பூரண இன்பவூற்று உண்டாகும். அந்த இன்ப வெள்ளத்தில் திளைத்தார் இந்திர போக இன்பத்தை வேப்பங்காயாக எண்ணுவர்.

இந்த மௌனத்தையருளுமாறு ஒரு திருப்புகழில் அருணகிரியார் ஆறுமுகக் கடவுளை வேண்டுகின்றார்.

"சலில லிபியன சனனமு மலமலம்
இனியு னடியரொ டொருவழி படஇரு
தமர பரிபுர சரணமு மவுனமும் அருள்வாயே"

அந்த மோனமாகிய கோயிலின் அகல நீளத்தை எவராலும்



எதனாலும் ஆராய்ந்து அறிய முடியாது. அதை ஞானகுரு வுணர்த்த உணர்வினாலேயே உணர முடியும். அதனைப் பெற்ற தாயுமானப் பெருந்தகையார் கூறுகின்ற அமுத வசனங்களை இங்கு உன்னுக.

அறிந்த அறிவெல்லாம் அறிவன்றி யில்லை
மறிந்தமனம் அற்ற மவுனம் - செறிந்திடவே
நாட்டினான் ஆனந்த நாட்டில் குடிவாழ்க்கை
கூட்டினான் மோன குரு.

எல்லாமே மோனநிறை வெய்துதலால் எவ்விடத்தும்
நல்லார்கள் மோனநிலை நாடினார் - பொல்லாத
நானெனஇங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தேன் மோனகுரு வே.

மோன குருவளித்த மோனமே யானந்தம்
ஞானம் அருளுமது நானுமது - வானாதி
நின்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது
என்றறிந்தேன் ஆனந்த மே.

ஆனந்த மோனகுரு வாமெனவே என்னறிவின்
மோனந் தனக்கிசைய முற்றியதால் - தேனுந்து
சொல்லெல்லாம் மோனம் தொழிலாயு மோனம்
எல்லாம்நல் மோனவடி வே.

கிரியாபீடம் :-

இங்கே மோனமாகிய கோயிலில் கிரியையாகிய பீடத்தில் இருத்தல். கிரியை என்பது இங்கே ஞானத்திற் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்ற நான்கு பாதங்களில் ஞானத்தில் கிரியையைக் குறிக்கும் என வுணர்க.

மோனமாகிய கோயிலில் புறக்கிரியைகட்கு இடம் இல்லை.

"சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய"

என்று கதிர்காமத் திருப்புகழில் அடிகளார் கூறியிருப்பதையும் இங்கு உய்த்துணர்க.

மகாஞான அறிவு ஆதாராமோத மலர்:-

மோனக்கோயிலில் ஞானப்பூவினால் அர்ச்சிக்க வேண்டும்.

அந்த ஞானம் மகா ஞானமாகும். பாசஞான பசுஞானமன்று. அது அன்பையும், இன்பையும் அங்கமாகக் கொண்டது. அறிவின் பயன் அன்பு; அன்பின் சிகரம் இன்பம் எனத்தெளிக.

மோனமாகிய கோயிலில் ஞானக்கிரியையாகிய பீடமேல் இருந்து, அறிவே வடிவாகிய ஆண்டவனுக்கு மெய்யுணர்வாகிய மென்மலரிட்டு வழிபடும் இவ் வழிபாடு ஞான பூஜையாகும்.

**நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்அன்பே**
**மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே.** - *தாயுமானார்.*

**சகலவேதனாதீத:-**

வேதனம் - அறிவு.

அறிவு அறிகின்ற வகையால் பல திறப்படும். கடலைப் பற்றிஅறிகின்ற அறிவு; மண்ணைப்பற்றி அறிகின்ற அறிவு; விண்ணைப்பற்றி அறிகின்ற அறிவு; நீரைப்பற்றி அறிகின்ற அறிவு; தீயைப்பற்றி அறிகின்ற அறிவு; நோயைப்பற்றி அறிகின்ற அறிவு; உயிரைப்பற்றி அறிகின்ற அறிவு. இந்த அறிவுகள் எல்லாவற்றுக்கும் அப்பாலுள்ள அறிவு அருளறிவு என வுணர்க. அந்த அருளறிவை யன்றி ஏனைய அறிவுகளை எல்லாங் கடந்த இடத்தில் ஞான பூசை நிகழும்.

**சகல வாசகாதீத:-**

வாசகம் - சொல்.

"மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே" என்ற மணி வாசகத்தின்படி சொற்களையெல்லாம் கடந்தது அது. சொல்லே அற்ற இடத்தில் தண்டபூப நியாயப்படி பொருள் தானே அற்றுவிடும். "சும்மா இரு சொல்லற என்றலுமே அம்மா பொருளொன்றும் அறிந்திலனே" என்பது அநுபூதி. "சொல்லாலும் பொருளாலும் அளவையாலும் தொடர வொண்ணா அருள்நெறி" என்பார் தாயுமானார். இங்கே வாசகமாகக் கூறும் மந்திரங் களையும் கடந்து நிற்கும் பூசையாம் என்பதும் அறிக. அஜபா நலத்துடன் கூடியது அது.

**சகல மாக்ரியா தீத:-**

முன் கூறியபடி ஞானபூஜை எல்லாவகைப்பட்ட கிரியை களையுங் கடந்தது. இதனால், கிரியாபூஜை தாழ்ந்தது என்பது பொருளன்று. அது, ஜீவபோதம் உள்ளவரை செய்யத் தக்கதாகும்.

தூங்கியவன் கைப்பொருள் தானே நழுவுமாபோல் மெய்யுணர்வு எய்தி தான் அதுவாய் நிற்குந் தனிப்பெரு நிலையில் கிரியை தாமே கழன்றுவிடும்.

**சகல சாத காதீத:-**

*சாதகம் - பயிற்சி.*

ஞானத்தைப் பெறுவதற்காக மேற்கொள்ளும் பயிற்சிகள் பலவுள. ஞானநிலை எய்தியபோது பயிற்சிகள் விலகும். ஏணி மேல் ஏறி மாடிமீது சேர்ந்தோன் ஏணியை விட்டு விடுவதுபோல் என அறிக. அதைக் கண்டு பாதி ஏணிமேல் நிற்போன் ஏணியை உதறித் தள்ளுவானாயின் தலை மண்டை உடைந்து போகும். ஆகவே, அநுபவத்தில் தானே வரக்கூடிய நிலையை வலிந்துகொண்டு, அநுபவம் வராமுன் கொண்ட பயிற்சிகளை விடக்கூடாது.

**சகல வாசனாதீத:-**

முன் பற்றியிருந்த பொருள்களில் உள்ள பற்றுக்களின் வாசனை. பெருங்காயம் எடுத்தபின்னும் அதன் வாசனை அந்தப் பெட்டியில் வருவதுபோல் வாசனையாக வந்து சில பற்றுக்கள் ஆன்மாவைத் தாக்கும். ஆகவே, வாசனைகளையுங் கடந்து சென்று நிற்க வேண்டும்.

**தனுவை நாடி மாபூசை புரிவேனோ:-**

*தனு - வில்.*

புருவ நடுவே வில்போன்ற ஒரு குறியுண்டு. நிலாப்பிறை போன்ற அதன் நடுவே 'ய' என்ற எழுத்து விளங்கும். அக் குறியைக் குறியாது குறித்து நின்று அசைவற்று கருவி கரணங் கழன்று சித்திர விளக்குபோல் நிற்கவேண்டும்.

"எட்டி ரண்டு மறியா தஎன்செவியில்
எட்டி ரண்டு மிதுவா மிலிங்கமென
எட்டி ரண்டும் வெளியா மொழிந்தகுரு முருகோனே"

இலிங்கம் - குறி. எட்டும் இரண்டும் பத்து. அது ய. இந்த 'ய' ஆக்ஞா என்ற புருவ நடுவில் இருக்கின்றது. அதில் நாட்டத்தை வைத்தார்க்கு வாட்டமில்லை.

நாட்ட மிரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்ட மில்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்ட மில்லை உணர்வில்லை தானில்லை
தேட்ட மில்லை சிவனவ னாமே.

என்கின்றார் திருமூலர்.

புருவ நடுவே ஞானத்தின் ஊற்று இருப்பதனாலேயே அங்குப் பொட்டு இட்டு அடையாளஞ் செய்கின்ற வழக்கம் நம் நாட்டில் தொன்றுதொட்டு வருகின்றது.

**விகார சூதான நிகளபாத போதூள:-**

நிகளம் - சங்கிலி. இங்கே ஆன்மாவைக் கட்டும் பந்தத்தைக் குறித்து நின்றது.

"விகடத்தைத் தரித்த வஞ்சனையால் வரும் பந்தத்தைப் போகும்படி தூள் செய்பவனே!" என்று முருகனை விளிக்கின்றார். 'போக' என்பது ஈறு கெட்டு 'போ' என வந்தது.

**விரகராக போதார சுரர் கால:**

விரகம் - காமநோய்; ராகம் - மோகம்.

போது - பொழுது; ஆர் - நிறைதல். காம நோயைத் தரும் மோகத்திலேயே பொழுதைப் போக்கும் அசுரர்கட்கு அழிவைப் புரிபவர் முருகப்பெருமான். "நிருதரார்க்கொரு காலா" என்றும் பிறிதொரு திருப்புகழில் கூறுகின்றார்.

**விபுத மாலிகா:-**

விபுதர் - தேவர். தேவர்கள் தெய்வ தருக்களில் பூக்கும் மலர்களை எடுத்துத் தொடுத்து முருகனுக்கு மாலை சூட்டுவர். அம்மலர் மாலை மாறாத மணம் நிறைந்தது; வாடாதது.

**நீலமுகபடாக மாயூர:-**

முகபடம் - யானைக்கு முகத்தில் அணியும் அழகிய துணி. மயிலுக்கும் அதுபோல் அதன் முகத்தில் அழகிய படம் விளங்குவதாகக் கூறுகின்றனர்.

**ககனகூடம்** :- விண்ணுலகம்

**பாடீரம்** :- சந்தனம், யானைக்குச் சந்தன திலகம் அணிவது மரபு.

| | | |
|---|---|---|
| சோபிதம் | : | அழகு |
| ஆளான | : | இந்திரனுக்கு ஓர் அடிமைபோல் ஐராவதமென்ற யானை பணிபுரியும். |
| கவனம் | : | வேகமாக செல்லக் கூடியது. |
| பூதரம் | : | மலை. இங்கு உவமஆகுபெயராக யானையைக் குறிக்கின்றது. |
| சதகோடி | : | வஜ்ராயுதம் |
| களபம் | : | கலத்தல் |
| சாப | : | பிரியம் |

பொன்னுலகத்தில் உறைவதும் சந்தனதிலகம் அணிந்திருப்பதும், வெண்மை நிறமுடையதும், அழகியதும், பணி செய்வதும் வேகமுடையதும், மலைபோன்றதுமாகிய ஐராவதத்தின் மேல் வரும் வஜ்ராயுதபாணி மனங்கலந்து விரும்புகின்ற தெய்வம் முருகவேள்.

இந்த்ர நீலம் :

கரம் - ஒளி. ஒளி வீசுகின்ற திருமுகத்தையுடையவர்.

கருணைமேருவே :

முருகப்பெருமான் கருணையில் மேருமலைக்கு நிகரானவர். கருணைத் தெய்வம்.

## கருத்துரை

அசுரகுலகாலரே! மயில்வாகனரே! இந்திரன் போற்றும் கருணை மேருவே! மோனமாகிய கோயிலில் ஞானமாகிய மலர் தூவி, புருவ நடுவில் நாட்டத்தைச் செலுத்தி ஞானபூசை செய்ய திருவருள் புரிவீர்.

## 43

அடைப டாது நாடோறும் இடைவி டாது போம்வாயு
அடைய மீளில் வீடாகு மெளநாடி
அருள்பெ றாவ நாசார கரும யோகி யாகாமல்
அவனி மீதி லோயாது தடுமாறும்

உடலம் வேறு யான்வேறு கரணம் வேறு வேறாக
உதறி வாச காதீத அடியூடே
உருகி ஆரி யாசார பரம யோகி யாமாறுன்
உபய பாத ராசீக மருள்வாயே

வடப ராரை மாமேரு கிரியெ டாந டாமோது
மகர வாரி யோரேழு மமுதாக
மகுட வாள ராநோவ மதிய நோவ வாரீச
வனிதை மேவு தோளாயி ரமுநோவக்

கடையு மாதி கோபாலன் மருக சூலி காபாலி
புதல்வ கான வேல்வேடர் கொடிகோவே
கனக லோக பூபால சகல லோக ஆதார
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

## பதவுரை

வட பரு அரை மா மேரு கிரி எடா நடா - வடதிசையில் உள்ளதும் பருத்த அடியுடன் கூடியதும் பெரியதுமாகிய மேரு மலையை எடுத்துக் கடலில் நட்டு, மோது மகரவாரி ஓர் ஏழும் அமுது ஆக - அலைகள் மோதுகின்றதும் மகர மீன்கள் வாழ்கின்றதுமாகிய ஏழு கடல்களையும் அமுதந் தோன்றும் பொருட்டு, மகுட வாள் அரா நோவ - பணாமகுடங்களுடன் கூடிய ஒளியுள்ள வாசுகி என்ற அரவம் நோவவும், மதியம் நோவ - (மத்தின் தறியாக நிறுத்திய) சந்திரன் நோவவும், வாரீச வனிதை மேவு தோள் ஆயிரமும் நோவ - தாமரை மலரில் வாழும் திருமகள் வாழும் ஆயிரந் தோள்களும் நோவவும், கடையும் ஆதி கோபாலன் மருக - கடைந்த முதல்வராகிய திருமாலின் மருகரே! சூலி காபாலி புதல்வ - முத்தலைச் சூலத்தையும் பிரம கபாலத்தையும் ஏந்திய சிவபெருமானுடைய திருக்குமாரரே! கான வேல் வேடர் கொடி கோவே - கானகத்தில் வாழ்பவரும் வேலை ஏந்திய வருமாகிய வேடர்களுடைய புதல்வியாகிய வள்ளியம்மை யாரது கணவரே! கனகலோக பூபால - பொன்னுலகத்தையும் மண்ணுலகத்தையும் காத்தருள்பவரே! சகல லோக ஆதார - எல்லா வுலகங்கட்கும் ஆதாரமானவரே! கருணை மேருவே - கருணையில் மேருமலை போல் உயர்ந்தவரே! தேவர் பெருமாளே - தேவர் போற்றும் பெருமையின் மிக்கவரே! அடைபடாது - தங்குதலின்றி, நாள் தோறும் - நாள்தோறும், இடைவிடாது போம்வாயு - இடையறாது வெளிப்பட்டுப் போய்

திரும்பும் பிராண வாயுவானது, அடைய மீளில் வீடு ஆகும் என நாடி - நிறைந்து மீண்டு உடலுக்குள் கும்பித்து நிற்குமாயின் முத்தி வீடு கிட்டும் என்று எண்ணி, அருள்பெறா - திருவருளைப் பெறாத, அநாசார - சைவாசாரமில்லாத, கருமயோகி ஆகாமல் - கர்மயோகியாக அடியேன் ஆகாமற்படிக்கு, அவனி மீதில் - பூமியில், ஓயாது தடுமாறும் - ஒழியாமல் உழல்கின்ற, உடலம் வேறு - இந்த உடம்பு வேறு, யான் வேறு - உயிராகிய யான் வேறு, கரணம் வேறு - உடம்புக்குள் நின்று இந்த உடம்பைத் தொழிற்படுத்துகின்ற அந்தக் கரணங்கள் வேறு, வேறு ஆக உதறி - இவைகள் வேறாக நிற்க உதறித்தள்ளி, வாசக அதீத - சொற்களுக்கு எட்டாததாகிய, அடி ஊடே உருகி- திருவடியை உன்னி உள்ளம் உருகி, ஆரிய ஆசார - குருபரம்பரையாக வந்த ஒழுக்கமுடைய, பரமயோகி ஆமாறு - பெரிய சிவயோகியாகு மாறு, உன் உபயபாத ராசீகம் அருள்வாயே - தேவரீருடைய இரண்டு திருவடியில் பொருந்துவதை அருள்புரிவீர்.

## பொழிப்புரை

வடதிசையில் உள்ளதும் பருத்த அடியை உடையதும் மிகப் பெரியதுமாகிய மேருமலையை மத்தாக எடுத்து நட்டு, அலைகள் மோதுகின்ற ஏழு கடல்களையும் அமுதம் உண்டாகும் பொருட்டு, தாம்பாகப் பிடித்த வாசுகியின் ஒளிமிக்க பணாமகுடம் நோவவும், தறியாக நிறுத்திய சந்திரன் நோவவும், தாமரை மலரில் வாழுகின்ற திருமகள் உறைகின்ற ஆயிரந் தோள்களும் நோவவும், கடைந்த ஆதிமூலமாகிய கோபாலமூர்த்தியின் திருமருகரே! திரிசூலமும் அயன் கபாலமும் தரித்த சிவபெருமானுடைய திருக்குமாரரே! காட்டில் வாழுகின்ற வேலை ஏந்திய வேடர் குமாரியாகிய, வள்ளியம்மையாருடைய மணாளரே! பொன்னுலகத்தையும் மண்ணுலகத்தையும் காத்தருள்பவரே! எல்லா வுலகங்கட்கும் ஆதாரமானவரே! கருணையில் மேரு மலைபோல் உயர்ந்தவரே! தேவர்கள் போற்றும் பெருமித முடையவரே! தங்குதல் இன்றி நாள்தோறும் இடையறாது போய் மீளுகின்ற பிராண வாயுவானது, அடைபட்டுக் கும்பித்தால் முத்தி வீடு கூடும் என்று எண்ணி, திருவருள் பெறாத அநாசாரமுள்ள கரும யோகியாக அடியேன் ஆகாமல், பூமியில் ஒழியாமல் உழல்கின்ற இந்த உடலம் வேறு, யான் வேறு, அந்தக்கரணங்கள் வேறு வேறாக உதறித் தள்ளி, சொற்களுக்கு எட்டாத திருவடியை நினைந்து உள்ளம் உருகி, குருவழியாக வந்த ஆசார சீலமுள்ள

பெரிய சிவயோகியாகுமாறு தேவரீருடைய இரண்டு திருவடிகளைப் பொருந்தும் தன்மையை அருள்புரிவீர்.

## விரிவுரை

அடைபடாது நாடோறும் இடைவிடாது போம்வாயு-

பிராணவாயு எப்போதும் நமது முயற்சியின்றியே இடைவிடாது சரித்துக் கொண்டிருப்பது நின்றாலும் சென்றாலும் கிடந்தாலும் இருந்தாலும் எழுந்தாலும் துயின்றாலும் அயின்றாலும் அது தடைபடாது சஞ்சரிக்கும். உயிர் வாழ்வின் ஆணிவேர் பிராணவாயு; அது இன்றி உயிர் உடம்போடு கூடியிராது. அது சிறிது சிறிதாகக் கழிந்து விடுகின்றது.

அடைய மீளில் வீடாகும் எனநாடி:-

பிராணவாயு கீழ் நோக்காகக் கழியாமல் மீண்டு நிற்குமாறு செய்வதுவே முத்தி வீடு என்று அடயோகிகள் எண்ணுவர்; இவ்வாறு எண்ணுதல் பிழை. இது ஹடயோகக் கொள்கை. இது முத்திக்குச் சாதனமன்று. வாயுவைக் கும்பகஞ் செய்து நிறுத்துதல் நெடுநாட்களுக்கு இந்த உடம்பை நிறுத்துமேயன்றி முத்தியைத் தராது.

"யோகம் சித்த நீரோத" என்றபடி மனத்தை ஒருமைப் படுத்துவதே யோகம் என உணர்க. வாயுவைப் பிடித்து அடக்க மனம் அடங்கும். ஆனால், வாயு வெளியே செல்லும்போது மனம் முன்னைவிடப் பன்மடங்கு வேகமாகச் செல்லும். ஒரு கிளையை வலுவாக இழுத்து வளைத்துப் பிடித்தால் அது தாழும். ஆனால், வளைத்து வைத்திருந்த பிடி சற்று நழுவுமானால் முன்னைவிட உயரமாக எழுந்து நிற்கும். தானே வளைந்த கிளை அவ்வாறு உயராது. ஆகவே, சிவ சிந்தையால் தானே மனம் அடங்குமாறு செய்வதுவே முறை. அதுவே சிவயோகம். அவ்வாறு மனம் அடங்கியபோது வாயுவும் தானே அடங்கும்; அதுவே சிவயோகம் எனப்படும். அச் சிவயோகம் சிவத்துடன் இரண்டறக் கலந்து பேரின்பத்தைத் துய்க்கத் துணைபுரியும். ஆகவே, ஹடயோகத்தைக் கொள்ளாது, சிவயோகத்தைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். அடிகளார் ஹடயோகத்தைக் கண்டித்துச் சிவயோகத்தைப் பாராட்டியுள்ள பாடல்களைக் காண்க.

துருத்தி எனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென் னாஞ்சிவ யோகமென்னும்
குருத்தை யறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தில் இருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே.

காட்டில் குறத்திப் பிரான்பதத் தேகருத் தைப்புகட்டில்
வீட்டில் புகுத மிகஎளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூ லாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே.

*- அலங்காரம்*

"அனித்த மான வூனாளு மிருப்ப தாக வேநாசி
அடைத்து வாயு வோடாத வகைசாதித்
தவத்தி லேகு வால்மூலி புசித்து வாடு மாயாச
அசட்டு யோகி யாகாமல் மலமாயை
செனித்த காரி யோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தை யாகி யான்வேறெ னுடல்வேறு
செகத்தி யாவும் வேறாக நிகழ்ச்சி யாம னோதீத
சிவச்சொ ரூப மாயோகி எனஆள்வாய்

*- திருப்புகழ்*

அருள்பெறா அநாசார கருமயோகி:-

திருவருள் தாகத்துடன் இறைவனை நாடி அகங்குழைந்து உருகிப் பாடி அன்பு செய்யாதவர்கட்குத் திருவருட்செல்வம் கிட்டாது. திருவருள் பெறாதார் முத்தியின்பம் எய்தப்பெறார். அவர்கட்கு ஆன்றோர் ஆசாரமும் அமையாது. சிவஞானத்தைப் பெறாத அவர்கள் கருமயோகி எனப்படுவார்கள்.

உடலம் வேறு யான் வேறு கரணம் வேறு வேறாக உதறி-

ஞானநூல் தெளிவில்லாதவர்கள் உடலமே ஆன்மா என்றும், கரணங்களே ஆன்மா என்றும், கூறி மலைவு எய்துவர். உடம்புடன் கூடியிருக்கின்றபோது சிவயோக நிலையில் உடம்பு வேறு கருவி கரணங்கள் வேறு எனக் கண்டு அவைகளினின்றும் பிரிந்து தன்னந் தனியாக நின்று இன்புறுவர். அவ்வாறு, தன்னந் தனியாக நின்ற நிலையில் உண்டாகும் இன்பம் அளவற்றதாகத் திகழும்.

"தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப் பதுவோ".

*- அநுபூதி*

அடியூடே உருகி:-

திருவடி ஞானமே என உணர்க. அத் திருவடியை உன்னி உன்னி உள்ளம் உருகுதல் வேண்டும். உருகும் அடியார் உள்ளத்தில் இறைவனுடைய அருட்காட்சி தோன்றும்.

"முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்" - *அநுபூதி*

"குமரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணநிருதர் கலகா பிறைச்சடையர்
குருவெனந லுரையுதவு மயிலா எனத்தினமும் உருகாதே"
- *திருப்புகழ்*

ஆரியாசார:-

ஆரியன் – ஆசாரியன்.

குருநாதன் வழியாக வந்த ஒழுக்கம். வழிவழியாக வந்த ஒழுக்கம் உயர்ந்தது. பரம்பரை மருத்துவம், பரம்பரை ஜோதிடம் உயர்ந்தவை என்க.

"தங்க ளாணவ மாயை கருமம
லங்கள் போயுப தேச குருபர
சம்ப்ர தாயமொ டேயு நெறியது பெறுவேனோ"
- *திருப்புகழ்*

பரம யோகி:-

பரம – பெரிய. பரமயோகி – சிவராஜ யோகி. சிவயோகத்தின் நுணுக்கத்தை நன்கு தெளிந்து அதனை நமக்கு உபதேசிக்கின்றார் அருணகிரிநாதர். பல பாடல்களில் அதன் சிறப்பை ஓதுகின்றார். திருமூலருக்குப் பின் சிவயோகத்தைத் தெளிவாகக் கூறியவர் அருணகிரிநாதர் ஒருவரே என உணர்க.

"சந்த்ர சூரியர் தாமு மசபையும்
விந்து நாதமு மேக வடிவம
தன்சொ ரூபம தாக வுறைவது சிவயோகம்"

உபயபாத ராசீகம் அருள்வாயே:-

சிவயோக நிலையைப் பெற்றுத் திருவடியில் பொருந்தும் பெற்றியை அடிகளார் வேண்டுகின்றனர்.

வடபராரை :-

பரு அரை என்பது பராரை என வந்தது. இவ்வாறு, திருமுருகாற்றுப்படையிலும் "இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து" என வந்திருக்குமாறு காண்க.

அமுதத்தை வேண்டிக் கடல் பானையாகவும், மந்த்ர மலை மத்தாகவும், சந்திரன் தறியாகவும், வாசுகி தாம்பாக வும் கொண்டு திருமால் கூர்மவடிவு கொண்டு அம்மலையைத் தாங்கி, அவருடைய ஆயிரங்கரங்களையுங் கொண்டு அசுரர் சுரர் என்பார்களுடன் கடைந்தனர்.

"மாகமுக டோடகில பாதாள மேருவுட
னேசுழல வாரியது வேதாழி யாவமரர்
வாலிமுத லானவர்க ளேனோர்க ளாலமுது கடைநாளில்
வாருமென வேஒருவர் நோகாம லாலவிட
மீசர்பெரு மானுதவி யேதேவர் யாவர்களும்
வாழஅமு தேபகிரு மாமாய னாரினிய மருகோனே"
- *திருப்புகழ்*

அவ்வாறு கடையும்போது அரவமும் திங்களும் நொந்தன.

"மகுடவாளரா நோவ மதியநோவ"

திருமகள் உறைகின்ற இடத்தில் சோம்பலும் மயக்கமும் அயர்ச்சியும் இரா. ஊக்கமும் ஆக்கமும் சுறுசுறுப்பும் மிகுதியாக இருக்கும். திருமகள் உறைகின்ற ஆயிரந் தோள்களுந் திருமாலுக்கு நொந்தன என்பதனால் கடல் கடைவதன் அருமையை உணர்த்துகின்றார். "வாரீச வனிதை மேவு தோளாயிரமு நோவ" என்பார்.

கனகலோக பூபால:-

கனகலோகம் - பொன்னுலகம். பூ - பூவுலகம். பாலன் - இரட்சிக்கின்றவன். முருகவேள் பொன்னுலகம் மண்ணுலகம் என்ற இரண்டையும் காப்பாற்றுபவர்.

சகலலோக ஆதார:-

எல்லா வுலகங்கட்கும் அப் பரமபதியே ஆதாரமானவர்.

"தொடுத்த நீப வேல் வீர சமஸ்த லோக பூபால"

கருணைமேரு :-

*மலைகளுக்குள் உயர்ந்தது மேருமலை. முருகன் கருணையில் மேருமலையிலும் உயர்ந்தவர்.*

## கருத்துரை

*திருமால் மருகரே! சிவபுதல்வரே! வள்ளி மணவாளரே! ஹடயோகத்தை விடுத்துச் சிவயோகத்தைத் யடுத்து திருவடி சார அருள்புரிவீர்.*

## 44

அமல வாயு வோடாத கமல நாபி மேல்மூல
அமுத பான மேமூல அனல்மூள
அசைவு றாது பேராத விதமு மேவி யோவாது
அரிச தான சோபான மதனாலே

எமனை மோதி யாகாச கமன மாம னோபாவ
மெளிது சால மேலாக வுரையாடும்
எனதி யானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்
இதய பாவ னாதீத மருள்வாயே

விமலை தோடி மீதோடு யமுனை போல வோரேழு
விபுத மேக மேபோல வுலகேழும்
விரிவு காணு மாமாயன் முடிய நீளு மாபோல
வெகுவி தாமு காகாய பதமோடிக்

கமல யோனி வீடான ககன கோள மீதோடு
கலப நீல மாயூர இளையோனே
கருணை மேக மேதூய கருணை வாரி யேயீறில்
கருணை மேரு வேதேவர் பெருமானே.

## பதவுரை

*விமலை - மலமில்லாதவராகிய உமாதேவியாருடைய, தொடி மீது ஒடு யமுனைபோல - வளையல் அணிந்த திருக்கரத் தினின்றும் தோன்றி உலகெங்குமாய் விரிந்து பரந்து விளங்கிய யமுனாநதி போலவும், ஓர் ஏழு விபுத மேகமே போல - ஒப்பற்றவாய் எங்கும் வியாபித்து நின்ற ஏழு மேகங்களைப் போலவும், உலகு ஏழும் விரிவுகாணும் - ஏழு உலகங்களையும் அதன் அகல நீளத்தையாராய்கின்ற, மாமாயன் - பெருமைமிக்க*

திருமால், முடிய நீளுமாபோல - அண்ட முகடுவரை நீண்டு நின்ற விசுவரூபம் போலவும், வெகுவித முக ஆகாய பதம் ஓடி - அநேக திசைகளிலும் ஆகாயத்தின் மீது ஓடிப் பரந்தும், கமல யோனி வீடுஆன ககன கோளமீது ஓடும் - பிரம தேவரது உலகமான பிரமாண்டத்தின் மீதும் தோகையை வீசிப் பறந்து ஓடுகின்ற, கலப நீப மாயூர - கலாபத்தையும் கடப்ப மலர் மாலையும் உடைய மயிலை வாகனமாகவுடையவரே! இளை யோனே - இளம் பூரணரே! கருணை மேகமே - கருணையை மேகம்போல் பொழிபவரே! தூய கருணைவாரியே - தூய்மை யான கருணைக்கடலே! ஈறுஇல் கருணை மேருவே - முடிவு இல்லாத கருணை மேருவாக விளங்குபவரே! தேவர் பெருமாளே - தேவர்கள் போற்றும் பெருமையின் மிக்கவரே! அமல வாயு ஓடாத கமல நாபிமேல் - தூய்மையான பிராணவாயு அதன் இயல்புப்படி ஓடாவண்ணம் மூலாதாரத்தில் அடங்கிநிற்க, மூல அமுத பானமே மூல அனல்மூள - அதனால் அமுதபானம் உண்பதற்கு ஏதுவாக மூலாதாரத்தில் மங்கிநிற்கும் அங்கியை மூளுமாறு செய்து, அசைவுறாது - உள்ளமும் உடலும் உணர்வும் அசையாமற் படி நிறுத்தி, பேராது - அந்தச் சமாதி நிலையின்றும் சிறிதும் விலகாமல் நின்று, ஓவாது - ஒழியாமல் சாதனை செய்து, அரி சதான சோபானம் அதனாலே - அப் பிராணவாயு நிற்கும் இடங்களாகிய ஆறு ஆதாரங்களாகிய படிகளின் மீது ஏறி அதனால் வந்த சிவயோக சத்தியால்; எமனை மோதி - உயிரைப் பிரித்து அடக்க வரும் கூற்றுவனை வென்று; ஆகாச கமனமாம் மனோபாவம் சால எளிது - ஆகாச கமனம் மனத்தையடக்கித் தியானித்தல் முதலியவைகளை எளிதாக அடைந்து, மேலாக உரையாடும் - மேலானதாகச் சொல்லுகின்ற, எனது யானும் வேறாக - எனது யான் என்ற புறப்பற்றையும் அகப்பற்றையும் வேறாகச் செய்தும், எவரும் யாதும் யானாகும் - எல்லா உயிர்களும் எல்லாப் பொருள்களும் யானாகப்பார்த்து அவற்றுடன் ஒன்றுபட்டு நிற்கும், இதய பாவன அதீதம் அருள்வாயே - உள்ளத்தில் நினைப்பதற்கரிய அப்பெரு நிலையை அடியேனுக்கு அருள்புரிவீர்.

## பொழிப்புரை

மலமில்லாதவராகிய உமையம்மையாருடைய வளையலை யணிந்த திருக்கரத்தில் தோன்றி எங்கும் பரந்து வெள்ளமாக ஓடிய யமுனா நதியைப்போலவும், பரந்துள்ள ஒப்பற்ற ஏழு

மேகங்களைப் போலவும், ஏழுவுலகங்களையும் ஆய்ந்து பார்க்கின்ற நாராயணமூர்த்தி அண்டமுகடுவரை நீண்டு எடுத்த விசுவரூபம் போலவும், பல திசைகளிலும் விண்மிசை பறந்து ஓடியும், பிரமதேவருடைய உலகமான பிரமாண்டமீதும் ஓடிப் பறந்தும், கலாபத்தையும் கடப்ப மாலையையும் உடைய மயிலை வாகனமாகக் கொண்டவரே! கருணை பொழிகின்ற மேகமே! தூய்மையான கருணைக் கடலே! முடிவு இல்லாத கருணையில் மேரு மலை போன்றவரே! தேவர்கள் போற்றும் பெருமை மிக்கவரே! தூய பிராணவாயு வெளிமுகமாக வோடாதபடி நிறுத்தி அதனால் (மதி மண்டபத்திலுள்ள) அமுதம் பெருகி அதனைப் பருகுவதற்கு ஏதுவாக மூலக் கமலத்திலுள்ள அக்கினி மூளுமாறு செய்து, உள்ளம் உணர்வு உடல் இவைகள் அசையாமற் படியிருந்து, அச்சிவயோக நிலையினின்றும் விலகாதபடி நின்று, இடையறாத சாதனை செய்து, பிராணவாயு தங்குவதற்கு இடங்களாகிய ஆறாதாரங்களாகிய படிகள்மீது ஏறி, இயமனை வென்று, விண்மிசை யுலாவுதல் மனதை யடக்கித் தியானித்தல் முதலியவைகளை மிகவும் எளிதில் பெற்று; மேன்மையான தென்று புகழ்வதாகிய, எனது யான் என்பது வேறாகவும் எவரும் யாவும் யானாகவும் ஆகிய மனதிற்கும் எட்டாத அப்பெரு நிலையை அடியேற்கு அருள்புரிவீர்.

## விரிவுரை

**அமலவாயு வோடாத:-**

அமலவாயு - தூய்மையான பிராணவாயு. காமக்ரோத முடையார்க்குப் பிராணவாயு சூடாகவும் தூய்மையற்றும் வெளிப்படும். காமக்ரோதமில்லாத யோகிகளுடைய சாந்த மான பிராணவாயு குற்றமற்று இருக்கும்.

அப்பிராணவாயு வெளிமுகப்படாமல் உள்அடங்கி நிற்கச் செய்தல் சிவயோக சாதனையாகும்.

**அமுதபானமே மூலஅனல் மூள:-**

அவ்வாறு, பிராணவாயு ஒடுங்கியபடியால் மூலதாரத் தில் உள்ள குண்டலினி எழுந்து, அதனால் அங்குள்ள மூலாக்கினி மூளும். அந்த அக்கினியின் தாக்குதலால் மதிமண்டலம் வெதும்பி அமுதம் பெருகும். அதனையுண்டு யோகிகள் தன்மயமற்றுச் சின்மயமாக வீற்றிருப்பார்கள்.

"நாளுமதி வேக கால்கொண்டு தீமண்ட
வாசியன லூடு போயொன்றி வானின்க
ணாமமதி மீதி லூறுங்க லாயின்ப அமுதூறல்
நாடி" - *திருப்புகழ்*

"மௌனியாய்க்
கண்மூடி யோடு மூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை எழுப்ப நினைவுப்
பூணிலேன்" - *தாயுமானார்*

அசைவுறாது :-

*உள்ளமும் உணர்வும் உடம்பும் அசையாது சித்திர தீபம்போல் சமாதியில் நிலைத்து நிற்றல். அவ்வாறு நின்றால் திருவருளைக் காணலாம்.*

"ஆடிய கறங்குபோல் ஓடியுழல் சிந்தையை
அடக்கியொரு கணமேனும் யான்
காணிலேன் திருவருளை" - *தாயுமானார்*

"சங்கையற வேநின்று பொங்கிவரும் பாலுண்டு
அங்கமிளைப் பாறிக்கொண்டு தங்கபொம்மை போலவே
நில்லுமே" - *கோபாலகிருஷ்ண பாரதி*

பேராது :-

*மேலே கூறிய சிவயோக நிலையினின்றும் ஒருபோதும் விலகாமல் நிலைத்து நிற்றல். பிரிந்து விலகி இடர்ப் பட்டோர் பலர்; அங்கு நிகழும் சித்திகளைக் கண்டு மயங்கினார் பலர். உலகவர் புகழுரை கேட்டுத் தயங்கினார் பலர். ஆகவே, அதி னின்றும் சிறிதும்பிறழாமல் உறுதியாக நிற்றல் வேண்டும்.*

ஓவாது :-

*யோகநிலை எய்தினாலுங்கூட அதை ஒழியாமல் சாதனை செய்தல் வேண்டும். சிவஞானபோதத்தில் 7, 8, 9 சூத்திரங்கட்குச் சாதன இயல் என்று பேர்.*

*சாதனம் செய்யும் முறை அதற்குரிய அங்கம், அதனாலாகும் பயன் ஆகிய இம்மூன்றையும் தெரிந்து கொண்டு இடையறாது சாதனை செய்து மெய்ப்பொருள் அடைய வேண்டும்.*

அரி சதான சோபானம் அந்தனாலே:-

*சோபானம் - படி.*

*அரி - காற்று; ச - உடல்; தானம் - இடம்.*

*பிராணவாயு யோகசாதனையில் தங்குதற்கு இடமாகிய ஆறு ஆதாரங்கள். சாதார யோகம், நிராதார யோகம் என்ற இரு வகையான யோக சோதனைகளில் முதற்கூறிய சாதார யோகத்தைப் பயில்வார். மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களிலும் பிராணவாயுவை நிறுத்தி, ஆங்காங்குள்ள ஆதார தேவனைக் கண்டு வணங்கி, அவர்களது அருளால் ஏழாவது இடமாகிய பிரமரந்திரத்தைத் திறந்துகொண்டு, சஹஸ்ராரப் பெருவெளியை யடைந்து சிவமயமாக இருப்பர்.*

"மேலை வெளியேறி நீயின்றி நானின்றி
நாடி யினும்வேறு தானின்றி வாழ்கின்ற தொருநாளே"

"நீடார் சடாத ரத்தின் மீதே பராப ரத்தை
நீகா ணெனாஅ னைச்சொல் அருள்வாயே"
*திருப்புகழ்*

எமனைமோதி :-

*எமனைத் தாக்கி வெற்றி பெறுவது என்பதன் கருத்து முடிவைச் செய்கின்ற காலத்தை வென்று நித்தியராக சிவயோகிகள் தமது விருப்பப்படி யிருக்க வல்லார் என்ப தாகும்.*

"குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்;மரிப் பார்வெறுங் கர்மிகளே"

*என்று வரும் கந்தரலங்காரப் பாடலையும் இங்குக் காண்க.*

"எமபடரை மோதுமோன உயிரையிலுப தேசவாளை
எனதுபகை தீரநீயு மருள்வாயே"
*- திருப்புகழ்*

ஆகாச கமனமா மனோபாவம்:-

*ஆகாச கமனம் - விண்ணிடை சஞ்சரித்தல்; சிவயோக சாதனையால் இவ்வுடம்பினுடைய கனங்குறைந்து, ஒளி மயமாவதால் ஆகாச கமன முதலியவைகள் எளிதில் உண்டாகும்.*

*மனோபாவம், மனத்தில் மெய்ப்பொருளை நினைத்து நினைப்பற நிற்றல் – தியானம்; இதை மாணிக்கவாசகர் "தேனிப்பு" என்று கூறுகின்றார்.*

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வே றிருந்துன் திருநாமம்
தரிப்பார் பொன்னம் பலத்தாடும் தலைவா என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனோ நம்பி இனித்தான் நல்காயே.

**எனதி யானும் வேறாகி:-**

*எனது – புறப்பற்று; யான் அகப்பற்று.*

*பற்றற்றார்க்கே பிறப்பறும். "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்பார் நம்மாழ்வார்.*

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

யான்என தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

*என்னும் தெய்வப்புலவர் திருவள்ளுவர் வாக்குகளையும், அதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையையும் இங்கு உய்த்துணர்க. புறப்பற்று அகப்பற்று என்பதனை வடநூலார் மமகாரம், அகங்காரம் என்பர்.*

*என்னது யான் என்ற இரண்டும் அற்றார்க்கு எல்லா இடங்களும் சிவ சந்நிதியாகவே தோன்றும். அவர்கட்கு சுட்டறிவு இன்றி அருளறிவு தோன்றும்.*

என்னதுயான் என்னல்அற்றோர் எங்கிருந்து பார்க்கினும்நின்
சன்னிதியாம் நீபெரிய சாமி பராபரமே.

என்னதுயான் என்பதற எவ்விடமும் என்னாசான்
சன்னிதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ. *- தாயுமானார்*

*யான் என்றது அற்ற இடம் ஒரு திருவடி; எனது என்றது அற்ற இடம் ஒரு திருவடி. ஆகவே, இறைவனுடைய இரண்டு திருவடிகளும் இருவகைப் பற்றும் அற்ற இடங்களாம். 'திருவடி பெற்றான்' 'திருவடிப் பேறு' என்பதற்கெல்லாம் பொருள் பற்றற்ற*

நிலையடைதல் என்பதாகும்.

இக் கருத்து கந்தர் கலி வெண்பாவில் குமரகுருபரர் கூறுமாறு காண்க,

"யான்எனதென் றற்ற இடமே திருவடியா
மோனபரா னந்த முடியாக"

யான் யான் என்றும், என்னது என்னது என்றும் இறுமாந்து கருமாந்திக் கெடுகின்றனர் பலர். தனதல்லாததை எனதென்பது பேதைமையுமாகும். ஆகவே, இதனை அறவே துறந்து உய்வுபெறல் வேண்டும்.

**எவரும் யாதும் யானாகும் இதய பாவனாதீதம்:-**

எவரும் - உயர்திணை. யாதும் - அஃறிணை.

சராசரங்களெல்லாம் தானாகுந் தன்மை. அங்ஙனம் ஆனோர் சிந்தனை எங்குந் தங்கும்; அவர்கள் செயல் எங்கும் நிகழும்.

எனது யான் என்பதைக் களைந்து எல்லாரும் எல்லாமும் தானானவர் சுகர். அவர் ஒரு சமயம் '**சிவமே**' என்று அழைத்தார். அக்காட்டில் உள்ள கல், மண், குன்று, செடி, கொடி, புல், பூண்டு, பட்சி, விலங்கு முதலியவை யெல்லாம் '**ஏன்**' '**ஏன்**' என்று அவருக்கு மறுமொழி கூறினவாம்.

அங்கமே நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
எங்கும்ஏன் ஏன்என்ற தென்னே பராபரமே.

- *தாயுமானார்*

இந்த நிலை மிகப் பெரிய நிலை. அதனால் இதை "இதய பாவனாதீதம்" என்றார். மனதில் நினைப்பதற்கும்கூட முடியாத அத்துணைப் பெருமையுடையது. "உலகேழும் யானாக" என்று அருணகிரிநாதர் பிறிதொரு திருப்புகழிலும் இந் நிலையைத் தான் பெற்றதாகக் கூறியிருக்கின்றார்.

எனதி யானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்
இதய பாவனா தீதம் அருள்வாயே.

என்ற இத்திருப்புகழடி எப்போதும் மறவாமல் நினைந்து உணர்ந்து உய்வு பெறத்தக்கது.

**விமலை தோடி மீதோடு யமுனை போலவே:-**

விமலை - பார்வதி; மலமில்லாதவள்.

தொடி என்ற சொல் சந்தத்தை வேண்டி தோடி என்று நீட்டல் விகாரம் பெற்றது.

தொடி - வளையல். வளையல் அணிந்த கரத்தினை இது குறிக்கின்றது. ஆகுபெயர்.

கங்கை யமுனை முதலிய நதிகள் உமையம்மையாருடைய வளையல் அணிந்த திருக்கரங்களினின்றும் தோன்றியன.

## கங்கை பிறந்த வரலாறு

திருக்கைலாய மலையில் மணித் தவிசின்மீது பவள மலைபோலே சிவபெருமான் வீற்றிருந்தருளினார். மரகதக் கொடி போன்ற உமாதேவியார் ஒரு திருவிளையாடல் காரணமாகச் சிவபெருமானுடைய பின்புறமாக வந்து மெல்ல அவரது திருக்கண்களைத் தமது திருக்கரங்களால் மூடினார். அதனால், அகில உலகங்களும் இருண்டு விட்டன. உலகில் உள்ள ஒளிப் பொருள்கள் யாவும் இறைவனுடைய கண்களின் ஒளியே என் பதை உலகம் அப்போது உணர்ந்தது. இறைவனுக்கு ஒரு கண மாகிய அந்த நேரம் ஏனைய தேவர்கட்கும் மனிதர்கட்கும் பல யுகங்கள் ஆயின. ஆன்மாக்கள் இருளில் இடர்ப்பட்டபோது இறைவர் தமது நெற்றியில் உள்ள ஞானாக்கினிக் கண் மலரைச் சிறிது திறந்தருளினார். அதனால், ஒளியுண்டாக உலகங்களின் இடர் நீங்கியது. அப்போது அம்மை அஞ்சித் தமது மலர்க் கரங்களை எடுத்தனர். அக் கரமலர்களின் பத்து விரல்களி னின்றும் பத்து கங்கைகள் தோன்றின. அவைகள் அகில உலகங் களிலும் ஓடிப் பரந்து வியாபித்தன. அதனைக் கண்ட அமரர்கள் இறைவனிடம் ஓடி முறையிட்டனர். கருணை வள்ளலாகிய சிவபெருமான் அக் கங்கையைத் தமது சடையில் ஏற்றருளினார். உலகமெல்லாம் பரவி அழிக்கத் தொடங்கிய கங்கை இறை வருடைய சடையில் ஒரு ரோமத்தில் அடங்கியது.

மாலயனாதி வானவர்கள் சிவபெருமானை வணங்கி நின்று, "ஞானம்பாளுடைய திருக்கரங்களில் தோன்றியதனாலும், தேவரீருடைய திருச்சடை முடியில் தங்கியதனாலும் உயர்ந்த இக்கங்கை நீரில் சிறிது எமது உலகங்கட்கும் தந்து உதவ வேண்டும்" என்று இரந்தார்கள்.

மேதினி யண்ட முற்றும் விழுங்கிய கங்கை யுன்றன்
பாதியாள் கரத்திற் றோன்றும் பான்மையால் உனது சென்னி
மீதினில் செறிக்கும் பண்பால் விமலமாம் அதனில் எங்கள்
மூதெயில் நகரம் வைகச் சிறிதருள் முதல்வ என்றார். - *கந்தபுராணம்*

அவ்வண்ணமே சிவமூர்த்தி தமது திருமுடியில் விளங்கிய கங்கையில் சிறிது அமரர்க்கு வழங்கியருளினார். அதைப் பெற்ற மால், பிரமன் முதலியோர் தத்தம் உலகில் கொண்டுபோய் அமைத்துக் கங்கையால் புனிதம் பெற்றார்கள்.

சத்தியவுலகில் தங்கிய கங்கையைப் பகீரத மன்னன் வேண்ட, மீண்டும் சிவபெருமான் அதனைத் தமது சென்னியில் ஏந்திப் பூமிக்கு அனுப்பியருளினார். அது பாகீரதி என்ற பெயருடன் பாதலத்தில் கபிலரால் எலும்புக் குவியலாய்க் கிடந்த அறுபதினாயிரம் வீரர்களாகிய சகரர்கட்கு அருள்செய்தது.

இத்தகைய கங்கையின் ஒரு பிரிவு யமுனாநதி. அது கருமையாகவும் பரந்தும் இருக்கும். எம்பெருமானுடைய மயில் தனது பச்சைக் கலாபத்தை விரித்துப் பறக்கும் அழகு, உமையம்மையின் திருக்கரத்தில் தோன்றி எங்கும் பரவிய யமுனாநதிபோல் காட்சி தருகின்றது என்று அடிகளார் மிகவும் அழகாகக் கூறுகின்றார்.

**ஓரேழு விபுத மேகமேபோல:-**

விபு – வியாபகம்; ஆகாயமெங்கும் வியாபித்திருக்கின்ற ஏழு மேகங்களைப் போலே மயில் எங்கும் நிழல் படுமாறு தோகையை விரித்துப் பறக்கின்றது.

**உலகேழும் விரிவு காணுமாமாயன் முடிய நீளுமாபோல:-**

காத்தல் தொழிலைப்புரியும் நாராயணர் எங்கும் நிறைந் திருப்பவர். விஷ்ணு என்ற சொல்லுக்கு வியாபகமானவர் என்பது பொருள். எனவே, வியாபகமாகிய திருமால் விசுவ ரூபங் கொண்டால் எப்படியோ அப்படி மயில் உலக மெல்லாம் தனது மரகத ஒளியை வீசிப் பறந்து வருகின்றது.

மயிலுக்கு மூன்று உவமைகள் கூறினார். ஒன்று யமுனா நதி; ஒன்று மேகம்; ஒன்று திருமாலின் விசுவரூபம். மூன்றுங் கருமை நிறமுடையவை. மயில் பச்சை நிறமுடையது. மயிலின் பெருமையை இப்படி அருணகிரிநாதர் அழகாக எடுத்துக் கூறுகின்றார். படிக்கப் படிக்கப் பரவசமாகும் பைந்தமிழ்ப் பாடல் இது.

"கருணை மேகமே தூய கருணை வாரியே ஈறில்
கருணை மேருவே தேவர் பெருமாளே"

முருகப் பெருமானையும் மூன்று சொற்றொடர்களால் இங்கு விளித்துத் துதிக்கின்றார். **"கருணைமேகம்" "கருணைவாரி" "கருணைமேரு".**

கருணை பொழிவதனால் 'மேகம்' என்றார். கடல் இல்லையானால் மேகம் பொழிய இயலாது. ஆகவே, மேகத்திற்குக் கடல் ஆதாரம். ஆதலினால் 'கருணை வாரி' என்றார். கடல் உப்புக் கடல் ஆதலால், 'தூய கருணைவாரி' என்றார். கடலுக்கும் உலகுக்கும் ஆதாரமாக இருப்பது மேருமலை யாதலினால் 'கருணை மேரு' என்றார். மேகம், வாரி, மேரு என்ற மூன்றாக முருகவேளை உருவகம் செய்தனர். கைம்மாறு கருதாமல் உதவுவது மேகம். கரையில்லாமல் நின்று விலையுயர்ந்த மணி முத்துக் களுக்கு உறைவிடமாயது கடல். என்றும் சலியாமல் உயர்ந்து நிற்பது மேரு. இதுபோல் கடவுள் தன்மைகள் விளங்குகின்றன. உய்த்துணர்க.

## கருத்துரை

*மயில் வாகனக் கடவுளே! கருணா மூர்த்தியே! சிவயோக நிலையில் நின்று எனது யான் என்பவைகளை நீக்கி எல்லாரும் எல்லாமும் யானாகும் பெருநிலையை அடியேனுக்கு அருளுவீர்.*

## 45

சுருதி யூடு கேளாது சரியை யாளர் காணாது
துரிய மீது சாராது எவராலுந்
தொடரொ ணாது மாமாயை யிடைபு காது ஆனாத
சுகம கோத தீயாகி யொழியாது

பருதி காயில் வாடாது வடவை மூளில் வேகாது
பவனம் வீசில் வீழாது சலியாது
பரவை சூழி லாழாது படைகள் மோதில் மாயாது
பரம ஞான வீடேது புகல்வாயே

நிருதர் பூமி பாழாக மகர பூமி தீமூள
நிபிட தாரு காபூமி குடியேற
நிகர பார நீகார சிகர மீது வேலேவு
நிருப வேத ஆசாரி யனுமாலும்

கருது மாக மாசாரி கனக கார்மு காசாரி
ககன சாரி பூசாரி வெகுசாரி
கயிலை நாட காசாரி சகல சாரி வாழ்வான
கருணை மேரு வேதேவர் பெருமாளே.

## பதவுரை

*நிருதர் பூமி பாழாக* - அரக்கர்களுடைய நாடுநகரங்கள் இடிந்து அழிந்து ஒழியவும், *மகரபூமி தீமூள* - மகர மீன்கள் வாழுகின்ற கடல் வற்றி நெருப்பு மூளவும், *நிபிட தாருகா பூமி குடியேற* - நெருங்கியுள்ள கற்பகம் முதலிய தருக்களையுடைய விண்ணுலகத்தில் தேவர்கள் குடியேறவும், *நிகர* - பூத சேனைகளை விழுங்கியதும், *பார* - கனமானதும், *நீகார* - அவமதிக்கத் தக்கதுமாகிய, *சிகரமீது வேல் ஏவு* - கிரவுஞ்சமலை மீது வேலாயுதத்தை விடுத்தருளிய, *நிருப* - தலைவரே! *வேத ஆசாரியனும்* - வேதங்களில் வல்ல பிரம தேவனும், *மாலும்* - நாராயணரும், *கருதுமாக மா சாரி* - தியானிக்கின்ற ஞான வெளியாகிய அம்பலத்தில் ஆடுகின்றவரும், *கனக கார்முக ஆசாரி* - பொன்மலையை வில்லாகவுடைய குருநாதரும், *ககன சாரி* - பெருவெளியில் விளங்குபவரும், *பூசாரி* - பூசிக்கத்தக்கவரும், *வெகுசாரி கயிலை நாடக ஆசாரி* - கயிலையில் அநேக விதமாக திருநடனம் புரிபவரும், *சகலசாரி* - எல்லா இடங்களிலும் சஞ்சரிப்பவரும் ஆகிய சிவபெருமானுடைய, *வாழ்வு ஆன* - பெருவாழ்வு தரும் திருக்குமாரராகிய, *கருணை மேருவே* - கருணையில் மேரு மலைபோல் உயர்ந்து விளங்கும், *பெருமாளே* - பெருமையின் மிக்கவரே! *சுருதி ஊடு கேளாது* - வேதங்களிடை கேட்டு அறியமுடியாததும், *சரியையாளர் காணாது* - சரியை நெறியில் நின்றவர்களால் கண்டு அறிய முடியாததும், *துரிய மீது சாராது* - துரியநிலையில் வந்து பொருந்தாததும், *எவராலும் தொடர வொணாது* - யாராலும் தொடர்ந்து எட்ட முடியாததும், *மாமாயை இடைபுகாது* - பெரிய மாயைக்குள் அகப்படாததும், *ஆனாத சுக மக உததியாகி* - ஒருபோதும் கெடாத பெரிய இன்பக் கடலாகியும், *ஒழியாது* - ஒரு பொழுதும் முடிவு இல்லாததும், *பருதி காயில் வாடாது* - கதிரவன் வெயிலினால் வாடாததும், *வடவை மூளில் வேகாது* - வடவைத்தீயினால் வெந்து அழியாததும், *பவனம் வீசில் வீழாது* - பெருங்காற்றினால் சாய்ந்து விழாததும், *சலியாது* - சலித்தல் இன்றி ஒரு தன்மையாகத்

திகழ்வதும், பரவை சூழில் ஆழாது - கடல் பொங்கி வந்தாலும் அழுந்தாததும், படைகள் மோதில் மாயாது - ஆயுதங்களினால் தாக்கினாலும் அழியாததும் ஆகிய, பரம ஞான வீடு ஏது புகல்வாயே - பெரிய ஞான வீடுபேறு எதுவோ அதனை அடியேனுக்கு உபதேசித்து அருள்புரிவீர்.

## பொழிப்புரை

அவுணர்கள் வாழ்ந்த நாடு நகரங்கள் பாழ்படவும், மகர மீன்கள் வாழுகின்ற கடலில் தீ எழுந்து வற்றிப் போகுமாறும், நெருங்கிய கற்பக முதலிய தருக்களையுடைய பொன்னுலகத்தில் அமரர்கள் குடிபுகவும், பூதசேனைகளையும் விழுங்கியதும் திண்ணியதும், அவமதிப்புடையதுமாகிய கிரவுஞ்சமலை மீது வேலாயுதத்தை விடுத்தருளிய தலைவரே! வேதங்களில் வல்ல பிரமதேவரும் திருமாலும் இருந்து தியானஞ் செய்கின்ற ஞானவெளியாகிய அம்பலத்தில் ஆடுகின்றவரும், பொன் மலையை வில்லாகவுடைய குருநாதரும், பரவெளியில் விளங்குப வரும், எல்லாராலும் பூசிக்கப் பெற்றவரும் அநேக விதமாகக் கயிலையில் திருநடனம் புரிபவரும், எல்லா இடங்களிலும் சஞ்சரிப்பவருமாகிய சிவபெருமானுடைய திருக்குமாரராகிய, கருணையில் மேருமலைபோல் உயர்ந்து விளங்கும் தேவர்கள் போற்றும் பெருமிதமுடையவரே! வேதங்களிடைக் கேட்டு அறிய முடியாததும், துரிய நிலையில் வந்து பொருந்தாததும், யாவராலும் தொடர்ந்து எட்ட முடியாததும், பெரிய மாயையுள் நுழையாததும், ஒரு போதும் கெடாத பெரிய இன்பக் கடலாகி விளங்குவதும், முடிவு இல்லாததும், சூரியனுடைய வெயிலில் உலராததும், வடவைத் தீ மூண்டாலும் வெந்து அழியாததும், பெருங்காற்று வீசினாலும் சாய்ந்து விழாததும், அசைதலின்றி ஒரு தன்மையாக இருப்பதும், கடல் பொங்கி எழுந்தாலும் அதில் முழுகாததும், ஆயுதங்களால் தாக்கினாலும் அழியாததும் ஆகிய பெரிய ஞான வீடுபேறு எதுவோ அதை அடியேனுக்கு உபதேசித்து அருள்புரிவீர்.

## விரிவுரை

நிருதர் பூமி பாழாக :

சூராதியவுணர்கள் வாழ்ந்த வீரமகேந்திரபுரம், ஆசுரம், மாயமாபுரம் முதலிய பெரும்பட்டினங்கள் வேலாயுதத்தாலும்

முருகவேள் பணித்தபடி வருணனாலும் அழிந்து பட்டன.

வேல் - ஞானம்.

அசுரர் - அஞ்ஞானம்

ஞானத்தினால் அஞ்ஞானத்தின் இருப்பிடங்கள் அழிவுற்றன.

மகரபூமி தீமுள :

மகர மீன்கள் வாழ்வதனால் கடலுக்கு மகராலயம் என்று ஒரு பேருண்டு. நூறாயிரங்கோடி அண்டங்களிலுள்ள அக்கினிகளும் ஒருங்கே திரண்டது போன்ற வேலாயுதத்தின் வெம்மையால் கடல் வற்றி வறண்டு விட்டது.

வேலைவற்றி வறண்டு சுறீல் சுறீலென

– திருப்புகழ்

கடல் என்பது, பிறவியைக் குறிக்கும். பிறவிப் பெருங்கடல் என்பார் திருவள்ளுவர். 'பவசாகரத்திலமுந்தி' என்பது வேத மலைத் திருப்புகழ். ஆகவே, பிறவியாகிய கடல், ஞானமாகிய வேலினால் வற்றிவிட்டது என்பதை உணர்க.

வேலைதுகள் பட்டுமலை சூரனுடல் பட்டுருவ
வேலையுற விட்டதனி வேலைக்காரனும்

– திருவகுப்பு

நிபிட தாருகாபூமி :

நிபிடம் - நெருக்கம்.

தாருகா பூமி - தருவுள்ள இடம். விண்ணுலகத்தில் கற்பகம், அரிசந்தனம், மந்தாரம், சந்தானம், பாரிஜாதம் என்ற ஐந்துவித மான தருக்கள் உண்டு. இவைகள் அநேக நலன்களைச் செய்ய வல்லவை. பாற்கடல் கடைந்தபோது அமிர்தத்துடன் பிறந்தவை. இப்பொன்னுலகிற்குத் தலைநகரம் அமராவதி. சூரபன்மனுடைய மகன் பாநுகோபன் பொன்னுலகைக் கவர்ந்து கொண்டனன். இந்திரன் முதலிய இமையவர் பல யுகங்கள் நாடு நகரங்களை யிழந்து பெருங்கவலையுற்றார்கள். முருகப்பெருமான் சூர் முதலை வேர்முதலோடு களைந்து விண்ணவரைப் பொன்னுலகில் குடி யேற்றி அருளினார்.

நிகர பார நீகார சிகரம் :

நிகரம்பயி லமுதுண்டவர் நிறைவெய்தியி ருந்தார். – மகாபாரதம்

*நிகரம் - விழுங்குகை.*

*பாரம் - திண்மை.*

*நீகாரம் - அவமதிப்பு.*

*சிகரம் - மலை; கிரவுஞ்சகிரி.*

*கிரவுஞ்சமலை மாயையினால் பூத சேனைகளையும் இலக்கத்தொன்பான் வீரர்களையும் விழுங்கியது. அம்மலையை வேற்படையால் பிளந்து குமரவேள் அமரரை வாழ வைத்தருளினார்.*

**வேத ஆசாரியன்:-**

வேதங்களில் வல்லவர் பிரமதேவர். வேதன் என்ற பேரும் உடையவர்.

> **"வேதனாகிய மறையோனொடு விளை
> யாடியே"** *- திருப்புகழ்*

**கருதுமாக மா சாரி:-**

*கருதுதல் - தியானித்தல்.*

*மாகம் - ஆகாயம்.*

*மா - பெருமை.*

*சாரி - நடிப்பவர்.*

*ஆகாயத்தலமாகிய சிதம்பரத்தில் ஒருபுறம் திருமாலும், மற்றொரு புறத்தில் பிரமதேவரும் இருந்து அம்பல வாணரைத் தியானித்துக் கொண்டிருக்கின்றார்கள்.*

*அகில வுலகங்களும் உய்யும்பொருட்டு எம்பெருமான் ஆதியும் அந்தமுமின்றி, அநவரத ஆனந்தத் தாண்டவமாடுகின் றார். எல்லாப் பொருள்களும் அதனால் வாழுகின்றன.*

*நம்முடைய நிழலை நாம் அசையச் செய்ய வேணுமானால் நாம் அசைய வேணும். நாம் அசைந்தால் தான் நமது நிழலசையும். அதுபோல், நடராஜ மூர்த்தி ஆடுவதனால்தான், கதிர், மதி, மண், விண், அணு முதலிய அனைத்தும் அசைகின்றன.*

**கனக கார்முகாசாரி:-**

*கனகம் - பொன். கார்முகம் - வில்.*

*திரிபுர சங்கார காலத்தில் சிவபெருமான் பொன் மலையாகிய*

மேருகிரியை வில்லாகப் பிடித்தருளினார். அதனால், மலை வில்லார் என்று அவருக்கு ஒரு பேருண்டு.

"கல்லால் நிழல்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணையடி
நல்லார் புனைவரே" - *சிவஞானபோதம்*

**ககனசாரி :-**

ககனம் - வெளி. வெளிகளுக்கும் அப்பாலுள்ள பரவெளி.

நாம் உலாவுகின்ற வெளி பூதாகாசம். அது ஞானகாசம்.. அங்கே இறைவனுடைய அருளால் நிகழ்கின்றது.

**பூசாரி :-**

பூசை செய்பவன் பூசாரி.

சிவபெருமான் "சேர்ந்தறியாக்கையான்" "பின்றாழ் சடையன்", "தலையாய தேவாதி தேவர்க்கெல்லாம் சேயான்" ஆதலினரல் அவர் ஒருவரையும் வழிபடுவதில்லை; வழிபாட்டு முறையைக் காட்ட தன்னைத்தானே பூசிப்பர்.

எல்லாராலும் பூசிக்கபடுபவர். சகல தேவர்களும் அவரைப் பூசித்து எல்லா நலன்களையும் பெற்றார்கள் திருவீழிமிழலை, திருப்பிரமபுரம், கண்ணார்கோயில் முதலிய திருத்தலங்களைக் காண்க.

**வெருசாரி கயிலை நாடகசாரி:-**

சாரி - வட்டமாக ஓடுதல்.

"திரிந்தார் நெடுஞ்சாரி" - *கம்ப ராமாயணம்*

இறைவன் திருநடனம் புரியும்போது வட்டமாகவும் வேறு பலவிதமாகவும் சுழன்றனர்.

கலைகளுக்குள் உயர்ந்த கலை நடனக்கலை. அக்கலைக்குப் பரதநூல் என்ற ஒரு பேருமுண்டு.

ப - பாவம்
ர - ராகம்
த - தாளம்

பாவ ராக தாளம் மூன்றுடன் கூடியது பரதம்.

*இக் கலைக்குக் குருநாதர் நடராஜ மூர்த்தி.*

"திமிதமென முழவொலிமு ழுங்கச் செங்கைத்
தமருகம ததிர்சதியொ டன்பர்க் கின்பத்
திறமுதவு பரதகுரு" - *திருப்புகழ்*

**சகலசாரி :-**

*சாரி - சஞ்சரித்தல்.*

*எல்லாப் பொருள்களிலும் இறைவன் நீக்கமற நிறைந் திருக்கின்றான். அதனால், எல்லாவற்றையும் அறிகின்றான். அறிந்து எல்லாவற்றையும் அசைக்கின்றான்.*

"அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மான பரமே"

**சுருதி யூடு கேளாது:-**

*இறைவனால் அருளப்படுவது சிவஞானம்; (பரஞானம்) வேதாகமங்கள் அபரஞானம். (கலைஞானம்); அபர ஞானத்தால் பரஞானத்தை யறிய முடியாது. பரஞானம் உதிப்பதற்கு அபர ஞானம் துணைபுரியும்.*

*சுருதி - வேதம். காதால் கேட்கப்படுவது என்பது இதன் பொருள். வேதம் எழுதாக்கிளவி.*

"வேதத்திற் கேள்வி யிலாதது"

**சரியையாளர் காணாது:-**

*சரியை - இறைவனை யடையதற்குரிய படிகளில் ஒன்று. அதிலேயே நின்றவர் இறைவனையடைய முடியாது. சரியை அரும்பு போன்றது. அதனால்தான் ஞானமாகிய கனி உண்டாகும். சரியை - அரும்பு, கிரியை - மலர், யோகம் - காய், ஞானம் - கனி.*

விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே - *தாயுமானார்*

*அரும்பு மலராக வேணும்; மலர் காயாக வேணும்; காய் கனியாக வேணும். அங்ஙனமின்றி அரும்பு மலராது கருகி விடுமாயின் அரும்பினால் பயனில்லை. அதுபோல், சரியை யால் கிரியையும், கிரியையால் யோகமும், யோகத்தால் ஞானமும் பெறவேண்டும்.*

பரகதிக்கு நேர்வழி, ஞானம் ஒன்றே யாகும். "ஞான மலது கதி கூடுமோ" என்றார் தாயுமானார்.

"சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய"
- திருப்புகழ்

துரியமீது சாராது:-

துரியம் நான்காவது அவத்தை. அது நாபியில் பிராணனுடன் புருடன் கூடி நிற்கும் நிலை.

"வழுத்தியநா பியிற்றுரியப் பிராண னோடு
மன்னுபுரு டனுங்கூடி வயங்கா நிற்கும்" - தாயுமானார்

அதற்குமேல் துரியாதீதம். அது மூலாதாரத்தில் புருடன் மட்டுந் தனித்து நிற்பது. அவத்தையைந்தும் கடந்த இடத்திலே விளங்குவது பரஞானம்.

"அட்டாங்க யோகமும் ஆதார மாறும் அவத்தையைந்தும்
விட்டேறிப் போன வெளிதனி லேவியப் பொன்றுகண்டேன்"
- பட்டினத்தார்

எவராலுந் தொடரொணாது:-

ஏனைய சமயவாதிகளை இது குறிக்கின்றது. சிவசமய நெறிநின்று சித்தாந்த ஞானமுற்று, சரியை கிரியை யோகங் களைப் பயின்றபின் திருவருளால் உண்டாகும். சிவ ஞானம் ஒன்றாலே அது அறியத்தக்கது. அந்த ஞானம் கைவரப் பெற்ற நம்பியாரூரர் தொடர்ந்து பற்றினார்.

ஆவணம் பறிக்கச் சென்ற அளவினில் அந்த ணாளன்
காவணத் திடையே யோடக் கடிதுபின் தொடர்ந்து நம்பி
பூவணத் தவரை யுற்றார் அவரலால் புரங்கள் செற்ற
ஏவணச் சிலையி னாரை யார்தொடர்ந் தெட்ட வல்லார். - சேக்கிழார்

"ஓது சரியை கிரியையும் புணர்ந்தவர் எவராலும்
ஓத அரிய துரியங் கடந்தது" - திருப்புகழ்

மாமாயை யிடைபுகாது:-

மாயா- மா -தோற்றம்; யா-ஒடுக்கம். உலகத்தின் தோற்றத் திற்கும் ஒடுக்கத்திற்கும் காரணமாக யிருப்பது மாயை; அம்மா யைக்கு அப்பாற்பட்டது மெய்ப்பொருள்.

"மாயைக்குச் சூழொணாதது" -திருப்புகழ்

ஆனாத சுகமகோததியாகி:-

ஆனாத - கெடாத.

மெய்ஞ்ஞானத்தால் வரும் சுகம் ஒருபோதும் கெடாததும் நீங்காததுமாகும்.

"ஆனாத ஞானபுத்தி" - திருப்புகழ்

"ஆனா வமுதே" - அநுபூதி

சுகம் - இன்பம்.

மகோததி - பெருங்கடல். பேரின்பப் பெருங்கடல்.

"வீடு பரம சுகசிந்து" என்கின்றார் திருவானைக்கா திருப்புகழில்.

பருதிகாயில் வாடாது வடவை மூளில் வேகாது:-

நித்தியமாயுள்ள அப்பொருளைச் சூரியனால் உலர்த்த முடியாது; நெருப்பால் வேகவைக்க முடியாது. காற்றினால் அசைக்க முடியாது; தண்ணீரால் கரைக்க முடியாது; ஆயுதங் களால் சேதிக்க முடியாது.

'நைநம் தஹந்தி சஸ்த்ராணி
நைநம் தஹதி பாவகம்
நசநம் க்லே தயந்தர்போ
நசோஷயதி மாருதம்'

இதன் பொருள்:

அந்த ஆன்மாவை ஆயுதம் சிதைக்காது!
நெருப்பு எரிக்காது; தண்ணீர் கரைக்கமுடியாது;
காற்று உலர்த்த முடியாது. - பகவத் கீதை

பரமஞான வீடு:-

வீடு - விடுபடுவது. பந்தத்தினின்றும் விடுபடுவது வீடு என்க. அது சிறந்த சிவஞானத்தினால் நிகழ்வது.

## கருத்துரை

மலைபிளந்த வேலாயுதக் கடவுளே! சிவகுமாரரே! ஒன்றாலும் அழியாத பரமஞானத்தை உபதேசித்தருள்வீர்.

## 46

அதல சேட னாராட அகில மேரு மீதாட
அபின காளி தானாட அவளோடன்
றதிர வீசி வாதாடும் விடையி லேறு வாராட
அருகு பூத வேதாள மவையாட

மதுர வாணி தானாட மலரில் வேத னாராட
மருவு வானு ளோராட மதியாட
வனச மாமி யாராட நெடிய மாம னாராட
மயிலு மாடி நீயாடி வரவேணும்

கதைவி டாத தோள்வீம னெதிர்கொள் வாளி யால்நீடு
கருத லார்கள் மாசேனை பொடியாகக்
கதறு காலி போய்மீள விஜய னேறு தேர்மீது
கனக வேத கோடூதி அலைமோதும்

உததி மீதி லேசாயு முலக மூடு சீர்பாத
உவண மூர்தி மாமாயன் மருகோனே
உதய தாம மார்பான ப்ரபுட தேவ மாராஜ
னுளமு மாட வாழ்தேவர் பெருமாளே.

### பதவுரை

கதை விடாத தோள் வீமன் எதிர்கொள் - கதாயுதத்தை விடாது தோள்மீது வைத்துள்ள வீமசேனனால் எதிர்க்கப் பட்டதும், வாளியால் நீடு - ஆயுதங்களினால் நீண்ட வலிமை யுள்ளதுமாகிய, கருதலார்கள் மாசேனை பொடியாக - பகைவர்களுடைய பெரிய சேனையானது மாண்டு பொடிபடும் படியும், கதறு காலிபோய் மீள - பயத்தினால் கதறும்படியான பசுக்கூட்டம் பயம் நீங்கி மீளும் பொருட்டும், விஜயன் ஏறு தேர்மீதில் - அர்ச்சுனன் ஏறியுள்ள தேரின் கண் இருந்து, கனக வேத கோடு ஊதி - பொன்மயமாய் வேத நாதத்துடன் கூடிய சங்கத்தை ஒலித்த வரும், அலை மோதும் உததி மீதிலே சாயும் உலக மூடு சீர் பாதன் - அலைகள் மோதுகின்ற கடலின் நடுவே கிடக்கின்ற உலகத்தை ஓரடியால் அளந்து மூடிய சிறந்த திருவடியையுடையவரும், உவணம் ஊர்தி - கருட வாகனரும் ஆகிய திருமாலின், மருகோனே - திருமருகரே! உதய தாம மார்பான - ஒளிபொருந்திய மாலை யணிந்த மார்புடன் கூடிய, பிரபுடதேவ மாராயன் உளமும் ஆடவாழ் - பிரபுட தேவ மகா

மன்னனுடைய உள்ளமும் களிக்கும்படி எழுந்தருளியுள்ள, தேவர் பெருமாளே - தேவர்கள் போற்றும் பெருமை மிகுந்தவரே! அதல சேடனார் ஆட - அதல உலகிலே வாழும் ஆதிசேடன் தனது பணாமகுடங்களை விரித்து ஆடவும், அகிலம் மேரு மீது ஆட- மண்ணுலகமும் மகாமேருகிரியும் மிகவும் ஆடவும், அபினகாளி தான் ஆட - சிவத்திற்கு அன்னிய மில்லாதவளாகிய காளிதேவி ஆடவும், அவளோடு - அக்காளிதேவியுடன், அன்று- அந் நாளில், அதிர வீசி வாது ஆடும் விடையில் ஏறுவார் ஆட - உலகமெல்லாம் அதிரும்படி கரசரணங்களை வீசி வாதுபுரிந்து திருநடனம் புரிந்த சிவமூர்த்தி இடபவாகனத்தின் மீது ஆடவும், அருகு பூத வேதாளம் அவை ஆட - தேவரீரது பக்கத்தில் பூத வேதாளங்கள் யாவும் ஆடவும், மதுரவாணிதான் ஆட - இனிய வீணாகானம் புரியும் கலைமகள் ஆடவும், மலரில் வேதனார் ஆட - தாமரைமலர் மீது வாழுகின்ற பிரம தேவர் ஆடவும், மருவு வானுளோர் ஆட - உமது திருவடியைச் சார்ந்துள்ள தேவலோக வாசிகளாகிய அமரர் ஆடவும், மதி ஆட - சந்திரன் ஆடவும், வனச மாமியார் ஆட - தாமரைக் கோயிலில் வாழும் உமது மாமியாராகிய இலக்குமி தேவியாடவும், நெடிய மாமனார் ஆட - நீண்ட வடிவுடைய மாமனராகிய நாராயணமூர்த்தி ஆடவும், மயிலும் ஆட - மயில் வாகனமும் ஆடவும், நீ ஆட - அதன் மீது தேவரீரும் ஆடி, வரவேணும் - வந்தருள வேணும்.

## பொழிப்புரை

கதாயுதத்தை எப்போதும் தோள்மீது வைத்திருப்பவனாகிய வீமசேனனால் எதிர்க்கப்பட்டதும், ஆயுதங்களால் மிகுந்த வலிமையுள்ளதுமாகிய பகைவர்களுடைய சேனைகள் அழியுமாறும், பயத்தினால் கதறுகின்ற பசுக் கூட்டங்கள் அச்சம் நீங்கி மீளும் பொருட்டும், பொன் மயமான சங்கத்தை (புல்லாங்குழலை) ஒலித்தவரும், அலைகள் மோதுகின்ற கடலாற் சூழப்பெற்ற இப்பூமண்டலத்தைத் தனது திருவடியினால் அளந்து மூடியவரும், கருடவாகனத்தில் வருபவரும் ஆகிய திருமாலின் திருமருகரே! ஒளிமிக்க இரத்தின மாலையை யணிந்த பிரபுடதேவ மன்னர்பிரானுடைய மனமும் மகிழ்ச்சியினால் ஆடும்படி எழுந்தருளியுள்ள தேவர்கள் போற்றும் பெருமிதம் உடையவரே! அதல வுலகிலே வாழ்கின்ற ஆதிசேடன் தனது பணா மகுடங்களை விரித்து ஆடவும், மண்ணுலகமும் மகா மேருகிரியும் மிகவும் ஆடவும், சிவத்தை விட்டுப் பிரியாதிருக்கின்ற காளிதேவி

ஆடவும், அக்காளியுடன் முன்னால் உலகம் அதிர கையையும் காலையும் வீசி வாது புரிந்த நடராஜமூர்த்தி இடபவாகனத்தின் மீது ஆடவும், இனிய வேணுகானம் புரியும் கலைமகள் ஆடவும், பூரண சந்திரன் ஆடவும், உமது மாமியாராகிய இலக்குமியும் மாமனாராகிய திருமாலும் ஆடவும், மயில் தனது தோகையை விரித்து ஆட அதன் மீது தேவரீர் ஆடிக்கொண்டு வந்து அருள் புரிவீர்.

## விரிவுரை

**பாடலின் தோற்றம்:-**

இத்திருப்புகழ் அருணகிரிநாதருடைய வரலாற்றின் ஒரு பகுதியைக் குறிக்கின்றது.

திருவண்ணாமலையில் அருக சமயத்தைச் சேர்ந்த சம்பந்தாண்டான் என்பான் ஒருவன் இருந்தான். அவன் அருணகிரிநாதருடைய அளவற்ற புகழைக் கண்டு அழுக்காறு கொண்டான். அப்பொழுது திருவண்ணாமலையை யரசுபுரிந்த பிரபுடதேவ மன்னன்முன் இருவருக்கும் வாது நிகழ்ந்தது. தனது வழிபடு கடவுளைச் சபையில் வரவழைத்துக் காட்டுவதாகவும், அதுபோல் அருணகிரியாரும் காட்டுதல் வேண்டும் என்றும் சம்பந்தாண்டான் வாதிட்டனன். அருணகிரிநாதர் அதற்கு இணங்கினார்.

இரவு முழுவதும் அபிசார ஓமம் புரிந்தும், வாய் வருந்த அழைத்தும் சம்பந்தாண்டானது வழிபடு மூர்த்தியாகிய காளி தேவி வந்தாளில்லை. அதனால், சம்பந்தாண்டான் படுதோல்வியுற்றான். பிரபுடதேவ மன்னன், தனது அமைச்சர், புரோகிதர், அறிஞர் முதலியோர் சூழ திருக்கோயிலுக்குச் சென்று, ஆங்குத் திருக்கோபுரக் குடவரையில் தியானபரராக வீற்றிருக்கும் அருணகிரியாரை அஞ்சலி செய்து, "அருட் கொண்டலே! சம்பந்தாண்டான் காளி தேவியைத் தருவித்துக் காட்டுந் திறனின்றித் தோற்றனன். கருணைகூர்ந்து எந்தை கந்தவேளை வரவழைத்து அடியேங்கள் உய்யும் பொருட்டுக் காட்டியருள வேண்டும்" என்று வேண்டி நின்றனன்.

அருணகிரிநாதர் "கந்தவேளை எந்தவேளையுங் காணலாம்; எங்கே நினைக்கினும் அங்கே என்முன் வந்து எதிர்நிற்பன்" என்று

கூறிச் சிவகங்கையில் முழுகி, சிவகங்கைக் கரையில் இருக்கும் பதினாறுகால் மண்டபத்தின் ஈசானத்தூண் அருகில் நின்று, "ஐயனே! முன் ஒருமுறை பிரகலாதர் பொருட்டுத் திருமால் தூணி லிருந்து வெளிப்பட்டனர்; இப்போது அடியேன் பொருட்டுக் கருணை வடிவான தேவரீர் இத்தூணிலிருந்து வெளிப்பட்டுக் காட்சி தரவேண்டும், என்று துதித்து, "எந்தத் திசையினும்" "கொடிய மறலியும்" "இருவர்மயலோ!" என்ற திருப்புகழ்ப் பாக்களைப் பாடி இறுதியில் ஆண்டவன் இன்ன இன்ன மூர்த்திகளுடன் ஆடிக்கொண்டுவந்து காட்சி தரவேண்டும் என்று "அதல சேடனாராட" என்ற இத்திருப்புகழைப் பாடினார். அவ்வண்ணமே அறுமுகப் பரமன் வந்து காட்சி தந்தருளினார்.

"சயிலமெ றிந்தகை வேற்கொடு
மயில்மிசை வந்தெனை யாட்கொளல்
சகமறி யும்படி காட்டிய பெருமாளே"

என்று அடிகளார் பாராட்டினர்.

இது சொற்சுவையும் பொருட்சுவையும் ஒருங்கே யமைந்த தேனினும் இனிய தெய்வ மணங்கமழுந் தீஞ்சுவைப் பாடல்.

அதல சேடானராட:-

அதல வுலகிலே வாழுகின்ற அறிவின் மிக்க ஆதிசேடன் தேவரீருடைய ஆறு திருமுடிமீது வெயில் தாக்காவண்ணம் ஆயிரம் பணாமகுடங்களை விரித்து, ஆயிரம் நாகரத்தினங்களும் ஆயிரம் சிறு ரத்தின தீபங்களாக வரிசையாக ஒளி செய்ய இனிது ஆடிக் கொண்டு வரவேண்டும். அறிவின் மிக்கவராதலின் சேடன் என்று வாளா கூறாமல் "சேடனாராட" என்று கூறியருளினார்.

அறிவிலே சிறந்தவர் சேடனார் என்பதனை, ஆதிசேட அவதாரமாகிய பதஞ்சலி முனிவர் யோக சூத்திரம் செய்ததனால் அறிக. பாணினி செய்த வியாகரணத்திற்குப் பாஷ்யம் எழுதியவரும் பதஞ்சலியே என்க.

இராமலிங்க அடிகளின் அறிவின்றிறத்தை நோக்கி ஒரு புலவர் கூறும் துதிப்பாடலிலும் ஆதிசேடனைச் சிறப்பித் திருப்பதைக் காண்க.

அகத்தியனோ வால்மிகியோ ஆதிசேடன் றானோ
மகத்துளமார் சம்பந்த மாலோ - சகத்திலகு

சச்சிதா னந்தத்தின் தண்ணளியோ என்னென்பேன்
மெச்சுமதி ராமலிங்க வேள்.

அகில மேரு மீதாட:-

அகிலம்- பூமி.

பூமியும் மேருவும் ஆடவேண்டும் என்கின்றார். ஏன்? யாண்டும் நீக்கமற நிறைந்த நிமலன் ஆடுவதனால் மண்ணும் விண்ணும் மலையும் ஆடும் என்பது கருத்து. சராசரங்கள் ஆட அவன் ஆடுகின்றான்.

அபின காளி தானாட:-

பின்னம் வேற்றுமை. அபின்னம் - வேற்றுமையின்மை சிவத்துடன் வேறுபடாத காளி. எந்தக் காளி முருகவேள் உடனே வருவதற்கு, சம்பந்தாண்டான் வேண்டிய வரத்தினால் சிறிது தடைபுரிந்தனளோ அந்தக் காளியும் ஆடிக் கொண்டு வருக.

அவளோடன் றதிர வீசி வாதாடு விடையிலேறு வாராட:-

அந்தக் காளி ஆடினால் உலகமெல்லாம் அழியும். அதனால், முன்னொருநாள் திருவாலங்காட்டிலே அவளுடன் கண்ட தாண்டவமாடி அவள் தருக்கைச் சிவபெருமான் அடக்கி யருளினார். எனவே, இப்போது காளியாடும்பொழுது அவள் நடனத்திற்கு இணங்க நடராஜ மூர்த்தியும் ஆடிக்கொண்டு வருவாராக.

அருகுபூத வேதாள மவையாட:-

இறைவனுடைய அழகிலே பூத வேதாளங்கள் இருந்து இறைவனுடைய கீதங்களை ஓதும், இசையுடன் பாடும்; திருப்புகழை முழக்கும்; சங்கீதக் கருவிகளை ஒலிக்கும்.

காலமா றாத வராளிசி கண்டிகை
பூலசீ காமர மானவி பஞ்சிகை
கவுட பயிரவி லளிதை கயிசிகை
கவுளி மலகரி பவுளி இசைவன
கனவ ராடிய ரும்பட மஞ்சரி
தனத னாசிவி தம்படு பஞ்சமி
கைச்சுலவு கோன்முறைவி தித்தரா கத்தடைவி
லுச்சமது சாதிகமெ டுத்துமேலெ ட்டுவன

கஞ்சக் கஞ்சநற் றேசி ராஞ்சிகு
றிஞ்சிப் பண்குறித் தியாழை யேந்துவ
கற்ற வுடுக்கையி டக்கைக ளப்பறை
மத்தளி கொட்டிய முற்றும டிப்பன
காரெனமு ழங்குகுர லேறுதுடி சந்த்ரவளை
வீரமுர சுந்திமிற டாரிகுட பஞ்சமுகி
கரடிபறை யங்கனந் தங்கோடி கொட்டுவன
முறைமுறை கவந்தநின் றொன்றோடு கிட்டுவன
கசரதப தாகினிய ரக்கர்துணி பட்டுவிழு
களமுழுதும் வாழியதி ருப்புகழ்மு ழக்குவன
கடியகு ணத்த சினத்த சகத்ர யோசனை
நெடிய கழுத்த சுழித்த விழித்த பார்வைய
காதநூ றாயிர கோடி வளைந்தன
பூதவே தாள மநேகவி தங்களே. *-பூதவேதாள வகுப்பு*

**மதுரவாணி தானாட:-**

*முருகவேள் நடனஞ் செய்துகொண்டு எழுந்தருளிவரும் பொழுது வீணை முதலிய கானங்கள் இன்றியமையாதன வாகும். ஆதலின், கலைமகள் மகரயாழ் வாசித்துக் கொண்டு அவளும் ஆடிக்கொண்டு வருக.*

**மலரில் வேதனாராட:-**

*வேதகீதங்களை இனிது ஓதிக்கொண்டு பிரமதேவர் ஆடிக் கொண்டு வருக.*

**மருவுவானு ளோராட:-**

*மருவுதல் - இறைவனுடைய திருவடியைச் சார்தல்.*

"மருவு மடியார்கள் மனதில் விளையாடு
மரகத மயூரப் பெருமாள்காண்"

*என்று பிறிதொரு திருப்புகழிலுங் கூறுகின்றனர்.*

*தேவர்கள், தேவதேவதேவாதி தேவப் பெருமாளாகிய முருகவேளுடைய திருவடியைச் சார்ந்தவர்கள். ஆதலினால், இந்திரன் முதலிய இமையவர்கள் ஆடிக்கொண்டு வருக.*

**மதியாட :-**

*பதினாறு கலைகளுடன் கூடிய முழுமதி இனிய ஒளியை*

வீசிய வண்ணம் ஆடிக்கொண்டு வருக.

வனச மாமியாராட:-

மருமகன் ஆடிக் கொண்டு வருவதைக் கண்டு மகிழ வேண்டியவள் மாமியே யாதலினாலும், இலக்குமியில்லாத இடம் சிறப்படையாது. ஆதலினாலும், திருமகள் ஒருபுறம் ஆடிக்கொண்டு வருக. வனஜம் என்ற சொல் வனசம் என்று வந்தது. வனம் – நீர்; ஜம் – பிறப்பு. நீரில் பிறப்பதனால் தாமரைக்கு வனஜம் என்ற பேர் உண்டாயிற்று.

நெடிய மாமனாராட:-

திருமாலுக்கு நெடியோன் என்ற ஒரு பேருண்டு.

"அமரர் பசிகெட உதவிய க்ருபைமுகில்
அகில புவனமும் அளவிடு குறியவன்
அளவு நெடியவன் அளவிட அரியவன் மருகோனே"
- *திருப்புகழ்*

"தீண்டாத கற்புடைய செழுந்திருவைத் துகிலுரியச்
செயலொன் றின்றி
நீண்டானே கரியானே நிமலாவென் றரற்றினராய்
நின்று......"
- *மகாபாரதம்*

காளிங்கன்மீது நின்று திருநடனம் புரிந்தவராதலின் அவரும் மருகராம் முருகருடைய திருநடனத்தைக் கண்டு மனமகிழ்ந்து ஆடிக்கொண்டு வருவாராக.

மயிலுமாடி நீயாடி வரவேணும்:-

பறவைகளுக்குள் ஆடுகின்ற வன்மை மயில் ஒன்றுக்கே யுண்டு. தோகையை விரித்து ஓகையுடன் மயில் ஆடுகின்ற பொழுது அழகு ஒளிவிட்டுத் திகழும். மயிலும் ஆட அதன் மீது குழந்தைக் குமரவேளும் ஆடும்பொழுது அக்காட்சியின் எழிலை யாரே அளவிட வல்லார். அத்திருக்காட்சியை நேரே காணும் பேறு பிரபுடதேவ மன்னன் பெற்றனன்.

இவ்வாறு, அருணகிரியார் பாடியவுடன் முருகவேள் இத்தனைப் பரிவாரங்களுடன் வந்து பிரபுட தேவன் முதலிய அனைவருங் காணக் காட்சி யளித்தனர்.

**கனக வேத கோடு:-**

கோடு - *சங்கம், மூங்கில்.*

*மாசேனை பொடியாக சங்கத்தையும், கதறு காலி போய் மீள புல்லாங்குழலையும் திருமால் ஊதினார். கோடு என்ற சொல் இரட்டுற மொழிதல் என்ற உத்தி என உணர்க.*

**உலகமூடு சீர் பாத:-**

*மாவலிபால் மூவடி மண் கேட்டு, திரிவிக்கிரம வடிவங் கொண்டு, உலகையெல்லாம் தனது திருவடியால் மூடி திருமால் அளந்தனர்.*

"மாவலிபால்
மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான்"

*- அலங்காரம்*

**உதயதாம மார்பான பிரபுடதேவ மாராஜ னுளமு மாடவாழ்-**

*பிரபுட தேவன் அருணகிரிநாதர் காலத்தில் திருவண்ணா மலையை அரசாண்ட மன்னன். இவன் பொருட்டு இறைவனை அருணகிரியார் அந்தச் சபையினில் வரவழைத்தனர்.*

*அக்காட்சியைக் கண்ட மன்னனுடைய உள்ளம் மகிழ்ச்சியின் மிகுதியால் ஆடியது. ஈசான திசையில் உள்ள தூணிலிருந்து முருகவேள் வெளிப்பட்டுக் காட்சியளித்தனர். ஆதலின், அத்தூணைக் கர்ப்பக்கிரகத்தில் அமைத்து ஒரு திருக்கோயிலைப் பிரபுடதேவ மன்னன் புதுக்கினன். அக்கோயில் திருவண்ணா மலையில் இன்றுங் காண விளங்குகின்றது. சிவகங்கைக் கரையில் ஆயிரங்கால் மண்டபத்திற்குத் தென்திசையில் கம்பத்திளையனார் கோயில் என்று இது அன்பர்கள் அனைவரும் வழிபட மிக அழகாகத் திகழ்கின்றது. திருவண்ணாமலைக் கோயிலில் நுழைந்த வுடன் முதலில் காட்சியளிக்கின்றது.*

- "வெற்றிப்
பிரபுடதே வக்குரிசில் பேணிஎதிர் காண
முருகன் மயில்மேல் முடுகி - வரவழைத்து
வந்ததுகாண் செவ்வேள் வரிசையலங் காரமுற்றுந்
தந்ததுகாண் பேரின்பஞ் சார்ந்ததுகாண்"

*- தணிகையுலா*

உவணமூர்த்தி மாமாயன் மருகோனே! வாழ்தேவர் பெருமாளே! பிரபுடதேவ மாராயன் உளமுமாட மயிலு மாடி நீயாடி வரவேணும் என்று கொண்டு கூட்டிப் பொருள் செய்யினும் பொருந்தும்.

## கருத்துரை

திருமால் மருகரே! பிரபுடதேவன் காண தேவரும் மூவரும் சூழ மயிலுமாட தேவரீரும் ஆடி அருட்காட்சி தர வந்தருளுவீர்.



# பொது - திருப்புகழ் அகர வரிசை

